உ

கணபதிதுணை.

திருவாலவாயுடையார்

# திருவிளையாடற்புராணம்.

செல்லிநகர்ப்

## பெரும்பற்றப்புலியூர்நம்பி

இயற்றியது.

இது,

பாலவனத்தம் ஜமீந்தாரும்

மதுரைத்தமிழ்ச்சங்கத்து அக்கிராஸனாதிபதியுமாகிய

இராமநாதபுரம்

ம-ள-ள-ஸ்ரீ

## பொ. பாண்டித்துரைஸாமித்தேவ

ரவர்கள் விருப்பத்தின்படி

சென்னைப் பிரஸிடேன்ஸிகாலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரால்,

பல கையெழுத்துப்பிரதிகளைக்கொண்டு

ஆராய்ந்து

நூதனமாக எழுதிய குறிப்புரைமுதலியவற்றுடன்

சென்னை:

பிரஸிடேன்ஸி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

விலை ரூபா—2-8-0

பராபவ ளு ஆவணி மீ

1906.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.



பக்கம்.





உ

கணபதிதுணை.

# முகவுரை.



## தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

வேதியா வேத கீதா விண்ணவ ரண்ணா வென்றோ
றோதியே மலர்க டூவி யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடு
மாதியே யால வாயி லப்பனே யருள்செய் யாயே.

திருவாலவாயென்பது, பாண்டிவளநாட்டிலுள்ள தேவாரம் பெற்ற பதினான்கு ஸ்தலங்களில் முதலாயது;

பதினான்குஸ்தலங்களாவன :

'கூடல் புனவாயில் குற்றால மாப்பனூ
ரேடகநெல் வேலி யிராமேச - மாடானை
தென்பரங்குன் றஞ்சுழிய றென்றிருப்புத் தூர்கானை
வன்கொடுங்குன் றம்பூ வணம்.'' என்பன.

இத்தலம், கருணைக்கடலாகிய ஸ்ரீசோமசுந்தரக்கடவுள் ஆன்மாக்களை உய்வித்தருளவெண்ணி, ௬௪ - திருவிளையாடல்கள் செய்தருளிய ஒப்புயர்வற்ற பெருமைவாய்ந்தது. இதற்குரிய தேவாரப் பதிகங்களாவன :

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

| | |
|---|---|
| நீலமாமிடற்று ... ... ... | குறிஞ்சி. |
| மந்திரமாவது... ... ... ... | காந்தாரம். |
| மானினேர்விழி ... ... ... | கொல்லி. |
| காட்டுமாவது ... ... . | கௌசிகம். |
| செய்யனே ... ... ... ... | ,, |
| வீடலாலவாயிலாய் ... ... ... | திருவிராகம். |
| வேதவேள்வியை ... ... ... | நாலடிமேல்வைப்பு. |
| ஆலநீழல் ... ... ... ... | திருவியமகம். |
| மங்கையர்க்கரசி ... ... ... | புறநீர்மை. |

### திருநாவுக்கரசுநாயனார்.

| | |
|---|---|
| வேதியா ... ... ... ... | திருநேரிசை. |
| முளைத்தானை ... ... ... ... | திருத்தாண்டகம். |

இத்தலத்திற்குரிய பழையவரலாறுகளைப் புலப்படுத்தும் தனித்தமிழ்நூல்களும் தனிப்பாடல்களும் பல உள்ளனவென்பது யாவருக்குந்தெரிந்ததே. வடமொழியிலிருந்து மொழிபெயர்த்துச் செய்யப்பெற்றனவாய் மூர்த்திவிசேடமுதலியவற்றை விளங்கத் தெரிவிக்கும்நூல்கள்சில. அவை: திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், கடம்பவனபுராணம், சுந்தரபாண்டியம், திருவிளையாடற்புராணமென்பனவாம்; அவற்றுள்:—

க. திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணமென்னும் இந்நூல்,* உத்தரமகாபுராணமென்னும் வடநூலின் ஒருபகுதியாகிய சாரசமுச்சயமென்பதிலிருந்து மொழிபெயர்த்து, செல்லிநகர்ப்பெரும்பற்றப்புலியூர்நம்பியென்பவரால், செய்யுள்நடையாக இயற்றப்பெற்றது. இஃது, "ஓதரிய" என்னும்செய்யுளாலும், "அம்பதுமத்தார்" என்னும் செய்யுள்முதலியவற்றாலும் விளங்குகின்றது. இந்நூலின் செய்யுட்டொகை, கஎ௩௫. இது, பழைய திருவிளையாடல், வேம்பத்தூரார் திருவிளையாடல், திருவிளையாடலெனவும் வழங்காநிற்கும். இதனுடைய மற்றவிசேடங்கள், பின்னர் அவ்வவ்விடத்து எடுத்துக்காட்டப்படும்.

உ. கடம்பவனபுராணமென்பது, தொண்டைநாட்டிலுள்ள இலம்பூரிலிருந்த வீமநாதபண்டிதரென்பவரால் நீபாரண்யமாஹாத்மியம் அல்லது கதம்பவனபுராணமென்னும் வடநூலிலிருந்து மொழிபெயர்த்துச் செய்யுள்நடையாக இயற்றப்பெற்றது. இதன் செய்யுட்டொகை, சOகூO. இதில் இலீலாசங்கிரக அத்தியாயத்தின் முதலிலுள்ள, கூச - செய்யுட்களாற் கூறப்பெற்ற, கூச - திருவிளையாடல்களும் மேற்கூறிய திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்திலுள்ளமுறைப்படியே அமைந்துள்ளன. இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

௩. † சுந்தரபாண்டியமென்பது, தொண்டைநாட்டிலுள்ள வாயற்பதியிலிருந்த அனதாரியென்னும் புலவர்பெருமானாற் சுந்தரபாண்டியமென்னும் வடநூலிலிருந்து மொழிபெயர்த்துச் செய்யுள்நடையாக இயற்றப்பெற்றுள்ளது; "மிண்டரை வெல்லும் வளைச்சிங்க ராயன் விலைகொடுப்பத், தண்டமிழ் மேக முரத்தூரில் வேதியன் றானும்விற்பக், கொண்டவன் பின்சென்று மண்டலத் தேபுகழ் கொண்டபிரான், வண்டமிழ்க் கும்ப னனதாரி யுந்தொண்டை மண்டலமே." என்னுந் தொண்டைமண்டலசதகத்தாலும், "கம்பனென்

* உத்தரமகாபுராணமென்னும் வடநூல் இப்பொழுது கிடைக்கவில்லை.

† இந்நூல், மதுரைத்தமிழ்ச்சங்கத்துப் பாண்டியன்புத்தகசாலையிற் கிடைத்தது.

றுந் தாதனென்றுங் காளியொட்டக் கூத்தனென்றுங், கும்பமுனி யென்றும்பேர் கொள்வரோ - அம்புவியின், மன்னு வலர்புகழும் வாயலன தாரியப்ப, னந்நாளி லேயிருந்தக் கால். " என்னும் பழைய வெண்பாவாலும் பாராட்டப்பெற்றவர் இந்த அனதாரியென்றே தெரிகின்றது. இந்நூல் செய்யப்பெற்றகாலம், சாலி. கசஅ௬௬; கி. பி. 1563. இஃது இன்னும் அச்சிடப்படவில்லை.

௪. திருவிளையாடற்புராணமென்பது, பரஞ்சோதிமுனிவரென் பவரால், ஸ்ரீ ஹாலாஸ்யமாகாத்மியமென்னும் வடநூலிலிருந்து மொழிபெயர்த்துச் செய்யுள்நடையாக இயற்றப்பெற்றது. இதன் செய்யுட்டொகை, ௩௩௬௩. இக்காலத்து எல்லாராலும் மிகுதி யாகப் பாராட்டிப் படிக்கப்பெற்றுவருவது இந்நூலே. இஃது அச் சிடப்பட்டுள்ளது.

இந்தநூல்கள் நான்கனுள், முதலாவதும் நான்காவதுமாகிய நூல்கள் ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளுடைய அற்புதத்திருவிளையாடல் கள் அறுபத்துநான்கையும் மிகச்செவ்வையாக விரித்துப் பாராட் டித் தெரிவிப்பனவாம். இவ்விரண்டனுள், ஒன்றனோடொன் றற்குள்ள வேறுபாடுகள் பல.

இந்நூலிலுள்ள, (௫௧) மூர்த்தியார்க்கரசளித்த திருவிளையாடல் முதலிய * மூன்றுகதைகளும் அந்நூலிற்காணப்படவில்லை; அதி லுள்ள வருணன்விட்ட கடலைவற்றச்செய்த திருவிளையாடற்கதை, இதிலுள்ள (கஉ) நான்மாடக்கூடலான திருவிளையாடலிலும், அதி லுள்ள நாகமெய்ததிருவிளையாடல், மாயப்பசுவைவதைத்த திரு விளையாடற்கதைகள் இதிலுள்ள, (௩௬) மதுரையான திருவிளை யாடலிலும் அதிலுள்ள திருநகரங்கண்ட திருவிளையாடற்கதை இதி லுள்ள, (௫௩) புலிமுலைபுல்வாய்க்கருத்திய திருவிளையாடலிலும் அமைந்துள்ளன. திருவிளையாடல்கள் இதிலமைந்துள்ள முறை வேறு; அதிலமைந்துள்ள முறைவேறு. அது கதையை விரித் துக்கூறுவது; இது சுருக்கமாகக்கூறுவது. அன்றியும், சங்கச் செய்யுட்கள்முதலிய பண்டைத்தமிழ்நூல்களிலுள்ள, இந்நகரவர லாறுகளை விடாமல் தழுவிச்செல்வது இஃது; அஃது அன்னதன்று.

சிலநூற்றாண்டுகளுக்குமுன் இந்நூலே எல்லாராலும் படிக்கப் பெற்றுவந்ததன்றி, இந்நூலிலுள்ள, திருவிளையாடல்களின் முறை யையும் இதன் சொன்னடை பொருணடைகளையுமேதழுவிப் பலர் இத்தலசம்பந்தமான நூல்களைச் செய்துவந்தார்களென்று தெரிகின் றது. இது, * திருவிளையாடற்பயகரமாலை, கடம்பவனபுராணத்

* இந்நூலாசிரியர்பெயர் தெரியவில்லை; பயகரனென்பது பயஹரனென் னும் வடமொழிச்சிதைவு; பயத்தைப்போக்குபவனென்றுபொருள்.

துள்ள இலீலாசங்கிரக அத்தியாயம், * திருவுசாத்தான நான்மணி மாலையின், உஎ - ம் செய்யுள் முதலியவற்றால் நன்குவிளங்கும்.

இதுவே திருவிளையாடலென்று முற்காலத்திற் பாராட்டப் பட்டுவந்ததென்பதையும் இதன்செய்யுட்கள் பழைய உரைகளில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டுவந்தனவென்பதையும் கோ லேமயுத்தற்குத் திருப்போரூர்ச் சிதம்பரசுவாமிகளேழுதியவுரை நன்கு விளக்குகின்றது; ஷை நூல் எ, கக - ம் செய்யுட்களின் உரையைப் பார்க்க.

மேற்கூறிய உண்மை யாவருக்கும் விளங்கும்பொருட்டே, பழையவுரையுடன் மிதிலேப்பட்டியிற்கிடைத்ததான ஷை திருவிளை யாடற்பயகரமாலைமூலத்தையும் ஏனையவற்றையும் வேறுசில பழைய பிரதிகளோடு ஒப்பிட்டு ஆராய்ச்சிசெய்து பதிப்பித்து இப்புத்தகத் தின்பின்னர்ச் சேர்த்திருக்கிறேன்.

பயகரமாலையென்னும்பெயரைப் பயங்கரமாலையெனத் திருத்தி விட்டதல்லாமல், இத்திருவிளையாடலையே மேற்கோளாகக்கொண்டு அது செய்யப்பெற்றதென்பதையறியாமற் சிலபாடல்களைமாற்றி யும் சிலபாடல்களைக்குறைத்தும் சிலபாடல்களை நூதனமாக இயற் றிச் சேர்த்தும் சற்றேறக்குறைய ௩0 - வருடங்களுக்குமுன் யாரோ ஒருவர் அதைப் பதிப்பித்துவிட்டனர்.

இப்புத்தகத்தில், எக, அக, கூக, கங்க, கசு0-ம் பக்கங்களின் கீழே 'இது வெள்ளிபாட்டு' என்றும், 'சிலபிரதிகளிற் காணப் படவில்லை' என்றும் குறிப்பிட்ட செய்யுட்கள்யாவும் வெள்ளி பாடல்களென்றே ஓர் ஏட்டுப்பிரதியில் வரையப்பட்டிருந்தன; [வெள்ளி - வெள்ளியம்பலவாணமுனிவர்.]

இதுகாறும்கூறியவாற்றால், வெள்ளியம்பலவாணமுனிவர், திரு ப்போரூர்ச் சிதம்பரஸ்வாமிகள், திருவிளையாடற் பயகரமாலைநூலா சிரியர், இலம்பூர் வீமநாதபண்டிதர், நொச்சியூர்ப் பழனியப்பஞ் சேர்வைகாரர் ஆகிய இவர்களுடையகாலத்திற்கு இந்நூலாசிரிய ருடையகாலம் முற்பட்டதென்பது வெளியாகின்றது.

---

* இந்நூலை இயற்றியவர், நொச்சியூர்ப் பழனியப்பஞ்சேர்வைகாரர்; இவரும் திருவுசாத்தானத்தின் பழைய தமிழ்ப்புராணமியற்றிய அம்பல வாணமுனிவரென்பவரும் ஒரேகாலத்தினர். ஷை முனிவருடையகாலம், இற் றைக்கு ௩0௯ - வருடங்களுக்கு முந்தியதென்றும் இதனை, அம்முனிவர் தமது கரத்தால் எழுதிய சதாசிவவியாக்கியானமென்னும் புத்தகத்தில் எழுதப்பட் டுள்ள சகாத்தம் தெரிவிக்கின்றதென்றும் ஆண்டுள்ளார் சொல்லுகின்றன ரென்றுஞ்சொல்லி, ஷை நான்மணிமாலையை எனக்குவாங்கித்தந்தவர், பின் னத்தூர், ம-௱-௱-ஸ்ரீ அ. நாராயணஸாமி ஐயரவர்கள்.

இந்நூலால், சங்கநூல்கள் சம்பந்தமான சிற்சில பழையசெய்திகளும், சிலநாடுகள், சிலமலைகள், சிலஊர்கள், சில புண்ணியதீர்த்தங்களும், சில சிவஸ்தலவிசேடங்களும், திருவிளையாடல்சம்பந்தமான சில பழமொழிகளும், சில திருவிளையாடல்கள் முதலியன நடந்தமைக்கு அறிகுறியான இடப்பெயர்முதலியனவும், சிலபுலவர்களுடையசரித்திரங்களும், அவர்களுள் இன்னாரின்னார் இன்னஇன்ன அமயத்து இன்னஇன்ன பாடல்கள் இன்னஇன்ன நூல்கள் செய்தனர்களென்பதும், சில நூற்பெயர்களும், திருவாசகத்துள்ள பதிகங்களுள் இன்னஇன்னபதிகங்கள் இன்னஇன்னஅமயத்துப் பாடப்பட்டனவென்பதும், சில அரசபரம்பரைகளும், பற்பல பழைய வழக்கங்களும், இந்நாளிற் பெரும்பாலும்வழங்காத சிற்சில அரிய சொற்களும் வாக்கியங்களும், இக்காலத்துப் புலப்படாதனவாகிய இசை,குதிரை,நவமணிமுதலியவற்றின் இலக்கணங்களும்,ஒருவகையான யுத்தபரிபாஷைகளும், சில சாதிவகையும், சில குலவகையும், இன்னும் எத்தனையோ அரியவிஷயங்களும் அறியலாகும்.

ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் இந்நூலுள்ளே பெரும்பாலும் சொக்கனென்றே வழங்கப்பெறுவர். 'சொக்கன்' என்பதற்கு அழகன் என்பதுபொருள்; சொக்கு - அழகு; பேரழகென்றும் பொருள் கூறுவதுண்டு. இதனை, இந்நூல் இந்திரன்பழிதீர்த்ததிருவிளையாடல், ௯௬-ம் செய்யுளாலுணர்க. பண்டைக்காலத்து இப்பெயரே பெரும்பாலும் வழங்கப்பெற்றுவந்தமையின், இந்நூலாசிரியரால் இத்திருநாமம் மிக எடுத்தாளப்பட்டதென்று தெரிகின்றது. அங்ஙனம்வழங்கிவந்தமையை, சொக்கலிங்கம், சொக்கர்தீபாராதனை, சொக்கத்தாண்டவம், சொக்குப்பாட்டு, சொக்கரப்பம், சொக்கர்தலைக்கீடு (=சொக்கர்லேஞ்சு); பழைய சொக்கநாதர்கோயிலென்னும் உலகவழக்காலும், தேவாரம், கடம்பவனபுராணம், சுந்தரபாண்டியம், மதுரை மும்மணிக்கோவை, மதுரைப்பதிற்றுப்பத்தந்தாதி, மதுரைத் திருப்பணிமாலை, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மதுரைக்கலம்பகம், திருவாதவூரர்புராணம், பழைய திருப்பெருந்துறைப்புராணம் முதலிய நூல்களாலுமுணர்க. அன்றி, வடமொழிப்பெயராகிய 'சுந்தரர்' என்பதை எடுத்தாளுதலினும் தென்மொழிப்பெயராகிய 'சொக்கர்' என்பதைத் தமிழ்நூலில் எடுத்தாளுதல் அழகென்று இவர் எண்ணியிருக்கலாமென்றும் தோற்றுகிறது; சுந்தரரென்றதிருநாமம் இதிற் சிறுபான்மையாகவழங்கும்.

மிகப் பழமையானதும் பற்பலசிறப்புக்கள் வாய்ந்ததுமான மாணிக்கம்போன்ற இந்நூல் பலவருடங்களாக ஒளிமழுங்கிப்போனமைக்குக் காரணம் இன்னதென்று விளங்கவில்லை. இஃது எல்லா ஆச்சரியத்திலும் பெரியதோர் ஆச்சரியத்திற்கு இடமாக இருக்கின்றது.

தாமியற்றிய திருவிளையாடற்புராணச் செய்யுட்களைப் படித்துக்காட்டநினைந்து, ஒருநாள், அந்திப்பொழுதில் வேம்பத்தூர்க்கு வந்த பரஞ்சோதிமுனிவரை அவ்வூர்க்கவிஞர்களுள்ளே தண்டிகை பெற்றுவிளங்கியபுலவர் அறுபத்துநால்வர் மறுநாட்காலையில் வரச் சொல்லிவிட்டு, இன்னஇன்னபகுதியை இன்னார்இன்னார் இயற்றுதற்குரியரென்று அன்றிரவில்யோசித்துத் தமக்குள்நிச்சயித்துக்கொண்டு ஒவ்வொருவர் ஒவ்வொன்றாக அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் விடியற்காலத்துள் தனித்தனியே செய்துமுடித்து அவற்றை ஒருங்குசேர்த்துவைத்துக்கொண்டிருந்து, காலையில்வந்த பரஞ்சோதிமுனிவரைநோக்கி, இதைக்கேளுமென்று தாமியற்றியநூலைப் படித்துக்காட்டி, திருவிளையாடற்புராணம் தமிழில் முன்னமேயிருக்கையில் நீர்செய்ததுஎதன்பொருட்டென்றுவினவ, அம்முனிவர்மனநொந்து சபித்துவிட்டுப்போயினர்; அதனால், இந்நூல் வழங்காது போயிற்றென்று கூறுவாரும், வடநூல் *ஆதாரமில்லாமையால் இந்நூலை ஒருவரும் அங்கீகரிக்கவில்லையென்று சொல்லுவாரும், சோமசுந்தரக்கடவுளை அருமையாகச்சொல்லாமற் பத்தியின்றி, 'சொக்கன் சொக்கன்' என்று பலவிடத்துங்கூறியிருத்தலால் இதை ஒருவரும் கையால் தொடவில்லையென்பாரும், பரஞ்சோதிமுனிவரியற்றிய திருவிளையாடல் வழங்கத்தொடங்கியபின்பு இது வழங்குதலற்றதென்பாரும், இன்னும் தத்தமக்குத்தோற்றியவண்ணம் பற்பலகூறுவாருமாக அங்கங்கே பற்பலர் உளராயினர்; இவைகள்யாவும் கதானுகதிகந்யாயமென்பது இந்நூலை ஆராய்ந்துபார்ப்பவர்களுக்கு இனிதுவிளங்கும்.

இப்புத்தக ஆராய்ச்சிக்குக் கருவிகளாகஇருந்த தமிழ்நூல்கள்: அட்டமிப்பிரதக்ஷிணமான்மியம், அருணகிரிபுராணம், இரகுவம்மிசம், கடம்பவனபுராணம், கல்லாடமும் திருநெல்வேலி மயிலேறும் பெருமாள்பிள்ளையுரையும், காளையார்கோயிற்புராணம், ஷை வசனம், கூடலழகர் புராணவசனம், சிதம்பரபுராணம், சுந்தரபாண்டியம், தக்கயாகப்பரணி, திருக்காளத்திப்புராணம், திருக்கானப்பேர்ப்புராணம், திருப்பரங்கிரிப்புராணம், திருப்பூவணப்புராணம், திருப்பெருந்துறைப்புராணங்கள் (பழையது, புதியது), திருவாசகம், திருவாதவூரர்புராணம், திருவிளையாடற்பயகரமாலையும் அதனுரையும், திருவிளையாடற்புராணம் (பரஞ்சோதிமுனிவர்செய்தது) திருவிளையாடற் போற்றிக்கலிவெண்பா, திருவுத்தரகோசமங்கைப்புராணம், திருவேடகப்புராணம், தேவாரம், பரிபாடல், புறநானூறு, பெரியபுராணம், மதுரைச்சொக்கநாதர் மும்மணிக்கோவை, மது

---

* இந்நூல் வடநூலாதாரங்கொண்டே இயற்றப்பெற்றதென்பதை, "குறைவற", "அவைநடு", "ஓதரிய", "வியாதன்வான்மீகி" என்னுமுதற்குறிப்பையுடைய இந்நூற்செய்யுட்களாலுணர்க.

ரைத்திருப்பணிமாலை, மதுரைப்பதிற்றுப்பத்தந்தாதி, மருதவனப் புராணமென்பன ; வடநூல்கள் : ஸ்ரீ வாதபுரமாஹாத்மியமுதலியன.

பயகரமாலைமுதலியவைகளும் மேற்கோள்களாக இப்புத்தகத்தில் அங்கங்கே எடுத்துக்காட்டப்பட்டுள்ளபாடல்களும் சிலசில விடத்து அச்சுப்புத்தகப்பாடங்களுக்கு வேறுபட்டுத்தோன்றும் ; அங்ஙனம் தோன்றுபவைகள் ஏட்டுப்பிரதிகளிற்காணப்பட்டவை யென்று கொள்க.

முதனூல்கள் அகப்படாமையின், இதிலுள்ள குதிரையிலக்கணமுதலிய பகுதிகளுட் சிலவற்றிற்குப் பொருள் விளங்கவில்லை ; இதன் குறிப்புரையில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டிய இசை மரபுச்செய்யுள்முதலியன, பழைய உரைகளிற்கண்டவை.

படிப்போரும் தேடுவோருமற்று மூலையிற்கிடந்த இந்நூற் கையெழுத்துப்பிரதிகளிலிருந்த பாடவேறுபாடுகளும் பிழைகளும் அளவுபடுவனவல்ல. ஆதலால், இதைப்பதிப்பித்தகாலத்திலநேர்ந்த உழைப்பிலும் பொருட்செலவிலும் இதனை ஆராய்ச்சிசெய்தகாலத்து நேர்ந்த உழைப்பும் பொருட்செலவும் மிக அதிகம்.

இந்நூலைப் பின்னும் சிலமுறை ஆராய்ச்சிசெய்யவேண்டுமென்கிற விருப்பமிருந்தும் இதனை விரைவிற்பதிப்பித்து வெளிப்படுத்துகவென்று, மதுரைத் தமிழ்ச்சங்கஸ்தாபகரும் பாலவனத்தம் ஜமீந்தாருமாகிய, இராமநாதபுரம், ம-ள-ள-ஸ்ரீ பொ. பாண்டித்துரை ஸாமித்தேவரவர்கள் வற்புறுத்திச் சொன்னமையால், அவர்கள் சொல்லை மறுத்தற்கஞ்சி விரைந்து பதிப்பிக்கத்துணிந்தேன்.

இதனை ஆராய்ச்சிசெய்து பதிப்பிக்குங்காலத்து உடனிருந்து உதவிபுரிந்துவந்த பழைய அன்பர்களுள், திருமயிலை, பி. சுப்பிரமணியம் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதராகிய ம-ள-ள-ஸ்ரீ இ. வை. அநந்தராமையர், சலிப்பின்றி இரவும்பகலும் உடனிருந்துசெய்துவந்த அரிய உதவி மிகச்சிறந்தது ; மறக்கற்பாலதன்று.

---

## கிடைத்த இந்நூற் கையெழுத்துப்பிரதிகள்.

| | | |
|---|---|---|
| திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துப் ... ... | பிரதி. | க. |
| சென்னை இராசாங்கத்துக்கையெழுத்துப்புத்தகசாலை ... | ,, | க. |
| மதுரைத் தமிழ்ச்சங்கத்து ... ... ... ... | ,, | க. |

**களக்காடு**
ம-ா-ா-ஸ்ரீ சாமிநாததேசிகரவர்கள்வீட்டு ... ... பிரதி. க.

**திருநெல்வேலி மேலரதவீதி**
,, கவிராசநெல்லையப்பபிள்ளையவர்கள்வீட்டு ... ,, க.

**வேம்பத்தூர்ப்**
,, பிச்சுவையரவர்கள்வீட்டு ... ... ... ,, க.

ஷை ஊர்
,, சாமாவையரென்கின்ற ஆண்டி ஐயரவர்கள்வீட்டு [சாலி. கசுஎசு. கி. பி. 1753] ,, க.

**கும்பகோணம்**
டவுன்ஹைஸ்கூல் முதல் தமிழ்ப்பண்டிதர்
,, அ. நாராயணசாமி ஐயரவர்கள்தந்த ... ... ,, க.

**மதுரை**
விவேகபானுபத்திராதிபர்
,, மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்கள்தந்த ... ,, க.

**கும்பகோணம்**
மகாதளம்பேட்டை
,, இராமலிங்கதேசிகர்வீட்டு... ... ... ,, க.

பட்டுக்கோட்டையைச்சார்ந்த சிதம்பரவிடுதி
,, கோவிந்த ஐயர்வீட்டு ... ... ... ,, க.

இந்நூலாராய்ச்சிக்காக ஸ்ரீ வாதபுரமாஹாத்மியமாகிய வடநூலைவருவித் துதவியவர், மதுரை ஹைகோர்ட்டுவக்கீல் ம-ா-ா-ஸ்ரீ மு. வேங்கடராம ஐயரவர்கள் குமாரர் சிரஞ்சீவி முத்துராமலிங்க ஐயர்.

இந்நூலுள்ளே ஆங்காங்குள்ள அரியவிஷயங்களைப் பலவகை யாகத் தெரிவிக்கவேண்டுமென்கிற அவா எனக்கு மிகுதியாக இருந் தும் உள்ள அவகாசக்குறைவால் அங்ஙனம்செய்யக்கூடவில்லை.

இப்பதிப்பிற்காணப்படுங்குற்றங்கள் என்னுடையனவென்றெ ண்ணிப் பொறுக்கும்படி பெரியோர்களை மிக வேண்டுகின்றேன்.

இந்நூலைப்போலவே, இனிப்பதிப்பிக்கக்கருதிய நூல்கள் ஒவ் வொன்றையும் கருதியவண்ணம் பதிப்பித்து நிறைவேற்றுதற்பொ ருட்டும் பிரதியுதவி பொருளுதவி ஒப்புநோக்குதல்முதலிய உதவி களை அன்புடன்செய்தவர்கள் பெருவாழ்வடைந்து மகிழ்வெய்தும் பொருட்டும் திருவருள் சுரக்கும்படி சங்கப்புலவர்நடுவில், மதுரைப் பேராலவாயாரென்னும் திருநாமம்பூண்டு வீற்றிருந்து அவர்களுடன் தமிழாராய்ந்தருளிய ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசருடைய திருவடித்தாம ரைகளைச் சிந்திக்கின்றனன்.

சென்னை,
12 - 7 - 06.

இங்ஙனம்,
வே. சாமிநாதையன்.

# இப்புத்தகத்தில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்புக்கள்.



அச்ச - அச்சப்பத்து.
அம்புலி - அம்புலிப்பருவம்.
அயிந்த - அயிந்தவர்கதை.
அழகர்கல - அழகர்கலம்பகம்.
அன்னை - அன்னைப்பத்து.
ஆனந்த - ஆனந்தலகரி.
இடைக்காடன்-இடைக்காடன்பிணக்குத்தீர்த்தபடலம்.
இந்திரன்-இந்திரன்பழிதீர்த்தபடலம்.
இரகு - இரகுவம்மிசம்.
இராச - இராசசூயச்சருக்கம்.
இராசபா - இராசபாரம்பரியம்.
இல. கொ - இலக்கணக்கொத்து.
இலீலா-இலீலாசங்கிரக அத்தியாயம்.
உத்தர - உத்தரகாண்டம்.
உலா - உலாவியற்படலம்.
ஊர்காண் - ஊர்காண்காதை.
ஊர்தேடு - ஊர்தேடுபடலம்.
எல்லாம் - எல்லாம்வல்லசித்தர் திருவிளையாடற்படலம்.
ஒழி - ஒழிபியல்.
கட - கடவுள்வாழ்த்து.
கடம்ப - கடம்பவனபுராணம்.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கல் - கல்லாடம்.
கல - கலம்பகம்.
கலி - கலித்தொகை.
கலிங்க - கலிங்கத்துப்பரணி.
கா - காதை.
கீர்த்தி - கீர்த்தித்திருவகவல்.
குண - குணமாலையாரிலம்பகம்.
குதிரை - குதிரையிட்டசருக்கம்.
குலா - குலாப்பத்து.
கோயின்மூத்த - கோயின்மூத்த திருப்பதிகம்.
சில - சிலப்பதிகாரம்.
சிறுதிற் - சிற்றிற்பருவம்.
சீதைவனம் - சீதைவனம்புகுபடலம்.
சீய - சீயவதைச்சருக்கம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சுந்தர - சுந்தரகாண்டம்.
சுர - சுரமஞ்சரியாரிலம்பகம்.
சூடா - சூடாமணிநிகண்டு.
சூதுபோர் - சூதுபோர்ச்சருக்கம்.
சூர்ப்ப - சூர்ப்பநகைப்படலம்.
சூளா - சூளாமணி.
ஞான - ஞானவாசிட்டம்.
தக்க - தக்கயாகப்பரணி.
தத்துவ - தத்துவராயர் பிரபந்தங்கள்.
தலவி - தலவிசேடப்படலம்.
திருக்காளத்தி - திருக்காளத்திப் புராணம்.
திருக்கோ - திருக்கோத்தும்பி.
திருச்சத - திருச்சதகம்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்.
திருஞா-திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அல்லது ஷை புராணம்.
திருநக - திருநகரச்சிறப்பு.
திருநா - திருநாவுக்கரசுநாயனார் அல்லது அவர் புராணம்.
திருநாட்டு - திருநாட்டுச்சிறப்பு.
திருப்படை - திருப்படையாட்சி.
திருமயிலை - திருமயிலைத் திரிபந்தாதி.
திருவம் - திருவம்மானை.
திருவவ - திருவவதாரப்படலம்.
திருவா - திருவாசகம்.
திருவாத - திருவாதவூரர் புராணம்.
திருவாரூர் - திருவாரூர்ச்சிறப்பு.
திருவிளை - திருவிளையாடல், திருவிளையாட்டுப்படலம்.
திருவெம் - திருவெம்பாவை.
தீர்த்த - தீர்த்தவிசேடப்படலம்.
தே - தேவாரம்.
தொல். பா. விருத் - தொல்காப்பியப் பாயிர விருத்தி.
ந. சச் - நச்சினார்க்கினியம்.

நரிபரி - நரிபரியாக்கியபடலம்.
நாடுகாண் - நாடுகாண்காதை.
நீத்தல் - நீத்தல் விண்ணப்பம்.
பதி - பதிகம்.
பதிற் - பதிற்றுப்பத்து.
பரத்து - பரத்துவாசதரிசனை யத்தியாயம்.
பரிபா - பரிபாடல்.
பா - பாயிரம்.
பார்ப்பதி - பார்ப்பதிப்படலம்.
பார - பாரதம்.
பால - பாலகாண்டம்.
பிரபு - பிரபுலிங்கலீலை.
பிள்ளை - பிள்ளைத்திருநாமம்.
புணர்ச்சி - புணர்ச்சிப்பத்து.
புறஞ்சேரி - புறஞ்சேரியிறுத்தகாதை.
புறநா - புறநானூறு.
பெரிய - பெரியபுராணம்.
போற்றி - போற்றித்திருவகவல்.
மண்சுமந்த - மண்சுமந்தசருக்கம்.
மணி - மணிமேகலை.
மது - மதுரைக்காஞ்சி.
மதுரைக்கல - மதுரைக்கலம்பகம்.
மதுரைப்பதிற் - மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி.
மாணிக்கம் - மாணிக்கம்விற்றபடலம்.
மாலை - மாலையீட்டுப்படலம்.
மிதிலை - மிதிலைக்காட்சிப்படலம்.
மீனாட்சி - மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.
முனிவர் - முனிவர்சதி.
யானை - யானையெய்தபடலம்.
வாரணா - வாரணாவதச்சருக்கம்.
விடை - விடையிலச்சினையிட்டபடலம்.
விருத்த - விருத்தகுமார பாலரானபடலம்.
வேத்திர - வேத்திரகீயச்சருக்கம்.

கணபதிதுணை.

## இந்நூலாசிரியராகிய
# பெரும்பற்றப்புலியூர்நம்பியின் வரலாறு.



இந்நூலாசிரியராகிய பெரும்பற்றப்புலியூர்நம்பி யென்பவர், பாண்டிவளநாட்டுள்ள செல்லிநகரிற் பிராமணவருணத்தில் ஸ்மார்த்தர்களாகிய வேம்பத்தூர்ச்சோழியர்வகுப்பிற் * கௌணியகோத்திரத்திற் சிதம்பரம் ஸ்ரீ ஆனந்தநடராசருடைய திருவடிக்கண் மிகுந்த பத்திச்செல்வம்வாய்ந்த குடும்பத்திற் சனித்தவர். இவர்க்குப் பெரும்பற்றப்புலியூர்நம்பி யெனவும், இவர்பரம்பரையிற்பிறந்தவரும் மதுரைத் திருப்பணிமாலையிற் கூறப்பெற்றவருமாகிய ஒருவருக்கு ஆனந்ததாண்டவநம்பி யெனவும் பெயர்கள் அமைந்திருத்தலையும் இந்நூற் கடவுள்வாழ்த்திற் பெரும்பற்றப்புலியூர்த்துதிமுதலியன அமைந்திருத்தலையும் உற்றுநோக்குகையில், இவர் குடும்பத்தார்கள் சிதம்பரம் ஸ்ரீ ஆனந்தநடராசர் திருவடிக்கண் மிக்க அன்புடையவர்களென்பது வெளியாகின்றது.

இவர்பெயர், தில்லைநம்பி யெனவும் வழங்கும்; வேம்பத்தூர்ச்சோழியர்களில் அநேகருடைய இயற்பெயர்களின்பின் நம்பியென்பது சார்த்தப்பட்டுப் பண்டைக்காலத்தில் வழங்கிவந்ததென்பதை அவர்கள் வீட்டிலுள்ள பழைய ஓலைச்சாதனங்களில் இன்றும் காணலாகும். செல்லிநகரென்பது, செல்லிநாடென்றும் பரசுராம சதுர்வேதிமங்கலமென்றும் செய்யுட்களில் வழங்கப்பெறும்; அக்கிரகாரத்தைச் சதுர்வேதிமங்கலம் அல்லது சதுர்வேதமங்கலமென்றல் மரபு; இது, பழைய சிலாசாதனமுதலியவற்றாலும் விளங்கும்; இந்நகர், இக்காலத்துப் பனையூரென்று வழங்கப்படுகின்றது. இது, சங்கரநயினார்கோயில் தாலூகா, கரிவலம்வந்த நல்லூர்க்குச்சமீபத்தில் உள்ளது; செல்லியாரம்மையென்று பெயருள்ள துர்க்காதேவியைத் தனக்கு அதிதேவதையாக உடைமையின், இவ்வூர் செல்லிநகரென்று பெயர்பெற்றதென்று சொல்லுகின்றனர்.

### [வேம்பத்தூர்.]

வேம்பத்தூரென்பது, பாண்டிவளநாட்டில் மதுரைக்கு வடகிழக்கில் இரண்டுகாதத்தில் வையைநதிக்குவடக்கே உள்ளது; இது நிம்பையென்றும் வழங்கும்; [நிம்பம் - வேம்பு]; பிரமோத்தரகாண்டத்தின் பாயிரத்தில், "தேசான" என்னும் செய்யுளில், "நிம்பை, யீசான மாமுனிவன்" என இப்

* கௌணிய கோத்திரம் - கௌண்டின்னிய கோத்திரம்.

பெயர் வந்திருத்தல் காண்க. பண்டைக்காலத்தில் இப்பெயர் வேம்பற்றூ ரென்றே வழங்கிவந்ததாகத் தெரிகின்றது. மணலூரிலிருந்த குலசேகரபாண் டியனால், இவ்வகுப்பினர்க்கு முன்பு தானஞ்செய்யப் பெற்றதாதலின், இவ் வூர், குலசேகரசதுர்வேதமங்கலமெனவும் பெயர்பெறும்; இவ்வூரைக் குல சேகரபாண்டியர் தானஞ்செய்தாரென்பதை,

> "தனக்கொருபத் தேழு கலிக்கொருபத் தாறு
> புனக்குடிமிக் கோமான் புதல்வன் - மனக்கினிய
> தென்னிம்பை யூரதனைச் சீர்மறையோ ருக்களித்தான்
> கன்னன் குலசே கரன்."

என்னும் பழைய வெண்பாவாலுணர்க.

குலசேகரபாண்டியனென்பவன், அகரமேற்றநினைந்து, சாகேதபுரி யென்ற இடத்திலிருந்து பிராமணர் இரண்டாயிரத்தெண்மரை அழைப் பித்து, அவர்கள் நாமாவலியைப் பதிந்துகொண்டு, முறையே ஒவ்வொரு வருக்கும் மனையும் நிலமும் கொடுத்துக்கொண்டேவந்து, இறுதியில் எஞ்சிய கணபதியென்னும் பெயருள்ளவரை அழைத்தகாலையில், யாதுகாரணத்தா லோ அவர் வரவில்லை; அப்பொழுது, ஸ்ரீ மஹாகணபதி, ஒரு பிரமசாரி வடிவங்கொண்டுவந்து, 'யான் கணபதி' என்று கூறி, அவற்றை ஏற்றுக் கொண்டு மறைந்தருளினர். உடனே அரசன்வியந்து பரவசமுற்று அவருக் கென்று கொடுத்த மனையிற் கோயில்கட்டுவித்து, அதில் அவருடைய திரு வுருவத்தைப் பிரதிஷ்டைசெய்து நிலத்தையும் தேவதானமாகவிட்டனனென் றும் அவ்வூரே இதுவென்றும் ஒரு பழையசரிதம் பாண்டிநாட்டில் கர்ண பரம்பரையில் வழங்கிவருகின்றது. வேம்பத்தூரில் அக்கிரகாரத்திற்குமேற் கே கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மஹாகணபதிக்கு அமைந் துள்ள இரண்டாயிரத்தெண்விநாயகரென்னும் திருநாமமும் இந்தப் பழைய சரிதத்தை வலியுறுத்தும்.

வானரவீரமதுரையிலிருந்த குலசேகரபாண்டியனென்ற ஓரரசன், இர ண்டாயிரத்தெட்டுக் குடும்பத்தார்க்குப் பாண்டிநாட்டில் வேம்பத்தூர்முத லிய உ௦௦அ - ஊர்களைக் கொடுத்தானென்று சொல்லுவதுமுண்டு; இதனை, மதுரைத்துதிமணிமாலையென்னும் புத்தகம் ஒருவகையாகத்தெரிவிக் கின்றது.

வேம்பற்றூரென்பதும் குலசேகரசதுர்வேதமங்கல மென்பதும் இவ்வூர்க் குப் பெயர்களென்பதை இவ்வூர்ப் பெருமாள்கோயிற் கருப்பக்கிருகச்சுவரின் வெளியேயுள்ள சிலாசாஸனத்தால் அறியலாகும்; அகநானூறு, கஙசு - ம் செய்யுளுக்கும், புறநானூறு, ஙகஎ - ம் செய்யுளுக்குமுரிய ஆசிரியரின் பெய ராகிய வேம்பற்றூர்க்குமரனா ரென்பதிலுள்ள வேம்பற்றூரென்பது இவ்வூ ராகவே கருதப்படுகின்றது. இவ்வூர்ப்பிராமணச்சிறுவர்கள் தமிழ்க்கவிசெய் தலில் வல்லுநராயிருந்தனரென்பதைத் தமிழ் நாவலர்சரிதையும் புலப்படுத் தும். இவ்வூர்ப்பிராமணர்களில் அநேகர் வேறுவேறிடத்திற்சென்று தங்கள்தங்

கள் கல்விமிகுதியையும் வருத்தமின்றிச் செய்யுட்களியற்றும்வன்மையையும் நன்குபுலப்படுத்திப் பண்டைக்காலத்திருந்த அரசர்முதலியோர்களால் நன்கு மதிக்கப்பெற்று முற்றூட்டாக அவர்கள்கொடுத்த ஊர்களைத் தமக்கிருப்பிடமாகக்கொண்டு தமிழ்நூலாராய்ச்சி செய்துகொண்டிருந்தார்கள்; ஆனாலும், இவர்கள் வேம்பத்தூராரென்றே எல்லாராலும் அழைக்கப்படுவார்கள். இவர்கள் அங்ஙனமிருந்த ஊர்களுள் இப்பொழுதுதெரிந்தவை: வீரசோழன், அல்லது வீரை, தென்காசி, கீழைப்பாலூர், வல்லநாடு (இது திருநெல்வேலிக்குக்கிழக்கே ஒருகாதத்திலுள்ளது) இருப்பையூருணி (இது கோயிற்பட்டிக்குக் கிழக்கேயுள்ளது), திருநெல்வேலி, கரிவலம்வந்தநல்லூர், கற்குளம் (இது வல்லநாட்டைச்சார்ந்தது) பனையூர், குறுங்காவனம் அல்லது குறுங்களாவனம் (இது கீழைப்பாலூருக்குச் சமீபமானது) என்பன. இக்குழாத்தினரெல்லோரும் ஒரேவிதமான சமயக்கொள்கையை உடையவர்களல்லர்; தங்கள்தங்கள் முன்னோர்கள் தழுவிவந்ததும் வைதிகமாயதுமானகொள்கை எதுவோ அதனையே மேற்கொண்டவர்கள். இஃது அவரவர்கள் இயற்றியநூல்களாலும் தனிப்பாடல்களாலும் விளங்கும்,

பாடுதுறைமுதலிய பற்பலநூல்களியற்றிய தத்துவராயரும், வரதுங்கராமபாண்டியருடைய ஆசிரியராகிய ஈசானமுனிவரும், ஆனந்தலகரி, சௌந்தரியலகரிமுதலிய நூல்களியற்றிய வீரைக்கவிராசபண்டிதரும், ஞானவாசிட்ட நூலாசிரியரான ஆளவந்தார் அல்லது ஆளவந்தான் மாதவபட்டரென்பவரும், பகவத்கீதையியற்றிய ஸ்ரீ பட்டரும், பராபரமாலைபாடிய அம்பிகாபதியும், நெல்லைவருக்கக்கோவைபாடிய திருநெல்வேலிப்பெருமானையரும், ஐயாயிரம்பாடலுள்ள பாகவதமியற்றிய செவ்வைச்சூடுவாரும், அழகர்கலம்பகமியற்றிய கவிகுஞ்சரமையரும், பிரபந்ததீபிகையியற்றிய முத்துவேங்கடசுப்பையரும் இந்தவேம்பத்தூர்ச் சோழிய வகுப்பினரே.

இக்குழாத்தினர்க்கு வேம்பத்தூர்ச்சங்கத்தாரென்றும் ஒருபெயர் பண்டைக்காலந்தொடங்கி வழங்கிவருகின்றதுண்டு; இஃது அழகர்கலம்பகமுதலியவற்றால் விளங்கும்.

முற்காலத்தில் எதேனும் நூலியற்றியதமிழ்ப்புலவர்கள் அந்நூலைக்கொணர்ந்து இவ்வூர்ப்புலவர்களுக்குக்காட்டிச் செவ்வைசெய்வித்து, இவர்களுடைய உடன்பாடுபெற்றபின்பே அந்நூலைவெளிப்படுத்துதல் பெரும்பான்மையான வழக்கமாக இருந்ததென்று பலர்சொல்லக் கேள்வியுண்டு.

கம்பர் தாமியற்றிய இராமாயணத்தை இவ்வூரில்வந்துபடித்துக்காட்டி இவர்களால்நன்குமதிக்கப்பெற்றனரென்பதும், காளமேகப்புலவர் இங்கே வந்து இவ்வூராரில் ஒருவர் * சமத்தியாசக்கொடுத்த, "கண்டங்கத் தரிக் கொத்துக் காய்" என்பதை இறுதியடியாக அமைத்து, கொடுத்தவர் எண்ணிய

* ஸமஸ்யாவென்னும் வடமொழி இங்ஙனம் சிதைந்துவழங்குகின்றதென்பர்.

வண்ணமே ஒருசெய்யுளும் ஆங்கிருந்த வேறுசிலர் விரும்பியவண்ணம் அருமையான சில சிலேடைவெண்பாக்களும் வருத்தமின்றிக் குறித்தகாலத்துட் பாடிமுடிக்க, இவர்கள் நன்குமதித்து இவ்வூருக்குத்தெற்கேயுள்ளதும், "காளமேகந்தாறு' என்று இக்காலத்தில்வழங்கப்படுவதுமாகிய கஉ - மா அளவுள்ள நன்செய்நிலத்தை அவருக்கு முற்றூட்டாகக்கொடுத்தனரென்பதும் கன்ன பரம்பரைச்செய்திகள்.

திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் முதலியோர்களாற் சிறந்தகவிஞரென்று பாராட்டப்பெற்றவரும் சிலவருடங்களுக்குமுன்பு இராமநாதபுரத்தில், பலதமிழ்ப்புலவர்கள் தனித்தனியே கொடுத்தவிஷயங்களை யமைத்து, அவர்கள்குறித்த இரண்டரைநாழிகைக்குள், கஉ - சிலேடைவெண்பாக்களை எளிதிற்பாடி, சிலேடைப்புலியென்னும் பட்டப்பெயரையும் உயர்ந்த சிலபரிசில்களையும் ஸ்ரீ பாஸ்கரஸேதுபதியவர்களாற் பெற்றவரும் தனஞ்சயகோத்திரத்தினரும் மேற்கூறிய வீரைக்கவிராசபண்டிதருடைய வழித்தோன்றலுமாகிய பிரஹ்மஸ்ரீ பிச்சுவையரென்பவரும் இன்னும் சிலவித்துவான்களும் இப்பொழுது வேம்பத்தூரிலுள்ளார்கள்.

இவர்கள் சரித்திரங்களாகக் கன்னபரம்பரையில்வழங்குவனவும் செய்யுள்முகமாக உள்ளனவும் இன்னும் எவ்வளவோபல; அவை விரிவஞ்சி நிறுத்தப்பெற்றன.

கடைச்சங்கப்புலவர்காலந்தொடங்கி இன்றுவரை, தமிழ்மணங்கமழப் பெற்றுப் பற்பலவித்துவான்கள், தமிழ்நூல்களையே ஆராய்ச்சிசெய்துகொண்டும் பாடஞ்சொல்லிக்கொண்டும் நூதனமாக நூல்களியற்றிக்கொண்டும் தமிழ்ச்சுவையைப் பிறருக்குப்புலப்படுத்திவீற்றிருத்தற்கு இடமாகிவிளங்கும் இந்த வேம்பத்தூரின்பெருமை என்போலியரால் எங்ஙனம்சொல்லற்பாலது; * "பாட்டுக்குருகுந் தமிழ்ச்சொக்கநாத"ரே அறிந்தருளுவார்.

சற்றேறக்குறைய முப்பத்தைந்துவருடங்களுக்குமுன்னே இவ்வூருக்கு வந்து இவர்களுடைய தமிழ்ப்பயிற்சியையும் செய்யுள்செய்யும்வன்மையையும் குணவிசேஷங்களையுமறிந்துமகிழ்ந்த பழனி மாம்பழக்கவிச்சிங்கநாவலர் மிக்க அன்புடன் இவ்வூரார்விஷயமாகப்பாடிய வெண்பாக்கள் வருமாறு:—

க. "வேதநூல் வாழிதவ வேள்வித் துறைவாழி
நீதிநூல் வாழி நெறிவாழி - ஓதுதமிழ்
வல்லாராய் நிம்பை வளம்பதிவாழ் மாசனங்கள்
எல்லாரும் வாழி யினிது."

உ. "பொங்குகடல் வாழி புயல்வாழி சீர்வாழி
தங்குநூல் வாழி தமிழ்வாழி - துங்கமிகுந்
தேசமெங்கும் போற்றத் திறல்படைத்த வேம்பத்தூர்
மாசனங்கள் வாழி மகிழ்ந்து."

இந்நூலாசிரியருடைய சரித்திரத்திற்கு அங்கமாக வேம்பத்தூரின் வரலாறு இதுவரையிற் கூறப்பட்டது.

---

* மதுரைக்கலம்பகம், எகூ.

[நூல் இயற்றிய இடம்.]

இந்நூலாசிரியருடையவூர் செல்லிநகராக இருந்தாலும், இதனைப் பாடுங் காலத்தில் இவரிருந்தஇடம், கார்வளங்கொண்மண்டலத்திற் கப்பிஞ்சிநாடென்னும் பெயரையுடைய சிறுநாடென்றுதெரிகின்றது; இதனை, "கார்வளங் கொண் மண்டலத்துக் கப்பிஞ்சி நாட்டுறைத்தோன்" [பக்கம் - உஉஅ] என்னும் நூற்சிறப்புப்பாயிரத்தாலுணர்க; கார்வளங்கொண்மண்டலமென்றதை மதுரைக்குக்கிழக்கேயுள்ளதான மழைக்குப்புணைகொடுத்தமங்கல நாடென்று சொல்லுகின்றனர்.

[பெற்றபரிசில்.]

இந்நூலை ஆக்குவித்தோனாகிய * பாண்டியனொருவன் மிக்கசிறப்புடன் இதனை அரங்கேற்றுவித்துப் பல்லக்குமுதலிய விருதுகளையும் பல இரத்தினாபரணங்களையும் கொடுத்தளித்தானென்றும், அப்பொழுது இந்நூலாசிரியர் மகிழ்ந்து, "பல்லக்கு மேலேறி †" (பக்கம், உஉஅ) என்னும் வெண்பாவைப் பாடினாரென்றும், பின்னர் அவன்மகிழ்ந்து இவருடையசனனபூமியாகிய செல்லிநகரையும் அதனைச்சார்ந்த ஊர்களையும் இவரும் இவர் பரம்பரையோரும் அனுபவிக்கும்படி முற்றூட்டாகக்கொடுத்தானென்றும், அதுபற்றிச், செல்லியூரும் அதனைச்சார்ந்த ஊர்களும் செல்லிநாடென்று வழங்கப்பெற்று வந்தனவென்றும், இவர் பரம்பரையோர் மிகுந்த செல்வமுடையவர்களாகிப் பலதருமங்களைச்செய்து விளங்கினார்களென்றும் சொல்லுகின்றனர். இதனை,

"கன்னலுஞ் செந்நெலுஞ் சூழ்செல்லி நாடன் கவுணியர்கோன்
நன்னர்க ளெண்ணிய வானந்த தாண்டவ நம்பிகற்பாள் ‡.
தென்னவர் போற்றிய வங்கயற் கண்ணமமை செல்விதிருச்
சன்னிதிக் கோபுரங் கட்டின டன்மந் தழைக்கவென்றே."

என்னும் மதுரைத்திருப்பணிமாலைச்செய்யுளும் வலியுறுத்துகின்றது.

[காலம்]

மேற்கூறிய செய்யுளிற் கூறப்பட்டுள்ள ஆனந்ததாண்டவநம்பி அம்பிகையின் சந்நிதிக்கோபுரம் கட்டுவித்தகாலம், சாலிவாகனசகாப்தம், ககரு0 [இ. பி. கஉஉஎ - கஉஉஅ; கொல்லம் சா0உ - சா0ந] என்று மதுரைக் கோயிலொழுகு தெரிவிக்கின்றமையால், ஆனந்ததாண்டவநம்பியென்பவர், இற்

* இப்பாண்டியனைச் சரிவலம்வந்தநல்லூரில் அரசுபுரிந்த வரதுங்கராம பாண்டியரென்று சிலர் கூறுகின்றனர்.

† இவ்வெண்பாவிலுள்ள, 'பல்லக்குமேலிட்டோம்' என்பதற்குப் பல இரத்தினாபரணங்களை மேலே அணிந்தோமென்று பொருள்கொள்க.

‡ கற்பாள் - பத்தினியார்; மனைவியார். ஆனந்ததாண்டவநம்பியே கோபுரம்கட்டியதாக மதுரைக் கோயிலொழுகு தெரிவிக்கின்றது; அஃது எழுதினோரால் நேர்ந்தபிழையோ வேறுயாதோ உண்மைவிளங்கவில்லை.

றைக்கு, ௬௭௬ - வருடங்களுக்கு முந்தியிருந்தாரென்றுமட்டும் ஒருவாறு தெரிகின்றது; அதற்குமுன், இந்நூலுடையார்காலம் இவ்வளவினதென்று தெரியவில்லை.

[ஞானாசிரியர்.]

சிதம்பரம் மாளிகைமடத்திலிருந்த வேங்கடாசலருடைய சிஷ்யராகிய விநாயகரென்பவர், இவருடைய ஞானாசிரியர்; இதனை இந்நூற் கடவுள் வாழ்த்து, உ௩ - ம் செய்யுளாலுணர்க. இங்கேகூறிய மாளிகைமடத்துத் தலைவரொருவர், வேதாரண்யபுராணப் பாயிரத்திலும் திருக்கானப்பேர்ப் புராணப் பாயிரத்திலும் துதிக்கப்பெற்றுள்ளார்.

[குணவிசேடங்கள்.]

இந்நூலாராய்ச்சியால்விளங்கிய ஆசிரியர் குணவிசேடங்கள் பல; அவை, வேதாகமங்களில் மிக்க பிரீதியுடைமை, வடமொழிப்பயிற்சி, தமிழ்ப்பாஷையில் மிக்க அன்பு, தமிழில் ஐந்திலக்கணவுணர்ச்சி, சங்கத்தமிழ்நூல் முதலியவற்றிலும் பழையவுரைகளிலும் தேவாரதிகளிலும் திவ்யப்பிரபந்தங்களிலும் மிக்கபயிற்சி, நடுவுநிலைமை, எல்லாவருணத்தாரிடத்தும் எல்லாச்சாதியாரிடத்தும் அன்புடைமை, சிவபக்தி, அடியார்பக்தி, சிவசின்னங்களில் அன்புடைமை, தம்முடையகருத்தைப் பிறர் எளிதில் அறிந்துகொள்ளும்வண்ணம் செய்யுள்செய்யும் வன்மை, அங்ஙனம்செய்யும் செய்யுட்கள் படிப்பவர்களுடைய மனங்களைக்கவரும்படி இடத்துக்கேற்ற சந்தங்களில் அவற்றை அமைத்தல், பலவகைத் துதிசெய்யுமழகு, வடநூற்கருத்துக்களை அங்கங்கேயமைத்தல், பிறரை நல்வழிப்படுத்தநினைத்தல், சரிதங்கூறுகையில்,பரமகருணாநிதியாகிய சிவபெருமானுடைய திருவருளின்பெருமையை நினைந்துநினைந்து மனமுருகி இடையிடையே செயலற்றிருத்தல் என்னும் இவையும் பிறவுமாம். இங்கே எடுத்துக்கூறியவையெல்லாம் இந்நூல் அரும்பதவகராதிமுதலியவற்றைப் பார்ப்பவர்களுக்கு இனிதுவிளங்கும்.

---

## நூலாராய்ச்சி.

[நூலிலுள்ள முக்கியமான சிலகுறிப்புக்கள்.]

பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடலுக்கும் இதற்குமுள்ள வேறுபாடுகள் பலவற்றுள், ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் வையைநதியை அடைத்தற்குக் கூலியாளாகவந்து வேலைசெய்யாமல் உழப்பியபொழுது, பாண்டியனுடைய ஏவலாளர்கள்சினந்து அவர்முதுகில் அடித்தாரென்று ஆசிரியர் கூறியிருப்பதொன்று, * (௬0) ௬௭ - ம் செய்யுளைப்பார்க்க; பலநூல்கள் பாண்டியனே அடித்

---

* இங்கேகாட்டிய எண்களுள், ( ) இவ்வடையாளத்திற்குட்பட்டது திருவிளையாடலையும் ஏனையது பாடலையும் புலப்படுத்துவன; பின்வருவனவற்றையும் இப்படியேகொள்க.

தானென்று கூறியிருக்கவும் இவர் இங்ஙனம் கூறியதற்குக்காரணம் இன்ன தென்றுபுலப்படவில்லை; இந்நூலைச்செய்வித்த அரசனுடையவேண்டுகோளாக இருத்தல்கூடுமென்பது சிலருடையகருத்து; "அந்தநாள் பிட்டுக் காக மண் சுமந்த வரனைமன் னவன்றன தாளா, மைந்தரி லொருவ னடித்ததாத் துணிந்தோர் வண்டமிழ்க் கவிஞரு ளினனே" என்பது, புலவர்புராணம், திருவாதவூரர், ருஅ.

பழையநூலாசிரியர்களும் பழைய உரையாசிரியர்களும் பாண்டியர்களிற் சிலரைத் தெய்வப்பாண்டியரென்றுகூறுதல் மரபு. இந்நூலாசிரியர் அதனைத் தழுவி, சுந்தரமாறனை, "தெய்வப்பாண்டியன்" (கட. கக) என்றும், "தெய்வவான்வழுதி" என்றும் கூறியிருக்கின்றனர்; (சு) ௪.

ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயில், இத்தலத்துள்ளகோயில்கள்பலவற்றிற்கும் காலத்தால்முந்தியதும் பெரியதுமாதலின், அதனைவிளக்கவேண்டி, இந்நூலாசிரியர், அதனைத் தொல்லையாலயமென்றும் பெரியகோயிலென்றும் அங்கங்கேவழங்குவர்; இத்தலத்திற் கோயில்கள் பலவுள்ளனவென்பதை, "நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலு, முவணச் சேவ லுயர்த்தோ னியமமு, மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமுங், கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்" (சில. ஊர்காண். எ - கo) எனவும், "வடதிரு வால வாய்திரு நடுவூர், வெள்ளி யம்பல நள்ளா றிந்திரை, பஞ்சவ னீச்சர மஞ்செழுத் தமைத்த, சென்னி மாபுரஞ் சேரன் றிருத்தளி, கன்னிசெங் கோட்டங் கரியோன் றிருவுறை, ........ ஒருபரங் குன்றஞ், சூழ்கொள விருந்த கூடலெம் பெருமான்" (கல். "நெடுவரைப் பொங்கர்", - கூக) எனவும் வருவனவற்றாலுணர்க.

இந்நூலாசிரியர், இலைமறைகாய்போற் பழையநூல்களில் அங்கங்கே மறைந்துகிடந்த அரியசெய்திகளை இந்நூலுள் உரிய இடங்களில் அமைத்து விளக்கிச்செல்லுகின்றனர். இதனால், நெடுநாளாகஇருந்த ஐயங்கள் ஒருவாறு தீர்வனவாயின. அவற்றுள், சில வருமாறு:—

க. 'நான்குமாடங்கள் கூடுதலின் நான்மாடக்கூடலென்றாயிற்று. அவை திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர்; இனி, கன்னி, கரியமால், காளி, ஆலவாயென்றுமாம்' என்பது, கலித்தொகை, கூஉ-ம் பாடல், நச்சினார்க்கினியம். இந்தவுரையில் முன்னுள்ள திருவாலவாய்முதலியநான்கும் இன்னவையென்று இந்நூல், சஎ - ம் திருவிளையாடலாலும் பின்னுள்ள கன்னிமுதலியநான்கும் இன்னவையென்று இந்நூல் திருநகரச் சிறப்பிலுள்ள, கஉ - ம் பாடல்முதலிய நான்கனாலும் ஒருவாறு விளங்குதல் காண்க.

உ. 'நீலமணியின்குற்றம்வந்தவழிக்கண்டுகொள்க' என்பது, சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, ௧௯௦ - ம் அடி, அடியார்க்குநல்லாருரை; நீலத்

தின்குற்றம் பன்னிரண்டென்றும் அவற்றின்பெயர்கள் இவையென்றும் இந்நூல், உரு - ம் திருவிளையாடலிலுள்ள கக - ம் செய்யுளால் விளங்குகின்றது. இதனால், அடியார்க்குநல்லாரிலும் இந்நூலாசிரியர் தமிழ்நூலாராய்ச்சியில் மிக்கவரென்பது வெளியாகின்றது.

## துதிவகைகள் :

கடவுள்வாழ்த்திலன்றி நூலுள்ளே அங்கங்கேவந்துள்ள விநாயகர்துதி முதலியன, யாவரும்படித்தறிந்து இன்புறுதற்பாலன ; அவை வருமாறு :—

**விநாயகர்துதி :** (உஎ) உச. †

**சிவஸ்துதி :** (உஎ) சுசு, எஅ, (ஙசு) கo, கக, கஉ;—இவைமுற்றும் துதியாகவுள்ளகவிகள். (உ) ச, (எ) உ, (கஎ) உ, (உச) ங, (உஎ) உஎ, சுரு, (உஅ) அ, க, (ஙரு) உக, ஙo, (ஙக) கஉ, (சக) எ, (சங) உச, (சக) ரு, (ருச) கஎ, (ருஎ) கஅ, (சுஉ) உங ;—இவை சிலஅடிகள் துதியாகவுள்ளகவிகள்.

**அம்பிகைதுதி :** (உஎ) உசு.

**திருஞானசம்பந்தர்துதி :** (ஙஎ) ஙo.

**மூர்த்திநாயனார்துதி :** (ருக) கரு.

## நூலாசிரியர் கூற்றுக்கள் :

நூலாசிரியர்கூற்றுக்களாக இந்நூலுள் அங்கங்கே காணப்படுங்கவிகள் பல உள்ளன. அவை ஒருபகுதிப்பட்டனவல்ல ; அவை வருமாறு :—

க. உலகத்தாரைநோக்கிச் சிவபெருமானுடைய திருவருளின்பெருமையை இவர் கூறுதல்போலவும் பிறர்கூறுதல்போலவும் உள்ளன : (திருநாட்டுச் சிறப்பு.) கச, (உஎ) க, (ஙக) உஉ, (ஙஉ) உரு, (ஙச) கக, (ஙஅ) எக, (சச) ருஅ, (சரு) கஅ, (சசு) ஙக, (ருச) ருo, (சுங) உக.

உ. திருவிளையாடல்களைச் சொல்லிக்கொண்டுபோகையில் அன்பின் மிகுதியால் இடையிடையே இவருடையமனம் உருகியதென்பதைப் புலப்படுத்துவன : (ஙo) ஙக, (சஅ) ஙஎ.

ங. ஒவ்வொருபகுதியின் இறுதியிலே சரித்திரத்தின் அருமையைநினைந்து மனமுருகிச்செய்துள்ள சிவஸ்துதியாகவுள்ளன : (ரு) எ, (எ) கக, (ஙo) ருசு, (ஙஉ) உரு, (சஅ) சக, (ருo) கஅ.

ச. படிப்பவர்களும் கேட்பவர்களும் அடையும்பயனைப் புலப்படுத்துவனவாய்ச் சிலபகுதிகளின் இறுதியிலுள்ளன. (ஙஅ) எஉ, (ருசு) கக.

---

* துதிவகைகளும் இவற்றின்பின்னுள்ளவைகளும் விரிவஞ்சிச் சுருக்கமாக இங்ஙனம் எடுத்துக்காட்டும்படி நேர்ந்தது.

† [ ( ) இவ்விடையாளத்திற்குட்பட்ட எண்கள் திருவிளையாடல்களையும், ஏனையவை பாடல்களையும் புலப்படுத்துவன.]

ரு. பாவத்தால் ஒருவர்வருந்துவதைக்குறித்து வருந்துதலையும், புண்ணியத்தால் ஒருவர் மகிழ்தலைக்குறித்து மகிழ்தலையும் புலப்படுத்துவன: (௩௪) ௨, ௪, (௩அ) ௫க, (௬க) ௨௩.

௬. திருவிளையாடற் சம்பந்தத்தாற் பெருமையடைந்த சிலசாதியாரின் விசேடத்தைக்கூறுவன: (௨௩) ௨௫, (௫௯) கஅ.

இங்ஙனம் வருவன இன்னும்பல.

## பொருளணிகள் :

இவருடையவாக்கிற் பலவகைப்பொருளணிகள் அங்கங்கேவந்துள்ளனவெனினும் மிகுதியாகக்காணப்படுவன, கருத்துடையடையணியும் கருத்துடையடைகொளியணியுமே; அவைவந்துள்ளவற்றுட் சிலஇடங்கள்வருமாறு: (எ) ௨, (கக) க, (க௬) அ, (௩௬) எ, (௩௯) க௨, (௪௨) அ, (௪௪) அ, க௩, (௪௬) கக, (௪எ) ௯, (௫௬) க0, (௬௨) க௩, கஎ, ௩௪, ௩௯.

## சொல்லணி:

### சொல்லணியைச்சார்ந்த மடக்கணிகளை இந்நூலிற் பரக்கக்காணலாம்; அவை வருமாறு:

[எண்கள் பக்க எண்கள்.]

அத்தியிலத்தி சொரிந்ததால்-யானையானது இலத்தியைச்சொரிந்தது. ௬௬.

அருகரருகராக்கண்டேம் - சைனர் பாண்டியனைச் சமீபித்தவராகப் பார்த்தேம். க௨அ.

ஆவிசேர் தண்ணீர் வேட்டங்காவி சோர்ந்து: ஆவி-தடாகம், உயிர். க௫௫.

இடையிடையும்படி: இடையும்படி - வருந்தும்படி. கக௨.

உக்கிரமாய் நனிவரக்கண்டு உக்கிர வேல் விறற்செழியன். ரு௨.

கடல்வலிய சத்திவிடச் சத்திவிட்ட காவலன்: சத்தி - வலி, வேல். ௫௩.

கரிகரியாக - யானை கரியாக. ௬௬.

கனககோ கனகவாவி - பொற்றாமரைவாவி. கஅ.

கூடமதாகக் கற்பித்தருளினன் கூடமில்லான்: கூடம் - மாளிகைவிசேடம், வஞ்சனை. ௩௫.

கைதவகேள் கைதவமாகாது - பாண்டியனே கேட்பாயாக; உனக்கு வஞ்சனையாகாது. ௨0௪.

கைதவமோவில்லை கைதவ. ௪௩௬.

கோதைதன் பரிசனத்தால்... பரிசனங்களோடும். க௯௯.

கோலக்கோலம் - பன்றித்திருவுருவம். ௨க0.

சந்திர மாவளித்தான் சந்திர மாகுலத்தான்: சந்திரமா - பொற்குதிரை. ௨க௬.

சம்புமா சமாதியாலே சம்புமாத்தாழ்க்க: சம்புமா - சிவபெருமானுடைய பெரிய, நரிகளாகிய குதிரைகள். அ௨.

சரங்கொடுஞ் சரம்போற்றைப்பச் சரங்கொண்டாள் சரமிலாதாள். ௨0௬.

செட்டியாஞ்செட்டி - வைசியர்குலத்திற் பிறந்த உருத்திரசன்மராகிய முருகக்கடவுள். ௫0.

செட்டியுஞ் செட்டியா யுதித்தான் ௫௪.

தாணு தாணுவே யெனவிருந்தான்: தாணு - சிவபெருமான், குற்றி. அ௫.

துதிக்கையின்றித் துதிக்கையால் வளைத்தெடுத்து: துதிக்கை - துதிசெய்தல், தும்பிக்கை. ௫௩.

நரிகாணரியாது. அக.

[எண்கள் பக்க எண்கள்.]

நாமனித்த வேலையற நாமனித்த வேலையெறி: நாமனித்த வேலை - அச்சத்தைஉண்டுபண்ணிய கடல், யாம்கொடுத்த வேற்படையை. ருஉ.

பத்திரங்கொடுத்தொதுங்கிப் பத்திரன் பணிந்து நின்றான்: பத்திரம்-திருமுகம்; பத்திரன்-பாணபத்திரர். ககள.

பயங்கொண்டு வந்ததெவரும் பயங்கொள்ள: பயம் - நீர், அச்சம். கூச.

புயலகத்துப் பெரும்புயல்: புயல் - மேகம், நீர். ருடு.

பைங்கண் வேழத்தை...செங்கண்வேழம்: வேழம்-கரும்பு, யானை. ரு அ.

மாலையங்குழல்சேர் பாணர் மாலையர் மாலையெய்தி: பாணர்மாலையர்-பாணர் மகளிர்;விறலியர். மாலை-மயக்கத்தை. ககூஉ.

மாலையைக் கழுத்திலிட்டோர்மாலை நின்றுலாவ. உ0சு.

மாறன்மாறி: மாறன் - பாண்டியன். உ0ரு.

மாறனுழ்துயர் கெட மாறியாடினார்: க0டு.

மாறான்மாறனென்றுங்கரும்பெயர் பெற்றோன். கூக.

வளையிறால் வளைத்தனன். ருள

வாசியை வாசியாக - குதிரையை விசேடமாக. அடு.

விடை விடைகொண்டு - இடபம் விடுத்தல்கொண்டு. க2௦; "சொல் விடைகேட்டுச் செல்விடை வெம்புர்" என்பது மதுரைமும்மணிக்கோவை, உஅ.

வேடனிடு சூடினிய கேடிறசை நாடுபவ, வேடனுடல் வீடவடுவோர். ரு.

வேலையை யேவ வேலை வேலைநல் வேலையென்று: வேலை-கடல், காலம், தொழில். ருச.

---

இந்நூலில், வேறுபொருளின்றி வினைமுதலியகாரணங்களால், சொற்கள் அடுக்கிவருதலுங் காணப்படும்; அவை வருமாறு:

அஞ்சேனஞ்சேன்: ககூ0.
அரகர. கூள.
இடந்தருமிடந்தரும்: ச0.
உதவுவமுதவுவம். களக.
என்கையில் வளைநெரிந்த தென்கையில் வளைநெரிந்தது: ருள.
என்னைவிடென்னைவிடு: ருள.
எனக்கெனக்கு: ருள.
ஒக்குமொக்கும்: சள.
காத்தருள் காத்தருள்: களகூ.
சிவசங்கர சிவசங்கர: ககூஉ.
தருமநெறி தருமநெறி: கக.
திருச்சிற்றம்பலந்திருச்சிற்றம்பலம்: உ.
திருவம்பலந்திருவம்பலம்: உ.
துயிலுணர்தி துயிலுணர்தி: ருஉ.
நல்ல நல்ல: ருள.
நில்லும் நில்லும்: ருள.
நிறைந்தன நிறைந்த: களள.
பொன்னம்பலம் பொன்னம்பலம்: உ.
போனது போனது: கடு.
வணங்குமினீர் வணங்குமினீர்: சக.
வந்துபோம் வந்துபோம்: ருஅ.
வரும் வரும்: அஉ.
வளர்ந்திட வளர்ந்திட: ச0.
வளைத்திடும் வளைத்திடும்: அ0.
வளையல்கொள்ளும் வளையல்கொள்ளும்: ருள.
விடு விடு: கூக.
விடும் விடும்: சக, எஅ.

---

இதில் அவ்வவ்விடத்துவந்துள்ள

## ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளின் அருமைத்திருநாமங்கள்:

அடிமைக்கு நல்லவர். உஉடு.
அடியவர்க்கெளிய சுந்தரன். சசக.
அடியவர்க்கெளிய சொக்கன். க0ச.
அடியவர்க்கெளியவர். ருரு, கூள.
அடியவர்க்கெளிய வெம்பெருமான். சுசு.

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]



[இத்திருநாமங்கள், இத்தலத்தொடர்புள்ள நூல்களிலும் பிறநூல்களிலும் பயின்று வந்திருத்தலின், இங்கே எடுத்துக்காட்டப்பெற்றன. இவற்றுள், ஒன்றன் பரியாயங்களாக உள்ளவற்றையும் அடைமொழிகளால் வேறுபட்டுள்ளவற்றையும் ஆராய்ந்தறிந்து கொள்க.]



# இந்நூலால்தெரிந்த ஊர்களின்பெயர்கள் முதலியன.

## (க)—ஊர்கள்:

**ஆளுடையார்கோயில்**-திருப்பெருந்துறை; சிவபெருமான் ஆசிரியவடிவங்கொண்டு திருவாதவூரடிகளை ஆட்கொண்டருளிய இடமாதலின், இஃது இப்பெயர்பெற்றது. இது துறையெனவும் வழங்கும். எஉ, எசு, அக.

**இராமேச்சரம்**. கசு.

**இருஞ்சிறை** - பாண்டியராசன் மேகங்களைக்கட்டிச் சிறைப்படுத்திய இடம்; 'கட்டுநல்லூரிருஞ்சிறை' எனவழங்கும்; மானாமதுரை (வானரமதுரை)க்குச் சமீபமானது; கசுஉ.

**உத்தரகோசமங்கை**. ருரு, ருசு, கoo.

**உப்பூர்** - உருத்திரசன்மனாருடைய ஊர்; இதில் இராமராற்பூசிக்கப்பட்ட விநாயகராலயமொன்றுண்டு; இவ்வூர் பாம்பக்குடிக்கு ஈசானத்திலுள்ளது. சகூ.

**ஏழூர்கள்** - மேகத்துக்குப்பிணைகொடுத்த உபகாரியினுடைய ஊர்கள்; இவை களவேள்விநாட்டிலுள்ளவைகள்; இவற்றுளொன்று நாமனூரென்பது. கசுச.

**கட்டுநல்லூர்** - பாண்டியராசன் மேகங்களைப் பிடித்துக்கட்டிய இடம்; இஃது இருஞ்சிறைக்குச்சமீபமானது. கசுஉ.

**கழுவர் படைவீடு** - இது சமணர்கள் ஏறிய அ000- கழுமரங்களின் வரி

[எண்கள் பக்க எண்கள்.]

சைமுடிந்த கிழைக்கோடியாகிய இடத்திலுள்ளது; திருப்பூவணத்தின் பக்கத்தது; இக்காலத்துக் கழுவேறுமடை, கழுவேறுகடையெனவழங்கும்; கழுக்களின்வரிசைமுடிந்த மேலைக்கோடியில், மேலைக்காலென ஒரூருள்ளது. கஙள.

**காசி.** எ.

**காவண நல்லூர்.** தாகம்தீரும்பொருட்டுக் குளமுதலியவற்றிலுள்ள ஜலத்தையுண்ட குண்டோதரன், மனிதர்களுடைய ஜலகஷ்டத்தைத் தீர்க்கும்பொருட்டுச் சிவபெருமான் கட்டளைப்படி உண்டாக்கிய நீர்நிலைகளுள், பந்தர்சூழ்ந்த நீர்நிலையையுடையவூர்; காவணம் - பந்தர். ங0.

**காவிரிப்பூம்பட்டினம்.** இது பட்டினமெனவே அக்காலத்து வழங்கிவந்தது. சுஉ, உகசு.

**காளையார்கோயில்.** எஉ.

**கொடுங்கோளூர்** - கழறிற்றறிவார் நாயனாருடைய இராசதானி. ககஎ.

**சிதம்பரம்.** உ, சOO.

**சீகாழி.** சஉஉ.

**செல்லிநகர்.** இஃது இந்நூலாசிரியருடைய ஊர்; செல்லிநாடெனவும் பரசுராம சதுர்வேதிமங்கலமெனவும் கூறப்படும். உஉஅ.

**தனிச்சயம்:** இது பாண்டியன் இந்திரனைத்தனித்துநின்று சயித்த இடம்; மதுரைக்குமேற்கேயுள்ளது; திருப்புகழ்பெற்ற, முருகக்கடவுளின் ஆலயத்தையுடையது; 'ஐயங்கோட்டைத் தனிச்சயம்' எனவழங்கும்; ககூங; "பச் சிமத்திசைக் குளுத்தமத் தனிச்சயத் தினிற்பிளைப் பெருமாளே" (திருப்புகழ், சுஉ0)

**திருநெல்வேலி.** கூ.

**திருப்புத்தூர்** கஉங.

**திருப்புறம்பயம்.** உகஎ.

**திருப்பூவணம்.** கஙஎ, கசுரு.

**திருமருகல்.** உஉக.

**திருவாதவூர்.** சுஅ, அக.

**திருவிடைமருதூர்.** இது, திருவிடைமருதெனவும் வழங்கும். கஎரு.

**திருவேடகம்.** கஙக.

**நரிக்குடி.** இஃது ஆளுடை நாயகர் நரிகளைக் குதிரைகளாக்கிய இடம்; புதுக்கோட்டையைச்சார்ந்த மிழலைநாட்டிலுள்ளது. அக.

**நாமனூர்.** மேகத்திற்குப் பிணைகொடுப்போர்யாரென்று பாண்டியன் கேட்டபொழுது, வந்த மற்றையோரைத் தள்ளிவிட்டு, 'நாம் முன்' என்று சொல்லிக்கொண்டு பிணைகொடுத்தற்குவந்த உபகாரியினுடைய ஊர்; இது, களவேள்விநாட்டிலுள்ள எழூர்களுள் ஒன்று. கஙச.

**பட்டமங்கலம்.** இது, சோமசுந்தரக்கடவுள் அட்டமாசித்தி அருளிய ஊர்; பட்டமங்கையெனவும் வழங்கும்; சிவகங்கையைச்சார்ந்தது; கருஉ.

**பரசுராம சதுர்வேதிமங்கலம்**- செல்லிநகர். உஉஅ.

**பழமதுரை.** இது கடல்கொள்ளவந்த மதுரை; இஃது இப்போதுள்ள மதுரைப்பதிக்குக் கிழக்கேயிருந்ததாகத் தெரிகின்றது; "தமிழொடுபிறந்து பழமதுரையில் வளர்ந்தகொடி" (மீனாட்சி. சப்பாணி. க - ரு); பழமதுரைமேடென்ற ஓரிடமும் பழமதுரைமுனியென்ற ஒருமுனியின்கோயிலும் அங்கேயுண்டு. ருஉ.

**பெருங்கிராமம்.** சோமசுந்தரக்கடவுள் விருத்தகுமார பாலராகியருளும்படி பத்திபுரிந்தொழுகிய மங்கை அவதரித்த ஊர். சOக,

**மணலூர்** - பாண்டியர்களின் பழைய இராசதானி; மணற்புரமெனவும் வழங்கும்; மதுரைக்குக் கிழக்கேயுள்ளது; பாரதசம்பு முதலியவற்றிற்கூறப்பெற்றது இதுவே; கஅஅ.

**மாடக்குளக்கீழ்மதுரை.** மாடக்குளமென்பது மதுரைக்கு மேற்கேயுள்ளதோரிடம்; இஃது ஒருதாலுகாவாகவும் இருந்தது; அவ்விடத்தில் ஒரு குளமுண்டு. 'மாடக்குளம் பெருகினால் மதுரைபாழ்' என்ற ஒரு பழமொழி வழங்குகின்றது. ஙசு.

[எண்கள் பக்க எண்கள்.]

## (௯)—திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகங்கள் :

'சடையாய்' ௨௨௧.
'செய்யனே' ௧௨௬.
'தளிரிளவளர்' ௧௩௩.
'தேனுறவன்னி' ௧௩௮.
'நீலமாமிடற்று' ௧௨௫.
'பிரமனூர்' ௧௨௮.
'போகமார்த்த' ௧௩௩.
'மங்கையர்க்கரசி' ௧௨௫.
'மந்திரமாவது' ௧௨௬.
'மானினேர்விழி' ௧௨௮.
'வாழ்கவந்தணர்' ௧௩௫.
'வானிற்பொலி' ௧௨௩.
'வேதவேள்வியை' ௧௩௨.
'வேயுறுதோளி' ௧௨௩.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், அறங்கரைநாவினர், காழிநகர்ப்பெருமான், கொச்சைமுனி, கொச்சைப்பாலர், கௌணியர்கோன், சிரபுரப்பாலர், சோழியவைதிகச்சிறுவர் "வருவாரொரு சோழியவைதிகனும்" (தக்க. ௧௮௬), ஞானபூரணர், ஞானமாமுனிவர், ஞானவேந்தர், நாலுகவிப்பெருமாள், பொய்யிலாயானை, மறைஞானி, வாதுசெய்தவாரணம், வைதிகவாரணம் என இந்நூலுட் பாராட்டிக் கூறப்படுகின்றனர்.

## (௧௦)—திருவிளையாடற் சம்பந்தமான சில பழமொழிகள் முதலியன :

அடியார்க்குநல்லார்பத்திரம். ௧௧௮.

அழகியசொக்கனென்னும் தோலாக்கை. ௧௧௮.

ஆபத்துக்குத் தெய்வமேதுணை. (கருத்து) ௧௬௭.

இலச்சினைவாயில். ௬௧.

உடையவனறிந்திடாத சரக்கிலை. ௫௬.

காமனுக்குக் கண்ணில்லை. ௧௬௫.

கொல்லொணுப்படை எவர்க்கும் வெல்லொணாது. ௧௨௦.

சடைகொடு வெருட்டல்வேண்டா. ௪௫.

சொக்கன்றூசு. ௬௦.

தன்னைக்கொல்லவந்ததாயினும் பசுவைக்கொல்லலாகாது. ௧௨௦.

நெற்றிக்கண்காட்டினும் குற்றம் குற்றமே. ௪௫.

பட்டகுணம் சுட்டாலும்போகாது. ௧௪௨.

பாணர்தம்மடியார் பரதேசம்போனால் விறகையும் சுமந்துகொண்டுமீள வருவார். ௧௬௫.

பார்ப்பான்முறையீடு பசுப்பாய்ச்சலோடுசரி அல்லது முட்டிப்பார்ப்பான் முறையீடு மொட்டைப்பசுவின் பாய்ச்சலொடு விட்டுப்போனது. ௧௧௧.

மன்னவனெப்படி மன்னுயிரப்படி. (கருத்து) ௨௦௩.

மின்னுமலிடிக்குமா. ௬௨.

## (௧௧)—தீர்த்தங்கள் :

எழுகடல்: ஒருதடாகம்; காஞ்சனமாலைக்காக வருவித்த எழுகடல்களும் தன்பால்வந்து அடங்கப்பெற்றமையின், இஃது இப்பெயர்பெற்றது; இதன் நிருதிமூலையில் மிகப் பழையதாகக் காஞ்சனமாலைகோயிலென்று இருக்கின்றது. ௩௧.

கங்கை. ௭, ௧௧௨, ௧௪௮.

கம்பளை-ஒருநதி; இஃது இலங்கைத்தீவிற் சமனொளிமலையிலிருந்து உண்டாவது; ௬௨.

கல்லணை-ஒருநதி; இலங்கைத்தீவிற் சமனொளிமலையிலிருந்து உண்டாவது; ௬௨.

கன்னியாகுமரி. ௧௧௨.

காவணவாவி. ௩௦.

காவிரி. ௧௨௩.

கொண்டாழி-சேரழனை உட்கொண்டு ஆழ்த்தியதோரோடை. ௭, ௧௫௦.

சரவணப்பொய்கை:— இது திருப்பரங்குன்றத்திலுள்ளதோர் தீர்த்தம்; ௧௬௦.

பூதங்கண்டகுளம்:— இது திருப்பரங்குன்றத்திற்கு வடக்குள்ள தோ

[எண்கள் பக்க எண்கள்.]

சேரி; 'தென்காற்கம்வாய்' எனவழங்கும்; குண்டோதரனாகியபூதத்தால் வெட்டப்பட்டது; இதன்கரை பூதங்கண்டகரையென இக்காலத்து வழங்கும்; இதற்குச் சமீபத்திற் கூடைதட்டிப் பறம்பெனச் சிறியமலையொன்றுண்டு; வெட்டியமண்ணையெடுத்துக் கரையிற்கொட்டிய கூடையைக் குண்டோதரனாகியபூதம் இதில்தட்டியதென்பர்; ௩௦.

பொற்றாமரைப் பொய்கை. கஅ, கசக.

மணிகர்ணிகைத்துறை. எ.

மாவலிகங்கை - ஒருநதி; இலங்கைத்தீவிற் சமனொளிமலையி லிருந்து உண்டாவது. கூ௨.

மொய்யார்பொய்கை - திருப்பெருந்துறையிலுள்ளதோர் தீர்த்தம். எ௨.

வலவை - ஒருநதி; இலங்கைத்தீவிற் சமனொளிமலையிலிருந்து உண்டாவது; கூ௨.

வையை. (எதுகை) க௩௫, க௩எ.

(க௨)—நாடுகள்:

கப்பிஞ்சிநாடு. இது பாண்டிவளநாட்டிலுள்ள சிறுநாடுகளுள் ஒன்று; இஃது இந்நூல் இயற்றப்பெற்றஇடம். ௨௨அ.

கருநாடதேயம். கஎஅ, கஅ௩.

களவேள்விநாடு. இது பாண்டிவளநாட்டிலுள்ள சிறுநாடுகளுள் ஒன்று; பண்டைக்காலத்தில் ஒருபாண்டியன் சோழனொருவனைக்கொன்று களவேள்விசெய்தற்கு இடமாயிருந்ததுபற்றி, இஃது இப்பெயர்பெற்றது; காட்டுநாடெனவும் கூறப்படும். இந்நாடு, பூவணையன்வளநாட்டிற் கூறப்பட்டுள்ளது; மதுரைக்குக்கிழக்கேயுள்ள வீரசோழனென்னுமூர் இதன் கண்ணதென்று தெரிகின்றது. ககூச.

காட்டுநாடு - களவேள்விநாடு. ககூச, ௨௦எ.

கார்வளங்கோண்மண்டலம். பாண்டிநாட்டிலுள்ள மண்டலங்களுள் ஒன்று; இது, தன்பாற் கப்பிஞ்சியென்னும் சிறுநாட்டை யுடையது; பரம்பக்குடிக்கு வடக்கேயுள்ளதான, மழைக்குப் புணைகொடுத்த மங்கல நாடென்பது இதுவேயென்று சொல்லுகின்றனர். ௨௨அ.

சேரநாடு. க௫அ.

சோழநாடு. க௫அ.

துவரைநாடு. இது பாண்டிவளநாட்டிலுள்ள சிறுநாடுகளுள் ஒன்று; வையைக்கரையிலுள்ளது; [துவரையென்பது மதுரைக்குமேற்கேயுள்ள துவரைமானென்னுமூராக இருத்தல் கூடுமென்கின்றனர்.] கசூச.

பாண்டிநாடு. ௩, கூ, க௨௩, க௫அ.

மிழலைநாடு. அக.

(க௩)—நியாயம்:

காகதாலியம். க௩௨.

(கச)—நூல்கள்:

இறையனார்பொருள். சக.

உத்தரமாபுராணம். கஅ.

உத்தராகமகோசங்கள். ௫கூ.

கணிதநூல். ௨௨.

கபிலரந்தாதி. ௫க. [சகூ.

கைலைபாதி காளத்திபாதி அந்தாதி.

திருமுருகாற்றுப்படை. கசூ௦.

நக்கீரரியற்றிய (நூலிலுள்ள) ௫-ம் பனுவல். சக.

புரவிநூல். கூஅ, எ௦.

மடைநூல். ௨அ.

மயனூல். கஅகூ.

(க௫)—மடங்கள்:

தில்லைமாளிகைமடம். இஃது இந்நூலாசிரியருடைய ஆசிரியர் எழுந்தருளியிருந்தஇடம். ௫.

வாகீசசுவாமி மடம். - இது திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சைனர்களை வெல்லுதற்கு மதுரைக்கு எழுந்தருளியபொழுது தங்கிய இடம்; இது ஞானமிர்த நூலாசிரியருடைய பரம்பரையார் மடமோவென்று நினைத்தற்கு இடமுண்டு. க௨௫.

(கசூ)—மந்திரங்கள்:

அகமருடணம். கஎச.

சடாக்கரம்=ஆறெழுத்து. கசூ௦.

[எண்கள் பக்க எண்கள்.]



(கஎ)—மலை :



(கஅ)—மரபு :



(ககூ)—வித்தைகள் :



## இந்நூலில்வந்துள்ள அரிய மொழிகள் சில :

[எண்கள் பக்க எண்கள்.]

## இதில்வந்துள்ள பழைய தமிழ்நூற்பிரயோகங்கள்.

இந்நூலிலே தேவாரமுதலியவற்றிலுள்ள சொற்களையும் வாக்கியங்களையும் பொருள்களையும் பெற்றுவரும் செய்யுட்கள் மிகப் பல; அவற்றுட் சில வருமாறு:—

[பின்னுள்ள எண்களுள், ( ) இவ்வடையாளத்திற்குட்பட்டவை திருவிளையாடல்களையும், மற்றவை பாடல்களையும் புலப்படுத்துவன.]

### [தேவாரம்.]

**திருஞா.** மதுரை: "அதிரவீசியாடுவாய்"=(௩உ) கஉ, உ௩: "ஆடினையதிரவீசி"; "அதிர வீசி, யாடுவா னென்றும்"

ஷை, திருவலஞ்சுழி. "என்ன புண்ணியஞ் செய்தனை" =(க) ககூ: "என்னபுண்ணியஞ் செய்ததிம்மண்", (௫) உகூ: "என்னபுண்ணியஞ் செய்தேன்,"

திருநா. மதுரை: "மூலத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" =(திருநக) கடு: "தொன்னில மாம டந்தை தோன்றுமு னெவர்க்கு முன்னந், தன்னுறு திசைக்கட் டோன்று மாலவாய்த் தரும மூர்த்தி"; (க) கசு: "மேதினி தோன்று முன்னஞ், செவ்வியின் மூலத்தெ ழுந்த திப்பிய விலிங்கம்."

ஷை திருவாரூர்: "நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும், விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்" (உஅ) அச: "மின்னிய வுலகு தன்னில் வித்தின்றி நாறு செய்வோன், .........நரி கடம்மை.........குதிரை யாகச் செய்புதோன் ருமல் விட்டான்".

[திருவாசகம்.]

கீர்த்தி. சரு: "இந்திர ஞாலங் காட்டிய" ஷை கூச: "இந்திர ஞாலம் போலவந் தருளி" =(உகூ) கசு - "இந்திர ஞாலஞ் செய்வது."

கீர்த்தி. ருஉ - ருரு: "வாத வூரினில் வந்தினி தருளிப், பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்" =(உஎ) ரு: "சிலம்பொலி துளங்கக்காட்டும், வேதநா யகனுர் வாழும் வியன்திரு வாத வூரால்"; (உஅ) கச:-"வாதையம் புரத்து நண்ணி மணிச்சிலம் போசை காட்ட."

• திருச்சத. சுசு: "பிழைத்தவை பொறுக்கை யெல்லாம் பெரியவர் கடமை போற்றி", நீத்தல். சு: "பொறுப்பரன் றேபெரி யோர்சிறி யோர்கடம் பொய்யினையே" =(கஉ) கக - "பெரியவ சிறியேன் செய்த பிழைபொறுத் தருள்."

திருவெம். கக: "மொய்யார் தடம்பொய்கை புக்கு" =(கூஎ) ருரு: "திரைபொரு மொய்யார் பொய்கைத் திருப்பெருந் துறையை."

திருவம். கக: "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த, வப்பார் சடையப்பன்" =(கக) ரு: "மன்னவர் முடிக வித்து............ இன்னரு சாள லாலே யமன்றிசை யுாய வெய்ய, தென்னவன் பாண்டிநாடு சிவலோக மான தன்றே"

கோயின்மூத்த. கூ: "நரிப்பாய் நாயே னிருப்பேனோ." =(உஅ) கஉ: "நரிகா ணரியாது நீர்."

அருட்பத்து. க - கo: "அதெந்துவே யென்று" =(ருகு) உக: "எந்து நீர் புதல்வ ரெல்லா மிப்பொழு தணைந்தது."

திருப்பொற். கஅ: "அயன்றலைகொண்டு ...........நாமே" =(ருக) க - "அயன் றலையறுத்தல்......... சால, வாழ்த்தி".

திருச்சத. கo: "என்பொலா மணியே", புணர்ச்சி. க: 'என் பொல்லா மணியைப் புணர்ந்தே", அச்ச. ரு: "என்பொலா மணியை யேத்தி"=(உo) உ: - "என்பொலா மணிக்குச் சொல்வல்."

குலா. க: "ஓடுங் கவந்தியுமே யுறவென்றிட்டு" =(உஅ) உ: "பொருந் துகோ வணமு மோடு மல்லதோர் புரவி யில்லை:" கவந்தி - கோவணம்.

**கீர்த்தி.** உஎ-உஅ: "குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச், சதுர் படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்"=(உஅ) உகூ: "வந்தது முதுபரிச் சாத்து". (உகூ) கஎ: - "சேர்ந்தசாத் தவரோ சொல்லாய்."

**திருப்படை.** க: "பாண்டிநன் னுடைய யான்படை யாட்சிகள்" = (நிச) கஎ: - "பாண்டிநன் னுடனே."

[திருச்சிற்றம்பலக்கோவையார்.]

உசஉ: "சுத்திய பொக்கணத்து"=(கரு) ரு: "பொற்பு யத்துறு பொக்க ணந் தூக்கினன்."

[பெரியதிருமொழி.]

க - ப. க: "குலந்தருஞ் செல்வந் தந்திடும்.........நாரா யணவென்னு நாமம்"=(ருஅ) ருக: "குலந்தரு நீதி மிக்க குணந்தரும்.........நமச்சிவாய."

[தொல்காப்பியம்.]

பாயிரம்: "அறங்கரை நாவி னன்மறை முற்றிய"=(ருஎ) நிக: - "அறங் கரை நாவி னனும்."

[இசைமரபு.]

"சிச்சிலி பூனை குடமுழக்கம்.. ......இயல்பு"=(நிச) கூ: - "இன்று பூசை குடமுழக்கம்.........அனைத்தும்"; ருக0-ம்பக்கம் பார்க்க.

"உள்ளாளம் விந்து.........உரை" =(நிச) ருரு: "ஒடுக்குள் ளாளம்... தொழில் பத்தும்"; ருகக - ம்பக்கம்பார்க்க.

"பெருக்குரல் கட்டை.........ஆகா வெனச்சொன் னு ராய்ந்து" =(நிஎ) உரு: "பீனைபெருக்குரல்.........வியந்தா ரில்லை"; ருகரு - ம்பக்கம்பார்க்க.

"துய்யமொழி மென்குயிலும்.........நால் வேதத்துள்"=(நிஎ) உஅ: "ஆங்கரி முரற்சியென்ன.........யாரும்"; ருகச - ம்பக்கம் பார்க்க.

"மாத்திரைகளொன்பானும்.........ஐந்துநிற மாம்"; (நிஎ) உகூ: "தணி வின் மாத்திரையொன் பானும்.........அதிசயித்தார்." ருகச-ம்பக்கம் பார்க்க.

[பரிபாடல்.]

"உலக மொருநிலையாத் தானோர் துலையாப், புலவர் புலக்கோலாற் றூக்க- வுலகெல்லாந், தான்வாட வாடாத் தகைமைத்தே தென்னவன்ற, னன் மாடக் கூட னகர்" =(திருநக). க: "மலருமித்திரு நாட்டியல்......மதுரை."

[கலித்தொகை.]

சுஎ: "வையைதன், னீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னோரா தார், போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்" =(திருநக) உ: "வாரி யெற்றிமுன் மதிட்படை பொருவது வையை."

[புறநானூறு.]

கட: "அருந்தவத் தோற்கே" =(உ) கரு: "அருந்தவ னருளி னாலே", (சு0) சு: - "அருந்தவ னதிசயித்து."

ச: "கறும்பொருத செவ்வாயான்" =(உஅ) உகூ: "கறழ்பொருசெவ் வாய்."

உஉச: "பல்படைப் புரிசை" =(திருநக). உ: "மதிட்படை."

[திருமுருகாற்றுப்படை.]

அ-ம் அடி: "வள்ளுறை சிதறி" =(கஉ) சு - "வள்ளுறை சிதறி"

[நாலடியார்.]

அறன்வலியுறுத்தல், கo: "மான வருங்கல நீக்கி யிரவென்னு, மீனவி ளிவினால் வாழ்வேன்மன்"=(சச) கo: "தன்றலை மானங் காத்துத் தன்னுறு காரியத்தை, யின்றுநா மொருவன் பாற்றுழ்ந் திரக்குமா றெங்ஙன்."

[திருக்குறள்.]

ங: "மலர்மிசை யேகினான்" =(ஙகூ) சக; "அடியவர் நினைவு தன்னிற், பரிவொடுஞ் செல்லும் பத்தர் பத்தனை."

ககூ "தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம், வானம் வழங்கா தெனின்"=(சச) ச: "இரும்புனன் மழைமறுத்துத், தானமுந் தவமுங் குன்றி."

கருசு: "ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந் துணையும் புகழ்" =(சரு) உஅ: "சோழன் செய்த பிழைபொறுத் துவந்துகாத்துப், பொருவரும் புகழ்வி ளங்க."

சுகூஅ. "இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற, வொளியோ டொழுகப் படும்" =(சச) சஉ: "ஒளிவளர் வீர மாறன்."

[முத்தொள்ளாயிரம்.]

"கோட்டுமண் கொள்ளா" - (ஙரு) உசு: "கோட்டுமண்கொண்டு."

[சீவகசிந்தாமணி.]

(கச). "வென்றிக் களிற்றை விரிதாரவன் வென்ற வாறும்" =(சுo) ங - "வென்றிப் புரம் வென்றோன்."

உooக - உoகo: "அணங்கரவு.........தோன்றினான்", "வெண்ணனா... ஆயினான்" =(ஙக) க - கo: - "முன்வலை தனுவன....... நடுக்கமும்", "கையுறு குடையொடு.........சார்ந்தனன்."

உoஉo: "வந்தவர வென்னையென.........முதுமூப்பொழியு மென்றான்" = (உங) ககூ: - "மழவுறக் கங்கை யாடி வந்தனன் குமரி யாடக், கிழவணி யான்."

உஎகஅ: "பொதும்பருள் விதும்பி னாரே"=(உச)டு: "கண்கணா ததும பமேல் விதும்ப நிறைந்து நின்றான்."

[மணிமேகலை.]

உங - ம்காதை, அச: "நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி" =(ஙசு) ங: "நஞ்சங், கண்பட விழித்துச் சீறி யெழுந்தது."

[சூளாமணி.]

சீய. கO௧: "செய்யவாய்ப் பசும்பொன்.........வருக வென்றான்"=(ரு) ௧O - "மைய்யமர் விழிவாளென்ன.........வளர வாங்கு."

[பதினோராந்திருமுறை, திருவிடை மருதூர் மும்மணிக்கோவை.]

உஅ: "வெள்ளை நீறு மெய்யிற் கண்டு,கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்து, மோடும் பன்னரி யூளைகேட் டரனைப், பாடின வென்று படாம்பல வளித்துங், குவளைப் புனலிற் றவளை யரற்ற, வீசன் றன்னை யேத்தின வென்று, காசும் பொன்னுங் கலந்து தூவியும், வழிபடு மொருவன் மஞ்சனக் கியற்றிய, செழு விதை யெள்ளைத் தின்னக் கண்டு, பிடித்தலு மவனிப் பிறப்புக் கென்ன, விடித்துக் கொண்டவ னெச்சிலை நுகர்ந்து, மருத வட்டத் தொரு தனிக் கிடந்த, தலையைக் கண்டு தலையுற வணங்கி, யும்மைப் போல வெம்மித் தலை யுங், கிடத்தல் வேண்டுமென் றடுத்தடுத் திரந்துங், கோயின் முற்றத்து மீமி சைக் கிடப்ப, வாய்த்தன வென்று நாய்க்கட்ட மெடுத்துங், காம்புகுத் துதிர் ந்த கனியுருக் கண்டு, வேம்புகட் கெல்லாம் விதான மமைத்தும், விரும்பின சொடுக்கை பரம்பரற் கென்று, புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த, பெரிய வன்பின் வரகுண தேவரும்" = (௪அ) - வது திருவிளையாடலில், உரு - முதல், உக - வது இறுதியாகவுள்ள செய்யுட்கள் முன்புகாட்டிய அகவலின்கருத்தைத்தழுவிவந்திருத்தல்காண்க; மருதவனப்புராணத்துள்ள வரகுணச் சருக்கத்தில், ௬ரு-ம் செய்யுள்முதலியவை ஈண்டு ஆராயத்தக்கன.

[பெரியபுராணம்.]

அவை: "பெருகு தண்கட லூற்றுண் பெருநசை, யொருசு ணங்கனை யொக்குந் தகைமையேன்" =(அவை.) ரு: "திருவிளை யாடலைக், காய்ப சிக் குக் கடலைக் குடிக்குமோர், நாயை யொக்குந் தமியே னவிலுதல்".

திருநாட்டுச்சிறப்பு, ௩௫: "கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும் பென்ன" —(உஎ) ௫: "கமுகை யேய்க்குங் கன்னலைச் செந்நெலேய்க்கும்".

திருவாரூர்ச்சிறப்பு, உரு: "அம்புனிற் றாவின் கன்றே ரபாயத்தி னூடு போகி" =(௪அ) அ: "அபாயத் தான்மேல், வந்தவிப் பிரம கத்தி".

ஷை ௪எ: "யூரார்க்கு, முன்னவனே முன்னின்றான் முடியாத பொருளுள தோ" =(௫எ) ௩௧: "எங்கு, நிரம்பியோன் முன்னின் றாலெந்நெஞ்சக முரு காது".

திருஞான. உஎO: "சிந்தை யிடையறா வன்புந் திருமேனி தன்னி லசைவும்,.........வந்திழி கண்ணீர் மழையும்" —(௩௧) எ: "கம்பமா ருடலு மம்புசேர் விழியுங் கசிதரு நெஞ்சுமா யிறைஞ்சி."

[கம்பராமாயணம்.]

நூற்பயன், உ: "நன்மையும் ............ தின்மையும்" = (உஅ) அO: "நன்மைதின்மை"

அரசியற்படலம், எ: "பூமியு மயோத்திமா நகரம் போலுமே" =(௧௦) ௧. "மண்முழு துந்தனியே, பொன்னிற் றிகழும் புரமீ தெனவே".

தாடகைவதை. ௧௦: "கண்கிழித் துமிழ்விடக் கனலரா வரசு" =(௩௩) ௩: "நஞ்சங், கண்பட விழித்துச் சீறி".

வேள்விப்படலம், ௫௬: "பெரிய காரிய முள" =(௫௫) ௧௫: "பெரியகா ரியத்தின் வந்தேன்".

மிதிலைக்காட்சி. ௩௪: "அழகெனு மதுவுமோ ரழகுபெற்றதே", (கோலங்காண். ௩:) "அழகினுக் கழகு செய்தார்" =(௨எ) ௧: "அழகினுக் கழகார் மேனி".

உலாவியற். ௫௩: "நாடெலாமொரு நன்னக ராயதே" =(௧௧) ௫: "நாடோர் நகரென ஞாலங் காண்".

இன்னும் இந்நூலுள் அவ்வவ்விடத்துப்பண்டைத்தமிழ்நூற்கருத்துக்கள் அமைந்திருத்தலையும் இந்நூற்கருத்துக்களைப் பிற்காலத்தார் தங்கள் தங்கள்நூல்களில் அமைத்திருத்தலையும் பின்னுள்ள இந்நூற்குறிப்புரையா லுணர்க.

---

## வேறுபாடுகள்.

பரஞ்சோதிமுனிவரியற்றிய திருவிளையாடலிற் காணப்பெறாத அரிய விஷயங்கள் பல இத்திருவிளையாடலில் அவ்வவ்விடத்துக் காணப் படுகின்றன; அவற்றுட் சிற்சில சுருக்கமாக இந்நூல் முறைப்படியே இனி எடுத்துக்காட்டப்படும்:

(காப்பு.) கற்பகவிநாயகர். [இவர் சுந்தரபாண்டியத்திலும் திருவிளையாடற் பயகரமாலையிலும் துதிக்கப் பெற்றுள்ளார். இவர்கோயில் மதுரையில் இப்பொழுது காணப்படவில்லை.]

(கடவுள்வாழ்த்து:) இதில், பெரும் பற்றப்புலியூர்த்துதி, பாண்டிநாட்டுத் துதி, இத்தலத்துத்திருநாமங்களுள் நான்கன்துதி, மதுரைத்திருச்சிற்றம் பலம், வெள்ளியம்பலம் ஆகிய இவற்றின் துதிகள், உக்கிரப்பெருவழுதியார் துதி, நாற்பத்தெண்ணாயிரமுனிவர்கள்துதி இவைகள் உள்ளன.

(பதிகம்:) இதன் இறுதியில் முதற்குறிப்புச்செய்யுளொன்று உள்ளது. [அச்செய்யுள், பழையகாலத்தில் இப் பதிகம் பாராயணம் செய்யப்பெற்று வந்ததென்பதைத் தெரிவிக்கின்றது.]

(திருநகரச்சிறப்பு:) மதுராநகரம் கன்னி, கரியமால், காளி, ஆலவாய்த் தருமமூர்த்தி என்பவர்களாற் பாதுகாக்கப்படுவது.

* (௪) விருத்திரஹத்தியைப்போக்குதற்குத் தேவலோகத்திற் பலவிமானங்கள் இந்திரனாற் செய்விக்கப்பெற்றன. சிவலிங்கப்பெருமானுடைய அழகியவடிவத்தைக்கண்டு, இந்திரன், சொக்கென்னும் திருநாமத்தைச்சாத்தினன். இத்தமிழ்நூலுக்கு முதனூல், உத்தரமகாபுராணமென்னும் வடநூலிலுள்ள சாரசமுச்சயமென்னும்பகுதி. இச்சரிதத்தை முதலிற்கூறியவர்கள்

---

* ( ) இவ்வடையாளத்திற்குட்பட்ட எண்கள் திருவிளையாடல்களைப் புலப்படுத்துவன.

வியாசர், வான்மீகி, எச்சரென்பவர்கள்; பின்புகூறியவர் அகத்தியமுனிவர்.

(ங) மலயத்துவசன் ஆதிமரபில் வந்த வடிவுமங்கையை மணம்புரிந்தனன்.

(ச) மலயத்துவசன் மலைக்கொடிமன்னனென்றும் கூறப்படுவன். பங்குனி உத்தரத்தில் தடாதகைப்பிராட்டியார்க்குத் திருமணம்நிகழ்ந்தது;முருகக்கடவுள் பக்கத்திலிருந்து திருமணத்தைச்செய்வித்தனர். திருநந்திதேவரே குண்டோதரராகவந்தனர்.

(ரு) இந்திரவிமானத்திற்குத் தென்பாலுள்ளதாகிய வெள்ளியம்பலத்திற் பதஞ்சலிமுனிவருக்காகச் சிவபெருமான் திருநடனம் செய்தருளினர்; அது சொக்கத்தாண்டவமென்று பெயர்பெறும்; [மதுரையில், திருக்கோயிலுக்குத்தென்பால் வெள்ளியம்பலமென்றுபெயருள்ள ஒருமண்டபமிருத்தலும், அதில் இக்காலத்துப் பங்குனித் திருவிழா நடைபெறுதலும், வெள்ளியம்பலம் தென்பாலுள்ளதென்றதற்கும் பங்குனி உத்தரத்தில் திருமணமுதலியன நடைபெற்றதற்கும சான்றுகளுள்ளன.]

(சு) தடாதகைப்பிராட்டியார் பச்சைத்தேவி (மரகதவல்லி)யென்று வழங்கப்பெறுவர்.

(எ) சிவபெருமானதுகட்டளைப்படி குண்டோதரனுர் பலகுளங்களை உண்டாக்கினர். அக்குளங்களுட் காவணமுள்ளவாவியைத் தன்பாற்பெற்ற ஊர் காவணநல்லூரென்று கூறப்படும். ஒருவாவிக்கரையில், சடங்குக்கந்தர் எழுந்தருளியிருக்கின்றனர். [இங்கே சடங்குக்கந்தரென்றது, திருப்பரங்குன்றத்துக்கோயில்கொண்டெழுந்தருளிய ஸ்ரீகல்யாணஸுப்ரமணியக்கடவுளையென்று சொல்லுகின்றனர்.]

(அ) அக்கினிமூலையிலுள்ள தடாகமொன்றில் எழுகடல்களும் அடங்கின.

(கo) உக்கிரனுர் சடையுடன்பிறந்தார்; அதனால், கோச்சடிலவருமனென்பது அவர்க்கு உபநயனத்திருநாமமாயிற்று. சுந்தரமாறருக்கு விதுகுடுமிப்பெருவழுதியென்பதும் திருநாமம். [மதுரைக்குமேற்கேயுள்ள, 'கோச்சடை' என்னுமூர், கோச்சடிலவருமரால் அந்தணர்களுக்கு முற்றூட்டாகக்கொடுக்கப்பெற்ற அகரமென்று 'யாடற்பயகரமாகி விக்கின்றது.]

(கக) உக்கிரனுர், ஆதிமரபிலவதரித்த வடிவணங்கை மணம்புரிந்தனர். சுந்தரமாறர் பதினறு தெய்வவருடம் அரசாண்டார்; கிரீடமணிந்து அரசபோகத்தை அனுபவித்துக்கொண்டிருந்ததுபற்றி, அவர் அபிடேகச்சொக்கரென்றும் புழுகுநெய்ச்சொக்கரென்றும் திருநாமம்பெற்றனர்.

(கஉ) வருணன்விட்டகடல், புட்கலாவருத்தமுதலிய நான்கு மேகவேந்தர்களாற் குடித்துக் குறைக்கப்பட்டது; அப்பால் வருணன்கட்டளைப்படி மேகங்கள்பெய்த பெருமழையை மேற்கூறிய நான்கு மேகவேந்தர்கள் நான்குமாடங்களாகித் தடுத்தனர். அதனால், அவ்விடம் மாடக்குளக்கீழ்மதுரையென்று பெயர்பெறும்.

(கங) எல்லாம்வல்லசித்தருக்கு ஆக்கினைச்சித்தரென்பது திருநாமம்.

(கரு) சோமசுந்தரக்கடவுள் சங்கப்புலவராக எழுந்தருளியிருந்தபொழுது அவருக்கு மதுரைப்பேராலவாயாரென்பதும் இறையனுரென்பதும் திருநாமம். அவராலியற்றப்பெற்றது இறையனுர் பொருளிலக்கணம். சங்கப்புலவர்கள் தாமியற்றியபாடல்கள் அப்பொருளிலக்கணத்தின் அமைதிபெற்றிருத்தலைக்கண்டு மகிழ்ந்தார்கள்; அவர்களுள், நக்கீரனுர்மட்டும் அழுக்காற்றால், 'யாணியற்றியநூலில் ஐந்தாம்பனுவலுக்கு ஒப்பில்லை' என்றுகூறினர்.

(கசு) தருமியின்தந்தையார்பெயர், சிவமுனியென்பது.

(கஅ) சிவபெருமான் தமிழ்நூற்கருத்தைக் அகத்தியருக்கு நோக்கால் உபதேசித்தனர்.

(௧௯) இறையனாரகப்பொருளுக்குப் பலரியற்றிய உரைகளுள் உப்பூரிகிழார் மகனார் உருத்திரசன்மர் மெய்யுரைகளைக்கண்டனர்.

(௨௧) பழமதுரையை அழிக்கவந்த கடல்சுவறும்படி பாண்டியன் வேலையெறிந்தான்; அப்பொழுது அக்கடல் வடிந்து அவன்காலைக்கழுவியது; அது பற்றி அப்பாண்டியற்கு வேலைவடிம்பலம்பநின்றானென்பதுபெயராயிற்று. அவ்வரசனுக்குச் சங்கமண்டபம் அமைக்கப்பெற்றது.

(௨௨) வலையரசனுக்கு அதியரையனென்பதுபெயர். உத்தரகோசமங்கையில் அறுபத்துநால்வர் சிவபெருமான்பால் ஞானோபதேசம்பெற்றனர். அவர்கள்பால் உத்தராகமகோசங்களைச் சிவபெருமான் வைத்தருளினமையின், அத்தலம் அப்பெயர்பெற்றது. [இதனை உத்தரகோசமங்கைப்புராணம் வலியுறுத்தும்.]

(௨௪) காடுவெட்டியென்னும் சோழன்பொருட்டுத்திறக்கப்பெற்ற வடக்குமதில்வாயிலுக்கு இலச்சினைவாயிலென்பது பெயர்.

(௨௫) மாணிக்கம்பிறத்தற்கு இலங்கைத்தீவிலுள்ள சமனொளிமலையைச் சூழ்ந்த வலவை, மாவலிகங்கை, கம்பளை, கல்லணையென்னும் நதிகள் நான்கும் இடங்களாகும். இதில், நவமணியின் இலக்கணங்கள் விளங்கவிரித்துக் கூறப்பெற்றுள்ளன.

(௨௬) கீழைமதிற்பால் அட்டாலைமண்டபம் தெய்வக்கம்மியராற் கட்டப்பெற்றது; வில்வீரவடிவங்கொண்டு அதில் எழுந்தருளி யானையை எய்த சிவபெருமானுக்கு அட்டாலைச் சேவகரென்பது திருநாமம்; யானை சொரிந்தஇலத்தி இலத்திமலையென்று பெயர்பெற்றது. யானைமலையிற் பாண்டியன் நரசிங்கமூர்த்தியைப் பிரதிஷ்டைசெய்தனன்.

(௨௭) திருவாதவூர், காளையார்கோயில், திருப்பெருந்துறை என்கிற இத்தலவரலாறுகள் விரித்துக்கூறப்பெற்றுள்ளன. இந்தத்திருவிளையாடல்முதலியவற்றால், திருவாசகத்துள்ளபகுதிகளுள் இன்னது இன்னது இன்ன இன்ன அமயத்து ஸ்ரீமாணிக்கவாசகஸ்வாமிகளால் அருளிச்செய்யப்பெற்றதென்பது வெளியாகின்றது.

(௨௮) நரிகளைக் குதிரைகளாக்கிய இடம் மிழலைநாட்டில் நரிக்குடியென்று வழங்கப்படும். திருவாதவூரிற் சிவபெருமானுடைய பாதச்சிலம்பொலி கேட்கப்பெற்றது. [குதிரை இலக்கணங்கள் இதில் மிகுதியாகக் கூறப்பெற்றுள்ளன.]

(௩0) சிவபெருமான் கூலியாளாகி வந்தபொழுது, வேலைசெய்யாதது கண்டு பாண்டியனுடையவேலைக்காரர்கள் அடித்தார்கள்.

(௩௨) இந்திரனுக்குமுன்னம்ஆடிய ஈசானகோணத்தில், சிவபெருமான் பாண்டியனுக்காக மாறியாடி, திருவடியின்மேற்கொடிகட்டினர். அதனால், அதிரவீசியாடுவார், மாறியாடிக்கொடியிட்டபெருமானென்னும் திருநாமங்கள் அவருக்கு உண்டாயின.

(௩௩) யமதூதர்கள் சிலபழங்கதைகளைத் தம்முட்பேசிக்கொண்டார்கள்.

(௩௫) இக்காலத்துவழங்காதனவாகிய யுத்தவிசேஷங்களும் அவற்றிற்குரியபரிபாஷைகளும் இதிற்கூறப்பெற்றுள்ளன.

(௩௬) தத்தனென்னும் பாண்டியன் அரசாளுகையில் சமணரனுப்பிய நாகமுமிழ்ந்த விடவாற்றின்கொடுமை சிவபெருமானுடைய சடையிலிருந்த சந்திரனிடத்துள்ள அமுதத்துளியால் சமனமுற்று மதுரமாயிற்று. அதனால், இந்நகர்க்கு மதுரையென்பது பெயராயிற்று. பின்பு அவர்களனுப்பிய மாயப்பசு வதைக்கப்பெற்றது.

(௩௭) திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், இன்ன இன்ன அமயத்தில் இன்ன இன்னபதிகம் பாடியருளினரென்பது இதனால் விளங்குகின்றது.

(௩௮) சைனர்களைவாதுசெய்து வென்றதுபற்றித் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்க்கு வாதுசெய்தவாரணமென்னும் திருநாமமுண்டாயிற்று.

சைனர்களை ஏற்றிய கழுக்களின் வரிசையெழுந்தவிடம், கழுவரிப்படைவீடென்று வழங்கும், சைனர்களோடு பேசியதோஷம் தீர்தற்பொருட்டுத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவேடகத்திற் பிரதிஷ்டைசெய்துபூசித்த சிவலிங்கப்பெருமானுக்குச் சிறுமையிற்றேள்ளியாரென்பது திருநாமம். அத்தலத்தில், வையையாற்றின் தென்கரையில், பாண்டியன் படைவீடுசெய்து அதிற் சிலகாலமிருந்து வழிபாடு செய்துவந்தான்.

(௩௯) சுந்தரசாமந்தரென்னும் சேனாபதி, கொந்தகக்குலத்துப்பிறந்தவர்.

(௪௧) மாமனாகவந்தவர் கூறும்வார்த்தைகளில் சிலவர்த்தகபரிபாஷைகள்வந்துள்ளன.

(௪௨) சிவபெருமான், பட்டமங்கலத்தில் அட்டமாசித்தி உபதேசித்தருளினர்.

(௪௩) உண்ணுதற்குரியநீரிற்சேர்த்தற்குத் தக்க வாஸனைப்பொருள்கள் இவையென்பது தெரிகின்றது.

(௪௪) உக்கிரகுலத்துப்பிறந்தபாண்டியன், இந்திரன்பூட்டிய ஆரத்தைத் திருப்பரங்குன்றத்தில்வைத்தனன். திருப்பரங்குன்றம் முருகக்கடவுள்முதலியோராற் பூசிக்கப்பெற்றது. நக்கீரர் பிரமராக்கதத்தால், அங்குள்ள குகையில் அடைக்கப்பட்டுத் திருமுருகாற்றுப்படையைப்பாட, அதைக்கேட்டமுருகக்கடவுள், அவரைவிடுவித்து, 'நம்மைக் கிழவனென்றனையே' என்ன, நக்கீரர், "குன்றமெறிந்தாய்" என்னும் வெண்பாவால்துதிப்ப, அதிலுள்ள, 'என்றுமிளையாய்' என்பதைக்கேட்டு மகிழ்ந்து, 'திருமுருகாற்றுப்படையைப் படிப்பவர்கள் வேண்டிய வரத்தைக்கொடுப்போம்; 'நீ மதுரைக்குச்செல்வாயாக' என்றருளிச்செய்தனர். பாண்டியன் மேகங்களைப்பிடித்துக்கட்டியஇடம் கட்டுநல்லூரென்றும், அவற்றைச் சிறைப்படுத்தியஇடம்,இருஞ்சிறையென்றும், அவன் தனித்துநின்று போர்செய்து இந்திரனைவென்றஇடம் தனிச்சயமென்றும் வழங்கப்படும். மேகத்துக்குப் புணைகொடுத்தவன் களவேள்விநாட்டிலுள்ள எழுனையுடையஒருவன். அவன் புணைகொடுத்தற்கு 'நாம் முன்' என்று சொல்லிக்கொண்டுவந்தமையால், அவனூர் நாமுனூரென்று பெயர்பெற்றது. மேகங்கள், தமக்குப்புணைகொடுத்தற்கு முதலில் எழுந்தவர்களுடைய இடமாகிய துவரைநாட்டில் முதலில்மழைபெய்தற்குத்தோன்றி,புணைகொடுத்தவனுடைய இடமாகிய களவேள்விநாட்டிற் பின்பு பெய்யாநிற்கும்.

(௪௬) சோழனை உட்கொண்டு ஆழ்த்தியமடு கோண்டாழியெனப் பெயர்பெற்றது; அது மதுரைக்குமேற்கேயுள்ளதோரோடை.

(௪௭) மதுரை, நடுவூர், வாலவாய், ஆலவாய், திருமுடங்கலெனப் பெயர்பெற்றது; இத்தலம் சிவபெருமானுடைய படைவீடு.

(௪௮) திருவிடைமருதூரில் வரகுணபாண்டியர் சிலகாலமிருந்து பக்தி பரவசராய்ப் பலவகையானவழிபாடுகள் செய்துவந்தனர். [திருவிடைமருதூர்த் திருக்கோயிலிலுள்ள பாண்டியன்தோரணமென்றவாயிலின் வலப்பக்கத்தே வரகுணபாண்டியருடைய திருவுருவம் அமைக்கப்பெற்றுள்ளது.]

(௪௯) வரகுணபாண்டியருடைய குமாரர் அட்டாலைவீரரைப்பிரார்த்திக்க, அவர் வில்வீரராகத்தோன்றிச் சோழன்முதலியபகைவர்மீது விடைக்குறியம்பையெய்தனர்.

(௫௧) சிவபெருமான், மூர்த்தியார்க்கு அரசளித்தனர்.

(௫௨) காரியார் நாரியாரென்னும் புலவர்களுடைய பாக்களைச் சிவபெருமான் பகுத்துக்கொண்டருளினர்.

(௫௩) புலியின்முலைப்பாலைச் சிவபெருமான் புல்வாய்க்கன்றுக்கு அளித்தருளினர். மணவூரிலிருந்துவந்த ஒருவணிகனால் இத்தலம்காணப்பெற்றது. [மதுரைப்புதுமண்டபத்திற் கீழைக்கோடியிலுள்ள பெரிய கருங்கற்று

ன்றிலும் திருப்பரங்குன்றத்தில் துவசஸ்தம்பமண்டபத்தில் வடபாலுள்ள பெரியகருங்கற்றூண்களுள் ஆறுவதிலும் சிவபெருமானுடைய திருவுருவம் புலியைக்கொண்டு புல்வாய்க்கன்றிற்குப் பாலருத்தியவண்ணமாகப் பெரியோர்கள் அமைத்திருத்தல், பண்டைக்காலத்தில் இத்திருவிளையாடல் நிகழ்ந்ததென்பதை நன்குவிளக்குகின்றது.]

(௫௪) [இதில் இசையிலக்கணங்கள் பலவந்துள்ளன.]

(௫௮) காட்டுநாட்டுள்ள வன்னியர் தலைவன், கஉ-பிள்ளைகளைப்பெற்றான்; அவர்கள் தீச்செய்கையால், முதியவேற்பில், ஒரு பன்றியினிடத்தில், கஉ-குட்டிகளாகப்பிறந்தார்கள். [சோமசுந்தரக்கடவுள் பன்றிக்குட்டிகளுக்குத் தாயாகிப் பாலளித்த திருவுருவம், மதுரைப்புதுமண்டபத்திலும் திருப்பரங்குன்றத்துத் துவசஸ்தம்பமண்டபத்திலுமுள்ள ஸ்தம்பங்களில் அமைக்கப்பெற்றுள்ளது.

(௫௧) அப்பன்றிக்குட்டிகள் பன்னிரண்டும் வன்னியர்களாயின. அவைகள் வளர்ந்தமலை பன்றிமலையென்று பெயர்பெற்றது; அவர்கள் பன்றிக்குறும்பர்பன்னிருவரென வழங்கப்பெற்றார்கள்.

(௬௦) கரிக்குருவிச்சாதிகள் மிருத்தியுஞ்சயமந்திரம் ஜபித்தலை இன்றும் அறியலாகும். அம்மந்திரம் வினைவிற்பலனை அளிக்கும்; காஞ்சிப்புராணம், பன்னிருநாமப்படலம், ௪௦௪-ம் செய்யுளைப்பார்க்க.

(௬௧) உக்கிரகுலத்துப்பிறந்த பாண்டியனொருவன் மேருமலையிற் கயலையும் செண்டையும் பொறித்தனன்.

(௬௨) விடவைத்தியர் இத்தனைவகையினரென்பது இதிற்கூறப்பெற்றுள்ளது. திருஞானசம்பந்தர், ஒருவனுக்குத் திருமருகலில், "சடையாய்" என்னும்பதிகத்தாலும், ஒருவனுக்குத் திருப்புறம்பயத்தில் திருநோக்காலும் விடநோயைத் தீர்த்தருளினர்.

(௬௪) வேதங்களையும் வேதாங்கங்களையும் முனிவர்களுக்குச் சிவபெருமான் உபதேசித்தருளினர்.

பரஞ்சோதிமுனிவரியற்றிய திருவிளையாடலிற்கூறப்பட்டதுபோல இன்னபாண்டியன்காலத்து இன்னதிருவிளையாடல் நடந்ததென்பதும் இன்னபாண்டியன்மகன் இன்னானென்று இடைவிடாமற் பாண்டியபரம்பரையைச் சொல்லிக்கொண்டுபோதலும் இதிலில்லை. பின்னுள்ளபாண்டியர்களின் பெயர்கள்மட்டுமே இந்நூலிற் காணப்படுகின்றன:

க - உக்கிரனார்.
உ - சுந்தரமாறர்.
௩ - தத்தன்.
௪ - மலயத்துவசன்.
௫ - வரகுணர்.
௬ - வரகுணருடையமைந்தர்.
௭ - வீரமாறன்.

## திருவிளையாடற்கதைகள் வந்துள்ள பழைய தமிழ்நூல்கல்.



கூசு - திருவிளையாடல்களுள், தேவாரமுதலியவற்றுள், சிற்சில வந்துள்ளன; அவைகள் வருமாறு:—



### கூசு - திருவிளையாடல்.

"எட்டெட் டியற்றிய கட்டமர் சடையோன்" (கல்லாடம், கக.) *

### க. இந்திரன்பழிதீர்த்தது.

"காருடற் பிறையெயிற் றரக்கனைக் கொன்று, வச்சிரத் தடக்கை வரைப்பகை சுமந்த, பழவுடற் காட்டுந் தீராப் பெரும்பழி, பனிமலை பயந்த மாதுடன் றீர்த்தருள், பெம்மான்."

"வேதியன் படைக்க மாலவன் காக்கப், பெருதயோர் திருவுருத் தான்பெரிது நிறுத்தி, யழுதயில் வாழ்க்கைத் தேவர்கோ னிழிச்சிய, மதமலை யிரு நான்கு பிடர்சுமந் தோங்கிச், செம்பொன்மணி குயிற்றிய சிகரக் கோ யிலுள், ளமையாத் தண்ணளி யுமையுட னிறைந்த, வாலவா யுறைதரு மூல காரணன்" (கல். க, ௬உ.)

### உ. வெள்ளானைக்குச்சாபந்தீர்த்தது.

"அத்திக் கருளி" (திருவா. திருத்தெள்ளேணம், ௯உ.)

### சு. மணஞ்செய்தது

"தென்னா டுடைய சிவனே போற்றி" (திருவா. போற்றி. கசுச.)

"தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானை" (ஷை திருவம். ௯௦.)

"மருவித் திகழ் தென்னன்" (ஷை திருத்தெள். கரு.)

"என்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்" (ஷை திருப்பூவல்லி, உ.)

"வானந் தொழுந்தென்னன்" (ஷை திருத்தோணோக்கம், அ.)

"பாண்டிநன் னாடரா லன்னேயெனும்" (ஷை அன்னேப்பத்து, ரு.)

[இவற்றில், சிவபெருமான் சுந்தரபாண்டியராகவீற்றிருந்தமை கூறப்பட்டிருத்தல் காண்க; திருவாசகத்துள்ள பாண்டிப்பதிகமுதலியன இங்கே ஆராய்தற்பாலன.]

"கடுக்கைமலர் மாற்றி வேப்பலர் சூடி, யைவாய்க் காப்புவிட் டணிபூ ணணிந்து, விரிசடை மறைத்து மணிமுடி கவித்து, விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடி யெடுத்து, வழுதி யாகி முழுதுல களிக்கும், பேரரு ளாளன்",

---

* கல்லாடமுதலியவைகள் குறிப்புரையில் வந்திருப்பினும் படிப்பவர்களுக்கு இன்பமளித்து விளங்குதற்பொருட்டே இங்கே எடுத்துக் காட்டப் பட்டன

"முலைமூன் றணைந்த சிலைநுதற் றிருவினை, யருமறை விதிக்கத் திருமணம் புணர்ந்து, மதிக்குலம் வாய்த்த மன்னவ னாகி, மேதினி புரக்கும் விதி யுடை நன்னாள், ணடிவூர் நகர்செய் தடுபவந் துடைக்கு, மருட்குறி நிறுவி யருச்சனை செய்த, தேவர் நாயகன் கூடல் வாழிறை".

"மதுரை மாநகர்ப் பூழிய னாகிக், கதிர்முடி கவித்த விறைவன்".

"நான்கெயிற் றொருத்தற் பிடர்ப்பொலி வரைப்பகை, யறுகால் குனிக்கு மதுத்தொடை யேந்த, முட்டாட் செம்மலர் நான்முகத் தொருவ, னெ ண்ணிநெய் யிறைத்து மணவழ லோம்பப், புவியளந் தண்ட திருநெடு மாலோ, னிருகர மடுக்கிப் பெருநீர் வார்ப்ப, வொற்றை யாழியன் முய லுடற் றண்சுட, ரண்டம் விளர்ப்பப் பெருவிளக் கெடுப்ப, வளவாப் புலன்கொள் விஞ்சைய ரெண்மரும், வள்ளையிற் கருவியிற் பெரும்புகழ் விளைப்ப, முனிவர் செங்கரஞ் சென்னி யாக, வுருப்பசி முதலோர் முன் வாழ்த் தெடுப்ப, மும்முலை யொருத்தியை மணந்துல காண்ட, கூடற் கிறைவன்" (கல். உ, கசு, உ௫, ௩௪.)

## ௫. பதஞ்சலிக்குநடஞ்செய்தது.

"கொட்டிசைந்த வாடலாய்"

"புன்சடை, பின்றயங்க வாடுவாய்" (திருஞா. தே. திருவாலவாய்.)

"குழகனே கோல வில்லீ கூத்தனே" (திருநா. தே. ஷை.)

"பதஞ்சலிக் கருளிய பரம நாடக" (திருவா. கீர்த்தி. ௧௩௮.)

"நாடிரு முனிவர்க் காடிய பெருமான்"

"ஒருபாற் பசுங்கொடி.........கூடன் மாநக ராடிய வமுதை"

"முனிவ ரேமுற வெள்ளியம் பொதுவின், மனமுங் கண்ணுங் களியக் குனிக் கும், புதிய நாயகன்"

"எங்குள வுயிரு மின்பநிறைந் தாட, நாடக விதியோ டாடிய பெருமான்"

"கூடல், வெள்ளியம் பொதுவிற் கள்ளவிழ் குழலொடு, மின்பநடம் புரியுந் தேவ நாயகன்"

"வெள்ளியம் பலத்துட் டுள்ளிய பெருமான்"

"இருந்தமிழ்க் கூடற் பெருந்தவர் காண, வெள்ளியம் பலத்துட் டுள்ளிய வொன்று" (கல். கக, உ௦, உஉ, உ௫, ௩௦, ௩௧, ௭௧.)

"கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில், வெள்ளியம் பலத்து" (சிலப்பதிகாரம், பதி. ௪௦ - ௪௧.)

## ௬. பூதமுண்டது.

## ௭. ஆறழைத்தது.

"பனிக்கதிர்க் குலவன் பயந்தருள் பாவையைத், திருப்பெரு வதுவை பொருந் தியவந்நாட், சொன்றிப் பெருமலை தின்றுகனி தொலைத்த, காருடற் சிறுநகைக் குறுந்தாட் பாரிட, மாற்று தலந்த நீர்நசை யடக்க, மறி திரைப் பெருநதி வரவழைத் தருளிய, கூடலம் பதியுறை குணப்பெருங் கடவுள்" (கல். ௧௪.)

## ௯. கடலழைத்தது.

"மாமியாடப் புணரி யழைத்த காமர் கூடற் கிறைவன்" (கல். உக.)

## க0. உக்கிரன்பிறந்தது.

"பேழ்வாய்க் கொய்யுளை யரிசுமந் தெடுத்த, பன்மணி யாசனத் திருந்துசெவ் வானி, னெடுஞ்சடைக் குறுஞ்சுடர் நீக்கியைந் தடுக்கிய, வாறைஞ் ஞாறொரு வேறுகிளை யடுத்த, பன்மணி மிளிர்முடி பலர்தொழக் கவித் துப், பஃறலைப் பாந்தட் சுமைதிருத் தோளிற், றரித்துல களிக்குந் திருத் தகு நாளி, னெடுநாட் டிருவயிற் றருளுட னிருந்த, நெடுஞ்சடை யுக் கிரற் பயந்தரு ணிமலன்" (கல். எ௯.)

## கக. வளைவேல்செண்டுகோடுத்தது.

"அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த, அப்பார் சடையப்பன்" (இ - ம் செய்யுளைப்பார்க்க.) (திருவா. திருவம். கக.)

## க௨. நான்மாடக்கூடலானது.

"உம்பரு நாக ருலகந் தானு மொலிகடல் சூழ்ந்த வுலகத் தோரு, மம்புத நால் களா னீடுங் கூட லாலவா யின்க ணமர்ந்த வாறே" (திருஞா. தே. திருநள்ளாறும் திருவாலவாயும்.)

## க௩. கல்லானைகரும்புவாங்கியது.

"நதிமதந் தறுகண் புகர்சொலை மறுத்த, கல்லிப மதனைக் கரும்புகொள வைத்த, வாலவா யமர்ந்த நீலநிறை கண்டன்" (கல். ௩௩.)

## க௫. சங்கப்பலகைகோடுத்தது.

"ஞானசம் பந்த னுரைசெய், சங்கமலி செந்தமிழ்கள் பத்தும்" (திருஞா. தே. தேவூர்.)

"பட்டிமன் றென்னன்" (ஷை. ஷை. திருவாலவாய்.)

"மதுரைத்தொகை யாக்கினானும்" தொகை - சங்கம். (திருப்பாசுரம், கக.)

"தண்டமிழ்நூற் புலவாணர்க்கோ ரம்மானே" (சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம், திருவாரூர்ப் பரவையுண்மண்டளி.)

"உலகிய னிறுத்தும் பொருண்மர பொடுங்க, மாறனும் புலவரு மயங்குறு காலை, முந்துறும் பெருமறை மூளைத்தருள் வாக்கா, லன்பினைந் திணை யென் றறுபது சூத்திரங், கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத், தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்" (கல். ௩.)

"சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய வங்கண் மூதூர், நூல்பா யிடந்தும் முள ........செய்யுண்மிக் கேறு சங்கம்" (பெரியபுராணம், மூர்த்தி. இ.)

"சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்து, ளன்றிருந்து தமி ழாராய்ந் தருளியவங் கணர்"

"திருவால வாயமர்ந்த செஞ்சடைச் செழும்பொருளா, றருவானை" (பெரிய. திருநா. ௪௦௩, ௪௦௬.)

"நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானை" ஷை. திருஞான. ௮௮௩.)

'இவை, தெற்கில்வாயில்திறவாத பட்டிமண்டபத்தோர்பொருட்டு நக்கீரர் ஒருவன்வாழவும் ஒருவன் சாவவும்பாடி இன்னவாறாகவெனச் சபித்தற்பொருட்டாய்வந்த மந்திரம் பாட்டாய்வருதலின், அங்கதமாயிற்று' (தொல். பொரு. செய். "நிறைமொழி" என்னும் ௧௭௮ - ம் சூ. உரை.) பட்டிமண்டபம் - சங்கமண்டபம்.

## ௧௬. கிழியறுத்தது.

"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்" (திருநா. தே. திருப்புத்தூர்.)

"பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப், பொற்குவை தருமிக் கற்புட னுதவி, யென்னுளங் குடிகொண் டிரும்பய னளிக்குங், கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்" (கல். ௧.)

## ௧௭. நக்கீரனைக்கரையேற்றினது.

"அருந்தமிழ்க் கீரன் பெருந்தமிழ்ப் பனுவல், வாவியிற் கேட்ட காவியங் களத்தினன்" (கல். ௯௨.)

"சிறியேன் சொன்ன வறிவில் வாசகம், வறிதெனக் கொள்ளா யாகல் வேண்டும், வெறிகமழ் கொன்றையொடு வெண்ணில வணிந்து, கீதம் பாடிய வண்ணல், பாதஞ் சென்னியுட் பரவுவன் பணிந்தே" (கக-ம் திருமுறை, நக்கீரர் திருவெழுகூற்றிருக்கை.)

"பணிந்தேனின் பாதம் பரமேட்டி பானீ, றணிந்தால வாயி லமர்ந்தாய் - தணிந்தென்மேன், மெய்யெரிவு தீரப் பணித்தருளு வேதியனே, யையுற வொன் றின்றி யமர்ந்து" (ஷை. ஷை. இறுதிவெண்பா.)

"கூட லாலவாய்க் குழக னாவ, தறியா தருந்தமிழ் பழித்தன னடியே, னீண்டிய சிறப்பி னிணையடிக்கீழ் நின்று, வேண்டு மதுவினி வேண்டுவன் விரைந்தே" (ஷை. பெருந்தேவபாணி.)

"விரைந்தேன்மற் றெம்பெருமான் வேண்டியது வேண்டா, திகழ்ந்தேன் பிழைத்தே னடியேன் - விரைந்தென்மேற், சீற்றத்தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே, யாற்றவுநீ செய்யு மருள்" ஷை.ஷை.இறுதிவெண்பா.)

## ௧௮. குறுமுனிக்குத்தமிழுரைத்தது.

"அருமறை விதியு முலகியல் வழக்குங், கருத்துறை பொருளும் விதிப்பட நினைந்து, வடசொன் மயக்கமும் வருவன புணர்த்தி, யைந்திணை வழுவா தகப்பொரு ளமுதினைக், குறுமுனி தேறவும் பெறுமுதற் புலவர்க, ளேழெழு பெயருங் கோதறப் பருகவும், புலனெறி வழக்கிற் புணருல கவர்க்கு, முற்றவம் பெருக்கு முதற்று பதர்க்கு, நின்றறிந் துணரத் தமிழ்ப் பெயர் நிறுத்தி, யெடுத்துப் பரப்பிய விடையவர் நாயகன்" (கல். ௬௬.)

## கக. ஊமைதமிழறிந்தது.

"மணிக்கா லறிஞர் பெருங்குடித் தோன்றி, யிறையோன் பொருட்குப் பரணர்முதல் கேட்பப், பெருந்தமிழ் விரித்த வருந்தமிழ்ப் புலவனும், பாய பா ரறிய நீயே யாதலின்" (கல். முருகர்துதி.)

"திருத்தமிழ் மதுரை தன்னிற் சிவன்பொரு ளிறுக்கு மாற்ற, லுருத்திர சன்ம னாகி யுற்றிடு நிமலன்" (கந்த. சூரபன்மன்வதை. உசுக.)

[இறையனாரகப்பொருள், முதற்குத்திரவுரை ஈண்டு ஆராயத்தக்கது.]

## உ0. இடைக்காடன்பின்போனது.

"முன்னிடைக் காடன் பின்னெழ நடந்து, நோன்புறு விரதியர் நுகரவுள் ளிருந்தென், னெஞ்சக நின்று நினைவினுண் மறைந்து, .........குணித் தரு ணாயகன்" (கல். எக.)

## உக. கடல்சுவறவேலெறிந்தது.

"மற்றவன் றன்னால் வடவையின் கொழுந்துசுட், டாற்றா துடலமு மமைக் குறு முத்தமும், விளர்த்துநின் றணங்கி வளைக்குல முழங்குங், கருங்கடல் பொரிய வொருங்கு வேல்விடுத், தவற்கருள் கொடுத்த முதற்பெரு நாயகன்" (கல். எஅ.)

"முந்நீர் விழவி னெடியோன்" (புறநா. க.)

'முந்நீர்க்கண் வடிம்பலம்பநின்றானென்றவியப்பால், நெடியோனென் றாரென்ப' (ஷை. ஷை. உரை.)

"அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவே லெறிந்த வான்பகை பொறாது, ......... கொடுங்கடல் கொள்ள, ......... தென்றிசை யாண்ட தென்னவன்" (சில. காடுகாண். கஎ, உஉ.)

## உஉ. வலைவீசியது.

"அதியரைய மங்கை யமர்ந்தான் றன்னை" (திருநா. தே. திருவதிகை.)

"அலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி" (திருவா. போற்றி. உ0அ.)

"ஆரா வமுதா யலைகடல்வாய் மீன்விசிறும், பேராசை வாரியனை" (ஷை திருவம். உ.)

"மணிவலை கொண்டுவான் மீன்விசிறும் வகையறி வாரெம் பிரானு வாரே"

"ஏதில் பெரும்புக ழெங்க ளீச னிருங்கடல் வாணற்குத் தீயிற் றோன்று, மோவிய மங்கையர் தோள்புணரு முருவறி வாரெம் பிரானு வாரே" (ஷை. திருவார்த்தை, ரு, அ.)

"மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே" (ஷை. திருப்படையாட்சி, க.)

"நெடுஞ்சடைக் கிடந்த குறும்பிறைக் கொழுந்துங், கருமுகில் வெளுத்த திருமிடற் றிருளு, நுதன்மதி கிழித்த வழலவிர் நோக்கமு, மறைத்தொரு சிறுகுடிப் பரதவ னாகிப், பொன்றலைப் புணர்வலை கொடுங்கர மாக்கி, நெடுங்கடல் கலக்கு மொருமீன் படுத்த, நிறையரு ணாயகன்" (கல். கக.)

உரு. வளையல்விற்றது.

" வளைவிலியா யெல்லார்க்கு மருள்செய் தானை " (திருநா.தே.திருவாலவாய்.)

"இதழியுந் தும்பையு மதியமுங் கரந்து, வளைவிலை மாக்கள் வடிவெடுத் தருளி, முத்தமிழ் நான்மறை முளைத்தருள் வாக்கால், வீதிகூறி ........ .........கண்டநீள் கதுப்பினர் கைகுவி பிடித்துக், குருகணி செறித்த தனிமுத ஞயகன் " (கல். சசு.)

உரு. மாணிக்கம்விற்றது.

" கதிர்நிரை பரப்பு மணிமுடித் தேவர்கள், கனவிலுங் காணுப் புனைவருந் திருவடி, மாநிலந் தோய்ந்தோர் வணிக ஞகி,............இவையெனக் கூறிய நிறையருட் கடவுள் " (கல். சஎ.)

உஎ. ஞானோபதேசஞ்செய்தது.

" குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார் குடமுழநந் தீசனைவா சகனுக் கொண்டார்" (திருநா. தனித்திருத்தாண்டகம், கக.)

" உனக்குக், கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகு, நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி, நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி, நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத், தாயிற் சிறந்த தயாவான தத்துவனே " (திருவா. சிவபுராணம், ருசு - சுக.)

" அந்தண ஞகி யாண்டுகொண் டருளி, யிந்திர ஞாலங் காட்டிய வியல்பும் "

" திருவார் பெருந்துறைச் செல்வ ஞகிக், கருவார் சோதியிற் கரந்த கள்ளமும் " ஷை. கீர்த்தி. சஉ - சங; ருச - ருரு.)

" பரமா நந்தப் பழங்கட லதுவே, ............ அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க " (ஷை. திருவண்டப்பகுதி, சுசு - சுரு.)

" என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி, யறைகூவி யாட்கொண் டருளி, மறையோர் கோலங் காட்டி யருளலும் " (ஷை. ஷை. கசஎ - கசக.)

" அருபரத் தொருவ னவனியில் வந்து, குருபர ஞகி யருளிய பெருமையை "

" மெய்தரு வேதிய ஞகி வினைகெடக், கைதர வல்ல கடவுள் போற்றி "

" என்னையு மொருவ ஞக்கி யிருங்கழல், சென்னியில் வைத்த சேவக போற்றி " ஷை. போற்றி. எரு - எசு; அஅ - அக; கஉக - கஙo.)

" ஈறி லாதநீ யெளியை யாகிவந், தொளிசெய் மானிட மாக நோக்கியும் ". (ஷை. திருச்சதகம், கக.)

" செங்க ணெடுமாலும் "...........<br>" வானவன்பூங்கழலே பாடுதுங்காணம் மாஞய் " (ஷை. திருவம். க - கச.)

" நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங் காட்டி, நாயிற் கடைப்பட்ட நம்மை யிம்மை, யாட்கொண்ட வண்ணங்கள் பாடிப் பாடி,யாடப்பொற் சுண்ண மிடித்து நாமே " (ஷை. திருப்பொற். அ.)

" வன்னெஞ்சக் கள்வன் மனவலிய னென்ஞதே, கன்னெஞ் சுருக்கிக் கருணையிஞ லாண்டு கொண்ட, ........... பொன்னங் கழலுக்கே சென் றூதாய் கோத்தும்பீ "

"அருவாய் மறையயி லந்தணனா யாண்டுகொண்ட, திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ" (ஷை. திருக்கோ. கக, கச.)

"உருநா மறியவோ ரந்தணனா யாண்டுகொண்டான்"

"வாவாவென் றென்னையும் பூதலத் தேவலித் தாண்டுகொண்டான்" (ஷை. திருத்தெள்ளேணம், க, எ.)

"பெருந்துறையான், சீரார் திருவடி யென்றலைமேல் வைத்தபிரான்" (ஷை. திருப்பூவல்லி, சo.)

"கருணையினாற் றேவர்குழா, நாணுமே யுய்யவாட் கொண்டருளி" (ஷை. திருப்பொன்னூசல், ௫.)

"அந்தண னாகிவந் திங்கே யழகிய சேவடி காட்டி........ஆட்கொண்டருளும், ........தேவர்பிரான்" (ஷை. குயிற்பத்து, சo.)

"அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டா யாரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே" (ஷை. திருப்பள்ளி. அ.)

"நாயேன் றனையாண்ட பேதாய்"

"முன்னே யெனையாண்ட, பார்ப்பானே" (ஷை. புணர்ச்சிப்பத்து, கூ - சo.)

"ஆண்டுநீ யளித்த வருளினை மருளினன் மறந்த, வஞ்சனேன்" (ஷை. வாழாப்பத்து, கூ.)

"திருவடி யென்றலைமே னட்டமையால்" (ஷை. குலாப். அ.)

[ஷை அருட்பத்து, அற்புதப்பத்து, சென்னிப்பத்து ஆகிய இவைமுதலியவற்றைப் பார்க்க.]

"பெருந்துறையெம் புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப், பேதங்கெடுத் தருள்செய் பெருமையறியவல்லார்" (ஷை. திருவார்த்தை, எ.)

## உஅ. நரிகுதிரையானது.

"நரியைக் குதிரைசெய் வானும்" (திருநா. தே. திருவாரூர்.)

"குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச், சதிர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்"

"அரியொடு பிரமற் களவறி யொண்ணா, னரியைக் குதிரை யாக்கிய நன்மையும்"

"மதுரைப் பெருநன் மாநக ரிருந்து, குதிரைச் சேவக னாகிய கொள்கையும்"

"வாத வூரினில் வந்தினி தருளிப், பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்"

(திருவா. கீர்த்தி. உஎ - உஅ; ௩௫ - ௩௬; சச - ச௫; ௫௨ - ௫௩.)

"பந்தம் பறியப் பரிமேற்கொண் டான்றந்த, வந்தமிலா வானந்தம்" (ஷை. திருவம். ௩.)

"ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்" (ஷை. திருப்பொன்னூசல், அ.)

"பாய்பரி மேற்கொண்டென், னுள்ளங் கவர்வரா லன்னேயெனும்" (ஷை. அன்னை. எ.)

"நற்பரி மேல்வரு வானை"

"தாவி வரும்பரிப் பாகன்" (ஷை. குயிற்பத்து, கூ, அ.)

"வான்புரவி யூரு மகிழ்ந்து" (ஷை. திருத்தசாங்கம், சு.)
"தெரிவற நின்றுருக்கிப் பரிமேற்கொண்ட சேவகனார்"
"பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார்"
"பாண்டியனார், புரவியின்மேல்வர" (ஷை. திருப்பாண்டிப்பதிகம்,க,ா,கூ)
"நரிகளெல்லாம், பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பேரருளே" (ஷை. திருவேசறவு, க.)
"ஆட லமர்ந்த பரிமா வேறி யையன் பெருந்துறை யாதியந்நா, ளேடர்க ளை யெங்கு மாண்டுகொண்ட வியல்பறிவார்"
"வண் சாத்திறேடுஞ் சதுரன் பெருந்துறை யாளி யன்று, மங்கையர் மல்கு மதுரை சேர்ந்த வகையறி வார்" (ஷை. திருவார்த்தை, ச, கo,)
"தேவருங் காணாச் சிவபெருமான் - மாவேறி, வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க" (ஷை. திருவெண்பா, க)
"பரியின் மேல்வந்த - வள்ளன், மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள்" (ஷை. பண்டாயநான்மறை, உ.)
"நரியைக் குதிரைப் பரியாக்கி ஞால மெல்லா நிகழ்வித்து" (ஷை. ஆனந்த மாலை, எ.)
"வெடிவாற் பைங்கட் குறுநரி யினத்தினை, யேழிடந் தோன்றி யினனூற் றியைந்து, வீதி போகிய வாலுளைப் புரவி, யாக்கிய விஞ்சைப் பிறைமுடி யந்தணன்"
"கூடற் பதிவரு மாடற் பரியோன்" (கல். அ, கக.)

ாo. மண்சுமந்தது.

"மணியார் வைகைத் திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றும்" (திருநா. தே. திருப்பூவணம்.)
"ஆங்கது தன்னி லடியவட் காகப், பாங்காய் மண்சுமந் தருளிய பரிசு, முத்தர கோச மங்கையு ளிருந்து, வித்தக வேடங் காட்டிய வியல்பும்" (திருவா. கீர்த்தி. சசு - சஎ.)
"கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை, மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு, புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண்" (ஷை. திருவம். அ.)
"மண்பான் மதுரையிற் பிட்டமுது செய்தருளித், தண்டாலே பாண்டியன்றன்னைப் பணிகொண்ட, புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ" (ஷை. திருப்பூவல்லி, கசு.)
"பிட்டு நேர்பட மண்சுமந்த பெருந்துறைப் பெரும் பித்தனே" (ஷை. திருக்கழுக்குன்றப்பதிகம், உ.)
"மண்ணகழ்ந் தெடுத்து வருபுனல் வையைக், கூலஞ் சுமக்கக் கொற்றாளாகி, நரைத்தலை முதியோ ளிடித்தடு கூலிகொண், டடைப்பது போல வுடைப்பது நோக்கிக், கோமக னடிக்க வவனடி வாங்கி, யெவ்வுயி ரெவ்வுல கெத்துறைக் கெல்லா, மவ்வடி கொடுத்த வருணிறை நாயகன்" (கல். சசு.)

## ௩௧. விருத்தகுமாரபாலரானது.

"*பால விருத்தரு மானார் தாமே*" (திருநா. தே. ௬. திருப்பழனம்.)

"*பால விருத்தனு மானான் கண்டாய்*" (ஷை. ஷை. ௬. திருமறைக்காடு.)

## ௩௨. மாறியாடினது.

"*அதிர வீசி யாடுவா யழகனீ புயங்கனீ*" (திருஞா. தே. திருவாலவாய்.)

"*பஞ்சவ னிறைஞ்சு வன்புடன் வேண்ட, மாறிக் குனித்த நீறணி பெருமான்*" (கல். ௨௭.)

## ௩௫. அங்கம்வெட்டினது.

"*தாரமுய்த்தது பாணற் கருளொடே*" (திருநா. திருவியமகம், திருவாலவாய்.)

"*ஒருதனி யடியாற் குதவுதல் வேண்டி, மண்ணவர் காண வட்டணை வாளெடுத், தாதி சாரணை யடர்நிலைப் பார்வை, வாளுட னெருக்கன் மார்பொடு முனைத்தல், பற்றினின் றடர்த்த அட்கையின் முறித்த, லானனத் தொட்ட லணிமயிர்ப் புரோக, முட்சலந் தெடுத்த லொசிந்திட மழைத்தல், கையொடு கட்டல் கடிந்துள் ளழைத்தலென், றிவ்வகை பிறவு மெதிரமரேறி, யவன்பகை முறித்த வருட்பெருங் கடவுள்*" (கல். ௫௧.)

## ௩௭. வெப்புத்தீர்த்தது.

[*திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரருளிச்செய்த திருவாலவாய்த் தேவாரங்கள் இங்கே ஆராய்தற்பாலன.*]

## ௩௮. கழுவேற்றியது.

"*நள்ளாறர் நாமமே, மேன்முக வெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே*" (திருஞா. தே. திருநள்ளாறு.)

## ௩௯. மெய்க்காட்டிட்டது.

"*மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு, தக்கா னொருவ னாகிய தன்மையும்*" (திருவா. கீர்த்தி. ௬௬ - ௬௭.)

## ௪௧. மாமனாகவந்துவழக்குரைத்தது.

"*முன்னொரு வணிகன் மகப்பே றின்மையின், மருமான் றன்னை மகவெனச் சடங்குசெய், துள்ளமுங் கரணமு மவனுழி யொருக்கி, முக்கவர்த் திருநதி துணையுடன் மூழ்கி, யப்புலத் துயிர்கொடுத் தருட்பொருள் கொண்டபின், மற்றவன் றாய வவ்வுறு மாக்கள், காணிகைக் கொண்ட மற்றிலைமைந்தனை, நிணைத்துக் கிளைகொ ணெடுவழக் குய்த்தலு, மைந்தனுங் கேளிரு மதிமுடிக் கடவுணின், புந்தியொன் றின்றிப் புகலில மென்றய, ரவ்வுழி யொருசா ரவன்மா துலனென, வறிவொளி நிறைவே யொருருத் தரித்துவந், தருள்வழக் கேறி யவர்வழக் குடைத்த, கூட னாயகன்*" (கல். ௪௫)

## ௪௨. அட்டமாசித்திபகர்ந்தது.

"*பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங், கட்டமா சித்தி யருளிய வதுவும்*" (திருவா. கீர்த்தி. ௬௨ - ௬௩.)

"*இத்தி தன்னின் கீழிரு மூவர்க், கத்திக் கருளிய வரசே போற்றி*" (ஷை. போற்றி. ௧௬௨ - ௧௬௩.)

### சங. தண்ணீர்ப்பந்தர்வைத்தது.

"தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து, நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்" (திருவா. கீர்த்தி. ௫அ - ௫௯.)

### சச. இந்திரன்முடிமேல்வளையெறிந்தது.

"அடுபடைப் பூழியன் கடுமுரண் பற்றி, யிட்டவெங் கொடுஞ்சிறைப் பட்ட கார்க்குலந், தளையொடு நிறைநீர் விடுவன போல" (கல். உச.)

"திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச், செங்கணா யிரத்தோன் றிறல் விளங் காரம், பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி, முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென், றிடியுடைப் பெருமழை யெய் தா தேகப், பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப, மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்க" (சில. காடுகாண். உரு - உக.)

"தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே" (ஷை. ஆய்ச்சியர் குரவை.)

"வச்சிரத் தடக்கை யமரர் கோமா, னுச்சிப் பொன்முடி யொளிவளை யுடைத் தகை" (ஷை. கட்டுரைகாதை, ௫௦ - ௫௧.)

"தேவ ரார மார்பன் வாழ்க வென்றுபந் தடித்துமே"

"வானவர்கோ னாரம் வயங்கிய தோட்பஞ் சவன்றன், மீனக் கொடிபாடும் பாடலே பாடல்" (சில. வாழ்த்துக்காதை.)

### சரு. பொன்னனையாளுக்கு அருள்புரிந்தது.

"பூவண மதனிற் பொலிந்திருந் தருளித், தூவண மேனி காட்டிய தொன் மையும்" (திருவா. கீர்த்தி. ௫௦ - ௫௧.)

### சசா. சோழனைக்கொண்டாழியிற்றாழ்த்தியது.

"வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு, காடது தன்னிற் கரந்த கள்ளமும்" (திருவா. கீர்த்தி. சுச - சுரு.)

"மண்டிரு வேட்டுப் பஞ்சவற் பொருத, கிள்ளியுங் கிளையுங் கிளர்படை நான் குந், திண்மையுஞ் செருக்குந் தேற்றமும் பொன்றிட, வெரிவா யுரக ரிருணட் டுருவக், கொலைகொண் டாழி குறியுடன் படைத்து, மறியப் புதைத்த மறங்கெழு பெருமான்" (கல். அரு.)

### சஎ. திருவாலவாயானது.

"பருவாய்ப் பாம்பு முடங்க லாக, வாலவாய் பொதிந்த மதிமுடித் தனிமுதல்"

"வடதிரு வால வாய்திரு நடுவூர்" (கல். சஅ, சுக.)

### ருக. மூர்த்தியார்க்கு அரசளித்தது.

"படைநான் குடன்று பஞ்சவற் றுரந்து, மதுரை வவ்விய கருநட வேந்த, னருகர்ச் சார்ந்துநின் றருட்பணி யடைப்ப, மற்றவன் றன்னை நெடுந் துயில் வருத்தி, யிறையவன் குலத்து முறைமையின் மையினூற், கருதித் தோரா கல்லொடு பிறங்க, மெய்யணி யளறுக் கைமுழந் தேய்த்த, பேரன் புருவப் பசுக்கா வலனை, யுலகினிற் றமது முக்குறி யாக, மணி

முடி வேணியு முருத்திரக் கலனு, நிலவுமிழ் புண்ணியப் பாணிறச் சாந்தமு, மணிவித் தருள்கொடுத் தரச னாக்கி, யடிமா லகற்றி நெடுநாள் புரக்க, வையக மளித்த மணியொளிக் கடவுள்" (கல். ௩எ.)

## ௩௩. புலிமுலைபுல்வாய்க்கருளியது.

"புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி" (திருவா. போற்றி, ௨௦எ.)

"தழல்விழிப் பேழ்வாய்த் தரக்கின் றுளிமுலை, பைங்கட் புல்வாய் பாலுணக் கண்ட, வருணிறை பெருமான்" (கல். ௪௨.)

"புல்வாய் புலியின் முலையுண்ணும்" (திருநாட்டு. ௩.)

"பொன்னெயிற் கடம்ப வனத்தபுல் வாய்க்குப் புலிமுலை யளித்தபுண் ணியம் போல்" (திருக்காளத்தி. பரத்து ௩௧.)

"கொல்வாய்ப் புலிமுலை புல்வாய்க் குதவிய, தொல்வினை யென்ன" (மதுரை மும்மணிக்கோவை, ௨அ)

## ௩௪. சாதாரிபாடியது.

"முரன்றெழு கான முயன்றுவா தியைந்த, வடபுல விஞ்சையன் வைகிடத் தகன்கடைத், தென்றிசைப் பாண னடிமை யானெனப், போகா விறகுடன் றலைக்கடை பொருந்தி, ........... சாதாரி, யுலகுயி ருள்ளமு மொன்றுபட் டொடுங்க, விசைவிதி பாடி யிசைப்பகை துரந்த, கூடற் கிறையோன்" (கல். ௪௪.)

## ௩௫. திருமுகங்கொடுத்தது.

"தார முய்த்தது பாணற் கருளொடே" (திருஞா. திருவியமகம், திருவாலவாய்.)

"பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்" (திருநா. தே. கோளிலி.)

"குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென, மதிமலி புரிசைத் திருமுகங் கூறி, யன்புருத் தரித்த வின்பிசைப் பாணன், பெறநிதி கொடுக்கென வுறவிடுத் தருளிய, மாதவர் வழுத்துங் கூடற் கிறைவன்" (கல். ௧௩.)

## ௩அ. பன்றிக்குட்டிகளுக்குத்தாயானது.

"ஏனக் குருளைக் கருளினை போற்றி" (திருவா. போற்றி. ௧௬௬.)

"கோல மேனிவ ராகமே" (ஷை. திருக்கழுக்குன்றப்பதிகம், ௩.)

"ஏவுண்ட பன்றிக் கிரங்கி யீச னெந்தை பெருந்துறை யாதி யன்று, சேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த கிடப்பறி வாரெம் பிரானாவாரே" (ஷை. திருவார்த்தை, ௬.)

"தாயாய் முலையைத் தருவானே" (ஷை. ஆனந்தமாலை, ௩.)

## ௩௯. பன்றிக்குட்டிகளுக்கு அருள்புரிந்தது.

"கருமுகிற் கனிநிறத் தழற்கட் பிறையெயிற், றரிதரு குட்டி யாயபன் னிரண்டினைச், செங்கோன் முலையிட் டருணீர் தேக்கிக், கொலைகளை வென்னும் படர்களை கட்டுத், தீப்பட ராணை வேலி கோலித், தருமப் பெரும் பயி ருலகுபெற விளைக்கு, நாற்படை வன்னிய ராக்கிய பெருமான்" (கல். ௪௭.)

சூ0 கரிக்குருவிக்கருள்புரிந்தது.

"கருங்குரு விக்கன் றருளினை போற்றி" (திருவா. போற்றி. உ0கூ.)
"இவ் வுலகுயி ரளித்த, பஞ்சின் மெல்லடிப் பாவைகூ றாகிக், கருங்குரு விக்குக் கண்ணருள் கொடுத்த, வெண்டிரு நீற்றுச் செக்கர் மேனியன்" (கல். எ.)

சூக. மாமேருவிற் கயல்சேண்டேபோறித்தது.

"கயலெழுதிய விமயநெற்றியின்" (சில. ஆய்ச்சியர்குரவை.)

சூச. வேதமுணர்த்தியது.

"வேத நூல்பயில் கின்றது வாயிலே"
"மறையிலங்கு பாடலாய்"
"நால் வேதமும் பொருள்களு மருளி, யங்கயற் கண்ணி தன்னொடுமமர்ந்த வாலவா யாவது மிதுவே" (திருஞா. தே. திருவாலவாய்.)
"வேதியா வேத கீதா" (திருநா. தே. ஷை.)

---

## அரும்பத அகராதி முதலியன.

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

துருவாசர். ௨௦.
துறை - திருப்பெருந்துறை. ௮௧.
தூங்கவில்லாமல் - தாமதியாமல். ௯௦.
தூய்மைமேவிய வாய்மையான். ௪௮.
தூயசூத்திரர். ௧௦௦.
தெய்வக்கம்மியர். ௬௬.
தெய்வப்பலகை. ௪௦.
தெய்வவகத்தியர். ௫.
தெற்றிய. ௯௭.
தென்னவன் பிரமராயன். ௭௫.
தென்னன்முறை செய்வோர். ௯௮.
தேவதானம் நல்கி. ௧௭௫.
தொடர் - நட்பு, ௪௦
தொந்திகொள்தந்தி. ௭௨.
தொந்திவிநாயகர். ௫௩, ௬௭.
தொல்லையாலயம். ௪௬.
தொழில் ஐந்து. ௨௦௫.
தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மர். ௭௫.
தோதகம் - குறிப்பு, துன்பம். ௩௭.
தோராவல்லி. ௬௪.
தோணா. ௮௪, ௧௪௩, ௧௧௯.
தோலாக்கை. ௧௧௮.
நகர்சோதித்தல். ௧௦௮.
நகுலம். ௨௧௭.
நஞ்சத்தடினி - விடவாறு. ௧௧௯.
நஞ்சுண்டான் - சிவபெருமான், ஒருவகைச்சாதி. ௯௫.
நந்திதேவரே குண்டோதரராகி வந்தனரென்பது. ௨௫.
நம்பி. ௮௧, ௧௬௯.
நம்முளோர் - நம்மவர். ௮௭.
நரசிங்கக்கணை. ௬௬.
நரந்தம். ௯,
நரி உறுமிச் சள்ளிடல். ௯௨.
நரிபாது-நரித்தன்மையில்லாமல். ௮௧.
நல்லது, உடன்பாட்டுக்குறிப்பு. ௧௨௮.
நல்லாள். ௯௬.
நலந்து. ௨௦௯.
நவகதி. ௮௫.
நவமணிகளின் தோற்றம். ௬௨.
நழுவக்கட்டுவோம். ௯௧.
நன்பு - நன்மை. ௮, ௪௩, ௪௬, ௭௪, ௧௦௧, ௧௪௭.
நன்புளோர் - சங்கப்புலவர். ௪௩.
நன்னிமித்தங்கள். ௧௨௪.
நன்னெறிமுறை செய்வோர். ௭௯.
நாகமாபுரம் - மதுரை. ௧௧௬.
நாகராயர். ௩.
நாசிகாபரணம். ௧௬௫.
நாசிமூசி. ௧௨௧.
நாமஞ்சாத்தி. ௭௪.
நாயனார் - தலைவர். ௭௮, ௮௩, ௧௬௬.
நாயனீர். ௧௦௦, ௧௧௪, ௧௬௬, ௨௦௯.
நாயிறு. ௧௭௫, ௧௭௭.
நாரை. ௨௨௩.
நாவலர் - சங்கப்புலவர். ௪௮.
நாவுக்கரசு. ௧௨௨.
நாளில் - காலக்கிரமத்தில். ௩௦, ௩௫.
நாளும் - தினந்தோறும். ௧௯.
நாற்பத்தெண்ணாயிரவர்துதி. ௫.
நான்குமாடம். ௩௫.
நான்மறையோதியநாள்வாழ்த்தி. ௧௩௮.
நான்மாடக்கூடல். ௩௬.
நானிலவளம். ௧௦.
நிகரொவ்வாத. ௪௭.
நியாளம் - பறைவிசேடம். ௧௪௨.
நிறைந்த - மகிழ்ந்த. ௧௩௨.
நிறைந்து - மகிழ்ந்து. ௨௭, ௪௧.
நிறைவு - மகிழ்ச்சி. ௧௯, ௧௯௭.
நின்றல் - நிற்றல். ௧௦௫.
நீக்கில் நோக்கடியார். ௮௨.
நீத்து - வெறுத்து. ௩௮.
நீராவிவாவி. ௩௦.
நீலத்தினிலக்கணம். ௬௩.
நீவி - கிழி. ௪௩, ௧௪௭.
நீற்றுக்கோயில் - விபூதிப்பை. ௧௨௮.
நீற்றுமுண்டி. ௩௭.
நூற்கருத்து. ௪௭.
நெஞ்சறைபறை. ௧௩௪.
நெட்டோலைகட்டிவிடல். ௯௫.
நெடியகட்டோலை. ௭௬.
நெடுமுகப்பன்றி. ௨௦௮.
நெய்ப்பிலி - மாணிக்கத்தின் குற்றம். ௬௩
நெய்யாட்டு. ௩௩.
நெருப்பில் எடிட்டது வடகீழ்க்கோணம். ௧௩௩.
நெறி - குலம். ௨௬.
நெறுக்கென. ௮௩.
நென்முதற்றானியம். ௧௯௦, ௧௯௪.
நேரொவ்வா. ௧௭௫, ௨௩௮.

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]

[எண்கள் பக்க எண்கள்.]



---

## திருவிளையாடல்முதலியவற்றாலும்* கேள்வியாலும் அறிந்தவைகள்.

**அட்டாலேமண்டபம்:** இப்பெயருள்ள மண்டபமொன்று பண்டைக்காலத்திற் கீழைமதிலேச்சார இருந்ததென்று தெரிகிறது; இக்காலத்து மண்டியூர்த் தெப்பக்குளத்தின் வாயுமூலேயில் கசு - கால்களால் ஆகியதோர் மண்டபமாக இருக்கிறது. இதற்கு வடக்கேயுள்ளது யானைமலே.

**அமணமலே:** சைனர்களிருந்தமலே. இது மதுரைக்கு மேற்கேயுள்ளது; இதிற் சைனர்களிருந்தகுகைகள்பல காணப்படுகின்றன.

**அன்னக்குழிமண்டபம்:** மதுரையில் மேலேச் சித்திரவீதியிலுள்ளது; இது, பூதமுண்டதிருவிளையாடல்விழா நடைபெறுதற்கு இடமாகவிருக்கின்றது. இதிற் பல தெய்வவடிவங்கள் உள்ளன; இதிலிருந்த குண்டோதர வடிவம் இக்காலத்துத் திருக்கல்யாணமண்டபத்தில் வைக்கப்பெற்றுள்ளது.

**இந்திரேசுவரர்:** இந்திரன்பெயரால் ஐராவதம் தாபித்துப் பூசித்த சிவலிங்கப்பெருமானுடைய திருநாமம். (திருவிளை. வெள்ளையானை. உஎ, ௩o).

**எழுகடற்றெரு:** மதுரையிலுள்ள எழுகடலென்னும் தடாகத்தின் வடகரையிலுள்ளது.

**எழுநூற்றுமங்கலம்:** ஓரூர்; ஆளுடையநாயகர், எழுநூறுநரிகளைக் குதிரைகளாகச்செய்த இடமாம். இஃது ஆளுடையார்கோயிலுக்குத் தெற்கே உ - நாழிகைவழித்தூரத்திலுள்ளது.

**ஐராவதகணேசர்:** ஆனையூருணிக்கரையில் ஐராவதத்தாற்பூசிக்கப்பெற்றவர். (திருவிளை. வெள்ளை.உஎ,௩o); மதுரைத்திருப்பணிமாலேயில், "ஆங்கதன்பின்" என்னும்பாட்டைப்பார்க்க.

**ஐராவததீர்த்தம்:** ஐராவதத்தால் உண்டாக்கப்பெற்றது; யானையூருணியெனவும் கணபதியேந்தலெனவும் வழங்கும்; மதுரைக்கு மேற்கேயுள்ளது; (திருவிளை. வெள்ளையானை. உஎ, ௩o).

**ஐராவதநல்லூர்:** இஃது ஐராவதம் உண்டாக்கியவூர்; மதுரைக்குக்கிழக்கேஉள்ளது; (திருவிளை. வெள்ளையானை. உஎ).

**ஐராவதேசுவரர்:** ஐராவததீர்த்தக்கரையில் ஐராவதத்தாற்பூசிக்கப்பெற்ற சிவலிங்கப்பெருமான். (திருவிளை. வெள்ளையானை. உஎ, ௩o).

**கஞ்சரீடபுரம்** - பெருங்கரையென்னுமூர்; கரிக்குருவி, பூர்வஜன்ம புண்ணியத்தால், ஒருமரத்தின்மீதிருந்து, தனக்குப் பறவைகளாலுண்டாகும் துன்பத்தையும் அதனை மாற்றுதற்குரிய வழியையும் நினைத்துக்கொண்டிருந்த இடமாம்; [கஞ்சரீடம் - கரிக்குருவி].

**காஞ்சனமாலேகோயில்:** இஃது எழுகடற்றீர்த்தத்தின் தென்மேற்கில் உள்ளது; மிகப் பழமையானது. இதில் ஜலகண்டேசுவரரென்று திருநாமமுள்ள சிவலிங்கப்பெருமானும் அவரைத் தரிசித்தவண்ணமாக அமைந்த காஞ்சனமாலேயின் வடிவமுமுண்டு.

* சொன்னவர்கள், மதுரை, ஸ்ரீமத் பரமேசுவரபட்டரவர்கள்முதலியோர்.

**காராக்கிரகக்குகை:** திருப்பரங்குன்றத்திலுள்ள குகைகளுள் ஒன்று; இது நக்கீரனைப் பூதம் சிறைவைத்த இடமாம்.

**காவணநல்லூர்**=காவனூர். இது, மதுரைக்குவடக்கே ஒருகாதத்திலுள்ளது; ௭-ஆம் திருவிளையாடல், ௧௦-ஆம் செய்யுளைப்பார்க்க.

**கிழியறுத்தல்:** இஃது ஆவணித்திருவிழாவில் நாலாம்திருநாளில் நடைபெறும்; இதற்கு மேலை மாசிவீதியிலுள்ள நக்கீரர்கோயில் அல்லது சங்கத்தார்கோயிலிலிருந்து இரண்டுவிக்கிரகங்கள் எழுந்தருளுவதுண்டு; அவற்றைக் கபில பரணர் வடிவங்களென்றுசொல்லுகின்றனர்.

**குருவிருந்ததுறை:** இவ்வூர் மதுரைக்குமேற்கே ௧௦-நாழிகைவழித்தூரத்திலிருக்கிறது; குருவித்துறையென இக்காலத்துவழங்கும்; பன்றிக்குட்டிகளாகவந்தோர் பழம்பிறப்பிற்பிறந்தவூர். [திருவிளை. பன்றிக்குட்டிக்கு. ௨.]

**குலசேகரபாண்டியன்வடிவம்:** பொற்றாமரையிற் பாண்டியன்படித்துறையில் மேல்பாற்றூணிலுள்ள வடிவம்; [குலசேகரபாண்டியனென்பவன், தனஞ்சயன்சொல்லக்கேட்டு இத்தலத்தைக்கண்டு நகராகச்செய்வித்து இதனை இராசதானியாகக்கொண்டவன். திருவிளை. திருநகரங்.]

**கூடைதட்டிப்பறம்பு:** இது திருப்பரங்குன்றத்திற்குவடக்கே பூதங்கண்டகுளத்திற்குத்தென்கிழக்கேயுள்ளது; குளத்தைவெட்டியபூதம் மண்கூடையைத்தட்டியதற்கு இடமாக இருந்தமையின், இஃது இப்பெயர்பெற்றதென்பர்.

**கோந்தகை:** ஒரூர்; மதுரைக்குத் தென்கிழக்கில் ௪-நாழிகைவழித்தூரத்திலுள்ளது; கொந்தகக்குலத்தாராகிய ஒருவகைவேளாளர் இதில் இருக்கின்றனர். சுந்தரசாமந்தனைக் கொந்தகக்குலத்தாரென்று ௩௦-ஆம் திருவிளையாடல் தெரிவிக்கின்றது.

**கோச்சடை:** கோச்சடிலவருமரால் அந்தணர்களுக்குத் தானஞ்செய்யப்பெற்றவூர். (பயகரமாலையுரை.)

**சங்கத்தார்களுடைய திருவுருவங்கள்:** பொற்றாமரையின் வடகரைமண்டபத்திலுள்ள தூணப்பத்திகளிலும் ஸ்வாமிகோயிலுள் வாயுமூலையிலுள்ள ஆலயத்திலும் சங்கத்தார்களுடைய வடிவங்கள்அமைக்கப்பெற்றுள்ளன.

**சங்கத்தார்கோயில்:** இது சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயிலுள், பெரிய பிராகாரத்தில் வாயுமூலையிலுள்ளது. இதில்முருகக்கடவுள், அகத்தியமுனிவர், சங்கப்புலவர் நாற்பத்தெண்மர் ஆகிய இவர்களுடைய திருவுருவங்கள்முதலியனவுள்ளன.

**சாம்பனத்தம்:** சைனர்களுடைய ஏடுகள் நெருப்பில்வெந்த இடமாம்.

**சுந்தரமாறன்:** திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய திருவருளால் வெப்புநீங்கி அழகெய்தியபின், கூன்பாண்டியர் இத்திருநாமம்பெற்றனர்.

**செல்லூர்:** குதிரைவடிவத்தைவிட்டு நரிகள்சென்ற இடமாம்; இது மதிச்சயமென்னுமூர்க்கு மேற்கும் மதுரைக்குவடக்குமுள்ளது.

**தத்தனேரி:** ௩௬-ஆம் திருவிளையாடலிற்கூறப்பெற்றுள்ள தத்தனென்னும் பாண்டியனுண்டாக்கிய ஊரென்று தெரிகின்றது. குதிரைவடிவமொழிந்த நரிகள் தத்திச்சென்ற இடமாதலின், தத்துநரியென்று முதலில் வழங்கியபெயர் அப்பால் இங்ஙனம் ஆயிற்றென்று சொல்லுவதுமுண்டு, இவ்வூர் செல்லூர்க்கு மேற்கேயுள்ளது.

**தனஞ்சயன்வடிவம்:** பொற்றாமரையிற் பாண்டியன்படித்துறையிற் கிழக்குத்தூணிலுள்ள வடிவம்; [தனஞ்சயனென்பவன், இத்தலத்தை முதலிற்கண்டு, மணலூரிலிருந்த குலசேகரபாண்டியனுக்கு இத்தலவிசேடத்தைத்தெரிவித்தவணிகன்; திருவிளை. திருநகரங். ௩.]

**திருவாலவாய்நல்லூர்:** இவ்வூர், சமயநல்லூர்க்கு மேற்கேயுள்ளது;

இக்காலத்துத் திருவாலவாயுடையாரெனவழங்கப்படுகின்றது.

**திருவாலவாய்த்தம்பிரானார்:** பழையகணக்குக்கள் முதலியவற்றில் ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளுக்கு இத்திருநாமமே வழங்கப்பெற்றுவந்ததாம்; "தம்பிராற்கேதுகுலம்" என்பதனாலு முணர்க.

**திருவீதிகள் ஐந்து:** க - ஆடிவீதி, உ - சித்திரைவீதி, ௩ - ஆவணிமூலவீதி, ௪ - மாசிவீதி, ரு - கோட்டைவெளிவீதி. இவற்றுள், சித்திரைவீதியில் மாசித்திருவிழாவும், மாசிவீதியில் சித்திரைத்திருவிழாவும் மதுரையில் இக்காலத்து நடைபெறுகின்றன.

**தின்னுநரி:** மதுரைக்குத்தெற்கே ஒருகாததூரத்திலுள்ளதோரூர்.

**தொடர்நரி:** இவ்வூர் நரிகள் ஒன்றையொன்றுதொடர்ந்து சென்றஇடமாம். தத்தனேரிக்குமேற்கேயுள்ளது.

**நக்கீரர்கோயில்:** இது மேலைமாசிவீதியிலிருக்கின்றது; சங்கத்தார்கோயிலெனவும் வழங்கும்.

**நக்கீரர்திருவுருவம்:** இது திருப்பரங்கிரிக்கோயிலில் ஸ்ரீ முத்துக்குமாரஸ்வாமியின் பக்கத்தேயுள்ளது; உத்ஸவமூர்த்தி; திருப்பரங்குன்றத்தில் ஒவ்வொருவருடத்தும் நடக்கும் பங்குனித்திருவிழாவில் நான்காந்திருநாளில் முருகக்கடவுள் நக்கீரனாரைச் சிறைமீட்டருளிய திருவிளையாடல் நடைபெறும்பொழுது இந்தமூர்த்தி எழுந்தருளுதல் மரபு.

**நடுவூர்:** இது, இம்மையேதருவார் கோயில் உள்ள இடம். இதிலுள்ள ஸ்வாமிக்கு இஹாபீஷ்டப்ரதாயகர், இம்மையே நன்மைதருவாரெனவும் அம்பிகைக்கு மத்தியபுரநாயகி, நடுவூர்நாயகியெனவும் திருநாமங்கள்வழங்கும்; சுந்தரமாறர்பூசித்ததலம்; இது மேலைமாசிவீசிக்குமேற்கேயுள்ளது.

**பதஞ்சலிமுனிவர் ஸ்தோத்திரம்:** திருமணம்நிகழ்ந்தபின்பு நடனதரிசனஞ்செய்த பதஞ்சலிமுனிவர் சோமசுந்தரக்கடவுளை ஸ்துதித்தனவாகச் சிலசுலோகங்கள் மதுரைமுதலிய இடங்களில் வழங்குகின்றன; அவை பதஞ்சலிக்கு நடம்புரிந்ததை வலியுறுத்தும்.

**பரவர்:** நெய்தனிலமாக்களில் ஒருவகைச்சாதியார்; வலைவீசின திருவிளையாடல்விழா நடத்துவிப்போர் இவர்களே.

**பரிவீரமங்கலம்:** சிவபெருமான் குதிரைவீரராக எழுந்தருளிய இடமாம்; இவ்வூர் ஆளுடையார்கோயிலுக்குத்தெற்கே ஒன்றரைநாழிகைவழித்தூரத்திலுள்ளது.

**பாண்டியமண்டலாதீசுவரர்:** ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளின் விருதாவளித்திருநாமங்களுள் ஒன்று.

**பாண்டியன்படித்துறை:** இது பொற்றாமரையின் வடபாலுள்ள படித்துறை.

**பாண்டியனகழ்வீதி = பள்ளத்தெரு:** மாசிவீதி ஆவணிமூலவீதிக்கு இடையே கீழ்பாலுள்ளது.

**பாணர் - தையற்காரர்:** அங்கம் வெட்டின திருவிளையாடல் நடத்துவோர் இவர்களே; "உருமிடியென வெடி படவெதிர் கறுவிநடந்தொரு பாணனைத்துங்கத் திரிந்தன", (மதுரைக்கலம்பகம், கக). என்பதனால், சித்தன் பாணச்சாதியானென்று தெரிகின்றது.

**பிட்டுத்தோப்பு:** இது மதுரைக்கு வடமேற்கில் வையையின் தென்கரையிலுள்ளது; பிட்டுக்குமண்சுமந்த திருவிளையாடல்விழா நடக்குமிடம் இது.

**பிள்ளையார்பாளையம்** - ஒரூர். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சைனர்களைவாதில்வெல்லுதற்குவந்து திருக்கூட்டத்தோடு முதலில் தங்கியஇடமாம். இது மதுரைக்குத்தெற்கேயுள்ளது.

**பூதகுடி:** காவனூர்க்குமேற்கே ௪ - நாழிகைவழித்தூரத்திலுள்ளது; குண்டோதரரால் இஃது இப்பெயர் பெற்றதென்பர்.

**பூதங்கண்டகுளம்:** இது திருப்பரங்குன்றத்திற்கு வடக்குள்ளது; தென்கால்கம்வாயென வழங்கும்; இதன்

களை பூதங்கண்டகளையெனக்கூறப் படுகின்றது; குண்டோதரரால் வெட்டப்பட்டதாம்.

பெருங்கருணை: ஓரூர்; இது, ருக-ஆம் திருவிளையாடலில், முதற்செய்யுளிற்கூறப்பெற்றுள்ள பெருங்கிராமமாக இருக்கலாமென்று நினைக்கின்றனர்; இதில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் மிகுதியாக உளர்.

மடைப்பள்ளிச்சாம்பல்: திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் கூன்பாண்டியனுக்கு வெப்புத் தீர்த்தது தொடங்கி இதுவே இத்தலத்தில் விபூதிப்பிரஸாதமாகக் கொடுக்கப்படும்; ருஎ-ஆம் திருவிளையாடலில் ருகூ-ஆம் செய்யுள்முதலியவற்றைப் பார்க்க.

மண்டியூர்: குதிரைகளின் புழுதி மண்டிய இடமாம்.

மதிச்சயம்: ஓரூர்; குதிரைகளை விலைமதித்த இடமாம்.

மாநகரி: ஓரூர்; மதுரைக்கு வடகிழக்கிலுள்ளது; பாண்டியர்களுடைய அரண்மனைமுதலியன இருந்தஇடம். ருரு-ஆம் திருவிளையாடலில், கசு-ம் செய்யுளைப்பார்க்க; மாணிக்கவாசகர் பொருட்டுவந்த குதிரைகள் இடசாரி வலசாரிபுரிந்த இடமென்றுங் கூறுகின்றனர்.

முத்திரைகள்-ரு: இவை திருவாலவாய்த் திருக்கோயிற் கருவூலமுதலியவற்றில்வைக்கப்பட்டு வழங்கிவருகின்றன; க-இடபமுத்திரை, உ-மீனமுத்திரை, ரு-இராசகரநாகர்முத்திரை.

மேலைக்கடை: ஓரூர்; இது, சைனர்கள் ஏறிய கழுமரங்களின் மேலைக்கோடியாகிய இடமாம்.

வளையற்காரமண்டபம்: இது வடக்கு ஆவணிமூலவீதியிலுள்ளது.

வாகீசசுவாமிமடம்: பழைய சொக்கநாதர்கோயிலுக்கு வடக்கேயிருந்ததென்று சொல்லுகின்றனர்.

விழுப்பாதராயர்:(விழுப்பரையர்). ஆவணித்திருவிழாவிற் சுந்தரபாண்டியரின் பட்டாபிஷேகதினமாகிய எ-ஆம்திருநாளில் அவரிடமிருந்து பொன்னெழுத்தாணியைப்பெற்று நாடோறும் கணக்குவாசிக்கும் உரிமையுடையவர்கள்; 'பாண்டியநினுக்கும் வேண்டியவிழுப்பாதராயர்' என இவர்கள்சம்பந்தமாக ஒருபழமொழியும் வழங்கும்.

வெள்ளியம்பலத்தேர்: இது, தெற்குச் சித்திரவீதியிலுள்ள வெள்ளியம்பலத்தின்பக்கத்தேயுள்ளது.

வேப்பமாலை: முடிசூட்டுந்திருவிழாவில்தடாதகைப்பிராட்டியார்க்குட் பாண்டியபரம்பரைக்குரிய இம்மாலையை அணிதல் மரபு; சித்திரைத்திருவிழாவில் அ-ஆம் திருநாள், இக்காட்சிக்குரியதினம்.

வேறுநிலை: ஓரிடப்பெயர்; இந்திரனைவிட்டுப் பழிநீங்கி வேறாய்நின்ற இடம்; (திருவிளை. இந்திரன். எக).

---

## ஸ்ரீ மாணிக்கவாசகஸ்வாமிகள், திருநாவுக்கரசுநாயனார்க்குக் காலத்தால் முற்பட்டவரென்பது.

## திருநாவுக்கரசுநாயனார் தேவாரங்கள்.

### திருவாரூர்.

பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

உ. நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும்
விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்
முரசதிரந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்க ளேத்த
வரவரைச் சாத்திநின் றானு மாரூ ரமர்ந்தவம் மானே.

## தனித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கக. சூராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனுக் கொண்டார் *
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றலைநெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங் கைக்கொண்டார் பயங்கள் பண்ணி
யிராவணனென் றவனைப்பே ரியம்பக் கொண்டா
ரிடருறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே.

மேற்கூறிய இரண்டுபாடல்களுள், முதலாவதிலுள்ள, 'நரியைக் குதிரை செய்வானும்' என்பதற்குப் பொருளும் சரித்திரமும் வெளிப்படை.

இரண்டாவதிலுள்ள, 'குடமுழநந்தீசனைவாசகனுக்கொண்டார்' என்பதற்குப்பொருளும் அதிலுள்ள சரித்திரமும் இங்கே ஆராய்தற்பாலன: இந்த வாக்கியத்திற்கு, (சிவபெருமான்), குடமுழாவைவாசிக்கும் திருநந்திதேவரை ஸ்ரீ மாணிக்கவாசகராக அவதரிக்கும்படி திருவுளத்திற்கொண்டருளினரென்பது பொருள்; குடமுழா - ஒருவகைவாத்தியம்; வாசகன் - ஸ்ரீ மாணிக்கவாசகர்.

பண்டைக்காலத்திற்பூமியிற் பௌத்தமதம் அதிகரித்தபொழுது வேதாகம ஒழுக்கங்குன்ற, அக்குறையை அகற்றக்கருதிய தேவர்களுடைய பிரார்த்தனைப்படி, சிவாஞ்ஞையால் திருநந்திதேவர் ஸ்ரீ வாதபுரத்தில் ஸ்ரீ சம்புபாதாசிருதரென்னும் பிராஹ்மணோத்தமருக்கும் அவர்பத்தினியார் சிவஞானவதியார்க்கும் புத்திரராக அவதரித்தருளினரென்பது, திருப்பெருந்துறையின் வடமொழிப்புராணமாகிய ஸ்ரீ ஆதிகைலாஸமாஹாத்மியம், ௩௯ - ம் அத்தியாயத்திலும், ஸ்ரீமாணிக்கவாசகருடைய வடமொழிச்சரித்திரமாகிய ஸ்ரீமணிவாக்கியசரித்திரம், ௬ - ம் அத்தியாயத்திலும் விரித்துக்கூறப்பெற்றிருத்தலின், இதற்கு இதுவேபொருளென்றுதெரிகின்றது.

இதனால், ஸ்ரீ மாணிக்கவாசகஸ்வாமிகள், திருநாவுக்கரசுநாயனார்க்குக் காலத்தால்முந்தியவரென்று நன்குபுலப்படுதல்காண்க.

மேற்கூறிய வடநூல்களிரண்டினையும் ஆராய்ந்துதெளியும்வண்ணம் எனக்கு நல்லசமயத்தில் அனுப்பிய—திருவாவடுதுறை ஆதீனத்தைச்சார்ந்த ஸ்ரீ ஆளுடையார்கோயில் டிரஸ்டி ஸ்தானிகம்—ஸ்ரீ சுந்தரலிங்கத்தம்பிரானவர்களுடையபேருதவி ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

---

* இந்தப்பாடம் பல ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு நிச்சயிக்கப்பெற்றது; ம-ள-ள-ஸ்ரீ க. குப்புஸாமிமுதலியார், பி. ஏ. நான்குவருடத்திற்குமுன் இந்தப் பாகத்திற்குப் பொருளென்னவென்று கடிதமுகமாக என்னைவினவியதுண்டு

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | பாடல். | அடி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩ | ௧௩ | ௧ | மூக | மூட |
| ௬ | ௫ | ௩ | யெய்து | செய்து |
| ௭ | ௧௧ | ௪ | னேமால் | னேனால் |
| ௧௮ | ௩௫ | ௨ | வியாத | வியாதன் |
| ௨௮ | ௬ | ௪ | வொண் சொன்றி | வெண்சொன்றி |
| ௩௩ | ௧ | ௧ | முன்ன | முன்னு |
| ௪௮ | ௧௪ | ௩ | செய்த | செய்து |
| ௫௧ | ௧௨ | ௨ | கெணக்கு | கெமக்கு |
| ௫௮ | ௧௭ | ௨ | லிந்த | லின்றிவ் |
| ,, | ௧௮ | ௩ | முறுலலை | முறுவலை |
| ௬௨ | ௧௩ | ௧ | தத்தி, | த்தி, |
| ௬௩ | ௧௫ | ௪ | சோகின், | சோகின் |
| ,, | ௨௦ | ௨ | கல்லே | கல்லேய் |
| ௬௪ | ௧ | ௧ | னொருவன் | ன்றோர்ந்து |
| ௭௦ | ௨௨ | ௨ | சேர்த்தருட் | சேர்த்தரு |
| ௯௦ | ௮௩ | ௨ | துளங்குரா | துளங்கிரா |
| ௯௬ | ௨௨ | ௩ | வாங்கரும் | வாங்கரு |
| ௧௦௨ | ௭ | ௨ | நானா, | நானா |
| ௧௦௫ | ௭ | ௧ | இன்னியல் | இன்னிசை |
| ,, | ௧௦ | ௪ | தென்றான் | தென்பான் |
| ௧௧௧ | ௨௮ | ௪ | செயதொண் | செய்தொண் |
| ௧௧௩ | ௧௩ | ௪ | பதக்கண | பதக்கிண |
| ௧௧௪ | ௫ | ௩ | ளீங்கித் | ளீக்கித் |
| ௧௨௩ | ௨௬ | ௩ | கொண்டப்பா | கொண்டுப்பா |
| ௧௩௦ | ௬௭ | ௩ | சுருனாறி | சுறநாறி |
| ௧௪௪ | ௩௫ | ௪ | வளைவிங் | விளைவிலங் |
| ௧௪௯ | ௯ | ௪ | மற்றவர்க்கு | மற்றவர்க்க |
| ௧௬௨ | ௩௫ | ௨ | பதைத்தெழுந்த | பகைத்தெழுந்து |
| ௧௬௭ | ௨ | ௩ | மீண்டியற் | மீண்டிய |
| ௧௬௯ | ௧௮ | ௪ | யென்னை | னென்னை |
| ௧௭௬ | ௨௩ | ௧ | பதக்கணம் | பதக்கிணம் |
| ,, | ௨௪ | ௪ | விமானஞ் | விதர்னஞ் |
| ௧௭௯ | ௭ | ௧ | அற்றவர்க்குற்ற. | அற்றவர்க்கற்ற |
| ௧௮௪ | ௭ | ௧ | விடன்பிற் | விடன்பின் |
| ௧௮௭ | ௧௪ | ௨ | பார்த்து | பாத்து |
| ,, | ௪ | ௧ | மூலைப்பா | மூலைபா |
| ௧௯௩ | ௩௩ | ௩ | நாதாதி | நாரதாதி |
| ௧௯௫ | ௨ | ௪ | செய்தருட் | செய்தருள் |
| ௧௯௮ | ௨௦ | ௩ | பாயிர | பாசுர |
| ௨௦௦ | ௪ | ௪ | வருத்திடென்ன. | வருத்துகென்ன. |
| ,, | ௯ | ௧ | யரக்கனை | யருக்கனை |
| ௨௦௭ | ௪ | ௨ | மேனிப் | மேனி |
| ௨௦௮ | ௧௪ | ௪ | பெரி | பெரிய |
| ௨௨௮ | ௧ | ௧ | சல்வி | செல்வி |
| ,, | ௨ | ௩ | ,, | ,, |

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.



# திருவாலவாயுடையார்

# திருவிளையாடற்புராணம்*



## காப்பு.

சுருதிநான் மறைதொழுஞ் சொக்க நாயகன்
திருவிளை யாடலெட் டெட்டுஞ் செப்பிட
முருகலர் சடைமுடி முக்கண் மும்மதக்
கரிமுக னிணையடிக் கமலம் வாழ்த்துவாம். (க)

### கற்பகவிநாயகர்.

சொற்பக விநாயக னாலன் றாய்மையோ
ரற்பக விநாயக னறுமு கேசன்முன்
பொற்பக விநாயகன் முனிவன் புத்திரன்
கற்பக விநாயகன் கழல்க ளேத்துவாம். (உ)

### சித்திவிநாயகர். வேறு.

வானெழுகு முகின்மேனி வேதன் றேட மதுரைநா யகனடியார் வினைக டீர்ப்பா, னானெழுகு புரம்படைத்த மக்கள் போல்வந் துலாவுதிரு விளையா டற் பனுவல் சொல்லக், கூனெழுகு பிறைக்கோட்டுப் பனைக்கை நால்வாய்க் குடவுதரச் செழும்பவளக் குன்றம் போலத், தேனெழுகு மலர்க்கடம்ப வனத்து லாவு சித்திவிநா யகனிருதாள் சென்னி சேர்ப்பாம். (௩)

### வாழ்த்து. வேறு.

ஞால மோங்குக நான்மறை நீடுக
சீல மன்னவன் செங்கோல் விளங்குக
கால மாமழை மன்னுக காதலாற்
சால வீச னடியார் தழைகவே. (௪)

* திருவாலவாயுடையநாயனார் திருவிளையாடல், திருவாலவாயுடையாயி னார் திருவிளையாடலெனவும் பிரதிபேதங்களுள்ளன.

# கடவுள்வாழ்த்து.



## பெரும்பற்றப்புலியூர்.

நிறங்கட்கப் புறநாத னிணைந்துட்சிற் கனனாகிச்
செறிந்தச்சித் திரகாயந் திருந்தக்கட் செவிகாண
வறங்கட்குப் புகலாகு மகண்டப்பொற் பொதுநாளும்
பிறங்கப்பொற் புடனாடும் பெரும்பற்றப் புலியூரே. (க)

## திருச்சிற்றம்பலம். வேறு.

பொருப்பைப் பண்பொடுங் குனித்துச் சண்டவெம் புரத்தைப் பொன்றமுன் சிரித்துக் கண்டவன், கரப்பொற் குன்றடுங் திறத்துச் சிங்கமென் கருத்துட் டங்குமஞ் செழுத்துச் சம்புவண், டரக்குக் கொண்பதஞ் சலிக்குத் தென்றலந் தழைப்பத் தொந்தொமென் றிசைத்துச் சந்ததந், திருத்தச் செம்பதம் புரிப்பித் தன்புறுந் திருச்சிற் றம்பலந் திருச்சிற் றம்பலம். (உ)

## திருவம்பலம், வேறு.

அருளுந்தொகும் பொருளுந்திருந் தழகுந்தொழுங் குலமுந்தரும்
பரிவொன்றுசந் ததியும்புகும் பழியஞ்சுமொண் டொடியும்பொருந்
துருவுந்திறம் பிறவுந்துளங் கொளியும்பிறங் கறிவுஞ்செழுந்
திருவும்பெரும் புகழுந்தருந் திருவம்பலந் திருவம்பலம். (ங)

## பொன்னம்பலம். வேறு.

முன்னங்கருங் கண்ணன்கிடந் திம்மண்குடைந் துண்ணைந்துறுந்
தன்னண்டமென் றன்னம்பறந் தின்னம்பெருங் கின்னம்படும்
பன்னும்பழஞ் சொன்மந்திரம் பன்னுங்களென் றுன்னும்பதம்
பொன்னஞ்சிலம் பின்னர்ந்தரும் பொன்னம்பலம் பொன்னம்பலம். (ச)

## சபாபதி. வேறு.

திருமேவுஞ் சதுர்வேதச் சிரமேவும் பரஞ்சோதி
யருமேவுந் திருவுருக்கொண் டம்மையுடன் செம்மைபெற
மருமேவும் பெரும்பற்றப் புலியூர்மா மணிமன்றுட்
குருமேவும் படிமேவிக் கூத்தாடுங் கழல்போற்றி. (ரு)

## சோக்கநாதர். வேறு.

அரியசடை முடிபோற்றி யருள்பொழிசெம் முகம்போற்றி
விரையிதழி மலரணிநூல் விளங்கியமார் பகம்போற்றி
மருவுமுயர் பேரழகு வளருதர நிலைபோற்றி
திருவளர்செந் தமிழ்ச்சொக்கன் றிருவடித்தா மரைபோற்றி. (சு)

அங்கயற்கண்ணம்மை. வேறு.

பொங்குருச் செல்வங் கல்வி பொருவிலா வாய்மை தூய்மை
யிங்கெமக் கருள வல்ல வினையிலா வெம்பி ராட்டி
பங்கயத் தடஞ்சூழ் கூடற் பவழமால் வரையை நீங்கா
வங்கயற் கண்ணி மங்கை யடிக்கம லங்கள் போற்றி. (எ)

பாண்டிநாடு.

ஆவியந் தென்றல் வெற்பி னகத்தியன் விரும்புந் தென்பா
ணுவலந் தீவம் போற்றி நாவலந் தீவந் தன்னுண்
மூவர்கட் கரியா னிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப்
பாவலர் வீற்றி ருக்கும் பாண்டிநன் னாடு போற்றி. (அ)

மதுரை. வேறு.

தேனிமிருந் தொடைவாகைச் செழியர்திருக் குலம்விளங்க
வீனமில்பல் லுகங்கடொறு மிருநிலத்தியா வருமுய்ய
வானபெரு நான்மறைக்கு மரியயற்குந் தெரியாதார்
மானிடராய் விளையாடு மாமதுரை நகர்போற்றி. (கூ)

கடம்பவனம். வேறு.

தலம்புகழ் தரும்பொரு வரும்பர மசம்புவ ருணம்பனை ழிலம்பொ னெலியார், சிலம்படி யலம்பொலி பரம்பிர சதம்படர் சிதம்பர நிரம்பு மரு ளா, லலம்பெற நிலம்பெறு நமம்பிகை யுமிம்பரு மரம்பைய ருமும்ப ருமெ லா, நலம்பெரு கிடும்படி விரும்பிசை நயம்படந டம்புரி கடம்ப வனமே. (௧௦)

கூடல். வேறு.

ஆடுபவர் பாடுமறை யேடெதிர்தெ னாடுவகை யாடவிளை யாடு பெரியோர்
வேடனிடு சூடினிய கேடிறசை நாடுபவர் வேடனுடல் வீட வடுவோர்
சேடன்மதி யோடுநதி யோடுதலை யோடுவிதி தேடுமுடி சூடு முரவோர்
கூடுமிட நீடுசுதை மாடமென மூடிமுகில் கூடுமுயர் கூட னகரே. (௧௧)

மதுரை. வேறு.

விதுவரவ மிதழிதிரி பதகைதலை பொதிசடையர் விதமருவு கதிய தருள்வோர், சதுமறைவி புதர்முனிவர் திதிபுதல்வர் துதிசெயிர சதநிகழ்தொல் பொதுவில் வருவோ, ரதிகரள நதியையதி மதுரமுறு நதிசெய்திற லதுலரு யர் சதுர ரிடம்வான், மதிதவழு சுதையிலகு புதுமைதரு நிதிதிகழு மதிறழுவு மதுரை நகரே. (௧௨)

திருவாலவாய். வேறு.

உருகாத நீச ராயினு முணராத மூக ராயினுங்
கருதாத சீல ராயினுங் கசியாத நேச ராயினும்
வரையாத யாவ ராயினும் வலமாக நாக ராயர்சூழ்
திருவால வாயுண் மேவுவார் சிவமாவு ராளை யாளையா. (௧௩)

## மதுரைத்திருச்சிற்றம்பலம். வேறு.

முன்மலர்நான் முகன்றிருமான் முனிவர்புரந் தரன்றேவர்
நன்மறைகண் டடிபரவ நலமலிகா லங்கடொறுந்
தொன்மடமா துடனயந்து சுந்தரனன் னடமாடுந்
தென்மதுரை மாநகர்சேர் திருச்சிற்றம் பலம்போற்றி. (கச)

## வெள்ளியம்பலம். வேறு.

மருமல ரயன்மா லேத்த மதுரைமா தேவி வாழ்த்தப்
பரவரு முனிவர் போற்றப் பதஞ்சலி முனிவன் காணப்
பொருவருங் கடவுண் முன்னம் பொன்னினம் பலத்து ளாடு
மருநடம் புரிந்த வெள்ளி யம்பலம் போற்றி போற்றி. (கரு)

## கான்மாறியாடியவர்.

கதிதரு மறைகள் பாடக் கருணைமெய் காட்டித் தென்னன்
றுதிசெய வாருங் காணச் சோதிநின் றதிர வீசித்
திதமுறு மதுரை யந்தண் சிற்பர வெளியாந் தொல்லைப்
பொதுவினுண் மாறியாடும் பூங்கழல் போற்றி போற்றி. (கசு)

## விநாயகர்.

குறைவற வடசொற் சொல்லுங் கதைதமிழ்க் கொத்தி ஞாலே
நிறைவுற நடத்து தற்கு நீள்பனைத் தடக்கை வெற்றிச்
சிறுபதப் பெருவ யிற்றுச் செக்கர்முக் கட்க ளிற்றை
யுறைவுற விதய கூடத் துரியபா சத்தாற் சேர்ப்பாம். (கஎ)

## முருகக்கடவுள்.

விடங்கரு மடங்க லென்ன விண்ணவ ரெண்ண நந்தத்
தொடர்ந்தமர் கடந்த சீற்றச் சூருடல் பிளந்த லைந்த
வுடம்பிடிப் படைத்த டக்கை யுத்தம மயூர வூர்திக்
கடம்பமர் மன்றற் றெருங்கற் கந்தனைச் சிந்தை செய்வாம். (கஅ)

## உக்கிரப்பெருவழுதியார். வேறு.

தாரார் நிம்பத் தொடையிலங்கச் சசிமா மரபு தனில்வந்து
பாரார் பெருவாழ் வுறத்தெய்வப் பாண்டிய னென்று முடிசூடிப்
பேரா தரவா லரசாளும் பெருமான் றிருமா மகவாய்முச்
சீரார் சங்கத் தமிழாய்ந்த தென்னன் பொன்னங் கழல்போற்றி. (கசு)

## கலைமகள். வேறு.

புத்தக மக்க மாலை வராபயம் பொருந்து கையாண்
முத்தணி யுணிவாள் வெள்ளை முளரியா சனத்தாண் மணிவ
சத்தமோ டத்தங் கண்ட தவளமெய் வாணி வேதா
வுத்தம மனைவி வெண்டு சுவடியடா ளிணைகள் போற்றி. (உ0)

### சைவசமயாசாரியர்முதலியோர்.

படிபுகழ் சண்பை வேந்தர் மலரடி போற்றி பத்தி
வடிவுடை யியறேர் நாவுக் கரசடி போற்றி மாலை
முடிகொள்சுந் தரர்தாள் போற்றி மூதுரை வாத வூர
ரடியிணை போற்றி மற்றோங் கடியவ ரடிகள் போற்றி. (உக)

### நாற்பத்தெண்ணாயிரமுனிவர்.

பலந்தரு தவத்தான் மிக்கோர் பத்திவை ராக்கி யத்தோர்
புலங்களுங் கடந்தோ ரீசன் றனையலாற் போற்ற லில்லோர்
நலந்திகழ் சரியை யாதி நான்குமார்க் கத்தோர் நீற்று
விலங்கிய நாற்பத் தெண்ணா யிரவர்தாள் போற்றி போற்றி. (உஉ)

### ஆசிரியர்.

வரந்தருந் தொல்லைத் தில்லை மாளிகை மடத்து மன்னு
மருந்தவ முனிவெண் காட னருள்விநா யகன்ம னத்தாற்
பரிந்தெனை யாண்டு கொண்ட படர்சடைக் கடவு ணீதி
திருந்திய பரம ஞான சிவனடி சென்னி சேர்ப்பாம். (உ௩)

## அவையடக்கம்.

அளந்தபே ரறிவி னோங்கு மாசிலா சிரியர் முன்னந்
தளர்ந்தசிற் றறிவே னின்று தமிழ்க்கவி சாற்று மாறு
வளர்ந்தநீள் புவன முற்றும் வந்தபே ரிருளை யோட்டி
விளங்கிய பரிதி முன்னர் மின்மினி விளங்கல் போலும். (க)

அவைநடு வோங்குந் தெய்வ வகத்தியன் முன்னஞ் சொன்ன
கவிபொதி கதையை யானுந் தமிழ்செய்வே னென்கை காணிற்
புவிமிசை விசும்பி னீடும் பொருப்பிடை முடவ னேறிச்
சுவைதரு தேனை யுண்ண வெண்ணுவான் றுணிதல் போலும். (உ)

### வேறு.

ஏய பத்தி முனிவ னியம்பிய
சேய சொக்கன் றிருவிளை யாடலைக்
காய்ப சிக்குக் கடலைக் குடிக்குமோர்
நாயை யொக்குந் தமியே னவிலுதல். (௩)

ஓது பாலர் மழலை யுரையையுந்
தாதை தாயர் தயாவுறக் கேட்டெனப்
பேதை யேன்புன் மொழிபெரு மான்புக
ழோத லானல் லறிஞர் வியப்பரே. (௪)

ஆகத்திருவிருத்தம் - ௩க.

# பதிகம்.*

இந்திரன்வெம் பழிவிடப்பூ சித்த வாறு மிறைஞ்சயிரா வதசாபந் தீர்ந்த வாறு, முந்துலகாண் மும்முலையாள் பிறந்த வாறு முடிசூடி மணந்துபா ராண்ட வாறும், வந்தபதஞ் சலிக்குநடஞ் செய்த வாறும் வயப்பூதஞ் சொன் றிமலை தொலைத்த வாறு, முந்தியுறு பசிக்கன்னக் குழிகள் காட்டி யுதகத்துக் கியல்வைகை யழைத்த வாறும். (௧)

உன்னருமேழ் கடலழைத்த வாறு மாமி யுடனுடை மாமனைமண் ணழை த்த வாறு, மன்னுசடை யுக்கிரனூர் பிறந்த வாறும் வளையொடுவேல் செண் டளித்து மறைந்த வாறுந், தென்னன்மா டக்கூட லான வாறுஞ் சிலைமலி சித்தரா யுலாவு மாறு, முன்னோர்கல் லிபங்கரும்பு வாங்கு மாறு மொழியறி சங் கப்பலகை கொடுத்த வாறும். (௨)

மறுவறுபொற் கிழியறுத்த வாறுங் கீரன் வருந்தாமல் வந்துகரை யேற்று மாறுங், குறுமுனிக்குத் தமிழ்நோக்கா லுரைத்த வாறுங் கூறுபொரு ளுணா யும னுணர்ந்த வாறுங், கறுவியிடைக் காடன்பின் போன வாறுங் கடல்சுவற வுக்கிரன்வே லெறிந்த வாறு, மெறிகடல்வாய் வலைவீசி மணந்த வாறு மியல் வணிக னய்வளையல் விற்ற வாறும். (௩)

திருக்கடையை விடைக்குறியிட் டடைத்த வாறுஞ் செட்டியாய் மாணிக் கம் விற்ற வாறும், வருத்தவரும் வாரணத்தை யெய்த வாறும் வாதவூ ரர்க் குபதே சித்த வாறுங், கரக்குமின நரியைமா வாக்கு மாறுங் காவலுறு பரி யைநரி யாக்கு மாறும், விருப்பினடி யுண்டியர்மண் சுமந்த வாறும் விருத்த னிளை யோன்பால னான வாறும். (௪)

தார்வேந்தன் றெழுமாறி யாடு மாறுஞ் சார்ந்தபடு பழியஞ்சி யாய்ந்த வாறுந், தீராவன் பாதகங்க டீர்த்த வாறுந் திறலுடையோ னுடனங்கம் வெட்டு மாறுங், காராரு நாகமலை யெய்து விட்ட கடுமதுரை மாக்நகர் மதுரை யாக் கிப், போரேற்றைப் பசுவைமலை செய்த வாறும் பூழியனு ருடல்வெப்பந் தீர் த்த வாறும். (௫)

பாலகனால் வலியசமண் குண்டர் மாளப் பாண்டியன்மு னீண்டகழு வேற்று மாறுஞ், சிலமுறு படைமெய்க்காட் டிட்ட வாறுஞ் சேர்ந்துலவாக் கிழிவேந்தற் கீந்த வாறு, மேல்வணிகன் மாமனாய் வந்த வாறும் வியந்தட்ட மாசித்தி பகர்ந்த வாறுஞ், சாலுறுதண் ணீர்ப்பந்தர் சமர்க்க ளத்துத் தற்ப ணிந்த கொற்றவற்கு வைத்த வாறும். (௬)

---

* திருவிளையாடற்புராணசுயையமைப் பிரிவுப்பதமுண்டு.

மின்னணியா ரம்பூண விந்தி ரன்றன் மேன்முடிமேல் வளைசாட மிக்க மேக, மன்னவரைப் பிடித்துவிலங் கிடச்சி றந்த மாறனுக்கே சார்வாகி நின்ற வாறும், பொன்னனையா டனக்கருளு மாறுஞ் சோழன் பொன்றக்கொண் டாழிக்கட் டாழ்த்த வாறு, மன்னுநகர் திருநடுவூர் திருமு டங்கல் வாலவா யாலவா யான வாறும். (எ)

வரகுணற்குப் பிரமகத்தி யொழித்து மண்மேல் வரவழைத்துச் சிவலோகங் காட்டு மாறும், பொருபடையுள் விடைக்குறியம் பெய்த வாறும் புக்கிலுல வாக்கோட்டை வைத்த வாறு, மரசுரிமை மூர்த்திக்கு நல்கு மாறு மரும்புலவர் பாப்பகுந்து கொண்ட வாறும், வெருவுபுலி முலைபுல்வாய்க் கீந்த வாறும் விறகாளாய்ச் சாதாரி பாடு மாறும். (அ)

பரிந்துதிரு முகஞ்சேரற் கீந்த வாறும் பாணனுர்க் குயர்பலகை யிட்ட வாறுங், கரந்திருந்தே யிசைவாது வென்ற வாறுங் கருணையுற்றுப் பன்றித்தா யான வாறுந், திருந்துமரிக் குருளைகளி ராறு மோங்கத் திறலுடைய வன்னியர்க ளாக்கு மாறும், பொருந்துவலி கரிக்குருவிக் கீந்த வாறும் பொன்வரையிற் கயல்சென்டு பொறித்த வாறும். (கூ)

சிவனெருவன் னியுங்கிணறும் வணிகன் முல்லைத் தேவிக்குச் சான்றழைத்துக் காட்டு மாறு, நவமுறமீ னயிலாம லேத்தும் பத்தி நாரைக்குச் சிவலோகங் கொடுத்த வாறுந், தவமுறுகண் ணுவன்முதலா முனிவர் வேண்டச் சார்ந்தரலி யுகத்திறந்த வேத முற்று, முவகையுற வருகிருத யுகத்தா திக்க ணுணர்த்தியவா றுஞ்சிறியே னுரைக்க லுற்றேன். (கο)

பதிகமுதனிலைப்புச்செய்யுள். வேறு.

இந்திர னுன்ன ரும்பி னியைமறு திருதார் பால
வந்தமின் னணியா ரம்பூ வரபரி சிவனெ டென்றே
சுந்தரன் விளையா டற்குச் சொல்லிய தமிழ்ப்பொ ழிப்பா
முந்திய கவிபத் திற்கு முதனிலைப் புணர்த்தி னேமால். (கக)

ஆகத்திருவிருத்தம் - சஉ.

# நூல்வரலாறு.



கருத்தினை முடிக்குங் கங்கைத் துறைமணி கன்னி கைக்கண்
மருத்திகழ் மலர்த்த டஞ்சூழ் வளமைசேர் வார ணசிப்
புரத்தம ரகில நாதன் புண்ணிய மூர்த்தி யென்றன்
சிரத்தினிற் கரம்வைத் தாண்ட சேவகன் றிருமுன் முன்னம். (க)

மேதகு சமதக் கினியன் பராசரன் விசுவா மித்ரன்
சாதுநா ரதன்றூர் வாசன் சனகாதி பிருகு வத்ரி
கோதமன் பரத்து வாசன் கோசிகன் காசி பன்கோ
மூதுரை வசிட்டன் முன்னு முனிவர்யா வருந்தி ரண்டார். (உ)

பூமிதெற் குயரா வண்ணம் பொதியிலி லிருக்க வல்லான்
பாமுழு துணர்ந்தோ னேழு பரவையைக் குறிய கையா
லோமுறை யிருக்கா லள்ளி யொருக்காலா சமித்தோ னங்க
ணுமதி வல்லோன் றொல்லை யகத்திய னென்பான் வந்தான். (ந)

ஆங்கவன் றன்னை மிக்க வருந்தவ முனிவர் யாரு
மோங்குமா சனத்தி ருத்தி யுயருப சார நல்கித்
தேங்கமழ் தாமஞ் சூட்டிச் சிறந்தபூ சனைகள் செய்து
தாங்கரு முவகை யோடுந் துதிசெய்து தாழ்ந்து சொல்வார். (௪)

முன்புயிர்த் துன்பந் தீர முதல்வனை மலயக் குன்றி
லன்புற விருத்தி நாளு மருச்சனை புரியப் பெற்றாய்
தென்புவி விசேட நின்போற் றெரிதர வல்லா ரில்லை
நன்புற வறிவா யாங்க ளவில்வதொன் றுண்டு கேண்மோ. (ரு)

நலந்தருங் கங்கை முன்னு நதிகளின் கரைக்கண் மிக்க
பலந்தரும் பெரிய தான வைபவம் பலவுஞ் சொன்னாய்
வலந்தருந் தென்ன னாட்டு வைகைமா நதியின் பாங்கர்த்
தலந்தரும் புகழ்வி ளக்கந் தருசிவ தலங்க டம்முள். (௬)

சுந்தர மாக வாங்குச் சொல்லுமொண் டானத் தின்க
ணந்தமில் புகழான் மிக்க வருள்வடி விறைவன் செய்த
சிந்தைகூ ரவதா னத்தின் றிறங்களைப் பிறங்க வின்று
முந்தைமா மலய மன்னு முனிவநீ நவிறி யென்ன. (எ)

வேறு.

ஆங்கினிய மந்திரத்துக் காருயிராம் பிரணவம்போ
லோங்கவனி மாமடந்தைக் குயிரதுதென் னவனாடு
வாங்கருஞ்சீ ரந்நாட்டு வளஞ்சிறிது கேண்மின்கள்
பாங்குடையீர் வினவியவா றழகிதென முனிபகர்வான். (அ)

ஆகத்திருவிருத்தம் - ௫0.

---

# திருநாட்டுச்சிறப்பு.

ஒருவிளை யாட்டி னுண்மை யொருவரா லுணரா ரானும்
பெருவிளை யாட்டைந் தாடும் பிஞ்ஞகன் மதுரை மன்ன
னருள்விளை யாட்டி னோங்கி யமையறு பத்து நான்கு
திருவிளை யாட்டு நாட்டைச் செப்புவ லொப்பக் கேண்மின். (க)

வேறு.

அடிக்குரிய தமிழ்த்தொடைக ளலர்க்குரிய கடிப்பொழில்க
ணடிக்குறுவ துகிற்கொடிக ணஞ்சுறுவ வஞ்சியர்கண்
குடிப்பமது மதுக்ரங்கள் கோடுவன நீடுசிலை
வடிப்படுவ வுடுப்படுமா வளைப்புறுவ நதிப்புதுநீர். (உ)

வேறு.

முருகன் சங்கத் திருப்பவனம் முக்கட் கடவு ளிற்பவன்வா
ளரசன் புயலை விலங்கிட்டோ னனலும் புனலு மியலறியும்
புரமு மதுர மானபுரம் புல்வாய் புலியின் முலையுண்ணு
நரியும் பரியா நதியிதழி மணக்குங் கன்னி நன்றாடு. (ங)

வேறு.

நலமுறு மொழிசேர் நல்ல பெருங்கிளை யென்று நாடித்
தலமிசை யுயர்கு லத்துச் சார்ந்துகண் காண மிக்க
குலவளை யிடத்துத் தோன்றிக் குவலய முழுதும் பெற்ற
நிலவிய மரக தஞ்சேர் நித்திலம் பிறந்த நாடு. (ச)

தாரணி மவுலிக் கொற்றத் தசரதன் மகனார் வந்து
கூருகி ரெண்கு முன்னாக் குரக்கின வெள்ளங் கொண்டு
வாரிநீள் குலைப்ப டுத்தி வலியவா ளரக்கற் காய்ந்து
காரண வானை யேத்தி யரும்பழி கழுவு நாடு. (ரு)

பரிபடுந் துறைநெ ருங்குங் குடிபடும் பதிமென் றென்றல்
வரைபடுங் கரும்பு சாலி வயல்படு மணியும் பொன்னுந்
தரைபடுந் துங்கச் சங்கந் தமிழ்படுஞ் சார்ந்த செங்கட்
கரிபடுங் காடு வங்கக் கடல்படும் பவள முத்தம். (சா)

வேறு.

நாளும் புதுநீர்த் தமிழ்நதிப்பா ளைரந்த மஞ்ச ணைருங்கிஞ்சி
நீளுங் கருணை தாண்முரியக் கதலி புதைய நெடுங்கமுகின்
பாளை பலவின் கனிதெங்கம் பழம்பேஎய்ச் சாடி வீழ்த்திளைய
வாளை யாளை விழுப்பாயம் வளைவெண் டாள வயலெங்கும். (எ)

வேறு.

நஞ்சனையஞ் சனச்செங்கட் கருங்குழல்வெண் ணகைமடவார்
பஞ்சனையுஞ் சீறடியிற் பண்ணனைநா புரமேங்க
நெஞ்சனைபொற் பந்தனைகைச் சங்கனைகம் பலைநீடு
மஞ்சனையிஞ் சியையனையும் வண்டலைதண் டலையெங்கும். (அ)

வேறு.

அன்னந் திகழும் வயற்களத்து மலைநீர்ப் பொருனை நதிமுகத்தும்
பொன்னஞ் சங்கந் துகிர்முத்தம் படுவ தல்லாற் பொலிவோங்க
மின்னு நுசுப்புப் பாரவட மேரு முலைமங் கையர்களத்துந்
துன்னுங் கிரண மதிமுகத்தும் படுமொண் சங்கந் துகிர்முத்தம். (௯)

வேறு.

ஏந்துதண் செழுநீர் வாவி யெழுந்தசெங் கழுநீர் விண்டு
வார்ந்தகண் ணீராற் சேறு படும்பழ னங்கண் மாதர்
சேந்தகுங் குமத்தின் விட்ட தெளிதரு பனிநீர் வெள்ளம்
பாய்ந்தசந் தனத்தாற் சேறு படிந்தன மலைத்த டங்கள். (௧0)

மொழிதருங் குயில்கள் சாய றருமட மயில்கண் மொய்க்கும்
பொழிறருங் கரைக்கண் டெண்ணீர்ப் பொய்கையுண் மாலைப் போது
முழுகுவான் செல்லு மாதர் முகத்தையுந் தனத்தை யுங்கண்
டழுகுதோய் பதும நாணி யலர்வுறா குவிவு றாவால். (௧௧)

வேறு.

கானெருங்கும் வளைவளங்க டருமென்றுங் கடிக்குறிஞ்சி
யானெருங்கு மினியவளந் தருமென்று மணிமுல்லை
வானெருங்கும் பொழில்வளங்க டருமென்றும் வயன்மருத
மீனெருங்குங் கடல்வளங்க டருமென்றும் வியனெய்தல். (௧௨)

அடுகுறவர் திறம்பெருகு மலர்குறிஞ்சி யானுயர்
குடிநெடுங்கும் படர்முல்லை கொழுமள்ளர் குழுத்துவன்றுங்
கடிமருதம் விளையளவர் கணநிறையுங் கழிநெய்தல்
படைமறவர் நிரம்புநெறி பரன்முரம்பு தரும்பாலை. (௧௩)

வேறு.

பண்டைநான் மறைக்கு மெட்டாப் பராபரன் மனிதர் போல
மண்டலத் திழிந்து வேந்தர் வல்லியை மணந்து கோலி
னெண்டரும் புவன மூன்று மிருந்தர சாளக் கண்டூர்
தண்டமிழ்ப் பாண்டி நாட்டின் றகவுண்டோ மற்றோர் நாடு. (௧௪)

ஆகத்திருவிருத்தம் - ௬௪.

# திருநகரச்சிறப்பு.



மலரு மித்திரு நாட்டியல் வாணர்சொற் கோலா
லுலக மனைத்தையு நிறுப்பமுன் வாடிடா தோங்கு
மலகில் வண்புக ழுடையது மதுரையாங் கதனை
யிலக யான்சிறி தறிந்தவா றியம்புவல் கேண்மின். (க)

ஊர்தொ றும்பெருங் கம்பலை யோங்கநீர் பரந்து
பார மீனுடு மீன்விழப் பாய்தரப் போதா
வாரம் வேங்கைகோங் ககிலெடுத் தினமணி கொழித்து
வாரி யெற்றிமுன் மதிட்படை பொருவது வைகை. (உ)

வேறு.

புகறற் கரிய வேதத்தின் பொருள்கட் கெல்லாம் பயனாய
பகர்தற் கினிய வெந்தைபிரான் பஞ்சாக் கரம்போற் றனையொவ்வா
மகரத் தமரப் பெருங்கடல்சூழ் வையத் தைந்து நிலத்தோங்கு
நகர்கட் கெல்லாம் பயனாய நகர்பஞ் சவன்றன் மதுரைநகர். (ங)

நீள வளர்பொற் கோபுரம்வா னிலவும் வெள்ளி யொளிமன்ற
நாளு மமரர் வாழுமுயர் மேரு வரையை நலத்தோங்குஞ்
சாள நிலவு மணிகண்டன் கயிலை மலையை நிகர்ப்பதலால்
வாள கிரியைப் புறக்கடலை நிகர்க்கு மெயிலும் வளைகிடங்கும். (ச)

சேமப் படுபொன் னகரென்னத் தெருவின் மடவார் விளையாடு
மேமச் சுண்ண நுண்டுகளா லிலங்கு நலங்கொ ணிலமெங்குந்
தாமப் புயலை மாறுபடத் தருமச் சுருதிப் பெருவேள்வி
யோமப் புகையு மகிற்புகையு மொழியா வகல்வா னுழையெங்கும். (ரு)

சுருதி யோசை முழவோசை சுகங்கள் பூவைக் கரும்பொருள்க
ளுரைசெ யோசை யியலிசைநீ டோசை யுழவ ருழவோசை
பொருவி லாலை பாயோசை பொழில்வா யலர்பாய் ஞிமிறோசை
வரிசை மாதர் சிலம்போசை வளைநீ ரோசை தனின்மிகுமால். (சு)

வேறு.

தோரணவா யில்கள்விளங்குந் தொழுமன்ன ரிடுதிறைக
டோரணிவீ திகள்விளங்குந் திருமலிபல் விழாவ்ளங்கள்
பூரணமா னிகைவிளங்கும் பொலன்கொடிதோய் மணிக்குடங்க
டாரணியோ தவைவிளங்குந் தருமநெறி தருமநெறி. (எ)

ஊர்ப்படலத்து. கடம்பவனம்.

வாவிமருப் பங்கயமா மறுகுமருப் பங்கயமாந்
தாவிவருங் கொண்டலையுந் தண்டலையுங் கொண்டலையும்
பூவையர்பொற் படமலையும் புணரிஞர் படமலையும்
பாவறிமாக் கடம்பவனம் படிபுகழ்மாக் கடம்பவனம். (அ)

கூடல். வேறு.

வயங்கொள்வார் சாலிச் சூடும் வளர்ந்துபோய் வானைச் சூடு
மியைந்தமீ னுகத் தென்று மிலங்குமீ னுகத் தென்றும்
பயங்கொளா காயச் செல்லும் பரந்துகா வேறச் செல்லும்
வியந்தநான் மேகக் கூடல் விளங்குநான் மாடக் கூடல். (கூ)

மதுரை. வேறு.

தும்பைமலர்த் தொடைமுடிக்குஞ் சூரன்வினைப் பகைமுடிக்கும்
வம்பலர்மட் டளையவிழும் வண்டிறவுட் டளையவிழு
மம்புனற்கே கயமாடு மணிபொழிற்கே கயமாடு
மெய்பெருமக் கடமதுரை யிலங்குமலர்க் கடமதுரை. (க0)

ஆலவாய். வேறு.

பாக மங்கய ணேக்கியார் பரிவு மங்கய ணேக்கியார்
மோக நந்துற வன்பினன் முனிவர் நந்துற வன்பினன்
மாக மொன்றிய வாய்மையால் வந்தி லங்கிய வாய்மையா
லாக மம்பக ராலவா யமுத மன்றிரு வாலவாய். (கக)

கன்னி. வேறு.

ஈசனூர் மகிழ்ந்த தான மெனவினை யிருள்வா ராம
லாசினந் தாவி ளக்கிட் டந்தகன் றிசைநின் றேத்தித்
தேசுடைக் கருங்கண் முத்த வெண்ணகைச் செவ்வாய்ப் பச்சைக்
காய்சின மயிடற் காய்ந்த கன்னிமுன் காக்கு மூதூர். (கஉ)

கரியமால்.

நினையவெம் பழுவ நீக்கும் பதியென நிலத்தி ழிந்தாங்
கினமலி யரக்கற் காய்ந்து குடதிசை யேத்தி நின்று
மனமுடை வியாழத் தோடு மறைவழக் கன்று வென்ற
கனகவெண் சங்கச் செங்கைக் கரியமால் காக்கு மூதூர். (கங)

காளி.

காரிய வுலகுக் கெல்லாங் காரண நகரென் றெண்ணிப்
பேரியல் வடபா லெல்லைப் பிறங்கவர் திருந்து போற்றித்;
தாருகற் காய்ந்த சீர்த்தித் தலம்புகழ் வெற்றிக் கொற்றச்
சீருடைக் காளி நாமச் செல்விமுன் காக்கு மூதூர். (கச)

## ஆலவாய்.

தொன்னில மாம டந்தை தோன்றமு னெவர்க்கு முன்னந்
தன்னுறு திசைக்கட் டோன்று மாலவாய்த் தரும மூர்த்தி
யெந்நிலத் தினுமு யர்ந்த திந்நில மென்று தோன்ற
மன்னுமைக் குரைத்து மற்றை மாதிரங் காக்கு மூதூர். (௧௫)

### வேறு.

பூழி யகழ்ந்த சூழிநிரப்பும் புலவ ரமல னெடுமேலேவோ
ராழி யேழு மொருதடத்தி லமரு மதுவோ வுலகேழுஞ்
சூழு மூன்று முலையிருமை யொருபெண் பிறந்து சோதியுடன்
வாழு மதுரை வளங்கூற யாமார் மறந்து மாநிலத்தே. (௧௬)

### வேறு.

முன்னையெண் டிசைக்க யங்க டாங்கிடு முதுபே ரண்ட
மன்னுமிந் திரனார் சாத்தும் வானிழி விமான மாகுந்
தென்னவன் சிவனே யாகுஞ் சிவலோக மதுரை யாகு
முன்னரு மனிதர் முற்றுங் கணங்களா மோருங் காலே. (௧௭)

### வேறு.

ஈனமிலா விந்நகரி தன்னு ளெந்தை யிலங்குபுக ழுறுபத்து நான்குண்டோதின், மீனவர்கோன் குலஞ்செய்த தவத்தி னானு மேதினிமான் முயன்ற வருந் தவத்தி னானு, ஞானமுனி வர்கள்கேண்மி னுகமொன் றிற்கு நானான்கு நான்கா நான்கு கத்து, மானவவை தமையுரைப்ப லநாதி மும்மை யகலாத வல்வினைக ளகல வென்றே. (௧௮)

ஆகத்திருவிருத்தம் - அஉ.

# நூற்பயன்.



இனிமைசேர் பயன்வி ளம்பி னிவ்வவ னிக்கண் மிக்க
புனிதபங் கயமி ரண்டிற் புரிவுள மார்த ருள்ளப்
பனிகொள்பங் கயத்தை மற்றைப் பங்கய மலர்த்து கின்ற
தினகரன் போல லர்த்துந் திருவிளை யாடற் பானு. (௧)

### வேறு.

தருமம் வாய்மை தவங்குலங் கல்விசேர்
பெருமை செல்வந் திறம்பிற வாநெறி
யரிய புத்தி யருள்சிவ பத்திமற்
றுரிய யாவையு மெய்துவ ருண்மையால். (௨)

கருது காதல ரெய்துவர் கன்னியர்
சுருதி மைந்தர்ப் பெறுவர்கள் சூலியர்
வருபி றப்பி னமங்கல மங்கைய
ரருள்ப டைத்த சுமங்கலை யாவர்கள். (௩)

காரி ருட்டிடி துந்துமித் துங்கடல்
வாரி வெய்ய கனுவழன் மாமருத்
தோரை நாட்டிதி வார முடற்குறை
சோரர் வஞ்சனை நஞ்சல கைச்சுழல். (௫)

உழுவை வேழ மரியுர காதிகள்
வழியின் வெவ்விடை யூறுமற் றென்செயுஞ்
செழியர் நாதர் திருவிளை யாடலை
யெழுதக் கேட்க நினைக்க வியம்பவே. (௬)

வாத பித்தங் கவமுதல் வல்வினை
வேத னைக்குள் விழார்நம னூர்புகார்
தீத கற்றுந் திருவிளை யாடலை
யோதி யத்த முணர்ந்த பெருந்தவர். (௭)

ஊட்டு நாளிற் றொடங்கி யொழிவற
வீட்டும் வெய்ய வினைகளி யாவையுஞ்
சேட்ட நாதன் றிருவிளை யாடலைக்
கேட்ட காலையி னீங்குங் கிளரவே. (௮)

தாங்க ருஞ்சம ரத்திர சத்திர
நீங்கு நீங்கருஞ் செல்வ நிரந்தர
மோங்கு மோங்கலின் வந்துல கீன்றவள்
பாங்க னார்விளை யாடல் பகரவே. (௯)

பாத கங்க ளொழியும் பகையுகு
மேத நீங்கு மினிமை தரும்புகழ்
மாது சேருமற் றேதினி வேண்டுமென்
றோதி மாமுனி தோன்ற வுரைசெய்வான். (௧௦)

ஆகத்திருவிருத்தம் - ௬௧.

---

## ௧.-இந்திரன்பழிதீர்த்த திருவிளையாடல்.

பொருந்திய வொழுக்கத் தானும் பொய்யிலா வாய்மை யானுந்
திருந்திய கல்வி யானுந் தீதறு புகழி னானும்
பெருந்திறல் வலியி னானும் பேரரு ளானு மிக்க
வருந்தவ முனிவர் கேட்ப வகத்திய னருளிச் செய்வான்.* (௧)

---

* இச்செய்யுள் கையெழுத்துப் பிரதிகளிலெல்லாம் ஒவ்வொரு திருவிளையாடல்களின் முதலிலும் எழுதப்பெற்றுள்ளது.

ஆதிநான் மருப்பி யானை யமரர்கோன் முன்னோர் கால
மேதகு வீர மிக்க விருத்திரா சுரனைக் கொன்ற
வோதரும் பழியா லஞ்சி யொழிக்குமா றெங்ங னென்றென்
றேதமின் முனிவர் வானோர் குருவர னிடத்து ரைத்தான். (உ)

மெய்ப்படத் தேர்ந்தி யாரும் விளம்பிய வாறு கேட்டு
வைப்புறு நான்கு கூறு வரைந்தெமக் களிமி னென்ற
வொப்பரு நீரின் மண்ணின் மரத்தினி னுவமை யில்லாச்
செப்பிளங் கொங்கை மாதர் திறத்தினி னீக்க வாங்கு (ஙு)

நீரிடை நுரைய தாயு நிலத்திடை யுவர தாயும்
பாரிய மரங்க டம்முட் பாய்தரு பிசின தாயும்
வாரணி முலையார் தேத்து மலரெனுங் குருதி யாயும்
பேர்பட நீங்கக் கண்டு பெருநல மவருக் கீந்தார். (ச)

மருவவீந் ததுதா நீர்க்குக் கழுவிய மலஞ்சா ராமை
விரிதரு நிலத்திற் கங்க மேவிய வடுவுமெத்த
வுரவமர் மரத்திற் கென்றுங் குறைத்திடக் கிளைத்த லோங்குங்
கருவினு மடமா தர்க்குத் தணிவிலாக் காம வேட்கை. (ரு)

சமையமா முனிவர் போற்றத் தானவர் வழுத்த மாத
ரிமையவர் சுரவி,சிந்தா மணிதொழ விருமருங்குங்
கமலமுஞ் சங்கும் வாழ்த்தக் கற்பகச் சோலை நீழ
லமரர்கோ னிருந்தான் வந்தாங் கரிகொளா சனத்தி லங்க. (சு)

கூறரும் பேர வைக்க ணரியபல் கோலங் கொண்டு
தேறுத லுடன யந்து தேவகன் னியர்கள் பாடிப்
பேறுடை நிருத்தஞ் செய்யச் சிலரதைப் பெரிதும் போற்றி
வேறிலை கூத்துப் போல மெய்யுளங் கவர்வ தென்றார். (எ)

மன்றுறு மவையின் மற்று நின்றவர் வணங்கி வாழ்த்தி
யின்றிது போலொன் றில்லை யென்றுமுன் னவில்வ தென்னே
யொன்றிய மனமுங் கண்ணுங் களிதர வுவமை யில்லா
வென்றிகொ ணலம்ப யப்ப திலங்குமா வேட்டை யென்றார். (அ)

ஆங்கது கேட்டு வேட்ட வமரர்கோன் விரைவி னந்தப்
பாங்குடை வேட்டைக் கான காட்டினைப் பகரு மென்ன
வோங்கிய வவையின் மிக்க வுத்தமர் கற்ப கப்பூந்
தேங்கமழ் தொடையாய் மண்ணிற் சிறந்தபல் வனங்க டம்முள். (கூ)

நீண்டநன் னலங்க ணல்கு நீக்கரும் பாவ நீக்கு
மேண்டருீ மவனிக் கெல்லா முயர்புள தியானை கேழல்
காண்டகு மடங்க லெண்கு கலையுழை புழுவை மற்று
மீண்டிய வனங்க டம்ப வனமலா லில்லை யென்றார். (கo)

வே று.

ஆன செய்தி சொல்லு முன்ன திர்ந்தெ ழுந்து வாசவ
னீன மின்றி வில்லெ டுத்தி லங்கு கச்ச ணிந்துவெஞ்
சேனை சூழ வாழி சூழ்சி றந்த மண்ணி ழிந்துகா
வானெ ருங்கு நீள்க டம்ப மாவ னத்து வந்தனன். (கக)

காடு காவல் செய்து வாரொ ழுக்கி யெங்க ணுங்கலந்
தோடு நாய்வி டுத்த டிச்சு வட்டி னெற்றி யொல்லை யெண்
மாடு கண்வ லைத்தொ டக்கி னல்வ ளைத்தொ லிப்பமுன்
கூடி வேறு வேறு நேர்கு தித்தெ ழுந்த கோடிமா. (கஉ)

ஏன மெய்தி யானை யெய்தி ரும்பு லிக்கு ழாமெய்தொண்
கான மேதி யெய்து வெங்க லைக்க ணங்க ளெய்துமற்
றூன மாம டங்க லெய்த டர்ந்து மேலெ ழுந்துபாய்
மானி னங்க ளெய்து வாச வன்ம னங்க ளித்தனன். (கங)

வே று.

நெறிவசத் தானு முன்னை நிறைதவத் தானும் வென்றிக்
கறைகெழு குலிச மன்னுங் கையிலா கவத்தி னோடுந்
திறமொடு வடபால் விட்டுத் தென்றிசை நோக்கிச் செல்ல,
மறுவறு பரம ஞான மனத்தகத் துதித்த தன்றே. (கச)

இன்றிதற் கேது வேதோ விவ்வனத் தணையா முன்னங்
கொன்றிடக் கூடா துள்ளங் கொடியபல் விலங்கு நிற்ப
வென்றிகொள் வேட்டைக் காட்டில் விசேடமுண் டறிதல் வேண்டு
மொன்றிய செயல்வே றூன துரைசெயு மும்ப ரென்றான். (கரு)

அவ்வுரை கேட்ட தேவ ரறிகுவ மென்னப் போந்து
வெவ்வன மெங்குந் தேடி மேதினி தோன்று முன்னஞ்
செவ்வியின் முளைத்தெ ழுந்த திப்பிய விலிங்கங் கண்டு
மெய்விதிர்ப் போடுஞ் சென்று விளம்புவார் துளங்க வாங்கு. (கசு)

கண்டனம் பெரிதா யாழ்ந்து தெளிபுன லுடைத்தாய்க் கான
வண்டணை பொழில்சூழ் வாவி யதன்வட குடதீ ரத்து
முண்டக வயன்மால் காணு முளைத்தெழு சிவலிங் கத்தைப்
பண்டைமா தவத்தா லென்று பரிவொடும் பணிந்து சொன்னார் (கஎ)

இந்திரன் கேளா முன்ன ரினிமைகூர்ந் தவர்முன் னாக
வந்துசந் நாகம் வாங்கி வாவிகண் டதிச யித்துச்
சந்தமார் நன்னீ ராடிச் சடங்குகண் முடித்துப் பாங்க
ரந்தநா யகனைக் கண்டா னுலித்தான் மானுற் றாடி. (கஅ)

அடைந்தவர் பாவ நீக்கு மையனே காணப் பெற்றேன்
மடங்கலெண் குழுவை கேழன் மாமத மாக்கண் மற்று
மிடைந்திடுங் கொடிய காட்டின் மெல்லிய லொடுந்த னித்திவ்
விடந்தனி லிருந்தா யென்ன புண்ணியஞ் செய்த திம்மண். (கக)

அன்புற விறைஞ்சி நின்னை யருச்சிப்பான் விரும்பா நின்றே
னன்புனற் கியைந்த செவ்வி நறுமலர் காட்டு கென்றாய்ந்
தின்பமே தருங்கா னத்தி லெங்கணு நேடிக் காணான்
றுன்பமுற் றரசே யானென் செய்குவ லெனச்சோ கித்தான். (உo)

ஆசிலான் கண்டு நீண்ட வாவியெங் கணுமி லங்கப்
பேசரும் வேட்டை யாட்டிற் பெருவிருப் பொழிந்து நம்மைப்
பூசைசெய் வதற்கே நேர்ந்தா னென்றருள் புரிந்து சீத
வாசமா ரிழக் கஞ்சம் வருவித்தா னலர்வித் தாங்கு. (உக)

காவலன் வியந்து பல்காற் கண்டுகண் டதிச யித்துப்
பூவினை யடையிற் கொய்து புளகிதத் தோடுங் கண்ணீர்
மேவமெய் கம்பித் தன்பின் வெள்ளத்து மூழ்கி மிக்க
தேவதே வனைப்பூ சித்தான் விதிப்படி சிறந்த நல்கி. (உஉ)

தேசுடை மடவாள் கொங்கை தீண்டிடச் சிவக்கு மேனி
வீசிய காற்றால் வெய்ய வெயிலினு ளேவ தேயென்
றாசிலா வுயர்வி மானஞ் சாத்துவா னுளைச கூர்ந்து
மாசிலான் வருந்தக் கண்டு வணங்கியே தெய்வத் தச்சன். (உ௩)

விருத்திரா சுரனைக் கொன்ற வெம்பழி தவிர்ப்பா னெண்ணித்
திருத்துபல் விமானந் தம்முட் டெளிதரு சிற்ப நன்னூற்
பொருத்தமுற் றளவி றெய்வப் பொலிவொடுங் கூடி நீடி
யிருப்பதோர் விமான முண்டாண் டிறைவவென் றிலங்கச் சொன்னான். (உச)

மெய்ப்படு சிற்பம் வல்ல வுத்தம விரைந்து நீபோ
யொப்பில்காஞ் சனவி மான மும்பலிற் கொணர்தி யென்ன
வப்பொழு தவன்போ யாசை யானையிற் கொணர்ந்து காட்டத்
தப்பிலா விதியி னோங்கச் சாத்தினான் குளிர்வி மானம். (உரு)

சிந்தைவாழ்ந் திறைஞ்சி யேத்திச் சிறந்தசெய் தியாரும் போற்ற
வந்தநீ டால யத்துக் கணியுற வியைந்தி ருந்த
சுந்தர வடிவங் கண்டே சொக்கெனு நாம மிக்க
வெந்தையே நினக்கல் லாதோர் தேவர்க்கு மியையா தென்றான். (உ௬)

என்றுமென் பதிக்கோர் குற்ற மெய்திடா வண்ணங் காத்தி
வென்றிகொள் வீர மிக்க விருத்திரா சுரனை யன்று
கொன்றவெம் பாவ நான்கு கூறுசெய் தொழித்தேன் சேட
நின்றன வுண்டே னீக்கி யருளுதி நிமல வென்ன. (உஎ)

இறையவன் முறுவல் கூரா வறிவுடை யிமையோர் கோவே
செறிதரு புவியின் மாந்தர் செய்ததீ வினைகள் காணு
றறியினுஞ் சிறிதே யாக வறைகுவ ரதுப கர்ந்தாய்
திறலுடை யவனைக் கொன்ற பாவமார் தீர்க்க வல்லார். (உஅ)

ஆயினும் வேட்டை யாட்டி விளைத்தலி னுனு மாரா
நேயமுற் றஞ்சி நம்மை நெறிப்படி வழுத்த லானுங்
காய்வெயிற் குயர்வி மானங் கற்பித்த லானுந் தீராத்
தீயவெம் பாவந் தீர்ந்த தூர்க்குமோர் தீங்கு மின்றே. (உகூ)

என்றருள் செய்யக் கேட்ட விந்திரன் வீழ்ந்தி றைஞ்சி
நின்றடி பல்காற் போற்றி நீக்கரும் பழியை நீக்கி
யொன்றிய தூய்மை பெற்றே னுய்ந்தன னென்றென் றூர்த்துச்
சென்றனன் றன்றே யத்துச் சேனையுந் தானும் வாழ்ந்து. (௩0)

வேறு.

ஆழ்ந்தசெழுந் தடம்பொற்றா மரைமலர வவனிமிசை
வாய்ந்தவுயர் பெயர்பொற்றா மரையென்ன மருவியதாற்
சேர்ந்ததொரு வாரத்துச் சென்றெவரா யினுமின்றுந்
தோய்ந்துதிளைத் தாடுப்வர் பலஞ்சொல்லிற் றொலைவின்றே. (௩க)

வேறு.

கடம்பமா வனத்தி லங்குங் கனககோ கனக வாவி
யடைந்தவர் யாவ ரேனு மாதாத் தநாத ரத்துத்
தடம்படு கங்கை நீரிற் புனிதமாந் தட்ப நீருந்
தொடுங்கையோர் பவந்தீ யென்னச் சுடுமெனச் சுருதி சொல்லும். (௩உ)

வேறு.

இப்பொழுது மமரேச னினிமையின்வந் தமரரொடுஞ்
செப்பருந்தன் மாதரொடுஞ் சித்திரைச்சித் திரைத்தினத்துத்
தப்பறவேண் டியவரங்க டருந்தடத்துக் குடைந்தாடி
யொப்பிலழ கனைப்பணிவ னெனவுரைப்ப ருயர்ந்தோர்கள். (௩௩)

வேறு.

காவமர் கற்பு கஞ்சேர் கடிமலர் மழைபொ ழிந்து
தாவிறுந் துபிக ளார்த்துத் தத்தமங் கையர்க ளோடு
மூவரும் விசும்பி னுள்ள முப்பத்து மூன்று கோடி
தேவருந் துதித்தா ரீசன் றிருவிளை யாடல் கண்டு. (௩௪)

வேறு.

ஓதரிய வுத்தரமா புராணந் தன்னு ளுண்மைதரு சாரசமுச் சயத்து முன்ன, மேதகுநன் கதைவிரிவிற் கண்டெ னக்கு வியாதவான் மீகியெச்சன்

* கையெழுத்துப்பிரதிகளிலெல்லாம், இந்த, "காவமர்" என்னும் செய்யுள்முதலியமூன்றும் ஒவ்வொருதிருவிளையாடலின் இறுதியிலும் எழுதப் பெற்றுள்ளன.

சொன்ன வெண்ணெண், மதில்விளை யாடல்களிற் பிறங்கு மிந்தத் திருவி
ளையா டலின்பரப்பைச் சுருக்கி யின்று, போதமுற நமக்குரைத்தேன்
யானுஞ் சொக்கன் புகழினையார் கரைகண்டு புகலு வாரே. (ரு௫)

வே று.

நெறியுளீ ரென்னக் கேட்ட முனிவர்க ணிறைவு கூர்ந்திங்
குறுமதி சயமுடைத்தா முயர்கதை விளங்கக் கேட்டே
மறுவிலா வறிவான் மிக்க மலயமா முனிவ நீதி
யிறைவிளை யாட றம்மு ளின்னுமொன் றுரைத்தி யென்றார். (ரு௬)

ஆகத்திருவிருத்தம் - க௨எ.

---

## உ.—வெள்ளானைக்குச் சாபந்தீர்த்த திருவிளையாடல்.

முன்னொருகா லழகனையிந் திரன்றன் பாவ முழுதும்விட வருச்சித்த
விசேடஞ் சொல்ல, மன்னயிரா வதங்கேட்டுக் காண்பான் வேட்டு மலர்க்க
டம்ப வனத்தருளால் வந்து புக்குப், பொன்னிதழ்ச்செங் கமலமலர்த்
தடத்தை யுந்தன் பொருவிலருங் கிளைகளினுற் பரிக்கப்பட்ட, மின்னுயர்பே
ராலயத்து விரும்பி வாழு மெய்யனையும் பொய்யறக்கண் டிறைஞ்சிற்
றன்றே. (க)

குறுகுமுனந் தானவிசே டத்தா னெஞ்சிற் கொளுவுமுயர் ஞானங்கண்
டதிச யித்து, நிறைவினொடு தன்சாப நினைந்து சொல்லு நீடியவெண் டிசை
யுறுமென் கிளையி னுள்ளோ, ருறவுதர வருமுன்னைத் தவத்தி னலே யுயர்
புடைநின் றிருக்கோயி றன்னை நீங்கா, திறையவனே பரித்தருகு நிற்கப் பெற்
றார் யான் பெறுமா றெவ்வாறென் றியம்பக் கேட்டு. (உ)

கொந்தவிழுந் தும்பையிபக் கடவு ளேநின் கோச்சீலம் போன்றிருந்த
துன்றன் சீல, மிந்திரனே நமக்குரிய பத்தன் புத்தி யினிமையுட னவன்
றன்னை நீங்கா தென்றுங், கந்தமுறப் பரிப்பதே நன்மை யெம்பாற் காமுற
வேண் டியவரங்கள் வாங்கிக் கொள்ளென், றெந்தைபிரா னுரைப்பபானி
விருப்ப மெய்தி யெள்ளலற வெள்ளையிப மியம்புமன்றே. (ங)

கேட்டருளாய் பசுபதியே தேவர் தேவே கிளரொளியே வளர்கருணைக்
குன்றே யென்றன், மாட்டகலா திருப்பதொரு கதையி யம்ப வானவர்கோன்
மனமகிழ்ந்து முன்ன மேமா, வேட்டையினு லவனிமிசை யிழிந்து மீண்டு
மேலுலகிற் செலுங்காலை மிக்க வான், னாட்டவரு முனிவர்களும் போற்றி
செய்து நயந்தினிய வுபகார நல்கி னார்கள். (ச)

### வேறு.

முந்துற வவற்றை யுற்ற முறைமையின் வாங்கி யாங்கு
நிந்தியா தடைவிற் சூடக் கண்டுள நேசங் கூர்ந்து
சுந்தர வடிவ மிக்க துருவாச முனிவ னானுஞ்
சிந்தைசெய் திறைஞ்சுந் தெய்வஞ் சூடிய சேட மென்று. (௫)

பங்கய நறும்பூ வொன்றும் பசுந்துள வத்தா ரொன்றுஞ்
செங்கையி னல்க வாங்கிச் செழும்பொழிற் கற்ப கப்பூந்
தொங்கல்சேர் முடியிற் சூடா திகழ்ந்துமுன் றோன்றி நின்ற
மங்கலம் பொலியு மென்றன் மத்தக மீதெ றிந்தான். (௬)

யானுமுன் செய்த பொல்லா விருங்கொடு வினையி னானு
மானவெம் மதத்தி னானு மடியினிற் றுகைத்தேன் வாங்கிப்
பான்மைசேர் முனிவன் கண்டு பயத்தொடுங் கோபத் தோடுந்
தானவை கடிதெ டுத்துத் தன்றனி முடியிற் சூடி. (௭)

இன்றுமா முனிவர் வானோ ரீந்திடு முபகா ரத்தை
நன்றென விரும்பி யான்மு னல்கிய வுபகா ரத்தை
யொன்றிய முடியிற் சூடா தொள்ளிய வல்ல வென்று
வென்றியி னெவருங் காண விலக்கிய வாற தென்னை. (௮)

ஆவியிற் சிறந்த வற்றை யவமதி செய்த தாலிப்
பூவல யத்துட் டோன்றும் பூழியன் றடக்கை தன்னின்
மேவிய வளையி னாலே மேன்முடி பிளக்க மிக்க
தேவர்கோ னெற்று மென்று செப்பின னவற்குச் சாபம். (௯)

பொன்னகர் மன்னி வாழும் புரந்தரன் றன்னைத் தாங்கு
நின்னுயர் பெருமை விட்டு நிலத்திழிந் துழல்வா யாக
துன்னிய வனங்க டோறுஞ் சுழன்றுகாட் டியானை யாகி
யுன்னவ மதியி னாலென் றுரைத்தன னெனக்குச் சாபம். (௧0)

இப்படிச் சபிக்கக் கண்ட விருடிக ளிமையோர் நொந்தாங்
கொப்பிலா முனியைப் போற்றி யுயர்தரு தேவர் கோமான்
செப்பருந் தெய்வ யானை செய்பிழை பொறுத்தி னிட்ட
தப்பறு பெருஞ்சா பத்தைத் தணியெனத் தணிந்து சீற்றம். (௧௧)

மண்டனிற் சுந்த ரேசன் பத்தனா மாற னாலே
யொண்டொடை மவுலி பேத மொருகாலத் துண்டாய் மீண்டு
விண்டலத் துயர்வு பெற்று மேலர சாடி யென்று
கொண்டல்வா கனனுக் கன்பிற் கொடுத்தனன் பிறிது சாபம். (௧௨)

பொருந்தவோர் காலத் தோர்பாற் புவியிற்காட் டியானை யாகி
வரந்தரும் பெருங்க டம்ப வனத்துறை யிறையைக் கண்டவ்

வருந்தவ னருளி னாலே யலைவற நீயு மூன்றன்
றரம்பெறக் கடவை யென்று தந்தனன் பிறிது சாபம். (௧௩)

வேறு.

பேறுறவிந் நெறிசபித்துப் போய பின்னர்ப் பிழையாம லன்றிட்ட சா
பந் தள்ள, ஆறுமத விகாரத்தான் மயங்கி யானு மும்பர்கோ னையுமுயர்ந்த
துறக்கத் தோங்குங், கூறருகற் பகப்பொழில்க டமையும்விட்டுக் குவலயத்தி
லிழிந்துதர நெருப்பா னைந்து, தூறுபடு காடுகளு நாடுங் குன்றுஞ் சுழன்று
ழன்று திரிந்தனன்வெந் துயரங் கூர்ந்தே. (௧௪)

வேறு.

வந்துனை வணங்கப் பெற்றேன் மண்மிசை யிழிந்த தாலென்
வெந்துயர்ச் சாபந் தன்னை விடுவித்து விடாது நாளு
மிந்திர விமானந் தாங்கு மியானைகண் மீது வைத்த
சிந்தைகூர் தருபே ரன்பை நல்குக சிறியேற் கென்ன. (௧௫)

ஒன்றிய சாப நீக்கி யுயர்புதந் தோமு னக்கே
யின்றுநன் குண்டா நம்மை யினிமையிற் பூசை செய்து
சென்றுவா னகத்தெ மக்குச் சிறப்புடை விமானந் தந்த
வென்றிகொ ளமரர் கோவை விடாதுவா ழெனா வின்றான். (௧௬)

அங்கருள் புரியக் கண்டே யகமகிழ்ந் தடியே னுய்ந்தேன்
சங்கர வென்று வாழ்த்தித் தடத்துநீ ராட்டிச் செம்பொற்
பங்கயப் போது சூட்டிப் பூசித்துப் பழுது நீங்கி
யெங்கணும் பரவச் சென்ற திந்திர வுலகத் தியானை. (௧௭)

ஆகத்திருவிருத்தம் - ௧௪௪.

---

## ௫.—தடாதகையாரவதரித்த திருவிளையாடல்.

மாசின் மதுரைப் பெரும்பதியின் மலயத் துவச னெனுமாறன்
றேசம் முழுது மனுவென்னச் செங்கோல் செலுத்துங் காலத்தங்
காசின் மனிதர் முன்புலகா ளரசர் தொகுதி மறந்தறஞ்சேர்
நேசம் முடைய பேரரசி னிழலே நிழலென் றினிதிருந்தார். (௧)

மாலைக் குமர வேளென்ன வயங்கு மிளமைப் பருவத்தா
லேலத் திமிரக் குழற்காவி லிலங்கு மடவார் தமைவைத்துக்
கோலக் களபத் தனதடத்துட் குளித்துச் செவ்வா யமுதுண்டு
சாலப் பரிந்தா னருட்சொக்கன் றனையே சாலுந் தகைமையினான். (௨)

---

* 'மும்முலைத்தடாதகையார்பிறந்த திருவிளையாடல்' எனவும் பிரதி
பேத முண்டு.

ஏத மகல வித்தகவி னிருக்கு நாளி னங்குலத்தோர்
நீதி மாதைக் கொள்வலென நினைந்தி ரைந்து பொருத்தமுற
வாதி மரபின் வரும்பெரிய வரசர் குலத்தி லவதரித்த
சோதி வடிவ மங்கைதனைச் சுருதி விதியின் மணம்புணர்ந்தான். (ரு)

மற்ற மடவார் தமைவிட்டு மன்னர் குடியிற் பிறந்தாண்மே
லுற்ற வவர்பா லன்பெல்லா மொருங்கே வைத்து நனிவாழ்வோன்
சுற்றும் பெரிய விதிவசத்தாற் றுணைசேர் புதல்வ னிலாமையினுன்
முற்றுஞ் சடையான் றனைநினைந்து முயன்றான் றவங்க ணெடுங்காலம். (சு)

ஆன்ற வரிய பேரறங்க ளிவை யுடனே செயக்கண்டாண்
டேன்ற விளையா டலைவிரும்பி யெழிலார் சொக்க னருள்கூர்ந்து
மூன்று முலையா லொருமகவை யளிப்ப முதிரு மதியென்னத்
தோன்றி யுலகு பதினாலுந் துதிப்ப வளர்ந்து துலங்கியதால். (எ)

வேறு.

சிதைவிலா விருப்ப மிக்க தேவியோ டினிய தென்ன
னதிசய முற்று மற்றை யதிகமா முலையி னைக்கண்
டிதுதகு வதுவோ விந்த வடிவினுக் கெந்தா யந்தி
மதிபொதி சடையா யென்று மலரணைத் துயிலுங் காலை. (அ)

இணையிலான் கனவிற் சென்றோர் மாதிவ ளெனக்கொள் ளாது
தணிதிநீ யேத மந்தத் தனமுமோர் வழியி னீங்கித்
துணையுல காளுமென்னத் துயிலுணர்ந் ததிச யித்து
மணிமுடி யரசன் செய்தி மந்திரி கட்குச் சொன்னான். (௯)

ஐயமில் கணிதம் வல்லா னவரிலோ ரமைச்சன் போற்றிப்
பொய்யல வுதித்த கால பலத்தினாற் புவியை யாளுந்
தையலுக் கியைந்த நாமந் தடாதகை மற்றொப் பில்லா
மெய்யுறு கணவற் கண்டான் மிகைமுலை மறையு மென்றான். (அ)

இந்தநல் லுரைபொய் யாதென் றியைந்தவ ரியம்ப மன்னன்
செந்தமிழ் முக்கட் சொக்கன் செயலெனத் தெளிந்து தொல்லைத்
தந்திர நெறியி னாமந் தடாதகை யென்று சாத்திச்
சிந்தையா குலங்க டீர்ந்து செலுத்தினான் செங்கோ லோங்க. (௯)

மையமர் விழிவா ளென்ன மதிமுகம் வனச மென்ன
வையநுண் ணிடைபொய் யென்ன வணிமுலை மலய மென்னச்
செய்யவாய்க் கரிய கூந்தற் சிற்றடிப் பெரிய வல்குற்
றையலாள் வளர்ந்தாள் வாரித் தலமெலாம் வளர வாங்கு. (௧௦)

பரிவினெண் ணிறந்த கோடிப் பாங்கியர் சூழச் செம்பொ
னரியகந் துக்க மூங்கோ டம்மனை யூசன் மற்று

முரியன பயின்று கன்னி யோங்குமா டத்தி ருந்து
கரிபரி யேறி முற்றக் கற்றனள் கலைகண் முற்றும். (சச)

ஒன்றிய வடிவி னுனு முதித்தநன் முகுத்தத் தானும்
வன்றிறல் வலியி னுனு மகவுவே றிலாமை யானு
மன்றினர் சிங்கஞ் சிங்கா தனத்திடை யிருத்தி யன்னு
டன்றனி முடியிற் செம்பொற் றனிமணி முடிகவித்தான். (சஉ)

பொருந்துபே ரறங்கள் செய்து போற்றரு மரசர் போற்ற
விருந்தர சுரிமை யெல்லா மிவள்வயிற் கொடுத்திங் கென்ன
வருந்தவஞ் செய்தே னிந்த வணங்கினைப் பெறுதற் கென்று
பரிந்துயர் வான நாடு சேர்ந்தனன் பந்த நீங்கி. (சங)

ஆகத்திருவிருத்தம் - கருஎ.

## ச.—மணஞ்செய்த திருவிளையாடல்.



மன்னு மாதவம் பெருகிய மலைக்கொடி மன்னன்
பொன்னி னாட்டிடைப் போயினி தமர்ந்துவீற் றிருப்பப்
பின்னர் வேறொரு புத்திர னிலாமையிற் பிறங்கக்
கன்னி தானுயா பிதாவினுக் குறுகடன் கழித்தாள். (க)

தந்தை யில்லதுஞ் சாற்றருந் தனதெழி லுருவ
முந்தை மும்முலை யாயதுங் கொண்டிவண் முடியச்
சிந்தை யாகுலந் தீர்விலா திருந்தர சாண்டாள்
வந்த தெவ்வர்கள் யாரையும் வாளினுன் மாற்றி. (உ)

மன்னு முத்தமத் துணைவனை வரத்தொடு பெறுதற்
கந்நி லத்திடை யிலாதது கண்டடல் வேந்தர்
வெந்நி டத்திசை விசயநாஞ் செய்குவ மென்றே
யெந்நி லத்தினு முலாவின ளெல்லையில் படையாள். (ங)

### வேறு.

திசைவிச யஞ்செய் காலைத் திசைகளி லுருவ மிக்க
நசையுறு மன்னர்க் கண்டா னனிநயந் தெதிர்சென் றங்க
ணசைவற நிற்பாண் மற்றோ ரநங்கவேள் விகாரங் காணாள்
வசையறு முனையி னோடு போகுவாண் மதியா ளாகி. (ச)

இருங்குண திசைமுன் னாக வெங்கணு முலாவி யுள்ளம்
வருந்துவரீ டன்னைக் கொள்வா னுசையாய் மதுரை மன்னன்
றிருந்துபே ரருளிற் போந்து சியமா தீங்க மற்றும்
பொருந்திய கயிலை யந்தண் டாள்வரைப் புறத்தி ருந்தான். (ரு)

வெம்முனை யரசர்க் காய்ந்து வெல்லரு நிலங்கள் கொண்டு
கொம்மைவெம் முலையார் சூழக் கோடிமா மன்னர் போற்றச்
செம்மலே றென்னத் தோன்றித் திறையிடான் யாவ னென்று
மம்மர்தீர்த் தாளும் வள்ளல் வாழ்பெருங் கயிலை சேர்ந்தாள். (௬)

கண்டபா ரிடங்கள் சித்தர் சாரணர் கணப்பி சாசர்
மண்டிய வியக்கர் வானோர் தானவர் மற்றுந் துற்று
மிண்டுகள் பேசிச் செல்ல விசயமா மகுட வல்லி
சண்டவெங் கோபத் தோடுந் தழல்விழித் தெதிர்ந டந்தாள். (௭)

வெந்திறன் ஞாட்பி லேன்ற வீரர்க ளாற்ற ராகி
முந்திய திறங்கள் விட்டு முற்றுமா யுதங்கள் விட்டுப்
பந்திவா கனங்கள் விட்டுப் படுவன பட்டுப் போந்து
சுந்தரன் கழலில் வீழ்ந்து துதித்துநீ டுயிர்த்துச் சொல்வார். (௮)

வேறு.

தீர மிக்கமும் முலைசி றக்குமோர் தெய்வ மாதராள் சீறி வந்தெதிர்த்
தார்நி லத்தில்வே றெதிரெ னக்கெணு வரிய வத்திரங் களைவி டுத்தடும்
போர்மு கத்துமென் முறுவல் கூருமுன் பொலிவ ழிந்துநம் படைமு ரிந்தவா
றோரிடத்தினுங் கண்ட தில்லரா வுலகின் மண்ணில்வான் மிசையி லென்றனர்.

அன்றி ஞர்புரங் குன்ற வென்றவில் லரிய சேவகன் முறுவல் செய்திடா
நன்று நன்றுசொல் கின்ற தின்றுபோய் நாடு காணவந் நாரி யாரையாம்
வென்று மேவுவ மஞ்ச லஞ்சனீர் வெய்து றாதிரு மென்று துன்றிமுன்
னின்ற சேனையைத் தள்ளி யெய்தினா னீடு மன்மதன் சேனை பின்வர. (௧௦)

வேறு.

அரிவையைக் கைப்பி டிப்பா னசையி னீறு சாத்தி
வரைவிலார் கரத்து வேறோர் வண்ணவெஞ் சிலையும் வாங்கிப்
பொருபடை நடுவு செல்லப் புரிகுழ லொருவ னம்மேல்
வருவதென் மதியா தென்று வந்தனள் பூசல் வேட்டு. (௧௧)

இறைவனைக் காணு முன்ன ரிருமைமும் முலையி லொன்று
மறைதல்கண் டதிச யித்து மானம்வந் தொல்கி நிற்பத்
துறைபட முன்னஞ் சொன்ன மந்திரி யிவனே தோலா
மறமலி மாதே யுன்றன் மாமண வாள னென்றான். (௧௨)

அப்பொழு திகல்செய் யாத வநங்கவே ளிகலக் கண்டே
யொப்பிலாள் வருத்தங் கூர முறுவல்செய் துவமை யில்லீர்
கைப்பிடிப் பதற்கே வந்தேன் கருத்தறி கில்லே னின்று
தப்பில்வேள் பொல்லான் வெற்போ தனாடு விலையோ வன்றே. (௧௩)

கொங்கவி ழலங்கற் கூந்தற் கொடியிடை யீரு மக்குப்
பங்கய முகுளந் தன்னைக் கொங்கையாப் படைத்த வேதா

வங்கது கண்டு கண்டி தலருமென் றச்சங் கூர்ந்தோ
திங்களை வதன மாகப் படைத்தனன் செப்பீ ரென்றான். (கச)

பொருவருந் திறங்கள் வல்லாள் புகழினு னிறைந்தாள் போதிற்
றிருவினு முருவ மிக்காள் சிறிதுமென் முறுவல் கூர்ந்து
மருமலி யிதழி யந்தார் வள்ளன்மேற் கடைக்கண் வைத்தாங்
கிருநில நோக்கி மெல்ல வியம்புவா ளயங்கள் கூர. (கரு)

வேறு.

மன்னியதென் புலத்திலங்கும் பாண்டிநாட்டு வளமைதரு மாமதுரை நகரொன் பேரூர், நன்னிலைசேர் தந்தையர சுரிமை தந்து நணுகினன் வானாட் டென் னல்ல யாயுங், கன்னிதனக் கானமண வாளன் றன்னைக் காணுமா றென்றென்று கலங்குகின்றா, ளின்னல்கெட மீனமதி யுத்த ரத்தங் கெழுந் தருளி மணந்தருளு மென்றாள் போற்றி. (கசு)

வென்றிதரு புகழுடையா யநங்க வாழ்வே விளம்பியதே செய்வலினி மெலியே லுள்ள, மென்றுவரங் கொடுத்தருளி யிறைவன் போக வின்பமுறு தடாதகைதன் பெரிய நாட்டுச், சென்றுவளந் தருமதுரை நகருட் புக்குச் செய்திபயந் தவட்குரயம் பயக்கச் செப்பி, யொன்றியநன் னலங்கடரும் பெருங்கல் யாண முறச்செய்வா ளொருப்பட்டா ளவப்பட் டாங்கு. (கஎ)

வேறு.

காசில்வா னகல முட்டக் கனகக்காற் பந்த ரிட்டுத்
தூசுபட் டாடை யான்மேல் விதானித்துத் தூபந் தீபந்
தேசொளி விளங்கு பாலை செறிநிறை கரகம் வைத்து
மாசில்வெண் டரள மாலை மாணிக்க மாலை நாற்றி. (கஅ)

நிறைபனி நீரெ டுத்து நிலந்தொறுந் தெளித்து வாச
நறுமலர் சுண்ணம் பொற்பூ நவமணி கலந்து சிந்தி
மறுவறு சமிதை நெய்பால் பாலிகை பரப்பி மாசி
லறுகொடு தருப்பை சூட்டி யட்டமங் கலங்கள் வைத்தார். (கசு)

தோரண நாட்டி யெட்டுத் திசைகளுந் தொழில்சேர் செம்பொற்
பூரண குடநி ரைத்துப் பூகநீள் கதலி நாட்டி
வாரண நெருங்கும் வீதி மதுரையிற் சிறக்க மிக்க
காரண முதல்வன் காணக் காவண மலங்க ரித்தார். (உ0)

பல்லியங் கறங்க வெண்ணில் பார்த்திபர் வழுத்த முத்தச்
சொல்லரு மால வட்டந் தோகையர் வீசச் செம்பொ
னல்லசா மரையி ரட்ட நாயகன் வரவு பார்த்து
வல்லிநல் லணியாற் பொங்கி மாசிலா சனத்தி ருந்தாள். (உக)

நந்திமா முனிவன் குண்டோ தரனென்னு நாமம் பூண்டோர்
வெந்திறற் பூத மாகி வெண்மதிக் குடைநி ழற்ற

வந்தனா குணலை கொள்ள வரிவையர் வினைகள் சிந்தச்
சுந்தரன் வந்தான் முன்னஞ் சொன்னநா டன்னி லாங்கு. (உஉ)

வேறு.

நயந்தருதாண் மிசைவீரக் கழல்பு னைந்து நன்கரத்துக் கடகங்
கணஞ்செ யித்து, வியந்ததிரு மார்பில்விடு நாண்முத் தாரம் வெண்புரிநூ
லணிந்தணிகுங் குமந்தோய் தோளிற், நயங்கியசண் பகமாலை கழுநீர் மாலை
சாத்திமருங் கார்த்தது கி றழைவார் காதிற், புயங்கவொளி மாணிக்கக் குழையி
லங்கப் புதுமலர்வா சிகைமுடியிற் பொலிய வந்தான். (உரு)

வேறு.

மதிநெறி மாதை வேட்பான் மாமணக் கோலங் கொண்டு
கதிதர வந்தோன் மிக்க கடிமணங் காண்பா னென்னி
யிதமுறு தேவர் முன்னு விருங்கண நாதர் முற்றும்
புதுமையின் வந்தார் சூழ்ந்து சயசய வென்று போற்றி. (உச)

ஆதிநான் முகன்மா லேத்த வரம்பையர் வாழ்த்தெ டுப்பச்
சோதிசேர் கானம் பாடத் தும்புரு நார தாதி
நீதறு சடங்கு மைந்தன் செலுத்தநன் முகுத்தத் தேற்ப
மேதகு மாதை வேத விதிப்படி மன்றல் செய்தான். (உ௫)

சேர்ந்தவொண் பாண்டி நாடு செய்தமா தவத்தி னானும்
வாய்ந்தமா மாதைப் பெற்ற மாதுறு தவத்தி னானு
மார்ந்ததொன் முறைமை யிற்பெண் ணாயக மாகா தென்று
வேய்ந்தபொன் முடிக வித்தான் விசயமண் டபத்தி ருந்து. (உசு)

பெருமையே தருங்கோ வென்னும் பெயர்தன தாத லாலே
குரைகட லுலகின் மிக்க கோமாற வரும னானன்
சுருதிமூ வுலகுங் காக்குஞ் சுந்தர மாற னென்றே
மருவிய வெழுத்து மிட்டான் வாய்மனத் துக்கு மெட்டான். (உஎ)

அருட்புனை நீதி யோங்க வருச்சனை புரிதல் வென்றி
யுருத்தகு மாசர்க் கென்று முரித்தென வுவமை யில்லா
விருக்கறை சிவலிங் கத்தை யிம்மையே தருவா னென்றே
யுரைத்தவா கமத்திற் பூசித் தருளின னுலகங் காண. (உஅ)

ஆகத்திருவிருத்தம் - கஅகு.

## ரு.—பதஞ்சலிக்குநடஞ்செய்த திருவிளையாடல்.



பாதிமா துடையான் வேந்தர் பாவையை மணந்த பின்றை
யாதர வயன்மா லாகண் டலன்முத னிறைவு செய்து
நீதியின் விடுத்து மற்று நின்றவர் தம்மை நோக்கிச்
சோதிசேர் நின்னி ராடு மென்றலுந் தொழுதெ ழுந்தார். (க)

முனிவர்கந் தருவர் நாகர் சாரணர் சித்தர் முன்னாக்
கனலெழு பசியாற் போய்ப்பொற் கமலவா வியினீ ராடி
யினியதஞ் சடங்கு செய்தே யேத்தரு நீறு சாத்தி
யனைவரும் வரமுன் வந்த வநந்தமா முனிவன் சொல்வான். (௨)

வந்துமா மறைகள் பாட மகிழ்வுட னாடுந் தில்லை
யெந்தைபொன் னம்ப லத்தி னேத்தருங் கூத்தை யேத்திப்
புந்தியா லிறைஞ்சி னல்லாற் புசிப்பதோர் நாளு மில்லை
சுந்தரா போவ லங்க ணென்றடி துதிப்பக் கண்டு. (௩)

நீங்கரும் வெயிலா னைந்து நீபமா வனத்தில் வாவிப்
பாங்கர்யா னளவில் கால முண்டிருந் ததுப ணிந்தீங்
கோங்கிய மகவான் வேட்டை யாடுவா னொருகால் வந்து
தீங்கற வளித்த செம்பொற் சீதள விமான மீதால். (௪)

திக்குறுந் தலங்க டமுட் சிந்தையித் தல
மைக்குழன் மடவா ளோடும் வளம்பட விதன்கண் டென்பான்
மிக்கநீ காண்டி யென்று வெள்ளியம் பலத்துக் காணத்
தக்கநற் சொக்கன் சொக்கத் தாண்டவம் புரிந்தா னன்றே. (௫)

பரமுனி வரருண் மிக்க பதஞ்சலி முனிகண் ணார
வரமுறக் கண்டா னந்த மகிழ்ச்சிமாக் கடலுண் மூழ்கி
யுளமெழு துதியா லேத்தி யுண்டுநல் விடையிற் போகப்
புளையற யாரு முண்டு போயினா ரருளை வாழ்த்தி. (௬)

வே று.

மதஞ்சொரிகொல் குஞ்சரவி ருஞ்சருமக ஞ்சுகவ ரன்சயில வஞ்சி கொழுநன், விதஞ்செறிபு ரஞ்சுடநெ டுஞ்சரம்வி டுஞ்சதுரன் விஞ்சையர்வி ரிஞ்சரிறைவ, னிதஞ்செய்கொடு நஞ்சவுர கஞ்சசிமி லைஞ்சசடை யெஞ்சலில சஞ்ச லனுளம், பதஞ்சலிநி றைஞ்சடியி றைஞ்சிடந டஞ்செய்தப ரஞ்சுடர்த ருஞ்சொ ருபமே. (௭)

தலம்புகழ்த ரும்..............................கடம்பவனமே.*

ஆகத்திருவிருத்தம் - ௧௨.

## ௬.—பூதமுண்ட திருவிளையாடல்.

பொலிவின் வந்தவர் யாவரு நிறைவுறப் புசித்தே
யலகி லன்கொடு போயின ரரும்பெரு விழாவின்
றொலைவில் பல்வளத் தொகுதிகண் டுறத்தனை மதித்துத்
தலைமை சேரொழின் மடவர றலைவனுக் குரைப்பாள். (௧)

* இச்செய்யுளின்முழுப்பாகத்தை இப்புத்தகத்தில் ௩-ம் பக்கத்திற் பார்த்துக்கொள்க.

பொருவி லாதவெஞ் சோற்றுயர் பொருப்பினைக் காட்டி
யிரவி தீமதி யுடுகுல மிராசிக டிதிக
ளரிய தேவர்கண் முனிவர்க ளிராக்கத ரசுரர்
பெரிய மானிட ரியக்கர்விச் சாதரர் பிசாசர். (உ)

உரக நாயக ராதியர் யாவரு முண்டுஞ்
சொரியு மிவ்வளை யின்னமுந் தொலைந்ததோ வில்லை
யருளி னலிது தொலைந்திட வயில்பவ ரொருவர்
வரவு காண்கிலே னுண்பவர் யாரினி மண்ணில். (ங)

தேசி லங்குநின் னெடுபெருந் திரள்வரு மென்றே
யாசை கூரயான் மடைமுது நூல்வழி யமைத்த
மாசி லோதனந் தெய்வவான் வழுதிகேள் கிடப்பி
னூசு மேலினி யென்செய்வ துரைத்தரு ளென்ன. (ச)

வேறு.

மங்கையங் கயற்கண் ணிக்கு வாய்த்தவன் முறுவல் கூரா
விங்கியா வரும ருந்தி யேகின ருயர்வான் முட்டப்
பொங்கிய செந்நெ லன்னப் பொருப்பையார் தொலைப்பார் துங்கச்
செங்கயற் கருங்கட் பச்சைத் தேவிசொல் லென்று முன்னம். (ரு)

சார்ந்தவெம் பசியுந் தண்ணீர்த் தாகமு மலைப்ப நொந்து
காய்ந்தபே ருதரக் குண்டோ தரனெனுங் கடிய பூதம்
வாய்ந்தநீள் கவிகை கொண்டு வருதலா லினைத்தே னிர்த
வார்ந்தவொண் சொன்றிக் குன்றை யருளென வணைந்த தாங்கு. (சு)

இன்னல்கூர் பசியி னானெந் திடருறு மெண்மை யும்பின்
றன்னிக ரில்லை யென்னுந் தடாதகை வலியும் போக்கத்
தென்னவன் மதுரை மன்னன் சிறிதுளே முறுவல் கூரா
வுன்னுடைப் பசிதான் றீர வுண்ணென வருள்சு ரந்தான். (எ)

வெள்ளிமால் வரையே போலும் வெண்மையு மிமவான் போலுந்
தெள்ளிய வுயர்வு முள்ள சோற்றினைச் சிறிது போழ்தி
லுள்ளதே னெய்பால் வாவி யுடைத்துவிட் டிருகை யாலு
மள்ளியுண் டதும டந்தை யதிசயித் தச்சங் கூர. (அ)

விண்ணுளோர் பூத முண்ணு மிதனையு மிகவு மாழ்ந்த
தண்ணிய வயிறுங் கண்டு சங்கர னேவ லாலிம்
மண்ணிலோர் பூத முண்டல் கண்டன மற்று மொன்று
நண்ணுமே னுமும் போதே முனைவென நயந்தார் யாரும். (கூ)

ஆகத்திருவிருத்தம் - உ0க.

## எ.—ஆறழைத்த திருவிளையாடல்.



சொன்றிமலை துய்த்துமுத ரத்தெழுசு டுந்தீ
யன்றைவட வைக்கனலெ னப்பெரித லைப்பக்
குன்றினைநி கர்த்திடுகு றட்டனுவ ருந்தா
நின்றுசிவ னைப்பரவி நேர்படவு ரைக்கும். (க)

தேவர்தொழு தேவவருள் சேரிறைவ முன்னு
ளோவிறிரை வாரிதிய டுக்களையு வந்தா
யாவியுறு சிற்றுணவி னுலறவி ளைத்தேன்
மேவுபசி யின்னுமெனை விட்டதிலை யின்றே. (உ.)

என்றுமுறை யிட்டலற வீறுளள வுந்தாழ்
சொன்றிதிகழ் நான்குகுழி தோன்றியிட முன்னஞ்
சென்றுகயி லைக்குவடெ னத்தனிதி ரட்டா
வென்றியின்வி ழுங்கியது மேதினிவி யப்ப. (ங)

ஆங்கதுவி ழுங்கியபி னுவியெழு தண்ணீர்த்
தாங்கரிய தாகமுற லாலுடற ளர்ந்தூர்ப்
பாங்குளம டுக்கிணறு வாவிகள்ப ரந்தே
தேங்குபுன லுள்ளனகு டித்ததுதி கைப்ப. (ச)

இப்படிகு டிப்பவுமெ ழுந்தபரி தாப
வெப்பமம ராமலிறை வாவினையி னேனுக்
கப்பினைய ளித்தருள கத்தடிமை யென்றே
செப்புமுன ழைத்தனர்செ ழும்புனலி யாறு. (ரு)

கோகனக வாவிகள்கு லைத்தணைமு றித்தே
யோகையுற வீசுதிரை யோடுநுரை சிந்தி
மாகமுற நீரிரும ருங்கினுநெ ருங்கா
வேகமொடு வந்ததெழ வேகவதி யாறு. (சு)

வேறு.

கண்டனன் காட்டக் குண்டோ தரன்கடி தியாற்றுட் புக்குத்
திண்டிறற் பேழ்வா யங்காந் துறிஞ்சினன் சென்ற நீரு
மண்டுறு நீருஞ் சென்று மணலெழக் கண்ட மண்ணோர்
பண்டையின் வியந்தார் பாவை பழிச்சினள் பொறுத்தி யென்று. (எ)

ஆரவுந் தொலையா வாழ்ந்த குழியுழை யயினி முற்றும்
வாரிதி யுருவா யாற்றின் வரும்பெருஞ் சலில முற்றுஞ்
சேரவுண் டுறிஞ்சி யொல்லைத் தேக்கிடு மவன்ப ணிந்தான்
சாரரு மன்றல் செய்து சகநெறி யாள்வோன் றுளில். (அ)

கைத்தொழிற் பூதங் கண்ட குளமெனக் கண்டெய் தென்று
வித்தகன் பணிப்ப வெங்குங் கண்டது வியப்பப் பூதம்
பத்திசேர் மணற்ப ரப்பும் பந்தரீ ராவி வாவித்
தத்துதெண் டிரைக்க ரைக்க ணிருந்தனன் சடங்குக் கந்தன். (௯)

வாவியின் பெருமைக் கேற்ப வளமலி கழனி கண்டு
தாவில்பல் பதியுங் கண்டு தலந்தொறு நாட தாக்கி
யோவற விளக்க விப்பா லுயர்ந்ததோர் பதியை யங்கட்
காவண வாவிப் பேராற் காவண நல்லூ ரென்றார். (௧0)

நாலிருங் குழியி லன்ன நாற்பெருந் திரளை யாக
மேலெழ விழுங்கித் தண்ணீர்த் தாகத்தான் மெலிந்து பூத
மோலிடக் கண்டு வேக வதியினை யொல்லை யங்கட்
சாலமுன் னழைத்தா னியாவ னவனடி சரண மன்றே. (௧௧)

ஆகத்திருவிருத்தம் - ௨௪௨.



## அ.—கடலழைத்த திருவிளையாடல்.

வயமுறு மன்னவ ருகும் வள்ளல்பின்
னயனொடென் செய்தன னென்ன வின்றனிர்
பயனுறு முனிவிர்காள் பரவ சத்தைவிட்
டுயரதி சயமுள துரைப்பல் கேண்மினோ. (௧)

கனவரை வில்லினன் கதம்பக் கானினன்
றனதுயர் மனத்தினை நாளிற் றாழ்குழல்
புனைவழி பாட்டினாற் புவியில் வேறொரு
கினைவறத் தன்னுடை நினைவி னுக்கினாள். (௨)

சதமுறை துதித்தொரு நாட்ட னித்துநின்
னதர்படு மடியனேன் றூய மங்கலி
யுததியின் மூழ்குவா னுவகை கூர்ந்தன
னிதுதிரு வுளத்தடைத் திரங்கி டென்றனள். (௩)

நயந்தவை யாவையு நல்க வல்லவன்
பயந்தரு காரியம் பகரக் கேட்டுள
மியைந்துகே ளாதுபோ லிருப்ப நாயகி
வயங்கொளி மதிமுகஞ் சால வாடினாள். (௪)

மற்றவண் மதிமுக வாட்டங் காண்டலுஞ்
சற்றுளே நகைசெய்து தரும நாயகன்
முற்றுகா மிருந்தது மோன மாகவுன்
செற்றருந் திருமுகச் சோகங் காணவே. (௫)

மாதர்க டிலகமே மாசில் கற்புடைக்
கோதையே யெனதுளங் கொண்ட தெய்வமே.
யேதநீ யொழியொழி யேழு வாரியு
மாதரத் தழைப்பல்கா ணெனவ ழைத்தனன். (௬)

தகநுரை சிதறிவெஞ் சண்ட வெண்டிரை
யிகலிவா னொடுபொரக் கலித்தி லங்குசெந்
தொகுமணி யொளியினுற் சிவந்து துண்ணென
மகரமீ னெழவெழ வந்த வாழ்கடல். (௭)

பாங்குடை மதுரையம் பதியு ளோரெலா
மாங்கவை வருதல்கண் டதிச யத்தொடுந்
தாங்கரும் பயத்தொடுஞ் சார்ந்து தானுமே
யாங்களென் செய்குவ மெனத்து தித்தனர். (௮)

உற்றொருங் குறவரு முததி யாவையு
மற்புத னுணையா லங்கி மூலையில்
விற்பொலி கடலென விளங்கி முற்றிசழ்
பொற்புறு தடத்திடைப் புகுந்த மர்ந்தவால். (௯)

ஓதரு மனோகர முடைத்த டாதகை
யாதரத் தடிபணிந் தருளை வாழ்த்தின
ளுதிலேழ் கடல்களுஞ் சேர்த வாற்றடம்
பூதலத் தெழுகட லெனப்பொ லிந்ததே. (௧0)

ஆகத்திருவிருத்தம் - ௨௨௨.

---

## கூ—மலயத்துவசனையழைத்த திருவிளையாடல்.



மாண்டகு கடல்கள் கண்டு வழுத்திமுன் றுதிக்கு மாதை
யீண்டினீ போயுன் மாதா வியைந்தபே ராசை தீரப்
பூண்டநல் வரங்க ணல்கும் புணரியின் மூழ்கு வித்து
மீண்டுவா வென்றான் மீளா வழிதர வல்லான் மெல்ல. (௧)

ஆங்கது கேளா முன்ன ரகமகிழ்ந் தியாயின் பாற்சார்ந்
தீங்கொரு கடலா டற்கென் றெண்ணினை யீதொ ழிந்தின்
றோங்குமேழ் கடலும் வந்த வொருகணத் தெனது கேள்வன்
பாங்குறும் பெருமை யாலிப் பரவையு ளாடு கென்ன. (௨)

பரிவுகூர்ந் தருட்பெம் மானைக் கணவனு வுடைய பாவாய்
பொருவில்கா தலனோ டாதல் புதல்வனோ டாத லீரும்

வரிசையான் கன்றோ டாத லாடுதெ லன்றி வங்க
நரலையுட் டனிபுக் காடார் மடந்தைய ரென்ப றென்றாள். (௩)

என்றியாய் மொழிந்த மாற்ற மிறைக்குவந் துரைத்தா டற்கு
மன்றன்மா கணவ னில்லை மகவில்லை யென்ற ழுங்க
வொன்றுகா தலனோ டாடு முத்தம தீர்த்த மாக
வென்றியுன் றந்தை தன்னை யழைக்கின்றே மெலியே லுள்ளம். (௪)

அவையுறு துறக்க நீங்கி யவனிமீ திழிந்த வாறே
தவமுறு நம்ம மாமி தணிவிலா தரங்கெ டாமற்
புவிபுகழ் பெருங்கல் லோலப் புணரியின் மூழ்கச் சொல்லென்
றுவகைமா மடிக டம்மை யழைத்தன னுலகங் காண. (௫)

வேறு.

மண்டு செல்வ மலயத் துவசனைக்
கண்ட மானிட ரன்றிக் கணங்களுங்
கொண்டல் வண்ணனுங் கோகன கத்தனு
மண்டர் கோனு மதிசய முற்றனர். (௬)

வந்து போற்றுதல் கண்டு மகிழ்ந்துபோற்
றந்த மாமகட் கன்புறக் காட்டியே
யுந்தை யோடுமுன் றாயை யுவப்புற
மூந்தை யாழ்கடன் மூழ்குவி யென்றனன். (௭)

ஏத நீங்கு தடாதகை யின்றுநீ
காதல் கூர்ந்த கணவனொ டாடென
வாத ரித்த கணவனோ டாங்கவ
ளோத வேழ்கட லாடி யுவந்தனள். (௮)

மன்று ளையக வாழ்ந்தனம் வாழ்ந்தன
மென்று வாழ்த்தி யிறைஞ்சல்கண் டுத்தம
னன்று தன்னுல கீந்திட வாங்கவர்
சென்ற டைந்தனர் தெய்வத் தனுக்கொடு. (௯)

ஆகத்திருவிருத்தம் - உ௩க.

---

## ௧௦.—உக்கிரன்பிறந்த திருவிளையாடல்.

மன்னாக ரசன் மலயத் துவசன்
றன்னற் புதமண் முழுதுந் தனியே
பொன்னிற் றிகழும் புரமீ தெனவே
மின்னப் பெடையோ டரசாண் டனனே. (௧)

அணியார் தமிழும் மருநான் மறையும்
பணிவே தியரும் பசுவுந் திசையாள்
குணமே வியதென் னவர்தங் குலமுந்
தணியா வறமுந் தழைவெய் திடவே. (௨)

தாரார் குழன்மங் கைதடா தகைபா
லாரா வமுதா னவனின் னருளாற்
போர்வே ளெனவே பொருவில் புதல்வன்
பேரார் சடையோ டுபிறந் தனனே. (௩)

மெய்யார் சுரரும் விதமா நரரு
முய்வான் முழவெங் குமொலித் தினிதா
நெய்யா டல்புரிந் துநிலங் கடொறும்
பொய்யா மலர்மா ரிபொழிந் தனரே. (௪)

உறவுக் கிரமா னதுகொண் டுருவ
மிறைபொற் பமர்கை யிலெடுத் தணையா
மறையுற் றநெறிக் கண்வரும் பெயர்பே
ரறிவுக் கிரனென் னவறைந் தனனே. (௫)

உளமா னையுநா ளுமுருக் கியுவந்
தளவார் கலையா வுமுணர்ந் தழகா
லிளமா தர்மயங் கவிருந் துலவா
வளர்நீ திவிளங் கவளர்ந் தனனே. (௬)

அறிவால் விறலா லருளா லுயர்பா
னிறைவா லிவனுக் கிவனே நிகரென்
றுறநீ டுவிழா விதிசெய் துலகாண்
முறைசேர் மணிமா முடிசூட் டினனே. (௭)

வேறு.

எண்பயிலு நெடுஞ்சடிலம் பிறங்குதலா லிலங்கிவனுக்
கொண்புவியோர் கொண்டாடு முபநயனத் திருநாம
மண்பரவு கோச்சடில வருமனென வியையுமென
விண்பரவ விளங்குவித்தான் விதுகுடுமிப் பெருவழுதி. (௮)

ஆகத்திருவிருத்தம் - உ௩கூ.

## கக.—வளைவேல்செண்டு கொடுத்த திருவிளையாடல்.

முன்ன மிந்திரன் கடல்வட மேரு முந்துதம் வல்வினை வசத்தான்
மன்னு நம்பிய ராணையைக் கடப்பர் மதித்தொவ்வொர் காலத்தி லென்று
பின்னர் யாவையு முணர்பவ னதனைப் போருட் டிருவுளத் துணர்ந்து
சொன்ன மூவர்தம் பெருவலி தொலைப்பான் சோர்வறச் சிறிதுளே முனிந்து.

௫

வேறு.

அறமலி தனது புதல்வனுக் கிரனுக் கருள்சுரந் தரும்புக ழோங்க
மறுவிலோர் வளையை யிந்திரன் பெரிய மவுலியி லறையென வளித்துச்
செறிகடல் வலியை யறவெறி யென்று சிறந்ததோர் வேலினை நல்கி
யறிவட கிரியைப் பந்துபோற் சுழல வடியெனச் செண்டையுங் கொடுத்தான்.

ஆதிமா மரபின் வருவடி வணங்கை யறநெறி மணம்புணர் வித்துக்
காதல்கூர்ந் தறத்தின் றகுதிசேர் புவனக் கனமெலா மவன்றலை வைத்து
நீதிமூ வுலகு மதிசயித் திரங்க நிறைமலி தடாதகை யோடு
மாதர முறுங்க ணத்ப ரோடு மறைந்தனன் பிறங்கவா லயத்து. (௩)

வேறு.

ஆண்டகை தெய்வ வீரெட் டாண்டணி மவுலி சூடித்
தூண்டுமா வரசர் போகந் துய்த்துல காள வாலே
பூண்டபி டேகச் சொக்கன் புழுகுநெய்ச் சொக்க னென்னு
மீண்டுயர் நன்று மங்க ளெங்கணும் பிறங்கு மாலோ. (௪)

மன்னவர் முடிக வித்து மருவிய கணங்க ளோடு
நன்னெறி யோங்க நாடோர் நகரென ஞாலங் காண
வின்னர சாள லாலே யமன்றிசை யாய வெய்ய
தென்னவன் பாண்டி நாடு சிவலோக மான தன்றே. (௫)

ஆகத்திருவிருத்தம் - ௨௪௪.

## ௧௨.—நான்மாடக்கூடலான திருவிளையாடல்.



சீலமார் வருண ராசன் றிறத்தினன் முன்னோர் கால
மாலவா யழகார் மெய்யன் பெருமையை யறிவா னெண்ணி
ஞாலநீ கைக்கொ ளென்று நளிபுனற் பெருந்த ரங்க
வேலையை யேவ வேலை வேலைநல் வேலை யென்று. (௧)

உரனொடுங் கணத்துப் போதி னொலித்துல களைத்துங் கொள்ள
வரனுறு தேவர் சித்தர் மானிடர் நாகர் முற்றும்
வெருவுரு முள்ளத் தோடு மாலவாய் மெய்யன் செய்ய
திருவடி சரண மென்று ஓய்யலா மென்று சேர்ந்தார். (௨)

காலமல் லாத காலத் துததிவா னுறக்க லித்து
மேலெழ வாரா நின்ற தென்செய்கோம் விண்ணோர் கோவே
யேலவே யருள்செய் யாயே லிறப்பமிங் கெவரு ஞாலஞ்
சாலமுற் றுங்கா லத்து நீயலா துண்டோ தம்பம். (௩

என்றடி தொழுது வீழ்ந்து முறையிட விரங்கி யென்று
மொன்றிய வடியார் தங்க ளூறுகுறை தீர்ப்பான் கண்டு
பொன்றுமுன் காப்ப லென்றே புட்கலா வருத்த முன்னு
வென்றிகொ ளுங்கு மேக வேந்தரை வரவ ழைத்தான். (௪)

தக்கபே ரணுக்க ளுய்யத் தரங்கவெங் கடனீர் முற்றும்
புக்குநீர் மாந்து மென்று புகலுமுன் போற்றி செய்து
சொக்கனு ணையைநி னைந்தே சுவறிடக் குடிப்பக் கண்டு
மிக்கவிண் ணோர்கண் முன்னு வியந்தனர் பயந்த ணிந்து. (௫)

அப்பொழு ததிச யித்தவ் வருணன்மீண் டாங்கா ரித்துத்
தப்பருந் தன்கொண் மூக்க டமையெலாம் வரவ ழைத்து
மைப்பனை யனைய நுந்தம் வள்ளுறை சிதறி யந்தச்
செப்பரு முயிரை யெல்லாம் வருத்திடு மெனச்சி வந்தான். (௬)

பீடுசேர் முகில்கள் சாய்க்கும் பெருமழைத் துளியால் யாரும்
வாடுதல் கண்டு தொல்லைப் புட்கலா வருத்த முன்னு
நாடருங் காம ரூபப் புயல்களை நான்கு மாடக்
கூடமா த்ராகக் கற்பித் தருளினன் கூட மில்லான். (௭)

சோதிசேர் பாதா ளத்தர் துறக்கரந் தரத்தோர் பாரோ
ரேதநீ ருறுதி யாரு மியைந்தநான் மாடத் தும்போய்
வீதியி னெருக்க மின்றி மேதகு புதல்வ ரோடு
மாதர மாத ரோடு மிருமென வருள்சு ரந்தான். (௮)

அப்பொழு தெவரும் போற்றி யணுகிமா நகரின் பாங்க
ரொப்பிலா வடைவிற் பொங்கு முயர்ந்தமா டங்க டம்முண்
மெய்ப்பட நயந்தி ருப்ப மின்னிடி முழக்க மிக்க
மைப்படு கருவி வான மழைவலி தொலைந்த தன்றே. (௯)

பேசரும் புயல கத்துப் பெரும்புயல் சுவறக் கண்ட
வாசைசேர் வானோர் முன்னு வதிசயித் தச்ச நீங்கித்
தேசிருங் கங்கை யாற்றைத் திருச்சடைப் புனையுட் டேக்கு
மீசனுக் கிதுவு மொன்றே யெனத்துதித் திறைஞ்சி னார்கள். (௧௦)

அருளின னவரைத் தத்தம் பதியகத் தணைய வேவி
வரிசையி னிருப்பக் கண்ட வருணன்வெந் திறம்விட் டஞ்சிப்
பெரியவ சிறியேன் செய்த பிழைபொறுத் தருளென் றன்பிற்
றிருவடி பூரவி நாளிற் றிகழுளம் வாழ்ந்து போனான். (௧௧)

வாடுவோர் தம்மைப் போற்ற வயங்கொளி மாநா கர்க்கட்
கூடரு மேக நான்கு மாடமாக் கூட் லாலே

நாடவ ரதிச யிப்ப நான்மாடக் கூட லென்று
பீடுடை நகர்க்கு நாம மெங்கணும் பிறங்கிற் றன்றே. (கஉ)

வேறு.

கொண்மு மாடங்கள் கூடலின் மீறியு
நண்ணி நீள்கடல் கொள்ளா நகரிதான்
மண்ணின் மாடக் குளக்கீழ் மதுரையென்
றெண்ணில் காலத் திலங்கிய தெங்கணும். (கங)

ஆடுபவர்......கூடனகரே" (ரூ-ம் பக்கத்திற்பார்க்க.)

ஆகத்திருவிருத்தம் - உருள.

## கங.—சித்தரான திருவிளையாடல்.

அருவ மெய்யின னாலவாய் நாயகன்
கருதி முன்னமோர் காலங் கருணையின்
மருவி யாவருங் கண்டு மகிழ்வுறப்
பொருவில் சித்த வுருவம் புனைந்தனன். (க)

விண்வி ரும்ப மறலியை வென்றுநீள்
கண்ணு மன்பரை யாளுங் கழன்மிசை
வண்ண நண்ணி மனோகர மாகிய
பண்ண மைந்த பரிபுரஞ் சாத்தினான். (உ)

கற்ப வெங்கனற் கண்ணுடை நெற்றிமே
னிற்ப விட்ட திலக நிலாவிடச்
சற்ப மாலை தயங்க மணங்கவர்
பொற்பு யத்துறு பொக்கணந் தூக்கினான். (ங)

மெய்யிற் பூசிய நீறும் விளங்குசெங்
கையின் மாத்திரைக் கோலுமென் காதின்மேற்
செய்ய முத்திரை யுந்திரு வானவொண்
டெய்ய குஞ்சிச் சடையுந் துளங்கவே. (ச)

யோக பட்டம் விளங்க வுளங்கவ
ராக முற்று மழகு பொலிந்திடப்
பாக முற்ற பரிவுடை யானையுட்
போக விட்டு நடந்தனன் பூமிசை. (ரு)

ஆழி மண்கட வாம னிறுத்திய
தாழ்வில் சித்தன் றமனிய வெற்பினு
னூழி யுள்ளவ னோங்குலோ கங்களை
யீழ மாக்குவன் யாருளர் காணவே. (சு)

ஆதி நாத னறிவ னெனச்சொலீஇத்
தோத கம்பல காட்டித் தொகுபுகழ்
மாது மேவு மதுரைத் திருநகர்
வீதி தோறும் வெளிப்பட் டுலாவினன். (எ)

வேறு.

விருத்தரை மைந்த ராக்கி மைந்தரை விருத்த ராக்கிக்
கரப்பெருங் குன்றை யைய கடுகினு ளடக்கிக் காட்டி
யுருத்திக ழம்ப லத்தை விழுங்கிடா வுமிழ்ந்து காட்டி
மரித்தெழுந் திருந்து காட்டி மற்றும்வல் லபங்கள் காட்டி. (அ)

மன்னிய சிறுவர் சூழ்ந்து வரவிளை யாடி யாரு
மின்னருள் சேர்ந்த காந்தன் யாவனென் றதிச யிப்பக்
கன்னிமா தரைம யக்கிக் கடிமனை தொறுங்கு ழப்பித்
தென்னனை மதியா னாகி நடித்தனன் றெய்வச் சித்தன். (கூ)

பொற்பமர் தரங்க வாரிப் புடவியை யடைவிற் காக்கும்
விற்பொலி தடக்கை வேந்தன் வெய்யதன் மனித ராலே
நற்றவன் சரிதை முற்று நாடொறு முரைப்பக் கேட்டு
முற்றிய சீற்றங் கூர்ந்து விட்டனன் முறைசெய் வோரை. (க0)

பொக்கணச் சித்தன் றன்னைப் பொய்செய்து போகா வண்ண
மிக்கணம் பிடித்து வாரு மென்றுமுன் னேவப் போனோ
ரக்கணத் தின்கட் கண்டு பிடித்தனு மகப்ப டாமற்
றக்கர மொக்கச் செப்பித் தப்பினன் வெற்றிச் சித்தன். (கக)

தப்பினன் மற்றோர் ஞான்று சங்கரன் விரும்பி வாழு
மப்பெருங் கோயி லுங்கி யனிலமார் மூலை மன்னு
மொப்பருஞ் சிறப்பின் மிக்க வுத்தமக் களிற்றின் முன்னர்
மெய்ப்பட விருந்தான் வந்து வியன்றிரு நோக்கா னோக்கி. (க௨)

தக்கபே ரால யத்துச் சதுமறை முனிவர் வாழ்த்தச்
சொக்கநா யகனைச் சூழ்ந்து துதிசெய்து தொழுவான் போந்த
திக்கெலாம் புகழு மன்னன் சேருங்கான் முன்னர்க் கண்ட
மிக்கவேத் திரக்க ரத்து வெய்யகஞ் சுகியர் சீறி. (கரு)

பாண்டிய னிறைவன் றன்னைப் பணிகுவா னடைந்தா னீற்றுப்
பூண்டகு முண்டி யேடா போய்விடு போய்வி டென்ன
வாண்டகை கேளான் போல வசைவிலா திருப்ப வங்கட்
டூண்டருந் தூய மேனிப் பாண்டிய வேந்தன் சேர்ந்தான். (கச)

இனியதாண் மலரே றிட்டு முறுவல்கொண் டிருப்பக் கண்ட
வனுபமன் செழியன் மாற னன்னைந்தபே ரிளமை யாலே

தனைநனி மதித்து நீயார் தரித்தெழா திருந்த தேது
நினைவுதா னேது ரேது வல்லதே தென்று ரைத்து. (கரு

ஆங்கது பகர வேடா வணைந்தகா ரியத்தி னோகா
தீங்கிவை யுரைத்த தென்சொல் யாஎலாம் வல்ல சித்த
னோங்கிய வுலக மெல்லா மதித்தவ னுன்ற னக்கென்
பாங்குகா ரியமோ வில்லை யென்றுபற் றற்றி ருந்தான். (கசு)

திறமுறு முனிவீ ரென்னத் திருவிளை யாட றன்னைக்
குறுமறை முனிவ வின்று கூறிய வாறு கேட்டே
மறமலி திறத்து மன்னன் வரமதி யாதி ருந்த
வறமலி சித்தன் பின்னென் செய்தன னறைதி யென்றார். (கஎ)

ஆகத்திருவிருத்தம் - உஎச.

## கச.—கல்லானை கரும்புவாங்கின திருவிளையாடல்.

மன்னு நீள்புகழ் வழுதிகண் டைமைமதி யாமன்
முன்னர் யாவையும் வல்லவன் யானென மொழிந்தான்
பின்னொ ராசையற் றிவன்றிறம் பெரிதறி வோமென்
றுன்னை யொப்பவ ரில்லையோ வுயர்ந்தவ ருலகில். (க

இத்த லத்துய ராக்கினைச் சித்தனு யிருப்பின்
வித்தை தோன்றவிக் கோயிலின் வெஞ்சிலைக் களிற்றுற்
சித்த நன்குறச் செப்பிய வாறுபோ லெனது
கைத்த லத்தமர் கன்னலை வாங்குவி காண்பேம். (உ)

இன்று தானிது தின்றிட வேவினை யாயி
னென்று தாழ்வற வுனக்கியாம் வேண்டுப வளிப்ப
மன்று ளாடிய மாசிலா நாயக னறிய
வென்றி நாதனீ யெமக்கென விளம்பினன் விளங்க. (ங)

வே று.

தென்னன் வார்த்தையைச் சித்தனுங் கேட்டலுந்
தன்னு ளேநகை செய்து சடக்கென
முன்னர் நின்ற முதியகல் லானையைக்
கன்ன றின்னென வேவினன் கண்கொடு. (ச)

அங்க ணேவ வழல்விழித் தஞ்சமண்
டங்கு நீழலைச் சாடிமுன் காட்டுகைப்
பைங்கண் வேழத்தைக் காணுமுன் பாய்மதச்
செங்கண் வேழ மடர்ந்து செறுத்ததால். (ரு)

பத்தி மன்னவன் பாணிக் கரும்பினைப்
புத்தி யாரு நயந்து புகழ்ந்திடச்

சித்த னேவிய தெய்வப் பெருந்திற
லத்தி வாங்கி விரைவி னயின்றதால். (௬)

தந்து மேவிய தாமரை நாளமென்
றிந்து மன்னவ னேகா வலியையும்
வந்து வாங்க மறம்படக் கொல்வமென்
றுந்து வீரர்க ளோவெனச் சென்றனர். (௭)

வாங்கு முன்னர் மணிமுத்த மாலையை
யோங்கு மும்மத நால்வா யுவாமலை
தாங்க ருஞ்சினத் தோடு சடக்கென
வாங்க யின்றிடி யென்ன வதிர்ந்ததால். (௮)

மன்ற லந்தொடை மன்ன னழன்றுளம்
வென்றி சித்தர்க் கழகிது மேம்பட
நன்று நன்றென நாணினன் பேணிமுன்
சென்ற வீரரு நின்று செறுத்தனர். (௯)

அங்க டர்ந்தவர் தம்மை யடர்ந்துமெய்
தங்கு நீற்றினன் சற்று நகைத்துமண்
ணெங்கு மோங்க விமைப்பி லொளித்தனன்
பைங்கண் வேழமும் பண்டைமெய் கொண்டதால். (௧0)

அரச னஞ்சி யதிசயித் தன்புடைப்
பெரிய கோயிற் பெருமான் பணியென
மருவு கோபந் தணிந்து வரையறப்
பரிசி வான்மிசைப் பன்முறை பார்த்தனன். (௧௧)

ஆல யத்து ளணைந்து வணங்கிமுன்
சால வேண்டுப நல்கித் தலத்துநின்
போல யாவர்வல் லாரெனப் போற்றினன்
ஞால மெங்கு நயந்து வியந்ததால். (௧௨)

ஆகத்திருவிருத்தம் - ௨அ௬.

## ௧௫.—சங்கப்பலகைகொடுத்த திருவிளையாடல்.



முன்னமோர் காலஞ் சங்கமண் டபத்து முறைமையி னிருப்பதற் கிசை ந்தே, மின்னிய பனுவற் காரண மாகி விளங்குபே ராசனம் விரும்பிப், பன் னியல் வாணர் கபிலர்நக் கீரர் பரணர்முன் னுகவா லயத்துத், தொன்னெறி யடியார்க் கினியன கொடுக்குஞ் சொக்கனுக் குரைப்பமென் றடைந்தார். ()

தேவர்க டேவே நின்னரு ளிருக்குஞ் செந்தமி ழோர்நெருக் கின்றி
யாவரு மிருக்கச் சிறக்குமோர் தவிசை யீந்தரு ளெனத்தொழு தேத்த

மூவர்க டலைவன் கோணமொத் திலங்கோர் முழத்தினி னொருவரே யிருக்கும்
பாவறி ஞானப் பலகையொன் றளிப்ப வாங்கிய பாவலர் பகர்வார். (உ)

அருளுடை யரசே யாவரு மிருந்திங் காயநீ டாசனம் விரும்ப
வொருவரே யிருக்கு மாசனந் தந்த தென்னையென் றுளந்தளர் காலை
யிருமையி னிலங்கும் புலவரை யறிந்தீ திடந்தரு மிடந்தரு மென்றோர்
பரிவுடை வாக்கு விசும்பிடைத் தோன்றப் பணிந்ததி சயத்தொடும் போந்தார்

வாங்கருந் தெய்வப் பலகையைச் சங்க மண்டபத் திடைநடு விட்டாங்
கோங்கமுன் கீர ரிருந்தனர் பின்ன ருயர்புளோ ரொருவருக் கிருப்ப
வாங்கது வளர்தல் கண்டுநன் கபில ரிருந்தன ரன்பொடு முன்போற்
றூங்குதல் கொடாது வளர்ந்திட விருந்தார் பரணருந் தலமெலா மதிப்ப. (௩)

முற்றிய பயன்க ளுன்கிறல் விளங்கு முத்தமிழ்க் கொத்தியல் வல்ல
மற்றுள சங்கத் தவருமவ் வகையின் வளர்ந்திட வளர்ந்திட நயந்து
நற்றவ னருளின் பெருமையை வாழ்த்தி யிருந்திட நானிலத் தோர்கள்
செற்றம தகல வறிந்திடங் கொடுத்த சித்திரப் பலகையைத் துதித்தார். (௫)

சான்றவர் தேர்ந்து தம்முடைத் தெளிவாற் சயமுறக் கோத்தசெந் தமிழைத்
தோன்றிய சங்க மண்டபத் தின்கட் சோர்வற வைத்துவைத் தேக
வான்றவச் செய்யுள் காலநீ ளத்தா லளவில வாய்த்தலை மயங்கி
வான்றொட வுயர்ந்த வாங்கவர் திரண்டு வந்தனர் மற்றொரு காலம். (௬)

சொல்லருஞ் சொல்லின் றகுதியாற் றம்மிற் றொடர்விடா வழக்கினுண் மலைந்து
வெல்லருந் திறத்தைக் கண்டுநந் தமிழுள் விளக்கமில் லாதனவிட்டு
நல்லன கொள்ளக் கடவமென் றியைந்து நயந்தரு பனுவலா ராய்வா
னெல்லையி லழகார் சங்கமண் டபத்து ளேறினு ருறத்தமை மதித்து. (௭)

வந்தவர் குலைந்து முன்னமே கலைந்து வரையறக் கிடந்தவை யெடுத்து
முந்தவா ராயு மளவிலப் பனுவன் முறைதலை மயங்கலா லழிந்து
சிந்தையா குலத்தோ டென்செய்கே மெனத்தஞ் செழுமுகம் வாடலுங்கருணை
யெந்தைநா யகனும் வந்தனன் றூழா தின்றமிழ்ப் புலவனு யிரங்கி. (௮)

இத்தல மதிக்கக் குற்றமி லெழுத்துச் சொற்பொருள் யாப்பலங் காரக்
கொத்துறு பனுவல் வல்லவர் நீங்கள் குறைவற விருந்திர்செங் கமல
மொத்தநும் முகங்கள் வாடிய தென்னை யுற்றது போக்கலா விருப்பிற்
புத்தியா லளந்து போக்குவம் புகுந்த காரியம் புகலுமி னென்ன. (௯)

முதுகவிப் புலவ மயங்கிய தெமக்கிம் முத்தமிழ்க் கொத்துநீ கோத்து
விதியினி லளிக்க வல்லையே னுறப்பத் தெட்டெனல் விட்டினைக் கூட்டி
யதர்பட நாற்பத் தொன்பது பேரென் றறைந்திடக் கடவமென் றியம்ப
மதியுளான் விரும்பி யிமைப்பினி லுவப்ப வகைப்பட விதிப்படி கோத்தான்.

யாவையுங் கூட்டுங் கடவுளுக் கியம்பி னீதுவுமோர் புதுமையோ மற்றப்
பாவலர் நயந்து சொக்கனே போலும் பழுதற நிறைந்தவா சிரியன்

கேவல னல்ல னம்மினு முயர்ந்தோ னென்றுமுன் கிளர்வுறத் துதித்து
மேவிய வரனைத் தம்மொடுங் கூட்டக் கூடினன் மேதினி வியப்ப. (கக)

ஆங்கிடங் கொடுப்ப விருந்திருந் தமிழ்க ளாய்ந்திடுங் காலையி லொருகாற்
பாங்குறு பொருளின் றகவறி யாமற் பாவலர் மயங்கிடக் கண்டாண்
டோங்கிய பொருணூ லன்பிளைங் கிணையென் றெடுத்தவ ருவப்புறக் காட்டி
வாங்கரு நினைவிற் பிரித்தனனுரைத்தவண்பொருட்கியைந்தவொண்டமிழ்கள்.

நயமுறு பொருட்குப் பொருந்திய தத்த நலந்தரு மிருந்தமிழ் கண்டே
யியலுடை வாணர் மகிழ்ந்ததி சயத்தோ டிவையிவை யொள்ளிய வென்னச்
சயமுறு கீரன் பொறுமையா லங்கண் சாற்றுவா னென்றனித் தமிழிற்
செயிரறு மைந்தாம் பனுவலுக் கொப்புச் செப்புதற் கரிதெனச் செப்ப. ()

வேறு.

நண்ணியவை யிடைவியந்து நவிலுவதே யொருவனெனக்
கண்ணிவியன் றரும்பொருளாற் கனத்ததொரு கவிதைதொடா
வுண்ணிறைந்த புலவீர்கா ளிதன்பொருள்கண் டுரைமினெனப்
பண்ணினொடு முறைசெய்தான் பாவறிந்த நாவலவன். (சச)

எயவழு வின்றியிலங் கிருங்கவிதை கேட்டலுமே
நேயமொடு நிறைந்திருந்தார் நேர்கொடுப்ப வுரையின்றி
யாயுமிய னக்கீர னஞ்ஞானத் தாலதனைத்
தீயதென வுரைசெய்யத் தமிழ்ச்சொக்கன் சிரித்தருளி. (கரு)

என்றுமிவன் பொறுமையுள னென்னுமதிங் கியாரறியார்
வென்றியுளீ ரவன்றனக்கு வேண்டுவன விளம்பிடுக
வொன்றியநங் கவிதைக்கிங் கிவனொழிய வுங்களிலோர்
நன்றியுளார் குற்றமெனிற் குற்றமது நனியென்றான். (கசு)

இத்தகைமை யியம்பக்கேட் டினிமையினு லேனொரு
முத்தரமொன் றுரையாம லிருக்குங்கா லுயர்விசும்பில்
வித்தகரே நும்வழக்கு விடுவிப்பான் காரணமா
வத்தனும்வந் தானுமைப்போல் விடும்விடு மறிவின்மை. (கஎ)

வணங்குமினீர் வணங்குமினீ ரெனமயக்க நீக்கிடுவா
னிணந்தருள்சேர் திருவாக்குத் தோன்றியிட வதிசயித்துக்
குணம்பயில்வோர் பயமெய்திக் கும்பிடுமு னியற்கீரன்
பணிந்தடியேன் செய்தபிழை பொறுத்தியெனப் பழிச்சினனால். (கஅ)

பெருமைதரும் பெயர்மதுரைப் பேரால வாயனென
வுரைசெய்தே யவைநெடுநா ளிருந்தவனவ் வயினொளிப்ப
வருளுடையார் சொக்கனைப்போ லாருளரிங் கெனத்துதித்தார்
பொருளதிகா ரம்பிறங்கிற் றிறையனார் பொருளெனவே. (கக)

ஆகத்திருவிருத்தம் - ௨0௫.

---

## கக.—கிழியறுத்த திருவிளையாடல்.

உன்னரு முன்னோர் கால மோங்கலங் காரத் தோங்கி
மன்னுமா மதுரை தன்னுள் வாழுமோர் வழுதி வான்றோய்
மின்னுமா மதிற்றன் கோயின் மீமிசை விடுத லத்துத்
தந்நிக ரில்லா மாதர் தம்மொடு முலாவுங் காலை. (க)

பேசருந் தகவு டைத்தாய்ப் பேருளங் கவர்வ தாய
நேசமா தேவி வாய்ந்த கூந்தலை நீங்கா தோங்கும்
வாசமா ருதவ சத்தால் வரமன மதிச யித்திவ்
வாசிலா வாசம் பூவோ டியைந்ததோ வன்றோ வென்றான். (உ)

கூரிய வுளத்துட் டோர்ந்து குறிப்பரும் பொருள்பொ திந்து
நேர்சிறப் புடைத்தாய் நந்த நெஞ்சினுக் கியைய வின்றோர்
சீருடைக் கவிதை செய்து வருவரேற் செழும்பு விக்குள்
யாரென வேண்டா விப்பொ னீகுவ லவர்கட் கென்று. (ங)

ஆயிரம் பசும்பொன் கூட்டி யடங்கவோர் கிழியாய்க் கட்டி
மாயிரு ஞாலங் காண மாசிலா சிரியர் வாழுஞ்
சீயவெண் டாளச் செம்பொற் சித்திரத் தூணப் பத்தித்
தூயமண் டபத்து முன்னர்த் தூக்கினன் சிறக்க வாங்கு. (ச)

பீடுடை யுணர்வான் மிக்கோர் பிஞ்ஞகன் சமாதி யாலே
நாடிய பொருடே ராம னல்லன தமக்கி யைந்த
பாடிய கவிதை கொண்டு பார்த்திவன் றிருமுன் னேறிக்
கூடிய மகிழ்ச்சி யோடுங் கூறினர் தேறி யாங்கு. (ரு)

காவலன் றனக்கி யைந்த கவியதிற் காணா னாகி
யாவிநன் குருகி ருப்ப வருங்கிழி கருதி வந்த
நாவலர் சோக மெய்திப் போயினர் நானி லத்துள்
யாவருங் காண முன்போற் றூங்கிய தியைந்த பொன்னும். (சு)

ஆங்கது தூங்க விப்பா லருள்புனை சிவனை நாளு
நீங்கலி லாமல் வாழுஞ் சிவமுனி புதல்வ னீதி
யோங்கிய தூய்மை வாய்மை யொழுக்கநல் விழுப்ப மிக்கோன்
றூங்கரும் பத்தி யுள்ளோ னுமமுந் தருமி யென்போன். (எ)

தந்தைவா னுலகத் தேகத் தளர்ந்துநல் குரவா னைந்து
சுந்தரன் கோயில் புக்குச் சொல்லுவான் மெல்ல நல்ல
வெந்தையே கந்தர் தந்தா யிளைத்தனின் பொருளோ வில்லை
மைந்தனுண் டாக வென்னை மன்றல்செய் வித்தல் வேண்டும். (அ)

தாதையுந் தாயு முற்ற சுற்றமுந் தனமு மற்றும்
வேதனை வினையி னேற்கு நீயலால் வேறு முண்டோ
கோதிலா மரபின் வந்த குலந்தலை யழியு மோவென்
றூதிநா யகன்றன் பாதத் தழுதுவீழ்ந் தினைய சொன்னான். (கக)

வழுத்திய மறையோன் றன்மை கண்டவன் மனத்தி னைசை
யொழித்திடு வான்வி ரும்பி யுரகமா ணிக்கச் செம்பொற்
குழைக்கிளை காத னங்கட் கொங்குதேர் வாழ்க்கை யென்றோர்
இழிக்கிசை கவிதை பாடிக் கொடுத்தனன் கீர்த்தி வேட்டு. (௧௦)

பொருவருங் கவிதை யேட்டைப் போற்றிமுன் கொடுபோய் வாய்மை
யுரியவ ரவைமுன் காட்டி யோங்கிய நீவி தைக்கொ
டருமிகேள் பொருது மற்றுச் சாற்றிய மாற்ற முண்டேல்
விரைவின்வந் துரைமண் மெச்ச வெல்வதற் கைய மின்றே. (கக)

துன்புற லென்று வெய்ய துயரொழித் திணைய சொல்லி
யன்பொடும் விடைகொ டுப்ப வாங்கவ னீங்கி நீங்கா
வின்புறு மனத்தி னோடு மெய்திநீ டவையிற் காட்ட
நன்புளோர் வியந்தா ரில்லை தம்முளே நனிந யந்தார். (கஉ)

தெரியவோ ருரைகொ டாமற் செழுங்கவி கொடுப்ப வாங்கி
யரசன்முன் செல்வ லென்றே செல்லுங்கா லறிஞர் கண்டு
விரைவொடுஞ் சென்றார் சென்ற வேதியன் காட்டக் கண்டு
பரவிய மன்ன னுள்ளப் பான்மையார் பகர வல்லார். (கங)

வேறு.

நவையின் றிநயந் தபொருட் கியையச்
சுவைதந் திடுமெல் லியசொற் கணிணேந்
தெவர்சொன் னவரிக் கவியின் றினிதா
வவர்கொள் ளுகவக் கனகக் கிழியால். (கச)

பரிவொன் றியவென் றிகொள்பா வலர்நீ
ரிருளொன் றியதுங் களிடத் தடைவே
விரைவின் கனடந் திடுமென் றுவிடுத்
தரவந் தருகோ யிலடைந் தனனே. (கரு)

மிகவின் புறுநெஞ் சுடைவே தியனுந்
தகுசங் கமடைந் துதனக் கிழியைப்
பகைவென் றனமென் றுபகர்ந் தொழியா
நகைகொண் டுகவர்ந் திடுவா னணுக. (கசு)

வேறு.

பொற்புறு மவனைக் கண்டு பொறுமையா லிருந்த கீரன்
சொற்பெரு ளறியாப் பார்ப்பா னீயிதைச் சொல்லித் தந்த
நற்கவிப் புலவன் றன்னைக் கொண்டுவா நாடி யுன்றன்
முற்கவி தைக்குக் குற்ற முண்டுபோ வெனமு னிந்தான். (கஎ)

ஊழுடை முனிவன் வாடி யொல்லையா லயத்து நண்ணி
யாழிநஞ் சுண்ண வல்லீ ரறிஞர்க ளுமது நல்ல
சூழிசைக் கவிக்குக் குற்ற முண்டென்றார் சொலவல் லீரேற்
றூழ்வறச் சொல்லி யன்றோ வென்கையிற் றருவீ ரென்றான். (கஅ)

ஈசனுங் கற்றுச் சொல்வோர் பின்வர விகலிற் கூடித்
தேசுடைச் சட்டை சாத்தித் திருமுடிச் சாத்துஞ் சாத்தி
யாசிலா மலர்க்க ரத்தி லாழிகள் செறித்தி லங்க
மாசிலாப் புலவர் தேத்து வந்தனன் புலவ னாகி. (கக)

வருந்திநான் முகன்மா றேட வளர்ந்தழற் பிழம்பாய் நின்றா
னெருங்கிநீர் மண்ணும் விண்ணு மெங்கணு நிரம்பி நின்றா
னரும்பொரு டரும்பே ரண்டத் தப்புறத் தப்பா னின்றா
னிருந்தமிழ்ச் சங்கத் தின்கீழ் நின்றன னெவருங் காண. (உ0)

மன்னுமிச் சங்கத் தேறி யிருந்தவர் தம்முள் வாளா
வென்னுடைக் கவிக்குக் குற்றஞ் சொன்னவன் யாவ னேடா
முன்னுறச் சொன்மி னென்ன முத்தமிழ்க் கீரன் கண்டு
நன்னெறிப் புலவ குற்றஞ் சொன்னவ னான்கா ணென்றான். (உக)

வேறு.

அங்கங் குலுங்க வரிவாளி னெய்யென்றோர்
பங்கக் கவிதை பரமன் சொலவிளிந்து
சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிராற் கேதென்றோர்
துங்க முறுங்கவிதை சொன்னா னெதிர்துணிந்து. (உஉ)

வேறு.

இயற்சிவ னவைக்குண் மிக்க விருங்கவி வாணர் முன்னே
யியற்றமிழ்க் கவிதைக் குற்ற மெங்ஙனே கவிறி யென்னச்
செயற்கருங் கூந்த றானுஞ் சிக்குமே னாறு மேமுன்
செயற்குறித் தான செய்யா விடினெனச் செப்பி னான்முன். (உ௩)

மற்றது சொல்லக் கேட்டே வானுறு தெய்வ மாதர்
கற்றையங் குழற்கு மொக்கு மேயெனக் கடவுள் கேட்பச்
செற்றிநெய்த் திரண்டு நீண்டு நீண்டதற் கரிய தான
வற்றருங் குழற்குஞ் செய்கை யலாதில்லை யியற்கை யென்றான். (உச)

மொழியறி யாத வெய்ய மூர்க்கநீ யென்ன சொன்னா
யெழுதரி தாய கோலத் தியைந்தநங் கவுரி தன்பே
ரழகமர் கூந்த றானு மப்படி யேயோ வென்னப்
பிழையிலை யென்று கீரன் முன்னுளா பின்னுஞ் சொன்னான். (உ௫)

கண்டது நெடும்பே ரண்டங் கண்டவோ திமங்கா ணாத
விண்டருங் கங்கை தோய்ந்த விரைமுடிச் சடிலங் காட்டத்

தண்டமிழ் வல்ல வென்னைச் சடைகொடு வெருட்டல் வேண்டா
மண்டல மறியு மென்றான் வல்வினை வசத்தாற் கீரன். (உசு)

தீயவெம் புரங்க டந்த சேவகன் சிறிது சீறிக்
காய்தழ னெற்றிக் கண்ணைக் காட்டமுன் கனன்று வேவா
னேயெனச் சுற்று முற்று மெங்கணு நெருப்புக் கண்ணே
யாயினுங் குற்றங் குற்ற மென்றன னஞ்சா னாகி. (உஎ)

அன்னிய ரொருவர்க் கஞ்சே னஞ்சுவ னிணக்கே யென்று
பின்னரு முரைப்ப வெந்தை திகைத்தவன் பேச்சைக் கண்டு
நன்னெறி வழக்கே காணாய் நன்கிலா விகலை விட்டிங்
குன்னருங் கவுரி கூந்தற் கொக்குமே மற்றோர் கூந்தல். (உஅ)

வளர்தரு மடநாண் முன்னா வருங்குண நித்த மாபோ
லுளங்கவ ரிருள்வா சந்தே சுரியன நித்த மாகுந்
தெளிந்தறிந் திலையோ பேதாய் சிற்புட்ப கேசி யென்று
குளிர்ந்தமா மறைக ளன்குங் கூப்பிடு கின்ற வாறு. (உகூ)

இன்னபூ வாச கேசி தன்னையா ரறியா ரென்னப்
பின்னொருத் தரமு மின்றிப் பேரழற் கண்ணால் வெந்து
தன்னுளே பரித வித்துத் தண்ணினீர் வேட்டுக் கூப்பிட்
டன்னமார் வாவி யிற்போய் வீழ்ந்தன னற்றா னாகி. (௩0)

காமனைக் காய்ந்த கண்ணன் காலனைப் பாய்ந்த காலன்
பாமறைக் கெய்தா மெய்யன் பாவலர் காண நின்று
நாமறச் சொன்ன செற்ற நற்றமிழ்ப் புலவ னைப்பொற்
றாமரைத் தடத்துட் போகக் கண்டனன் றமிழ்க்கி ரங்கி. (௩க)

பார்தளஞ் சடில முக்கட் பாவல னொளிப்பக் கண்டு
சூழ்ந்தவர் சொக்கன் றன்முன் சொல்லியார் வெல்வா ரென்றே
யேந்தி சயத்தோ டஞ்சி யேத்தினர் குணலை கொள்ளா
வாழ்ந்தனன் முனிவன் றூங்கும் பூங்கிழி வாய்த்த தென்றே. (௩உ)

விளைவொடுஞ் சென்றி யாரும் வியப்பகன் கிழிய றுத்துப்
பரமனை யடைந்து வாழ்த்திப் போந்துதன் பண்பிற் கொத்த
திருவினு முருவ மிக்க தேவியை மணந்து ஞாலம்
பரவவாழ்ந் திருந்தா னூழி பழுதறு சிறுவர்ப் பெற்றே. (௩௩)

வேறு.

திருந்திருக் குளத்தர்தந் தெள்ளு நீற்றொளி
தருந்திருக் குளத்தெழுந் தழல்சு டத்திரை
பொருந்திருக் குளத்துறு புனலிற் போய்விழும்
பெருந்திருக் குளத்துளான் பின்னுனன் செய்தனன். (௩௪)

ஆகத்திருவிருத்தம் - ௩௩௪.

## ௪௪.—நக்கீரனைக் கரையேற்றின திருவிளையாடல்.

இன்ப நாவல ரிடர்படு கீரனுக் கிரங்கி
யன்பர் தம்பிழை பொறுப்பவர்க் கறைகுவ மென்றே
துன்ப நெஞ்சொடுந் தொல்லையா லயத்தணைந் தலகி
னன்பு கூர்தமிழ் நலமுற நவின்றுமுன் றுதித்தார். (௧)

தூய்ய கீரன்முற் சூழ்வினை யாலறி யாமை
மையல் கொண்டுநின் முன்சில வார்த்தைக ணவின்றா
னைய னையருள் வாரியே யருந்தமி ழரசே
தையல் பாகனே பொறுத்தரு டடியனை வேண்டி. (௨)

ககன மீதுதோய் கொடுமுடிக் கயிலைகா ளத்தி
யகில மீதுபே ரன்புடைப் பதியென வறிந்தே
முகைகொ டாமரைத் தடத்திடை மொய்ம்பறக் கிடந்து
சகமெ லாம்புகழ் தருமொரந் தாதியு முரைத்தான். (௩)

ஓங்கு பேரரு ளங்கயற் கண்ணிதன் னுடனே
யாங்கு சென்றடைந் தருந்தமிழ்ப் பெருந்துதி கேட்டுத்
தீங்கி லாதநின் செழுமலர்த் திருக்கரங் கொடுத்தே
பாங்கர் நீள்கரை யேற்றெனப் பகர்ந்தனர் பழிச்சி. (௪)

வேறு.

ஆங்கவர் பணியத் திருவுளத் திரங்கி யங்கணை யொடுமெட வன்னந், தூங்கலர் வாவிக் கரையடைந் திருந்து சொல்லெனுஞ் செழுந்தமிழ் கேட்டுப், பாங்குடை யுளஞ்சேர் நிறைவொடு நீங்காப் பரிவொடு முறுவல்கூர்ந் திமைப்பிற், றுங்குதல் கொடாது மலர்க்கரங் கொடுத்துத் தடத்தினின் றெடுத்தினி தெடுத்தான். (௫)

மாலய னறியா வடிவமுங் காட்டி வன்னிவெந் துயரமு மொழித்து
ஞாலமேழ் புகழுஞ் சான்றவ ருடனே நணுகுதி நாவலர் தம்முட்
சாலவு நல்லே மசைவிலா மனஞ்சேர் தண்டமிழ்ப் பாவல வென்றாங்
கேலவார் குழலி தன்னொடு மறைந்தா னடியவர்க் கெளியவெம் பெருமான். ()

சேணுளார் போற்றப் பெற்றநக் கீரன் றிருவருட் பெருமைகண் டன்பிற், பூணவா லயத்துச் சென்றடி பரவிப் போவதங் கில்லென நிற்ப, நீணெறி யறிஞ ரரியதாள் வருந்த நிற்பதே யிருப்பதாய்க் கடையேந், தாணுவே யென்று பன்முறை பணிந்து போயினர் சங்கமண் டபத்து. (௭)

ஆகத்திருவிருத்தம் - ௩௪௬.

# கஅ.—குறுமுனிக்குத் தமிழுரைத்த திருவிளையாடல்.



சோதிசேர் கடவு ளானுந் தொண்டுசெய் கீரற் கண்டான்
போதுசொல் லிலக்க ணங்கள் குறையுமொண் கவியுங் குன்று
மாதலா லாங்கா ரித்தே யறிஞரை யிகழா நின்றான்
போதமார் செய்ய வல்லா ரென்றலும் பொருப்பின் பாவை. (க)

அண்ணலே யடியேன் முன்ன மறிந்ததோர் கதையுண் டன்பிற்
கண்ணுறு செவியு நெஞ்சுங் களிதரு வதுகே ளண்ணில்
பண்ணுறு கின்ன ராதி பரவயாம் பரிந்து வெள்ளி
விண்ணுறு கயிலை யந்தண் வெற்பகத் திருக்கு நாளில். (உ)

வேறு.

வாய்ந்தபுவி வடகிழக்குத் தாழ்ந்து தென்றல் வரைபயிறென் மேற்குயர வானோர் மண்ணோர், தேர்ந்தவிரு டிகளியக்கர் சித்தர் நாகர் சேர்ந்தபய மென்றுபய மெய்திப் போற்றித், தாழ்ந்ததல மொத்திருப்பா னின்போ லாக்கிச் சங்கரா வொருவரையங் கேவி டென்ன, வாய்ந்தவர்கள் பயங்கண்டு கருணை கூர்ந்து னருட்கமல மலர்க்கரத்தா லஞ்ச லென்றே. (௩)

எண்ணரிய தொகுதியெலா நிற்ப நின்போ லியலொப்ப வகத்தியனைத் திருக்கண் சாத்திப், புண்ணியமா முனிவரநம் போல நீயப் புவிமேலை யுயரா மற் போகித் தென்றல், விண்ணிவரு மலயத்தி லிருத்தி யென்று விளம்புங் கா லுளங்குளிர்ந்து விண்ணோர் முன்னாக், கண்ணுதலே யருட்கடலே யருள்பு ரிந்த காரியநன் றென்றுகழல் வணங்கி னரால். (௪)

ஆதரஞ்சேர் குறுமுனியு மெனையொன் றாக்கி யருள்செய்தா யருள்செய்த படியே செய்வ, லோதருந்தென் பூமிதமிழ்ப் பூமி யென்பா ரொண்டமிழிற் குரியவெலா மடிமைக் கிங்கே, போதமுற வறிவித்தல் வேண்டு மென்று போற்றுங்கா லெழுத்துச்சொற் பொருண்முன் னான, நீதியுடைச் சூத்திரங்களறியும் வண்ண நெறியின்க ணறிவித்தாய் நேசங் கூர்ந்தே. (௫)

நற்றமிழ்நூற் கருத்தினைநாம் விரும்பி வாழு நன்கடம்ப வனத்துனக்கு நவில்கின் றேமென், றுற்றமுனிக் கினையதனித் தருளிச் செய்தாண் டுவகையொடும் விடைகொடுத்தா யென்றி றைஞ்சப், பொற்றவது தனைக்கேட்ட பத்தர் பத்தன் புகழ்க்கினியா னயந்துவியந் தொக்கு மொக்கு, மற்றுநிக ரொவ்வாத மடமா தேயான் மறந்தனனீ நினைந்திருந்தாய் வழக்கு நன்றே. (௬)

தென்மலயக் குறுமுனியை யொழிய மண்ணிற் செழுந்தமிழ்க்கொத் தறிவிக்க வல்லா ரில்லை, மன்னியகீ ரனுக்கவன்ற னாலே யின்று வண்டமிழ்நூ னின்றவிக்கத் தகுவ தென்று, முன்னுமுணர் வுண்டாகத் தான்மெய்ஞ் ஞான வுபதேசந் திருநோக்கா லுபதேசித்தாண், டன்னவனை நயந்தழைப் பத் தாழா தெய்தி யருமறைநூல் விதியின்மல ரடியில் வீழ்ந்தான். (௭)

வந்தனைசெய் தருந்தமிழ்ச்சூத் திரம்போ தித்தென் மனமயக்க முள்ள வற்றை மாற்றி டென்ன, வெந்தைபிரான் மதுரைப்பே ரால வாயா னிரங்கி யிரு செவிப்புலனு நிறையும் வண்ணம், புந்தியுள வகத்தியமா முனியே நல்ல போதமுறக் கீரனுக்கிவ் வுபதே சத்தைச், சிந்தையுற நாமுரைத்த படியே நீயுஞ் செப்புகெனத் திருநோக்கா லுபதே சித்தான். (அ)

பார்வையினு லுபதேசஞ் செய்த பின்னர்ப் பண்டையினு மிக்கவறி வுடையோ னாகிப், பூரணனு யடிதொழுது நின்று மிக்க போதமுறக் கீரனுக் கவ் வுபதே சத்தைச், சீர்மையொடு முபதேசஞ் செய்யக் கண்டு திருவுள்ள மிசமகிழ்ந்து பரிசஞ் செய்தே, யார்வமொடும் விடைதரமெய்க் குருவா மெந்தை யடிபரவி மலயகிரி யடைந்தா னன்றே. (கூ)

வே று.

மன்னு மன்னுழை போய பின்னர் வணங்கி யாதர மாதரான்
முன்ன மேவிய கீர னுக்குப தேசி யேனென முதல்வநீ
சொன்ன தென்னையெ னத்தி ருந்திய தூய்மை மேவிய வாய்மையா
னன்ன மேயது கேளெ னக்கடி தன்பி னோடருள் செய்குவான். (௧0)

அரிய வொண்பொரு ளீப வர்க்கடி மைத்தி றம்புரி வோர்களுக்
குருகு நெஞ்சுள வர்க்கி தந்தரு முட்பொ ருமையி லாதவர்க்
கிருட ரும்பொய்க டிந்த வர்க்கிக ழாத வர்க்கரு ளேதருங்
குருவி னுள்ளம றிந்த வர்க்குப தேச மீகைகு ணந்தரும். (௧௧)

இக்கு ணங்களி லாத வர்க்குப தேச மீகைதீகா துகாண்
மிக்க கீர னயந்து தன்னைவி யந்து நானெனு மேன்மையா
னக்க ரம்பிறர் கண்பொ ருதவ னுதை லாலவ னுக்குநாந்
தக்க வித்தைகொ டுத்தி லேமென வொக்கு மென்றன டையலும். (௧௨)

இனிமை கூர்தரு நூலி னுக்கிய லேய முன்னுற நின்றபின்
றனையொ வானுரை செய்த செய்யுளுந் தானு ரைத்தத மிழ்க்களு
நினையு நீதியை யாழ்ந்து கண்டுதெ ளிடு செய்யுளை நிந்தியா
மனந லானுரை செய்த செய்யுளை வாழ்த்தி னுனிரு ணீக்கினன். (௧௩)

தென்ற மிழ்க்குரு வெந்தை கண்டுசி ரித்து நல்லது ரைத்துமுன்
னின்று சங்கம தெய்தி டென்ன நிறைந்து சங்கம தெய்தியே
தன்றி ருக்கசுல் வித்தல் செய்தத மிழ்க்கண் மெல்லவி ரித்தன
னின்ற நாவலர் கண்டு மாசறு நேச வீசனை வாழ்த்தினர். (௧௪)

ஆகத்திருவிருத்தம் - ௩௬0.

---

## கசு.—ஊமை தமிழறிந்த திருவிளையாடல்.[1]

அறிபவ னெங்கு முள்ளா னுலவா யமுத வாக்க
னிறையவன் முன்னஞ் சொன்ன விரும்பொருட் சூத்தி ரத்திற்
குறுமுறை யெழுதித் தத்த மூரையிளை வியங்தோர் கால
மறுவறு கவிதைச் சான்றோர் மலைந்தனர் மாறு பட்டே. (க)

சொல்லுநம் முரைய னைத்துஞ் சோர்வற நன்னா லெல்லாம்
வல்லவன் றிருமுன் சொன்னான் மகிழ்ந்தவ னிவற்றுட் டேர்ந்து
நல்லதென் றுரைத்த தொன்றை நயந்திடக் கடவ மற்றைப்
புல்லிய வுரையை விட்டென் றனைவரும் பொருந்தி னூரால். (உ)

ஆங்குய ரால யத்து ளஞ்சலி செய்து சென்று
பூங்கம லத்தா ளேத்திப் புலவகே ளிவற்று ளாராய்ந்
தீங்குரை நல்ல தொன்றை யருளுதி யெமக்கென் றியாரு
மோங்கமுன் றமு ரைத்த வுரையுரை யாவு ரைத்தார். (ங)

தென்றமிழ்ப் புலவ னாகிச் சேர்ந்தியல் வாண ரின்று
நன்றுநீர் நவின்ற திவ்வூர் நம்முடைப் பத்த னாகி
யொன்றிய வணிக னுப்பூர் கிழார்மக னூமன் பாலன்
றன்றிற முரைப்பின் வென்றிச் சரவண குகனே யாகும். (ச)

ஊமையின் ஞானி நாம முருத்திர சன்ம னென்போ
னவையிலா வுரைய னைத்து மவன்றன்மு னவின்று லொன்றை
யவையிடைக் கைக்கொண் டானே லஃதுரை யைய மில்லை
கவலுற வேண்டா வென்னக் கண்டவர் தொண்டிற் போற்றி. (ரு)

தோன்றுநாட் டொடங்கி யூமன் சொற்றர வலனே வென்ன
வேன்றசெந் தமிழ்தேர் செட்டிக் கியாதொரு செய்யுள் கேட்டாற்
றோன்றிய புளக மெய்யுந் துளிபடு கண்ணு முண்டோ
வான்றவச் செய்யுள் செய்யு ளல்லது செய்யு ளன்றே. (சு)

ஒருவரு மிகல வேண்டா வொத்துநம் மிடத்தி ருத்தி
வரனுறக் கேண்மி னென்றே மறைந்திட மலைதல் விட்டிங்
கிருவரு மறியா வெந்தை யிலங்கிட நம்போல் வந்து
பரிவொடும் பகரப் பெற்றேம் பகர்ந்ததே செய்வ மென்றார். (எ)

பத்தியிற் போந்து தெய்வப் பாவறி மண்ட பத்துச்
சித்திசேர் மூங்கை தன்னைச் சிறப்பொடு மழைத்துச் சிங்கச்
சுத்தமார் தவிசி னேற்றித் தூபதீ பாதி நல்கி
யொத்துமுன் றமு ரைத்த வுரையெலா முரைத்தா ரோங்க. (அ)

வேறு.

வளமுறு கீரன் றனைபுகழ் கபிலன் மாசறு பரணனிம் மூவர்
தளர்வறு முறையைக் கேட்டலு மூங்கை தணிவரு பெருவிருப் பெய்திப்
புளகித மெய்யுந் துளிபடு கண்ணும் பொருந்தல்கண் டதிசயித் தியாரு [டார்.
முளம்வரும்பொருளிப் பொருள்கடாமென்றே யொப்பரு மப்பொருள்கொண்

தலமிசை யெங்கும் விரித்தியற் சொக்கன் றகைமையை மிகமிக வாழ்த்தி
யலகிலா ஆழி யிருந்தன ரிருந்த வருந்தமிழ்ச் செட்டியாஞ் செட்டி
யிலகிய மயின்மீ தறுமுகத் தோடு மினியபன் னிருகரத் தோடும்
புலவர்கண் டிறைஞ்ச வருளினால் விளங்கிப் போயினான் சாபமு நீங்கி. (௪0)

ஆகத்திருவிருத்தம் - ௩௭0.

## ௨0.—இடைக்காடன்பின் போன திருவிளையாடல்.

முன்னமோர் நாளான் மாட மதுரையின் முழுது ணர்ந்தோன்
பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக் காட னென்போ
னின்னியல் வானார்க் கெல்லா மிதவியோன் கவியான் மிக்கோன்
றென்னனைக் கவிதை பாடிக் கண்டனன் சிறப்பி னெய்தி. (௧)

நன்கவி கேட்ட வேந்த னுனெனு மதத்தாற் போவென்
றன்புசெய் யாமற் றள்ள வாங்கவன் கண்டு நாணி
முன்பொருத் தரமுஞ் சொல்லான் முற்றிய துயரிற் போந்தின்
றென்பொலா மணிக்குச் சொல்வ லென்றிறை கோயில் புக்கான். (௨)

மன்னிய சொல்லுன் மாது மாசறு பொருணீ யுண்மை
யென்னநின் றாற்றும் வேத மாதலா லெனையோ வல்ல
வன்னமா ராய வொண்ணு வாலவா யமுதே தென்ன
னின்னையு நின்னை நீங்கா மின்னையு நிந்தை செய்தான். (௩)

தக்கதோ வெனத்து தித்துத் தனித்துனைத் தேகக் கண்ட
சொக்கநா யகன்மா தோடுந் துண்ணென நடுக்க முற்று
மிக்கமா நிலனுஞ் செம்பொன் மேருமால் வரையு மற்றெண்
டிக்கும்வா னகமு நோவ நொந்திரு செவிபு தைத்தான். (௪)

தொழுதுபோ மிடைக்கா டற்குந் தோழனுங் கபில னுக்கு
மெழினலங் கூர யாமு மெய்துவ மின்றே டென்று
செழுமதில் வடபால் வையைத் திருநதித் தென்பான் மேவப்
பழுதறு சங்கத் தாரு மேவினார் பாதம் போற்றி. (௫)

மறுவறு முனிவர் வானோர் வணங்கியின் னருளை வாழ்த்திக்
குறைவறு சங்கத் தோடுங் கூடியாங் கிருப்ப விப்பா

னெறிபட வணங்குந் தொண்டர் நேர்படப் புலரு முன்ன
மிறைவனைத் தொழுவான் வந்தார் கண்டிலர் திகைத்தா ரேங்கி. (சு)

மண்மிசைப் புரண்டார் வீழ்ந்தார் மயங்கினார் முகத்த றைந்தார்
கண்ணினீர் சோர வாய்விட் டலறினார் கைவி திர்த்தா
ரண்ணலே யெங்கொ ளித்தா யரசனீ தறிந்தா லென்னா
மெண்ணமொன் றிலாம லந்தோ விளைந்ததே யென்னோ குற்றம். (எ)

அவனிவேந் தற்குத் தாழா தறைகுவ மென்று சென்று
தவமுடை வேந்தே நந்த மாலவாய்த் தரும மூர்த்தி
புவிபுகழ் கோயில் விட்டுப் போய்நதிக் கரையி லேறிக்
கவிமன ரோடு மங்க ணிருக்கின்றான் கண்டா யென்றார். (அ)

செப்பிய மாற்றங் கேட்ட தென்னன்மெய்ந் நடுங்கி வீழா
மெய்ப்படு பயத்தி னோடு மேதகு மாதி னோடு
மொப்பரு மமைச்ச ரோடு மொல்லைகா னடையிற் சென்றிங்
கிப்படி போதற் கென்னோ குற்றமென் றிறைஞ்சி வீழ்ந்தான். (கூ)

நெஞ்சம்வே றாகி மால்போ னின்றுகண் ணருவி சோர
வஞ்சியுந் தானும் வாழ்த்த வானவர் துதிக்கு மேலோன்
பஞ்சவு னெனக்குனைப்போற் பத்தர்க ளில்லை யிந்த
மிஞ்சிய தலமுங் கிஞ்சில் விருப்புடைத் தலமே யாகும். (க0)

நின்னொடு செற்ற மில்லை நெறிதர வெனையந் தாதி
சொன்னவன் கபிலன் றோழன் சொல்லிய கவிதை சற்று
மன்னிய பொருளாற் சொல்லால் வழுவிலா திருப்ப வோரா
தின்னுடை மதத்தாற் றள்ளி யோட்டிய தென்னை நென்னல். (கக)

கல்வியிற் சிறந்தி ருப்பக் காரண மின்றிக் குற்றம்
புல்லர்போ லுரைத்தா யின்று போதுமோ வுனக்கெ னக்கு
நல்லவன் வந்து சொல்ல நமக்குநம் புடைமா துக்குஞ்
சொல்லிட வரிது நேர்ந்த தென்றலுஞ் சோர்ந்து வேந்தன். (கஉ)

என்னறி வின்மை தன்னை யெந்தையே பொறுத்தி யென்று
மின்னொடு பின்னுந் தாளில் விழப்பிழை பொறுப்போ னீறி
யின்னியல் வாண ரோடு மின்றிடைக் காட னோடு
மன்னவ வருவல் போவென் றரசனை விடுத்தான் வாழ்த்தி. (கங)

சேர்ந்தநன் புலவ னோடுந் தென்திரு வால வாயிற்
சார்ந்தநா வலர்களோடுஞ் சார்ந்தனன் றலந்து திப்ப
வாய்ந்தவத் தலத்தி னுமம் வடதிரு வால வாயென்
றோர்ந்தது கண்ட தொண்ட ராடினார் பாடி னூரால். (கச)

பொன்முடி மன்னன் வந்து பொருந்திடைக் காடற் போற்றி
யென்னையா ளுடையா னின்பி னெய்தின னென்று முன்னர்ப்
பன்னிய தமிழ்கொண் டோடைப் பருப்பதத் தெருத்தத் தேற்றி
மன்னவ ரென்ன வாழ்வித் தருளினன் வரிசை கூர. (கரு)

ஆகத்திருவிருத்தம் - ௩அரு.

## உக.—கடல்சுவற வேலெறிந்த திருவிளையாடல்.

பார்மிசையின் முன்னொருகாற் பழமதுரை தனைநாடி
வாரிதிகொள் வானொலித்து வளைபுளையுந் திளையெடுத்துச்
சேர்வதுகண் டமரருமற் றேனோருந் தெருமரலுற்
றோரிடமுங் கிடையாதெங் கொளிப்பமெனத் துதித்தனரால். (க)

விழுமியபே ரருட்சொக்கன் மெய்ஞ்ஞான விழியாற்கண்
டழையின்மல ரணைத்துயிலு முலகாண்மன் னனைக்குறுகித்
தொழுகழலுக் கிரச்செழிய துயிலுணர்தி துயிலுண ()
பழமதுளை தனைக்கொள்வா னெழுந்ததுநீர் பரந்தகடல. (உ)

தேமளித்த நாவல்பயி றென்புலத்தோர் தமக்கெல்லா
நாமளித்த வேலையற நாமளித்த வேலையெறி
நீமனத்துச் சலியாது நின்றெதிர்சென் றெனக்கனவிற்
காமுறத்தான் மதியுளைத்துக் கங்குற்க ணொளித்தனனால். (௩)

இக்கனவு காண்டலுமே யிரும்பரவை விடிவதன்முன்
னுக்கிரமாய் நனிவரக்கண் டுக்கிரவேல் விறற்செழியன்
மிக்ககன வமைச்சருடன் விளம்புங்காற் சிவனேநின்
றக்கதிரு வுளத்திருந்து செலுத்துகின்றான் றவறறவே. (௪)

உந்தையருள் செய்ததுசெய் தருளுலக முடியாம
லந்தமதின் றெனக்கேட்டுத் தாழாதஞ் சலித்தெழுந்து
சுந்தரனை நினைந்துதனி வேல்வாங்கித் துணிவொடுசென்
றுந்திவரும் பெருங்கடலு ணடுவெறிந்தா னுலகுய்ய. (ரு)

வென்றிபடச் சிவந்தெறியக் கருங்கடல்வெவ் வலிதொலைந்து
முன்றெறுமம் புடைந்துபங்கப் பட்டலறி மோதிவிழா
நின்றவடி வடிம்பலம்ப நின்றதுகண் டேனோரு
மின்றிதுகண் டனம்புதுமை யெனப்பயம்விட் டெழத்துதித்தார். (சு)

மாலைமுடி யோன்வேலை வடிமபலம்ப நின்றதனால்
வேலைவடிம் பலம்பநின்ற னென்றெங்கும் விளங்கியதா

லாலவாய் நகரான்போ லருளுடைய கடவுளர்யார்
ஞாலமிசை வானமிசை யெனத்துதித்தார் நாவலர்கள். (எ)

கடல்வலிய சத்திவிடச் சத்திவிட்ட காவலற்குப்
புடவிபரி வுறவேண்டும் வரங்கொடுத்துப் புதுமைபட
வடைவுடனேங் கியசங்க மண்டபமு மமைத்தூழி
தடமுடைநா வலர்போற்றத் தமிழ்ச்சொக்க னினிதிருந்தான். (அ)

வேறு.

மனத்தின்பம் பயக்கும்பொன் மதிட்டங்குந் தமிழ்க்கூடற்
றனித்தென்றுஞ் சிறக்குந்தண் டமிழ்ச்சங்கந் தனைப்பண்பி
னினைக்குங்கண் முதற்சங்கம் மிடைச்சங்கந் நிலைத்தாகு
மினிச்சங்கம் புனற்கங்கைக் கரைப்பங்கின் புறத்தென்ப. (கூ)

ஆகத்திருவிருத்தம் - ருகூச.

## உஉ.—வலைவீசின திருவிளையாடல்.



அருளாருந் திருமதுரை யாலவா யியற்சொக்கன்
பரிவாக முன்னொருகாற் பரபோக முத்திதரும்
பொருளாரு மாகமங்கள் பொருப்பரையன் றவப்பயனுந்
திருவான வுமைகேட்பச் செழுந்திருவாய் மலர்ந்தனனால். (க)

கேட்டருளுங் காலையினக் கிளிமொழியாள் பெருவிருப்பு
வாட்டமுற வெகுண்டுநனி கேட்டவரை மடமாதே
நாட்டமுற நினக்கிங்கு நாமுரைத்த வரும்பொருளை
மீட்டுரையாய் கேட்டபடி காண்பமென விளம்பினனால். (உ)

பிடிநடையா ளுடனடுங்கிப் பெரிதஞ்சி யடியிறைஞ்சி
யடியவர்கட் கெளியானே யரியயர்கட் கரியானே
மடமகல விரித்துரைத்த மாசறுபே ரரும்பொருளின்
புடையைமறந் தனன்சிறியே னறிவின்மை பொறுத்தியென. (ங)

வேறு.

வெறிகமழ் சடிலச் சொக்கன் விடுவிடுன் ஞங்கா ரத்தா
லறியநா நவின்ற நூலை யவமதி செய்தாய் வேலைத்
துறைபயின் மீனம் வீசுந் தொழிலுடை வலைஞர் பொல்லா
மறமலி யிழிகு லத்து வந்துதி யெனச்ச பித்தான். (ச)

மழைமதத் தொந்தித் தந்தி மத்தகப் பிள்ளை சீறித்
தொழுதுதான் றுதிக்கை யின்றித் துதிக்கையால் வளைத்தெ டுத்துப்

பழுதிலா சுமங்க டம்மைப் பௌவமீ தெறியக் கண்ட
வழிவிலான் பெருவ யிற்றற் கழகிதென் றென்று நக்கான். (௫)

மறைப்பொருள் கொளுங்கா லியார்க்கு மனமயக் குண்டா மீது
பொறுப்பதல் லாலி யாயைச் சபித்தனை யெனப்பொ ருளைச்
செறுத்துயர் திருக்கை மேவுந் தெய்வவா கமத்தை வந்து
பறித்ததை யன்றிக் காணக் கிழித்தனன் பலகைக் கந்தன். (௬)

ஆங்கது கண்டு நீயு மறிவினை மதித்து வந்து
காங்கெயா புத்த கத்தைக் கிழித்தனை கையில் வாங்கி
யோங்குநம் மதுரை மன்னு முயர்குல வணிக னுக்கோர்
மூங்கையம் புதல்வ னாகப் பிறத்திபோ வெனமு னிந்தான். (௭)

வேறு.

இத்தகைமை யிற்றிகழு மெல்லையினி லுட்புகவி லங்குகண நாத னொருவன்
முத்தனது கண்டுகடை விட்டதிரு நந்தியைமு னிந்தினிப சாப மிடுவா
னத்தியுழை யிற்சுறவு ருக்கொடுபு குந்துலவி டாகமமெ டுத்தெ னுமுனம்
புத்தியுடை நந்தியுமு தித்துலவி னன்பெரிய புத்தகமெ டுத்து முடியில். (௮)

வேறு.

எழிலுமை கலங்கி யிறைஞ்சல்கண் டிரங்கி யிலங்கதி யனையனம் மன்ப
னுழையிடை யினிய புதல்வியா யுதித்தா லுலகுளோர் காணவந் துனையா
மழகுற மணந்து காவனந் தியையு மாட்கொள்வ மஞ்சனீ யென்று [தான்.
செழுமையின் விடுப்பத் தொழுதருள் பெற்றே செட்டியுஞ் செட்டியா யுதித்

தடமலி செல்வத் தோங்கதி யனையன் றவப்பெரும் பயத்தினாற் போந்து
புடையுமை யணங்கு தோன்றுமுன் பெரிய போற்றரு மவயவ நிரம்ப
நடமலி தந்தை தாயதி சயித்து நரர்வடி வன்றியே தெய்வ
வடிவொடும் விளங்கு மிவடனக் கியைந்த மாமண வாளனா ரெனுங்கால். (௧௦)

பிறிவிலா வரனும் பிறிவிலா மயிலைப் பிரிந்தினி திருக்கமாட் டாம
லெறிவலை வாணர் தம்முருக் கொண்டாண் டெய்திவாழ் பரதனை நண்ணி
நெறியுடை யவனே யெனக்குநின் மகளை யளிப்பையே னினக்குநன் றென்ன
வறிவுளோன் விரும்பி வடிவனா யிருந்தா யார்கொனீ யறியவோ தென்றான்.

துன்றெயின் மதுரை நகர்வரும் பெரிய தொல்லைமீன் வாணிகப் பிள்ளை
வன்றிறற் றொழிலா லுயர்ந்தவ னின்பால் வந்தனன் மாமடி யென்ன
நின்றவ னையுற் றுனையினா லாகா நின்றொழில் காணமீன் வீசு [டான்.
முன்றிசழ் வலையை முடியென மறைநூன் முறைதரு கயிறுகைக் கொண்

வேறு.

வெல்லவுட் கயிறு வாங்கு கயிறிட்டு வீரலா திக்கண்
பல்விதக் கண்கள் சேர்த்துப் பாரமீன் வலைக்க வல்ல

வெல்லைவிட் டிருப்புப் பார வினமணி விளிம்பு றக்கோத்
தொல்லைமீன் வலைமு டிந்தா னுற்றவ ரதிச யிப்ப. (கரு)

ஏர்படப் பிடித்தற் காமீ னெங்குள தென்ன மாம
னூர்வரு மரக்க லங்க ளுலாவிடா வகையு டைத்துச்
சீர்மைமீ னனைத்துந் தின்று திசைதொறு நடுக்கஞ் செய்திவ்
வாரியுள் வரைபோ லோங்கித் திரிவதோர் மகர முண்டால். (கசு)

உற்றவ வதனைற் சால மிடித்தன முளமஞ் சாமன்
மற்றது தனைப்பி டிக்க வல்லையேல் வலைஞர்க் கெல்லாங்
கொற்றவ னீயே மற்றென் குலக்கொடி தனையு மின்றே
வெற்றியி னினக்க ளிப்பன் வேண்டுவ சிறக்கச் செய்தே. (கஎ)

என்றது சொலவி யைந்தார் கலியினுள் வங்கத் தேறிச்
சென்றணி வலைதோ ளேற்றிச் சிலைத்துமேல் வளைத்து வீசி
வென்றிகொண் மகரந் தன்னைப் பிடித்துமெய்ப் புத்த கங்க
ளொன்றுமே காமற் கைக்கொண் டேறினு னும்பர் போற்ற. (கஅ)

நந்திதன் னுருவம் பெற்று நயந்தடி வணங்கி நிற்ப
வந்தடி தொழுதார் போற்றி வலைஞர்க ளதிச யித்துச்
செந்துவர் வாய்க்க ருங்கட் சிற்றிடைப் பெரிய வல்குற்
பைந்தொடி யனங்கைச் சாதிப் பண்பினின் மன்றல் செய்தான். (கஎ)

வேறு.

காதலியோ டதியனாயன் கனகமழை பொழிந்திறைஞ்சி
யாதிகொளற் கென்னதவஞ் செய்தேனம் மணங்கையென
வூதினெறி நந்தியொடும் வந்துடனு கமமெடுத்துப்
போதுகண நாதரொடும் போயினன்வான் மிசைகாண. (கஅ)

ஆங்கணைந்த பெருங்கிளைஞ ரருங்கனவோ மாயையோ
வீங்கிதுதா னறியகிலோ மிறைபணியே யெனத்துதித்து
நீங்கரிய நல்குரவு நீங்கியிருந் தனர்வருணன்
வாங்கருமன் பொடுதுதித்தா னனிபொழிந்து மலர்மாரி. (கக)

சோதியுருப் பெற்றவுமை தொழுதியலா கமங்கடமை
யாதரவிற் கேட்பவினி யருட்கடலே குணக்குன்றே
யோதியருள் செயல்வேண்டு முத்தமனே முத்திதரு
மாதிமுனி வித்தகனே யெனவேத்த வருண்மூர்த்தி. (உ௦)

வேறு.

உன்னரும் விசேட மிக்க வுத்தர கோச மங்கை
யென்னுமப் பெருந்தா னத்து ளெய்தியாங் கிறைவி யைப்பார்த்
தன்னமே விளம்பக் கேளென் ருசிலா முத்தி நல்குந்
தொன்னெறி யாக மங்கள் சுரிகுழற் கருளிச் செய்தான். (உக)

அருந்தவம் புரியா முன்ன ரறுபத்து நால்வ ரங்கட்
பொருந்தல்கண் டெமக்கு ஞானம் புகன்றருக் காட்டென் றேத்தத்
திருந்துப தேச நோக்காற் செய்துமா முனிவ ருய்யப்
பெரும்பொரு ளுரைத்தான் மன்றற் பேதையோ டுருவங் காட்டி. (உஉ)

வித்தக வேடங் காட்டும் விமலனீள் புணரி சூழ்ந்த
வெத்தலத் தினுஞ்சி றந்த தித்தல மேயென் றெண்ணெ
ணுத்தமப் பத்தர் தங்க ளுத்தரா கமகோ சங்கள்
வைத்துமா மதுரை நோக்கிப் போயினுன் மாதி னோடும். (உங)

அன்றுமைக் கருளிச் செய்த வரியவுத் தரகோ சங்கண்
மன்றுற வைத்த லாலே வாதவூ ராளி போற்று
மொன்றிய நகர்க்கு நாம முத்தர கோச மங்கை
யென்றுமை மங்கை பேரால் வழங்கிய திலங்க வெங்கும். (உச)

ஆகத்திருவிருத்தம் - சுகஅ.

## உரு.—வளையல்விற்ற திருவிளையாடல்.



முக்கண னால வாயன் முன்னமோர் காலஞ் சென்று
தக்கமா முனிவர் வாழுந் தருமவாச் சிரமந் தன்னுட்
புக்குநற் பிச்சை கொள்ளுங் காலையிற் புனித மாதர்
மிக்கபே ரெழில்கண் டியாரும் விரும்பியொள் வளையி ழந்தார். (க)

விரும்பிய மடவார் நெஞ்ச வேறுபா டறிந்து கேள்வர்
பொருந்தலின் றெமக்கிங் காகீர் பொழிறிகழ் மதுரை மன்னுந்
திருந்திய வணிகர் தூய்மை சேர்குலத் துதித்தங் கெல்லாந்
தரும்பரன் றன்னைச் சாரு மென்றவர் தமைச்ச பித்தார். (உ)

ஆங்கவர் முன்னர்ச் செய்த வருந்தவப் பயத்தாற் போந்து
வாங்கருஞ் செல்வத் தோங்கும் வணிகர்தங் குலத்துட் டோன்றி
யோங்கிய வடிவத் தோடு முலகுளோ ரதிச யிப்ப
நீங்கரு மொழுக்கத் தோடு நிரம்பினர் பிறங்க வங்கண். (ங)

முன்னவ னியாவும் வல்ல மூதியவன் சமாதி யாலே
பின்னரொண் புதல்வ ரின்றி யனைவரும் பெண்ணே யாக
மன்னிய வினிமை கூர்ந்த வணிகர்கண் டியார்க்க ளிப்பே
மன்னிய ரல்லா ரில்லை யென்றுளத் தழுங்கிப் புக்கார். (ச)

துப்பமர் மெய்யன் வையந் தொழுபவன் வணிக னுகி
யொப்பருங் கங்கை மாதை யுமைமாதை யொளித்துப் போந்தே

யப்பெருங் கன்னி மாரைப் பரிசிப்பா னுசை கூர்ந்து
செப்பரு மதுரை தன்னுட் சேர்ந்தனன் வணிகர் வீதி. (ரு)

கழையதண் ணேன்றி மூன்று விரல்படக் கடிநீ றிட்டுத்
தழையவொண் கலிங்கஞ் சுற்றித் தனிமுடிச் சாத்துஞ் சாத்திப்
பழையதோர் குடைக வித்துப் பசும்பைதோ ளேற்றிச் செங்கை
யழகெழ மோதி ரங்கா தணிகொள்கண் டிகைக டாழ. (சு)

வேறு.

இளமை மெய்வி டாதி லங்க விருமி யுள்வ ளைந்துசொற்
றளர வெள்ளை நரைபு னைந்து சால வீழ்வி ருத்தனு
யளவில் வண்ண வளைகள் கொண்ட ரும்பெ ருந்தெ ருத்தொறும்
வளையல் கொள்ளும் வளையல் கொள்ளு மென்று கூறி வந்தனன். (எ)

வந்து கூறும் வணிக னல்ல வடிவி னுல நங்கனே
யிந்த மாய நரைப ரந்த தின்ன தென்ற றிந்திலோஞ்
சுந்த ரேசன் மாயை யோதெ ரிந்தி டாதெ னச்சொலிப்
பந்த மாற யாவ ரும்ப ழிச்ச நின்று லாவினன். (அ)

இணையில் வண்ண வளையல் கண்டெ னக்கெ னக்கெ னப்பகர்ந்
தணிக லன்கள் பொலிய வும்ம நங்க னுன்ம னங்குலைந்
துணர்வு மின்றி மீட்டு மின்றி யொல்லை வந்த முல்லைசேர்
வணிகர் தங்கண் மங்கை மாரை வளையி னுல்வ ளைத்தனன். (கூ)

கருதி நின்று தொழுது செய்ய கைத்த லங்க ளைப்பிடித்
துருவ மிஞ்சு மாத ரீரு மக்கு மிக்கி லங்கயாம்
வரிசி றந்த நல்ல நல்ல வளைக ளுண்டு பரிவொடுந்
தருது நில்லு நில்லு மென்று சாற்றி மாலை யேற்றினன். (க0)

வேறு.

மின்வளை தன்னையெ டுத்துவி ரித்துவி ரைந்திடு வார்போல
மன்னிய கைகள்பி டித்துவி டாதுவ ணக்கிம யக்குதல்கண்
டன்னைய ருக்கறி விப்பமெ மக்கித டாதென வச்சமுறுத்
தென்னைவி டென்னைவி டென்பரு ளத்தெழு மின்பம றைத்தெவரும். (கக)

இப்படி சொல்லிய தேதுப ழுத்துந ரைத்தவி ருத்தனியா
னெப்பமர் கைகள்பி டித்தத னுலும துற்றவர் தாமிகழார்
செப்பிணை யோமுலை மைப்புய லோகுழல் செங்கய லோவிழிவாய்
துப்புரு வோநுதல் விற்பிறை யோவிது வல்லியர் சொல்லுமென. (கஉ)

வேறு.

நன்குறு மொழியிற் பட்டு நாய்களைக் காண்பான் வேட்டின்
றென்கையில் வளைநெ ரிந்த தென்கையில் வளைநெ ரிந்த

தன்புடை யவனே நல்ல வணிவளை யெமக்கி டென்று
முன்பிடும் வளைநெ ரித்துச் சொல்லுவார் மூடிகை வாங்கு. (கரு)

இனக்கன வளையி டாதிங் கேகுவா யாயி னெங்கண்
மனத்தமர் சொக்க ளூர்த மாணையால் வளைப்போ மென்னத்
தனக்குநல் லவர்க்கு நல்லோன் றயாவொடு முறுவ லோடுங்
கனத்தபல் வளைக ணீட்டுங் கைத்தலத் திலங்க விட்டான். (கசு)

புனையுமா யிரம்பொன் னிற்குப் புரிவளை யொன்றே யென்றென்
றனைவரும் விரும்பக் கூறி யரும்பெருந் தனத்தை வேட்டாண்
டினவளை விற்பான் வந்தோ னிலங்கிய தனங்கொ டுத்துக்
கனவளை கொள்வான் வந்த கன்னியர் வளையுங் கொண்டான். (கரு)

இந்திர னயன்மா லாதி யாவருந் தீண்டொ ணாத
சுந்தர வுருவந் தீண்டத் தோன்றுபே ரின்பந் தன்னைச்
சிந்தையா லனுப விப்போர் செட்டியார் நாளு மிங்கே
வந்துபோம் வந்து போமென் றவாவற வழுத்தக் கண்டு. (சகூ)

பழுதிலா மார வேளைப் பாலலோ சனத்தாற் காய்ந்தோ
னழகிய மடந்தை மீர்கா ளப்படிச் செய்வ லிந்த
விழுமிய வொளிவ ளைக்கு விலைதர வேண்டா நாளை
யுழைதொறும் வந்தாற் றாரு மென்றன னுவகை நீட. (கஎ)

இன்னன பகர்ந்து காவ லிலங்குபே ரிடங்க டோறு
முன்னுற நடப்ப மேனி வித்தையு மூதிரா மென்மைப்
புன்முறு வலையுங் கண்டு புதுமையீ தறிவ மென்றே
நன்னெறி வணிக ரூரே தார்கொனீ நவிறி யென்றார். (கஅ)

அழகிய சொக்க னூம மறுமுகச் செட்டி மைந்தன்
பழவுற வளைக் கோனு லறிகுவர் பதியு மீது
மழவுறக் கங்கை யாடி வந்தனன் குமரி யாடக்
கிழவனியான் பிறந்தே னல்ல கிளையிலே யெனம றைந்தான். (கக)

ஆங்கவன் மறையா முன்ன ரரன்பரி சனத்தா லாங்க
ணேங்குகன் னியர்குல் கொண்டு வீங்கிய வுதரங் கண்டே
யேங்கிநங் குலமு டிந்த தின்றென வெருவி யாருந்
தாங்குதல் கொடாது தீயிற் சார்வதற் கொருப்பட் டார்கள். (உ0)

அருளுடைச் சொக்க னஞ்சி யவ்வயின் விடையிற் றோன்றிப்
பொருவரு மிருடி மாதர் சாபத்தாற் போந்தார் நம்பாற்
பரிவொடும் வளைய லிட்டுப் பரிசித்தோ நாமே சாத
லொருவரும் வேண்டா மற்றெக் குலத்திறு முயர்ந்தி ரென்ன. (உக)

நடமொடு துதித்தார் யாரு நாளிலத் துயர்ந்தோ நாமே
யுடையவ னறிந்தி டாத சரக்கிலை யுரைக்கு மெட்டான்
கடையரேம் பயந்த புன்மைக் கன்னிமங் கையரை வந்து
படிமிசை விரும்பற் கென்ன பாக்கியஞ் செய்தோ மென்றே. (உஉ)

ஆர்ந்தமங் கையர்கன் முற்று மரன்பரி சனத்தாற் பண்பு
சேர்ந்தநன் புதல்வர்ப் பெற்றுத் திருந்திய வொழுக்கத் தாலும்
வாய்ந்தநல் வடிவி னுலு மறுவற விளங்கி நாளுஞ்
சூழ்ந்ததஞ் சுற்றம் போற்றத் துயர்கெட விருந்தார் வாழ்ந்து. (உரு)

அறமலி மதுரை மன்னும் வணிகர்க ளன்று மூன்று
வெறிகமழ் செச்சைக் கண்ணி வேளென விளங்கி னூர்க
ணெறிதரு தூய்மை வாய்மை நீதிநல் லறிவு செல்வங்
குறைவற நிறைந்து மற்றெக் குலத்தினு நனிசி றந்தே. (உச)

கொள்ளவோர் புதல்வ ரின்றிக் குலங்கெடு மென்று கண்டு
மெள்ளநுங் கிளையா னென்று மெய்புனைந் தெய்தி யொப்பித்
தொள்வளை யிட்ட தன்றி யுமையொடும் விடையிற் றோன்றித்
தெள்ளியீர் மணந்தே நாமென் றிறையருள் செயப்பெற் றோர்கள். (உரு)

ஆகத்திருவிருத்தம் - சசரு.

## உச.—இலச்சினையிட்ட திருவிளையாடல்.



பாங்கடியார் பரவுபுக ழால வாயான் பதம்பணிவான் முன்னொருகாற் பத்தி மிக்கோ, ரோங்குபுகழ்க் காடுவெட்டி யென்றோர் மிக்க வுயர்தலைவன் வைகைவட தடத்தி னெய்த, வீங்கதனை யறிந்தணுகா வாறு கோயி லெயிற் கடைதன் னிலச்சினையிட் டழைத்து மாறன், றாங்கரிய படையெடுப்பான் முயன்றான் யாறுந் தனிப்பரவை யெனப்பெருகப் புகுந்த தன்றே. (க)

மண்முழுதும் பலதீர்த்தங் கண்டி றைஞ்சி மனமகிழ்ந்தேன் மற்றவற் றுள் வளமை கூர்ந்த, கண்ணிறைந்த பதியையுமப் பதியி லோங்கும் கார ணமா நின்னையுநீ கருதி வாழு, மெண்ணிபமென் னெண்ணமரர் மடங்க லெண்ணன் கேந்துயரா லயத்தினையு மினிமை மிக்க, தண்ணமர்பொற் றாம ரைவா வியையுங் காண்பான் றணிவிலா விருப்பெய்திச் சார்ந்தே னிங்கே. ()

இன்னருள்சேர் தயாநிதியே யமர ரேறே யெந்தையே யென்செய்கேன் பகைவ னுய, தென்னனொடு பேராறும் வாரா வாறு தீங்குசெயக் கண்டனை மற் றியாவும் வல்ல, நின்னையலான் மனக்கருத்து முடிப்பா ருண்டோ நிசி யிடையின் றென்கருத்து முடித்தி டாயேன், மன்னுயிரை முடிப்பதலால் வாழே னென்று மதுரைவளம் பதிநோக்கி வருந்த லுற்றான். (ரு)

மருவுபுக ழரனருள்சேர் பத்தர் பத்தன் மற்றவன்றன் மனக்கருத்தை முடிப்பா னெண்ணிப், பொருவருந்தன் கோயிலெயில் வாயி ஞன்கும் பூழி யன்மீன் முத்திரைகண் டிடமுண் டாகப், பரவுமதி லொடுவடவா யிலைமு ரித்துப் பாதியிர விற்சென்றோ ரியந்தி ரத்தாற், கரிபரியோன் றனைநதித்தென் கரையி லேற்றிக் கண்டவெயின் முரிவாயாற் கொண்டு புக்கான். (ச)

ஓங்கிருளை யவனளவில் வெளிய தாக்கி யோதரிய சோதிவிமா னத்தை யும்பொற், பூங்கமல வாவியையுந் தனது நீங்காப் பொருவிலுரு வையுங்காட் டக் கண்டு போற்றி, யாங்கவனுட் கசிந்துதொழு தாடிப் பாடி யணைவதற் கிங் கென்னதவஞ் செய்தே னென்று, நீங்கரிய மயிர்ப்புளகம் பொடிப்பக் கண்க ணீர்ததும்ப மேல்விதும்ப நிறைந்து நின்றான். (ரு)

அரியயர்கட் கரியபிரான் காடு வெட்டி யன்புநயங் கண்டாரா வன்பு கூர் ந்து, பொருவருநல் வரங்கள்கொடுத் தழைத்தாற் போலப் பொருபுனல்சேர் தடினிவட தடத்தி னேற்றிப், பரிவுடைய நம்பத்த செழிய னோடு படைபொ ருவான் படையில்லை விடியு முன்னம், விரைவொடும்போ வென்றுநிசி யாக் கிப் போக்க விரைந்தருள்கண் டதிசயித்து நயந்து போனான். (சு)

வேறு.

ஆங்கவன் போய பின்ன ரல்லிடை மெல்ல மேவி
யோங்குபே ராணை யாலே யுயரெயின் முரிவாய் தன்னைத்
தீங்கறத் தீர்த்தோர் வாயில் சிறக்கவிட் டடைத்து முன்ன
ரீங்கியா வருங்கா ணத்த னேற்றிலச் சினையு மிட்டான். (எ)

சுரிகுழ லுமைம யிற்குச் சொல்லியா லயத்தி ருப்ப
விரிகடை காப்போ ரஞ்சி விடியுமு னரசற் கூடிப்
பொருவிலோர் வாயில் வேறாய்ப் பொறித்தமுத் திரையும் வேறாய்
மருவிய மதிலும் வேறா யிருந்தது வடபால் வாயில். (அ)

என்றது சொல்லச் சீறி யெய்திய வமைச்சர் தம்மைச்
சென்றறி மின்க ளென்னச் சென்றவர் வந்து சொல்வார்
வன்றிறன் மன்ன கேண்மோ மாயையோ புகுந்த வாறின்
றொன்றுமிங் கறிந்தோ மில்லை யுரைத்தவா றொக்கு மென்றார். (கூ)

இருந்திறல் வழுதி மற்றிங் கியார்செய வல்லா ரீது
பொருந்திய தறிவான் யாவும் வல்லவ னென்று போத
வருந்தியூ ணொழிந்து செய்ய மலரணைத் துயிலுங் காலைத்
திருந்திய கனவின் மாயை வல்லவன் சென்று சொல்வான். (கo)

ஞாயில்வாய் மதின்மு ரித்து நள்ளிரு ளெல்ல தாக்கி
நேயமுள் ளவனை யிங்கே வரவிட்டு நீங்க விட்டுச்

சேயதோர் வாயில் விட்டுச் சேவுறு குறியு மிட்டே
மேயவின் றியாங்கா ணென்ன வதிசயித் தெழுந்தான் போற்றி. (௬௧)

வந்தெயி லிடப மிட்ட வாயில்கண் டதிச யித்துச்
சுந்தர னல்லா லுண்டோ தொழுபவர்க் கெளியா னென்று
முந்தையி னன்பு செய்தான் மன்னவன் முறைமை வாயி
லிந்தமா நிலத்து நின்ற திலச்சினை வாயி லென்றே. (௬௨)

ஆகத்திருவிருத்தம் - சஉரு.

## உரு.—மாணிக்கம்விற்ற திருவிளையாடல்.

முன்னமோர் தென்னர் கோமான் முறைமையி னவனி காத்து
மின்னெயின் மதுரை தன்னு ளிருக்குநாள் விதிவ சத்தான்
மன்னுநன் குலமா தர்க்கோர் மகவின்றிக் காதன் மாதர்க்
கின்னெறி யில்லா மைந்த ரெண்ணில ராகு ரன்றே. (௧)

மற்றது கண்டு சால வாடிய மன்ன னோர்நா
ளற்புதச் சொக்க மூர்த்திக் கறைகுவ மென்று சென்றே
முற்றுமிங் களிக்கவல்ல முதல்வனே புதல்வ னில்லை
யிற்றது குலமென் றேத்த வீந்தன மென்னப் போந்தான். (௨)

இறையவ னருளா னல்ல விலக்கணத் துடனோர் மைந்தன்
மறுவறு குலமா மங்கை வயிற்றகத் துதித்தை யாண்டு
குறைவற வளர்நா ளந்தக் கொற்றவன் வேட்டை போகித்
திறமுறு முழுவை கையிற் சேர்ந்துயர் துறக்கம் புக்கான். (௩)

வேறு.

அவமுறு புதல்வ ரிகல்செய்து காவ லறையழித் தரும்பொருள் கவர்ந்தே
புவிமிசைத் தூரந் தங்குறை யறிந்து போயினர் யாரையு மறைத்துக்
கவினுறு குலக்கோ மைந்தனைக் காத்த வமைச்சர்கள் கரிபரி முதலா
நவையறு படையை வெருவுறு குடியை யடைவுற நயமொடு கூட்டி. (௪)

வரந்தரு மரசன் குமாரனுக் கடைவின் மணிமுடி சூட்டுவா னெண்ணி
யிரும்பொரு டேடிக் கண்டிடா தறையி னியைந்தசாம் பூனத மான
வருஞ் செழுங் கனகந் தேடினுஞ் சிறந்த வணிமுடிக் காநவ மணிக
டெரிந்தன வெங்ஙன் றேடுவஞ் சொக்கன் றிருவுள மறியகி லேமால். (௫)

விதுமர பிலங்க விலற்கபி டேகம் விரைவுடன் செய்திடா தொழியி
னதிர்வுறு முலக மென்செய்கே மென்றென் றழுங்குதல் கண்டருள் சுரந்து

திதமுறு சொக்கன் பலசிறப் போடுஞ் செட்டியாய் மணிவிலை கூறிப்
பதியுயர் பெரிய பட்டின நீங்கள் பார்ப்பதிங் கென்னென வடைந்தான். ()

வருந்துபே ரமைச்சர் நயந்துசென் றுளத்து மருவுகா ரியமுரைத் துன்னைப், பொருந்துமுன் றுன்பம் போனது சொக்கப் புனிதனே வறிகிலே மென்ன, வரும்புரா யிரேகை களங்கம்விந் துக்க ளற்றவை குற்றமொன் றில்லை, யொருங்கமுன் பார்த்துக் கொள்ளுமின் முடிக்கா மொன்பது மணியுமுண் டென்றான். (எ)

போதுகாய் வெயிலின் வாடிய பயிர்க்குப் பொழிபுன லுதவிய புயல்போற்
றீதிலா வடிவின் வந்தமா ணிக்கச் செட்டிகேள் யாங்களீங் கறியக்
கோதிலா மவுலிக் கானவை தெரிந்து குணங்குறை பிறங்கிலக் கணங்க
ளோதியா தரத்திற் றருவெனக் கேட்ப வுத்தம னத்திற முரைப்பான். (அ)

வாசவன் வேள்விக் கிரங்கியோர் பசுவாய் வந்திடும் வலனைவச் சிரத்தா
லாசற வரிந்த வுறுப்பினை வானோ ரருந்தமண் விழுந்தன தப்பிக்
காசறு வித்தாய் மலையினுஞ் சிறந்த கடலினுந் தீவினும் புதுமை
பேசரும் பெரிய நாட்டினும் பிறந்து விளைந்தன பிறங்கிட வன்றே. (கூ)

பரியவா ளென்பு வயிரநீ டிறைச்சி பவழமென் கருவிழி நீலம்
பொருவரு மொளிசேர் கவம்புரு டராகம் பொருந்துசெங் குருதியா ணிக்க
மருவிய மயிர்வை டூரிய நிணங்கோ மேதகம் வாணகை முத்தங்
குருவளர் பித்து மரகத மென்று கூறுவர் குலமணிப் பிறப்பே. (௧0)

சுடர்கொண்மா ணிக்கத் திறம்வகுப் பவரார் சொல்லுவல் சுருங்கநான் கிடமும், படருநால் வருணத் திலகிய பெயரும் பன்னிரு குணமுமீ ரெட்டு, நெடியபுன் குறையுந் தகுமெழு நான்கு நிறங்களும் பிறங்கிய விலையு, மிடமுறு பத்தி பாய்தலு மென்ன வெழுவகை யிலக்கண முடைத்தால். (கக)

கருதிடின் வலவை மாவலி சங்கை கம்பளை கல்லணை யென்னுந், தருசம ஞெளிசூழ் நதிகளுன் கிடமாஞ் சாதிநான் கந்தணன் வெள்ளை, பரிவுறு மரசன் சிவப்புவாழ் வணிகன் பச்சைசூத் திரன்சறுப் பவைதா. மருவிய பெயர்கோ மளங்குரு விந்தம் பதுமரா கம்பஞ மணியே. (கஉ)

மின்னிய நெருப்பிற் சேரினுந் தகட்டின் மேவினும் வெயிலினுங் கரந்து, மன்னினு மோரந் தன்னினுந் தூக்க மருவினுந் தேய்ப்பினும் பிறங்கிக், கொன்னுறச் சிவந்து பார்க்கவந் தோங்கிக் குச்சிமுன் பரந்துசேர்ந் திடின்முன், பன்னிய வொளித்தாய் மத்தக சுத்தி யுடையது பன்னிரு குணமால்.()

மிகவுறு தராச மத்தகங் குழிதல் வெச்சமி லைச்சுமி வெருளி, புகையொடு திருகன் முரணொடு செம்ம ணிறுகுதல் கருகுதல் பொரிவே, யிரவுறு

புடாய நெய்ப்பிலி சந்தக் கேடுநீள் வெய்யநீற் றென்ன, வகைபடு நூற்ற மெ ண்ணிரண் டாக வகுத்தனர் மாசறு புலவோர். (கச)

வேறு.

பங்கயஞ்செங் கழுநீர்சா தகக்கண் குத பல்லவமின் மினிகோபம் பரிதி தீப, மங்கிவிழு தழற்குன்றி யுலோத்தி ரஞ்செவ் வரத்தமூய லிரத்தமா தளைவீ வித்துச், செங்கலில விதழ்குரவு பாட லப்பூத் திலகமுருக் கிதழ்மஞ் சட் டேறு கோவை, தங்கொளிச்சிந் தூரங்குக்கிற் கண்ண சோகின், றளிர்நி றங்க ளைவணையோ டெழுநான் கென்பர். (கரு)

எண்டருதே சிடையளவே விலைகோ டன்க ணியைந்தவற்றி ஞெளிபர த்தல் பத்தி பாய்த, றண்டரளத் தியல்வகுப்பிற் பிறப்புப் பாம்பிற் சங்கி னின்மீ னின்றலையிற் றழைநெற் றுளி, லொண்டொடிமங் கையர்களத்தி லியானைக் கோட்டி லுயர்கழையிற் காகவா கனர்திண் டோளிற், கொண்ட லிலிப் பியிலேனக் கொம்பி லிக்கிற் கொக்கிலெனப் பகர்வர்வியப் பிப்பி முத் தால். (கசு)

தங்கியமுள் ளேறுமுகங் கறுத்தல் செந்நீர் சார்வனமண் ணேறிடப்புத் திருகல்,,கோணை, மங்குறுசிப் பிப்பற்றுக் காக வன்னி மருண்டிருத்தல் குறை பத்தே குணமே தட்பம், பொங்குநெத்தே சுருட்சிகனம் வயிரம் வைரா கர மேருப் பொருப்பிமவா னேம கூடந், துங்கசவா லக்கமவந் திகமா தங்கந் தொகுமருண மெனுமெட்டா கரமே தோற்றம். (களு)

கீற்றுமலஞ் சப்படியே பிளத்தல் கோடி கெடுதல்கரி துளைவிந்து ,காக பாத, மாற்றருஞ்சீர் தருகோடி முரித முறை மழுங்கலிருத் தெனப்பகர்வார் குறையீ ராறும், போற்றிநெற் குணந்தாரைச் சுத்தி நோன்மை புரந்தரசா பம்பலகை யெட்டு மிக்க, வேற்றமுடைக் கோணமா றெனவைந் தாமற் றிலங்கியநீ லத்தினிய லியம்ப லுற்றேன். (கஅ)

அணிபொழில்வாழ் குயிற்கழுத்தே குவளை வண்டே யாகுலக்கண் செ ழுமேக மவிரிச் சாறே, யிணையிலுயர் பூவைப்பூ நெய்தற் போதென் றிலங்கு மொளி யெட்டென்பர் குறையெட் டெண்ணிற், றணிவில்சர சரப்பிரசத் தோடு பொல்லாச் சாரசமஞ் சணிவளிமண் சார்ந்த கிட்டம், பிணிகொளிலைச் சுமியாகுங் குணநெய்த் துச்சி பிறங்கலொளி வளர்பவளம் பேசக் கேண்மின்.

துன்னியசிந் தூரமீச்சஞ் செங்காய் செம்மண் தேவளை முசுமுசுக்கை துளங்கு வீரைப், பன்னியசெங் கனியென்பர் நிறந்தி ருக்குப் பைங்கருப்பத் துளைகல்லே முடங்கல் பொல்லா, மன்னும்வெளி றென்பர்குறை பச்சை கிள்ளை மயிற்கழுத்து நெல்லினிளம் பயிர்பொன் வண்டின், மின்னுதரம் பொன்மையொடு பசுத்த னெய்த்தன், மேற்பத்தி பாய்தனிறங் குணங்க ளென்பர். (உ௦)

கருகல்வெளி றொடுபொரிவே கல்லே மண்ணே காற்றிறுக றராசமொடு குற்ற மெட்டா, மரகதம்விட் டுயர்புருட ராகஞ் செம்பொன் வண்டகட்டிற் றேனொழுகு நிறமே யென்ப, ருரியவயி ரேியம்பொன் மேன்மு லைப்பா லொழுகுமொளி யென்பர்கோ மேத கத்தை, மருவுவயி ரேியத்தின் மீது தூய மதுத்துளிமே வியதென்பர் வண்ணந் தானே. (உக)

முறைமைகெடா விலைதமக்கு நீதி யொன்றே மும்மணியா வனசொன்ன புருட ராக, முறுவயிடு ரியங்கோமே தகமே யென்றாங் கோதுவர்மற் றிவற்றின்க ணுதித்த வெண்ணின், மறுவறுதோ ராவல்லி கனக தோரா வல்லிமுத லாயினவுண் டென்பர் மற்று, நெறியுரைப்பி னுளபலவிங் கரசர் மாட்டு நேசமுடை யாருமைப்போற் கண்டி லேமால். (உஉ)

வேறு.

மறுவறு சிறப்பிற் பெருவிலை மணிகள் வாய்த்தன விலையெனக் காட்டி, யுறவுறப் பேசி விற்றிடக் கொண்ட வுத்தம ரிலக்கணங் கண்டே, நிறைவுறு மகிழ்ச்சிக் கடலிடை மூழ்கி நெறிப்பட நவநவ மணிகண், மறைபறை யுலகிற் கண்டிலே மென்று மவுலியும் விதிப்படி யமைத்தார். (உங)

அரசிளங் குமரர்க் குயர்விழா நடத்தி யணிமுடி மறைநெறி சூட்டிப், பெருமைசேர் வணிகன் றனைநயப் பிப்பான் பெரும்பொருள் கொண்டுமுன் செல்லக், கருதிய பொருள்கள் வேண்டுவ வளிக்குங் கடவுள்கண் டெழுந் துளே நகைத்தாங், குரியவா லயத்தை நோக்கிநேர் போகி யொளித்தனன் றுதித்ததி சயிப்ப. (உச)

ஆங்கணே மறையோ ரமைச்சரன் புடைய வழகிய சொக்கெனத் தேறி, யீங்கிவ னளித்த மணிமுடி சூடற் கெத்தனை தவஞ்செய்தா னிதனாற், பாங்குடை யுலகந் தனிமுழு தாண்டு பகைகடிந் தூழிவாழ்ந் தறத்தி, னோங்குவ னென்று போற்றியா லயத்தி னுத்தம னடிபணி வித்தார். (உரு)

அதர்படத் துதித்து மன்னவன் மகிழ்ந்தே யவனியோர் நாளும்வாழ்ந் திலங்க, நதிபொதி சடையா னருளினல் விளங்கி நாற்பெரும் படைநனி படைத்து, நிதிகவர் ஞாதிப் பகைகடிந் தெடுத்த நீணிதி கவர்ந்துய ரறத்தின், மதிமர போங்க விருந்தர சாண்டான் வரமனு வெனநெடுங் காலம். (உசு)

ஆகத் திருவிருத்தம் சஅக.

---

## உசு.—ஆனையெய்த திருவிளையாடல்.

தவமுறு பத்தித் தென்னவ னொருவன் சைவநூல் சிவபுரா ணங்கள், சிவனையு மொளிவெண் ணீற்றையு நாளுந் தெய்வவஞ் செழுத்தையும் போற் றிப், புவியொடு தானும் பொருளெலாக் கொண்டு பூண்டுயர் மதுரையம் பதியிற், பவநிசி யகல வருளினல் விளங்கிப் பகையற வாழுநா டன்னில். (க)

தந்திர மிக்க முந்தையோர் சோழன் றனையால் வெல்லமாட் டாமன்
மந்திர வாதஞ் செய்துகை தவனை மதுரையம் பதியொடுங் கூட [து
முந்துற வெல்லக் கடவமென் றெண்ணி முடிவில்பல் பொருள்களுங் கொடுத்
வெந்திற லமணர் தங்கள்பாற் செல்ல விட்டனன் கட்டிநெட் டோலை. (உ)

வேறு.

நம்பெரு மடிகள் காண்க நலந்தரும் வளவ னோலை
யெம்பெரும் பொன்னி நன்னாட் டிலங்குயர் பதிகண் மிக்க
செம்பொனோ டளிப்ப லின்று செழியனை மதுரை யோடும்
வம்புறக் கோறல் வேண்டு மந்திர வாதத் தென்றே. (ந)

முட்டவெண் கிரிக்கண் வாழு முதல்வரெண் ணாயி ரத்தோர்
கட்டவிழ்த் தடைவி னோலை வாசகங் கண்டு வாழ்ந்து
சட்டெனக் கூடி யின்றோர் தந்தியைத் தோற்று வித்து
விட்டிமைப் பொழுதிற் சேர விழுங்குவிப் பேமென் றெண்ணி. (ச)

மன்றுநீ டசோக நீழன் மந்திர வாதஞ் செய்ய
வொன்றிய தூமத் தீயி னோமமார் சத்தி யாலே
வென்றியி னடக்கு மேரு வென்னவோர் வேழந் தோன்றி
நன்றிகொள் புவன மூன்று நடுங்கிட வதிர்ந்த தன்றே. (ரு)

மொஞ்சகக் கையு ரந்த மும்மத வருவி பாயும்
வெஞ்சினத் தறுகட் செங்கட் குஞ்சர வெற்பை நோக்கிப்
பஞ்சவன் றன்னை யந்தண் பதியொடு மெடுத்துச் சேர
விஞ்சவோர் கவள மாக விழுங்கென வறைந்து விட்டார். (சு)

ஆலகா லங்க டுப்ப வடர்ந்தகிம் புரிவெண் கோட்டாற்
கோலமா முகிலைப் பீறிக் குத்திவான் முகடு சாடி
மேலுடு வுதிர்த்து நாகம் வெருக்கொள மிதித்துக் கூடச்
சாலும்வெஞ் சமண ரோடு நடந்தது தரணி யெங்க. (எ)

மதுரைநீட் டைந்து கூப்பி டெனவட கீழைக் கோணத்
ததிர்வொடு தோன்றக் கண்ட வச்சமி லாத வென்றி
முதுவலிச் செழிய னஞ்சி முடிமணி யெனக்க ளித்த
விதுமுடி யாற்கு ரைப்ப லென்னவா லயத்து மேவி. (அ)

பெருமநின் னருளி னாலே பிறிதொரு வருக்கு மஞ்சே
னருகர்மந் திரித்துச் சேர விழுங்கென வறைந்து விட்ட
பரியகைக் கூற்ற மென்னும் பகட்டினாற் கலங்கி னேனிங்
கொருவரு மிலைநீ யல்லாற் காத்தரு ளொல்லை யென்றான். (கூ)

அரசகேள் கீழ்பா லிஞ்சி யணையவட் டாலை கட்டின்
றாரணெடும் வில்லா ளாகி யொல்லுவந் தெவருங் காணக்

கரிகரி யாக வெய்வல் கலங்கிடே லென்றோர் வாக்குத்
தெரிவுற வாகா யத்திற் சிறந்திடக் கண்டா னன்றே. (௧௦)

தொழுதிறை திருவாக் கென்று சோகம்விட் டகம கிழ்ந்து
பழுதிலா வமைச்ச ரோடும் பன்முறை பழிச்சிப் போந்து
முழுவதும் வல்ல தெய்வக் கம்மியர் தம்மான் முன்ன
ருழைமதி தவழ யிற்பா லுரைத்தவா றுங்கச் செய்தான். (௧௧)

தெற்றிசேர் தலத்துட் டோன்றிச் சிலையுட னம்பொன் றேந்திக்
குற்றுடை வாளுங் கட்டிக் குலவுதொப் பாரங் கட்டி
முற்றுமெய் யணிவி ளங்க முகங்குறு வியர்ப ணிப்ப
வெற்றிகொள் புரங்கள் செற்ற மேருவில் லாளி நின்றான். (௧௨)

நண்ணரு முருவங் கண்டு நயந்துபூ மழைபொ ழிந்து
விண்ணவ ரயன்மா லாகண் டலன்வியன் முழவ மார்த்தார்
மண்ணவர் துதித்தார் வேந்தன் வாழ்ந்தெழ வியந்தான் சூழ்ந்த
வெண்ணருங் கன்னி மாத ரினவலை சிந்தி னூரால். (௧௩)

ஊறிடு மருவி யோங்க லுரனுடை முழக்கங் காட்டத்
தேறிநின் றதிச யித்துச் சிரித்துவா னுறச்சி லைத்து
மாறனுழ் துயரந் தீர மதுரையம் பதியோ ருய்யக்
கூறரு மிலக்கை நாடிக் குறித்துநீள் கணைவி டுத்தான். (௧௪)

மானமில் சமண ரெண்ணின் மந்திர வாதஞ் செய்து
தேனலர் தொடையன் மார்பச் செழியனை மதுரை யோடும்
போனக மாகக் கொள்ளென் றேவின புழைக்கை மத்த
யானையை யெய்தான் முன்னம் யானையை யுரித்த வீரன். (௧௫)

யானையாழ் துயரந் தீர்த்தோன் யானைதாங் கண்டங் கண்டோன்
யானைவா கனத்தோன் போற்ற யானையா லயத்தி ருந்தோன்
யானையா னனனைத் தந்தோன் யானைவந் தனையு வந்தோன்
யானையை யுரித்த தன்றி யானையை யெய்தா னன்றே. (௧௬)

செல்லம ரெயிலட் டாலைச் சேவகன் விட்ட கொற்ற
வில்லரி முகமால் வாளி வேழத்தை நாடிச் சென்று
மல்லலங் குளத்து மூழ்கி வயிற்றுறு நிணம ருந்தி
யொல்லையி னிலத்தி வாயா லோடிய துதப்பி யோட. (௧௭)

வேறு.

வீரன் விட்ட கணைபட வெம்பயங்
கூர விட்ட குருதிப் பெரும்புனல்
வாரி யொப்ப விளங்க வனையெனச்
சோரு மத்தி யிலத்தி சொரிந்ததால். (௧௮)

கடுகி மோதிக் கதறி விழாமுனம்
படியின் மாமகண் முன்னம் பரவினள்
கொடிது காத்தரு ளென்றுபொற் கோயில்வாழ்
கடிய வெட்டுக் களிறுங் களித்தவே, (௧௯)

பிடிக ளோடும் பெரும்பயம் போய்த்திசை
முடிவில் யானைக ளெட்டு முழங்கின
வடைய மானிட ரச்சந் தவிர்ந்தனர்
நடந வின்றனர் தொந்திவி நாயகர். (௨௦)

உரன ழிந்து விழுந்த வுவாவினை
யிருமை மிக்க விலத்தியை நாட்டவர்
தருமமிக்க தனிவிளை யாடலின்
வரிசை காண வரையுரு வாக்கினன். (௨௧)

வேறு.

முடிசிகையினர் விடுசடையினர் முண்டிதத்தவர் கொன்றைக்
கடிகமழ்சடை யரனடியவர் கடுவிசையுட னணுகிப்
படிதருதலை பறியமணர்கள் பயமொடுநனி குழறக்
கடிகொடுதலை சிதறினர்சய சயவெனநட நவிலா. (௨௨)

வேறு.

கன்றிய சமணர் மாளக் கவுரிய னணுகி யானை
பொன்றிய தல்லாற் சல்லாம் புதுமையைப் பாரீ ரெய்த
வென்றியைப் பாரீ ரந்தோ வெல்லயார் வல்லார் நந்தந்
தென்றமிழ்ச் சொக்க னல்லாற் றெய்வம்வே றுண்டோ வென்றான். (௨௩)

வடிவுடைக் கடவு ளங்கண் மறைகுவா னெருப்ப டுங்கால்
விடுவிசைப் புரவி மேன்முன் விரைந்திறை யேவப் போனோன்
படிபுக ழமைச்ச ரோடும் பன்முறை பணிந்தெ ழுந்து
கடிகமழ் கமலப் பொற்றாள் பிடித்தனன் கருத்துட் கொண்டு. (௨௪)

இவ்விடத் தென்று நின்றே யித்திருக் கோலந் தன்னை
மெய்வாய்ப் பழிச்சு வோர்க்கு வேண்டிய வரங்க ணல்கிச்
செவ்வையிற் காத்தல் வேண்டுந் தீர்த்தனே பத்தர் வாழ்வே
கொவ்வையங் கனிவாய் மங்கை கொழுநனே யெனத்து தித்தான். (௨௫)

இச்சையி னடியார் தங்கட் கெளியம்யா மாத லாலே
நிச்சய மாக விங்கு நிற்கின்றே நின்போ லெம்பாற்
கச்சமி லாத வன்பற் கண்டில மடிவி டென்று
நச்செயிற் றரவக் கச்சை நாயக னருளிச் செய்தான். (௨௬)

அருளினு னிறைந்த தென்ன னடிக்கம லங்கள் விட்டுப்
பொருவில்பல் சிறப்புஞ் செய்து போற்றினன் புவியோர் போற்றப்

பரிவொடு நின்ற னங்கண் பணிவுடைப் பத்தர்க் கென்றும்
பெருகவேண் டுவகொ டுப்பான் காரணம் பிறங்க வென்றே. (உஎ)

ஊனெழு குன்றை யானை மலையென வொழிந்த குன்றை
யீனமி லாவி லத்தி மலையென வெய்த கோவைத்
தேனலர்த் தொடையட் டாலைச் சேவக னென்ன நாம
மாநிலத் தன்று முன்னு மன்னிட வழங்கு மன்றே. (உஅ)

பாவியர் விட்ட கொற்றப் பருப்பத விபத்தை வீழ
மூவர்க டலைவன் சிங்க முகக்கணை விடுத்த லாலே
காவல னவதா னத்தைக் காசினி காண நண்ணி
மேவரு நரசிங் கத்தை யிருத்தினான் வேழக் குன்றில். (உகூ)

ஆகத்திருவிருத்தம் - ருகo.

## உஎ.—ஞானோபதேசஞ்செய்த திருவிளையாடல்.

அழகினுக் கழகார் மேனி யாலவா யமுத வாயான்
பழுதில்சாத் தவர்கள் சூழப் பல்பெருஞ் சிறப்பிற் றோன்றிப்
பொழிலுல கனைத்துங் காணப் புரவிநாற் கியைய மிக்க
செழியன்முன் குதிரை யிட்ட திருவிளை யாடல் கேண்மின். (க)

சந்திர குலத்தி னீடோர் தானைவேல் வாகை மாற
னந்தமின் முன்னோர் போல வவனியை யடைவிற் காத்துச்
சுந்தரற் கன்பு பூண்டு துலங்குமா மதுரை தன்னுண்
மந்திரத் தலைவர் சூழ வளம்பட வாழு நாளில். (உ)

நீதிமா மதூக நீழ னெட்டிலை யிருப்பை யென்றோர்
காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர்
சோதிசேர் வகுள நீழற் சிலம்பொலி துளங்கக் காட்டும்
வேதநா யகனார் வாழும் வியன்றிரு வாத வூரால். (ங)

ஆதியா தித்தன் சோம னக்கினி தமது பேரால்
வேதியர் தமைவந் தேத்தி விளம்புமுன் னுகங்கண் மூன்றுங்
காதலின் வணங்கக் கண்டு கடையுகம் வாத ராச
னீதியின் வணங்க வாத புரமென நிகழு மூதூர். (ச)

தெரிவையர் விழியை யேய்க்குஞ் சேல்வளை களத்தை யேய்க்கும்
பரிபுரப் பதத்தை யேய்க்கும் பங்கயம் பழனந் தோறுந்
தருமுகிற் றானை போர்த்துத் தாரகை முத்தம் பூணக்
கருதிநீள் கமுகை யேய்க்குங் கன்னலைச் செந்நெ லேய்க்கும். (ரு)

'குதிரையீடு ஞானவுபதேசஞ்செய்த திருவிளையாடல்' எனவும் பிரதி பேத முண்டு.

மன்னுமிந் நகரி தன்னுண் மானமங் கலத்தா ராகுந்
தொன்னெறி முனிவ ராமா மாத்தியர் தொழுகு லத்து
நன்னெறி விடையிற் போந்தோர் நன்கணத் தலைவர் நாம
மின்னெறி வாத வூர ரென்னவந் துதயஞ் செய்தார். (௬)

மன்னுமுற் றொடர்பி னாலே மாசற வீரெட் டாண்டின்
முன்னைநா ளீதி நூன்மற் றியாவையு முற்றக் கற்றுக்
கொன்னுற வளரக் கேட்ட கொற்றவ னயந்த ழைத்துத்
தன்னுடை நன்னு மத்தாற் றலைமைசேர் நாமஞ் சாத்தி. (எ)

மல்லலஞ் சிறப்பி னோங்கும் வரிசைகள் பலவு நல்கி
யெல்லையில் சேனைக் கேற்ற தாழ்வுகேட் டிருத்தி யென்னக்
கல்வியின் மிகுதி யானுங் கருத்துணர் கூர்மை யானுஞ்
சொல்லரு மமைச்சர்க் கெல்லாந் துளங்குமுற் றலைவ ரானார். (அ)

கரிபரி திண்டேர் வென்றிக் காய்சின வீர ராற்றுந்
தரைபுகழ் செய்திக் கெல்லாந் தலைவரா யவனி வேந்தர்
வரவிடு திறையுங் கண்டு மற்றவர்க் கினிய செய்து
பரிவுடைத் தென்னன் பாரந் தம்வயிற் பரித்துப் போந்தார். (௯)

துளங்கிய பத்தி பூண்டு சொக்கநா யகன்வி ரும்ப
விளங்கிய நலங்கள் செய்து மேதகு தொண்டர் மாட்டுங்
குளிர்ந்ததங் கிளைஞர் மாட்டுங் கொடுத்தரும் பொருண்மற் றெங்கும்
வளர்ந்தபே ரறங்கள் செய்தார் மனத்திலோ ராசை யில்லார். (௧௦)

மன்னவ ரிவரே யென்ன வாழுநா ளனிலுஞ் சாதி
மெய்ந்நெறித் தரும நீங்கா வேதிய ரமைச்சி னாலே
முன்னையிற் றனது செல்வ முடிவிலா தோங்கக் கண்டு
தென்னவன் மகிழ்ச்சி யெய்திச் சிறக்குநா டம்மி லோர்நாள். (௧௧)

வேறு.

கோதி லாத குதிரைத் துறையவர்
றீதின் மாறன் றிருமு னணைந்தவன்
பாத மீது பணிந்தாங் கொடுங்கிநின்
றோது வார்க ளுறுபெருஞ் செய்திகள். (௧௨)

நீதி மன்னவ ரேறே நினைவறச்
சீத வெம்மையிற் றேய்ந்தன சில்பரி
வாத நோயிடை மாய்ந்தன சில்பரி
யாதி வெப்பி லழிந்தன சில்பரி. (௧௩)

கண்ட மாலை கவுசி மகோதர
மண்ட சாலம்வெஞ் சூலை யலகுநோய்

தண்டை நோய்பிர மேகந் தலைக்கணங்
கொண்டு மாண்டன சில்பெருங் கோடகம். (கச)

துற்ற மற்றை வரிசைத் துரகமும்
வற்றி யுய்யுமுய் யாவென மன்னின
பொற்பி லங்கு புதுப்பரி யிங்குநங்
கொற்ற மோங்க விரைவிற் கொளப்படும். (கரு)

மண்ணி னீண்மறு மண்டலங் கொள்பவர்க்
கெண்ணி லங்கொ ரிலக்க மிவுளிகள்
கண்ணு பந்தியிற் கட்டத் தருமென
வுண்ணி றைந்த விருப்பி னுரைசெய்தார். (கசு)

வேறு.

மற்றவ ரியம்பக் கொற்றவன் கற்ற வாதவூர் முனிவரை யழைத்திங்
குற்றுயர் புறுநங் காரிய மனைத்து நின்னுணர் வாலுணர் கின்றே
நற்பிர மாணி நீயலா லுண்டோ ஞானிலத் தமைச்சர்க டம்முட்
கற்றறி வுள்ள தலைவனே நினக்கோர் காரிய முணர்த்துவங் கேண்மோ. (கஎ)

பகர்ந்தனர் வந்து பரித்துறை யாளர் பரிவுறு நம்பரி யனைத்து
மகந்தரு நோயால் வீந்தன வென்றே யறைப்படுங் காசணி தூசு
தரும்பெருங் கனகம் வேண்டுப வெடுத்துத் தாவுமா விறங்குபட டினத்துப்
புகுந்துயர் பரிகொண் டணைந்திட வேண்டும் புரவிநா லிலக்கமுந் தெரிய.

வேறு.

என்றீது சொல்ல வாழ்த்தி யான்சொன்மி னெனவே சொன்னார்
நன்றருள் செய்த மாற்ற நாதனே விரைவிற் செய்வ
லின்றுநீ விடைதா வென்ன வியம்பிநல் விடையிற் போந்து
துன்றுபொன் னறைமாட் டெய்தக் காவல ரெதிர்து தித்தார். (கக)

வேறு.

பொன்னி னீடிய புஞ்சமா மறையினுட் புக்குத்
துன்னு பல்பொருள் சூழ்ந்தகண் காணியி னெடுத்துப்
பன்னு நீதிசேர் பல்பெருங் கணக்கினும் படுத்து
முன்வி ருப்பொடு கட்டினர் பெட்டக முட்ட. (உ0)

வேறு.

பொய்ம்மை யின்றிப் பரிக்கும் புகழுடைச்
செம்மை யோரைத் தெரிந்து பரிவொடும்
வம்மி னென்ன வரவழைத் தாங்கவர்
தம்ம னங்களிப் பத்தன நல்கினார். (உக)

ஆங்கி லங்கு மளப்பரும் பெட்டகந்
தாங்கு மென்றவர் தம்வயிற் சேர்த்தருட்

டேங்கு நாதன் றிருவால வாயுமை
பாங்கி ஞனைப் பணிவமென் றெய்தினார். (உஉ)

வேறு.

எண்ணில்பெரும் பாவ மிமைப்பளவி னீக்குவிக்கும்
புண்ணியநன் னீர்பொலியும் பொற்றா மரையதனு
ணண்ணிநெறி யாசமித்துப் போந்து நலங்கடரும்
பெண்ணை யனதுதிக்கைப் பிள்ளை யுழைச்சேர்ந்தார். (உங)

ஆங்குமர ஞேங்கியபே ரண்டம் வலம்வரவே
யோங்குமரன் றன்னைவலம் வந்தாங் குறுகனியை
வாங்குசதி ரோனே மதவா ரணவரசே
தேங்குபுக ழைங்கரனே செய்யமலர்த் தாள்போற்றி. (உச)

காத்தருளா யென்று தொழுது கரங்கூப்பி
யேத்தி யருள்பெற்றுப் போந்தாங் கினிமைதருஞ்
சீர்த்தி பொலியு மிமவான் றிருமகளார்
வாய்த்த திருக்கோயில் புக்கார் மதியுடையார். (உரு)

என்றூர் வரைமயிலே யேழ்பொழில்வாழ் கோகிலமே
யொன்றாய வேதா கமவாவி யோதிமமே
பொன்றாத வெண்ணெண் கலைபேசும் பூவையே
மன்றார் கடம்பவன மானே யடிபோற்றி. (உசா)

வேறு.

இவ்வண்ணந் துதித்தி றைஞ்சி யின்னருள் பெற்றுப் போந்து
செவ்வண்ணச் சொக்கன் மிக்க செம்பொனா லயத்துப் புக்கு
மைவண்ணக் கண்டத் தானே வாய்த்தபே ரண்டத் தானே
மெய்வண்ணப் பாதத் தானே யென்றுசூழ்ந் திறைஞ்சி வீழ்ந்தார். (உஎ)

விழுந்தவர் திருமுன் சென்று விண்ணப்பஞ் செய்வார் வேந்தர்
செழும்பொருள் சொடுபோய்க் கொள்ளுங் காரியந் தீங்க தின்றி
யொழுங்குறப் பலித்தல் வேண்டு முனையலா லுதவி யில்லென்
றழுந்தமுன் னுரைத்துப் போது மளவினி லருளா லாங்கு. (உஅ)

வெண்டிரு நீறு கொண்டோர் வேதிய னுவந்த ளிப்பக்
கண்டது வாங்கிச் சாத்திக் காரியம் பலிக்கு மென்று
சொண்டகங் களித்துப் போந்து குறைவிலாக் கனகத் தோடு
மண்டிய தானை யோடும் புறப்பட்டார் மதுரை விட்டு. (உகா)

கற்றைவெண் கவரி வீசக் காயகர் கீதம் பாடக்
கொற்றவெண் குடைநி ழற்றக் கோதையர் மருங்கு வாழ்த்த
மற்றுமன் னரைநி றுத்தி மாணிக்கச் சிவிகை யேறி
முற்றுபல் லியங்க ளோங்கப் போந்தனர் மூடிக வன்றே. (ங0)

சாலிநீள் கழனி தோறுந் தண்மலக் கதிரா வீனும்
பாலுறு தடங்க டோறும் பணிலநித் திலம்பி றக்கு
மேலுறு சாபந் தீர விந்திரன் வெள்ளை யானை
காலைவந் திறைஞ்சுந் தொல்லைக் கானையம் பதியு டைந்தார். (௩க)

வேறு.

ஆரண மும்மபக லுமிந்துவு மாடரவு மந்தண னும்மரியுந் தும்புரு நாரதரும், வாரண முந்திருமான் மைந்தனு மிந்திரனும் வானுயர் தேவர்களுங் கோடைை மாமுனியும், பூரண நாமகளும் பூமக ளும்முமையும் பூழிய னுந் திருவோ டேழுல கும்பரவுங், காரண வன்குரவார் கந்தவ னச்சோமன் காளைம ணங்கமழுந் தாளைவ ணங்கினரால். (௩உ)

வேறு.

கருதுமப் பதியை விட்டுக் காதங்கள் பலவு நீங்கி
வருநெறி வசத்தி னுறு மாசின்முற் றொடர்பி னுறு
மருள்புனை வாத வூர ரன்புடைச் சம்பு வாழுந்
திரைபொரு மொய்யார் பொய்கைத் திருப்பெருந் துறையைச் சேர்ந்தார். ()

வளைமதி காட்டப் பூக மரகதங் காட்டக் கொன்றை
நளிநிதி காட்டக் காட்ட நாகநித் திலமெ வர்க்கு
முளமகிழ் துறக்கங் காட்ட வுயர்சிவ புரத்துச் செல்லக்
கிளரொளி வழியீ தென்று கேதகை காட்டச் சென்றார். (௩௪)

நிறைபெருந் தவத்தோர் வேள்வி நீங்கரும் பெருமை மிக்கோர்
மறுவிலா மூன்று நூறு மறையவர் விளங்கு மூதூ
ரிறைநியினின் மருங்க ணைந்தோ ரியாவரா யினும்பி றங்கப்
பிறிவிலா வமர ராக்கும் பெருந்துறை முந்தைப் பேரூர். (௩௫)

வேறு.

அருந்தவர் சிந்தைசெ லுந்துறை வந்தணை யந்தணர் முந்தைமகம்
புரிந்துசெ யுந்துறை சந்தைப டிந்துறை புந்திக டந்தபதந்
தருந்துறை யிந்திரை வந்துறை யுந்துறை தொந்திகொ டந்திபடும்
பெருந்துறை யெந்தைப ரிந்துகு ருந்தினி ருந்தபெ ருந்துறையே. (௩௬)

வேறு.

வயலெலாங் கன்னல் செந்நெல் வனமெலா நாகம் பூக
மயலெலாந் தேர்வி மான மனையெலா முனிவர் வானோர்
புயலெலா மாட கூடம் புறமெலாம் வேள்வி யோமங்
கயலெலாந் தாவும் வாவிக் கரையெலாந் தவஞ்செய் வோரால். (௩எ)

வேறு.

* சகம்பரி வறுகலைச் சங்க மேறிய
மகந்தரு மறையுரு வங்க மாறற
முகந்தரு புலக்கடன் முடிய வோமடியே
தொகும்பொருள் படும்பெருந் துறையைச் சார்ந்ததால். (௩அ)

### வேறு.

அந்தக ரணையா முன்ன ரங்கநெஞ் சுறாவே ருகித்
துன்னுபே ரன்பு நீடத் துணைவிழி யருவி பாய
வுன்னரு மயிர்சி லும்ப வுயர்கரங் குவிய வாறு
வன்னிசேர் மெழுகே யென்ன வுருகினார் வாத வூரர். (௩௯)

திருந்துமுற் றவத்தி னாலே செல்வமே லாசை விட்டுப்
பரந்தநெஞ் சொடுங்கக் கண்டு பன்முறை யதிச யித்துப்
பெரும்பதி யடையா முன்ன ரடைந்தது பேரன் பெந்தை
பொருந்திய தலங்க டம்முட் டலமிது போலொன் றின்றே. (௪௦)

பரிவினிங் கெய்தற் கென்ன பாக்கியஞ் செய்தே மிந்த
வரியசெங் கனகத் தோடு மமர்வமென் றறுதி யிட்டுப்
பொருவரும் படையை மிக்க பொன்பரித் தவரை மற்றும்
வரிசையுள் ளவரை யங்கண் வரவழைத் தருளிச் செய்வார். (௪௧)

### வேறு.

வரர்புக ழாடித் திங்களிற் குதிரை வந்திடா தாவணி மதியிற்
கரைதொறு மிறங்கு மையமோ வில்லை காவல்கூ ரரும்பொருட் கெல்லாம்
பரிநனி கொண்டு வருகுவ லியானே பாண்டியற் குரையுமிச் செய்தி
தெருமர லுறாது கடிதுபோய் நீங்கள் சிவன்செய றெரிந்திடா தென்றார். ()

### வேறு.

ஆங்கவர் போயு வப்ப வரசனுக் குரைப்ப விப்பா
லீங்கிவ ரொப்பார் போல யாவையும் விட்டுப் பொய்கை
யோங்குநீ ராடி வெண்ணீ றணிந்துய ரால யத்துப்
பாங்குறு மிறைவன் றன்னைப் பணிகுவான் றனிய டைந்தார். (௪௩)

திருந்திய சிகையு நூலுஞ் செவ்வியிற் றுளங்க வானுள்
விரிந்ததா ரகைக்க ணத்துள் விளங்குதண் மதிய மென்னப்
பரிந்துமா ணவர்கள் சூழப் பத்தனார் வரவு பார்த்துப்
பெருந்துறைக் குருந்த நீழ லிருந்தனன் பெரிய வாசான். (௪௪)

காசினான் மறைமு ழங்கக் கருணையிற் சிறந்தி ருந்த
தேசிகே சனைக்கா ணாமுன் செயலழிந் துடலங் கம்பித்
தாசிலா விதியி னெட்டா லஞ்சினான் மண்ணிற் றோயப்
பாசமுன் றகல வீழ்ந்து பன்முறை பணிந்து நின்றார். (௪௫)

நின்றவர் தம்மை யன்பு நீடிய திருநோக் கத்தால்
வென்றிகொள் சிரமுன் னாக மேவுதா ளீற தாக
வொன்றிய மந்தி ரத்தா னோக்கநோக் குபதே சத்தான்
மன்றற வுபதே சித்து முன்னுற வமைவ ழைத்தான். (௪௬)

அன்னவ ரொல்கி மெல்ல வஞ்சியஞ் சலியிற் செல்லப்
பன்முறை முறுவல் கூர்ந்து பாவனை செய்து பண்பிற்
றன்னடி சூட்டி நாமஞ் சாத்தியா சாரம் பூட்டிச்
சின்மய வஞ்செ ழுத்தைச் செவிப்புலத் துபதே சித்தான். (சஎ)

நோக்கினாற் பாவ கத்தா னுவலரும் பரிச னத்தாற்
காக்குமீ னுடல டக்குங் கமடமொண் பறவை யென்ன
வாக்கினு ளுக்கு முன்ன ரடைந்தது ப்ரம ஞானம்
வாக்கினு மடந்தை சேர்ந்தா ளகன்றன மலங்கண் மூன்றும். (சஅ)

வேறு.

தேடு நீசிவ பாக்கியஞ் செய்தனை
நாட வேண்டுவ கண்டனை யானமைப்
பாட வேண்டு மெனப்பரங் கண்டவ
ராடி வாசக மோதுவ ரன்புற. (சகூ)

மருவு பொற்பத மன்னுறக் கண்டுள
முருகி யற்புத வாசக மோதுவார்
பரவு சென்னியம் பத்தெடுத் தோதியே
யரிய பாடலச் சோவென வோதினார். (ருo)

வேறு.

சிரித்த முகமுங் கவின்குழலுந் தீரா வருவிக் கண்மலரும்
விரித்த கரமுஞ் சபவடமும் வெண்ணூன் மார்புந் திருநீறுந்
தரித்த திருவா சகமொழியுஞ் சாந்த மெய்யுங் குறுவியர்வு
மரித்த மனமும் புளகமுமாய் நின்றார் வாத வூர்முனிவர். (ருக)

வேறு.

பதியின்வை பவத்தி னோனும் பதிந்தமெய்ஞ் ஞானத் தானு
முதிரும்வெம் பிறவிப் பாச மறுத்தவர் மூர்த்தி நாதன்
விதியினிற் காண்டி யென்ன மேதகு சாத்த லோதும்
புதுமைகூர் பிரம சாரிப் புதல்வரை விதியிற் கண்டார். (ருஉ)

நன்புளீர் நீங்க ளென்ன புண்ணியஞ் செய்தீர் நாதன்
றன்பரி வெய்தி நாளுஞ் சார்ந்தரு கணையப் பெற்றீ
ரின்புறு மெனக்கு மிப்பா லிருப்பதோர் கரும மில்லை
யன்புளீ ரடைந்தே னென்பா ரதிசயப் பத்தெ டுத்தார். (ருங)

வேறு.

அங்க ணிவ்வா றறைந்திடுங் காலையப்
பொங்கு ஞானப் புதல்வர்க டம்மொடு
மங்கை நாயகன் மாணிக்க வாசக
விங்கு நில்லென் றியம்பி மறைந்தனன். (ருச)

ஆதி நாயக னென்றொழிந் தாயிரம்
போத மேவும் புதல்வர்க டம்மொடு
மோது ஞானங்கள் காட்டி யொளிக்குமுன்
வாத வூரர் வலியபித் தேறினார். (௫௫)

குழுவி னோடு குருவை நினைந்திணை
விழிக ளாறு பொழிய விழுந்தெழுந்
தழுது விம்மி யரற்றி யரற்றினின்
றொழிவில் வாசக மோதத் தொடங்கினார். (௫௬)

வேறு.

மாறிநின் றென்னை யென்னு மாறிலொண் கோயிற் பத்துத்
தேறல்வண் புணர்ச்சிப் பத்துச் செத்திலாப் பத்து மற்று
மாறிய பிரார்த்த னைப்பத் தாசைப்பத் துயிரு ணிப்பத்
தேறிய புலம்பல் வாழாப் பத்தெண்ணப் பத்தெ டுத்தார். (௫௭)

அரும்பெரு நகரி னிற்போந் தவ்வயிற் றிகழ்வ கண்டே
பொருந்துமய ரன்னையே சுண்ணங் கோத்தும்பி புகழ்த்தெள் ளேணந்
திருந்துபூ வல்லி யுந்தி தோணோக்கஞ் சிறந்த பாவை
முரணுக்டி சதக மெய்யென் றோதினு ரோதப் புக்கார். (௫அ)

வேறு.

யருந்தியுட னூனுறக்க மின்றி யாங்கண் வாசகமோ திடக்கேட்ட தொண்ட ரெல்லாம், பொருந்தியதி சயித்திவைமுன் கேட்ட வல்ல புதுமையெனச் சூழ்ந்திறைஞ்சிப் போற்றல் கண்டு, பெரும்புரவி கொளவந்த பொருளனைத்தும் பின்வருங்கா ரியமொன்றும் பாரா ராகிப், பரிந்துகொளு மெனக் கொடுத்தார் சிறிது நாளிற் பாண்டியனு ரீண்டுபொருண் மாண்ட தாங்கே.()

தருங்கனகக் குவையனைத்து மளித்து நாளுந் தாமேயோர் சங்கையறப் பாடிக் கொண்டு, குருந்தினொடு மறுகினொடு மறுக விப்பாற் குணமொழித் துத் தனமழித்த செய்தி முற்றுந், திருந்துநெறி மதியமைச்சர் திரண்டு சென்று செப்பக்கேட் டுளத்தாழச் சீற்றத் தோடு, மிருந்துமணி முடிதுளக்கிச் செங்கோன் மாற னிகற்றூதர் கரத்தோலை யெழுதி விட்டான். (௬0)

வேறு.

தென்னவர் பரவுந் தென்னவ னோலை தென்னவன் பிரம ராயனே காண்க, பொன்னிறை யறையிற் பன்முதல் கொண்டு புரவிகொண் டணை வான் பரிவொடும் போனு, னென்னினைந் தின்னம் வந்தில னமைச்சற் கிப் படிச் செய்யத் தக்கதோ சடிது, மன்னிய வாடற் புரவிகொண் டடைவின் வருவது கருமம் மற்றது பழுதால். (௬௧)

வேறு.

இத்திரு முகத்தை யாங்க ளெய்திய தூதர் காட்டப்
பத்திசெய் தடைவின் வாங்கிப் பாசுரங் காணு முன்ன

முத்தமிழ் மன்னன் சித்த முணர்ந்தனர் நெடிது யிர்த்தார்
புத்தியு ளிளைத்தார் சாலக் கலங்கினர் புலம்பி னூரால். (சுஉ)

தென்னவ னமைச்ச னேயா னென்னகா ரியஞ்செய் தேன்மே
லென்னதாய் விளையுங் கெட்டே னிவுளிகொள் வதற்கே வந்தேன்
பொன்னனை யழித்தே னந்தோ புகலவோர் மாற்ற முண்டோ
மன்னவற் பிழைத்த லாகா மற்றினி யாவ தென்கொல். (சுங)

ஆதரித் தடிய னேனை மாலழித் தாண்டு கொண்ட
வேதநா யகற்குச் சென்று விண்ணப்பஞ் செய்வ லென்றுங்
கோதரும் பெரிய செல்வ ரொப்பார்போ லச்சத் தோடுஞ்
சோதியா லயத்துப் புக்குத் தொழுதுநின் றழுது சொல்வார். (சுச)

வேறு.

தேமா லயனு மறியாத தேவ தேவே தயாநிதியே
வாமா கொண்டு வரச்சொல்லி வழுதி யோலை வரவிட்டான்
ஏமா வொன்றுங் கொண்டதில்லை தனமு மடியார் தமக்கிட்டேன்
போமா றுரையாய் கண்பாராய் புவியி லினியார் துணைசெய்வார். (சுரு)

பொருந்து தில்லை வனங்கடந்து போந்து வேந்தற் சேர்ந்தருளின்
வருந்த வுடலந் தனிவிருத்த மறையோ னாகி மறையோர்கட்
கிரங்கி யருங்கீழ் நீர்காட்டி யிரவகன் மீட்ட பெருமானே
குருந்த வரம்பிற் கரந்தமறைக் கொழுந்தே செழும்பொற் றாள்போற்றி. ()

வேறு.

போற்றியென் வாழ்முத லேயென வெடுத்துப் புலருமுன் னினியவா சகத்தா லேற்றுயர் கொடியுடை யானையங் குணர்த்தி யினியாற் றுதிகளாற் றுதிப்பச், சாற்றருங் கொடுந்துயர் கூர்ந்தவர் துயரந் தணித்திடு வானருள் கூர்ந்து, தோற்றிய தவ்வுழி மேற்றிகழ் விசும்பிற் றுளங்கிட வுயர்திரு வாக்கு. ()

வேறு.

நினக்கி யாமுண் டௌமஞ்சே னிலைமை யுடனே கைதவற்குக்
கனத்த புரவி வருமென்று கருணை யுறவேண் டுபவிட்டுப்
பனைப்பை போலே நிறைத்தெழுதிப் பரிவின் விடுப்பா யெனக்கேட்ட
வினைக்க னில்லார் களித்தெழுதி விட்டார் நெடிய கட்டோலை. (சுஅ)

வேறு.

ஏதுபுகழ் வாள்வழுதிக் கடியேன் வாத வூரனேன் விண்ணப்ப முணர்ந்து கொள்வாய், தீதுமொழி கேளாதைந் தாறு நாளிற் றிரளிவுளி வருஞ்சிறந்த பந்தி கட்டி, வீதிபட நீர்க்குவிடுந் தடங்கள் வெட்டி வீதிகள் வையாளி யலங்க ரித்தாங், கேதமொழிக் தடியேனை நயந்து முன்போ லெழுந்தருளி யிருந் தருண்மெய் யென்றே தேறி. (சுகூ)

இத்தகவிற் றூதர்காம் விடுத்துத் தம்பா வியைந்தபெரும் பாரம்விடுத் தால யத்து, மெத்தனவிற் றுயிலுங்கான் மருங்க ணைந்து மெய்த்தவகே ளன்புடையார் நின்போ லில்லை, சித்தமுறு காரியநா முடித்த றிண்ணந் தீர மொடு தென்னவனுள் வருமுன் சென்று, புத்திகளி தரத்தக்க துரைத்தி யெ ன்று புகன்றொளித்தா னன்பர்சுமை பூண்டு கொண்டான். (எ0)

கனவுநிலை நீங்கியபின் போவ லென்றே கருணையுடை நாயகனை வணங்கி வாழ்த்தி, மனமகிழ்ந்து விரைந்தொப்பார் போலச் சென்று மதுரையடைந் தமைச்சருடன் மண்ட பத்தின், முனமெழுதி வருமோலை கண்டு ளத்து முனிவொழிந்த மன்னவனைக் காண மன்னன், றனதருகு வரவழைத்தாங் கிருந்தோர்ப் போக்கித் தனித்துரைப்பா னுளத்தினிய தயாமீக் கூர்ந்தே.(எக)

வே று.

மறங்கடி பொருட ளக்கு வாசியெவ் வளவு கொண்டீ
ரிறங்கிய துறைநா டேதே தெவ்வள வுயர்பு போது
நிறங்கடா மென்னெ மக்கேற் றனதென் போது நீதி
பிறங்கிலக் கணங்க ளென்னை பேசிமீர் கூச லின்றி. (எஉ)

என்றுரை செய்யக் கேட்ட வினியமா முனிவர் தேறி
மன்றுறை தனைநி னைந்து பகருவார் மன்ன ரேறே
வென்றிமா ராட்ட கங்காம் போசமா ரியஞ்சாம் ப்ராணி
துன்றுசைந் தவமுன் னான துரகமோ பெருகக் கொண்டேன். (எ௩)

புகலருஞ் செலவு டைத்தாய்ப் புணரியின் முழக்க மிக்குப்
பகைபட வொன்றுக் கொன்று பணைத்தெழும் பெருமை கூர்ந்து
சகமதி சயிப்பத் தோன்றுந் தாண்டுவெம் பரிமா நிற்க
வகைபடு மறுகாற் பொங்கு மதுரையு மிடம்போ தாதால். (எச)

மன்னிய விலக்க ணத்தால் வருணத்தாற் கதியான் மிக்க
நன்மைகள் சொல்லத் தக்க வல்லவோர் நாவா லின்று
முன்னுற வந்த வாறே காண்கின்றூப் முழுது மீங்கே
யென்னையான் விய த்து கூறே னென்றனர் நிலைமை பூண்டு. (எ௫)

உற்றது கேளா முன்ன ருவகைகூர்ந் தணியல் வாசி
கொற்றவெண் குடைக ளாசி கோவைசேர் முத்த மாலை
பொற்புறு மாணிக் கப்பூண் பொற்படாம் பட்டுக் கூறை
மற்றும்வேண் டுவகொ டுத்து விடுத்தனன் வரிசை கூர. (எ௬)

விரைவொடும் விடையிற் போந்து வேண்டுப தமக்கு நல்கும்
பரிவுடைச் சொக்கன் வாழும் பைம்பொனா லயத்துப் புக்குக்
கரையழி யன்பி னோடுங் கசிந்துநின் றிறைஞ்சி யேத்தி
யுரைசெய்வார் தனித்து மெல்ல வுற்றகா ரியத்தை யாங்கு. (எஎ)

வேறு.

நந்தார்கரர் செந்தாமரை வந்தார்தொழு மெந்தாய்
நாதாவதி பூதாசதுர் வேதாவித கீதா
பந்தார்விரல் வண்டார்வரி வண்டார்குழல் கொண்டாள்
பங்காவென தாகாபர யோகாசிவ லோகா
மூந்தாதர சங்காதர சங்காரவி டங்கா
மூலாகம நூலாகுண சீலாதிரி சூலா
தந்தாவென நின்றாடிய பொன்றாழ்மணி மன்றார்
தாளாவரு ளாளாசின தாளாவெனை யாளே. (எஅ)

வேறு.

மன்னு துரகம் வருமென்று வழுதி மகிழ வுரைசெய்தேன்
பொன்னு மடியார் தமக்கிட்டேன் போமா றுரையாய் கோமானே
யென்னை யடிமை யாக்கொண்ட விமையோர் தலைவா வுமைபாகா
வுன்னை யொழிய வறியேனென் றுரைத்தா ரிம்பை யுடம்பானார். (எகூ)

வேறு.

ஈங்கிது சொல்ல வானந் திசைந்ததோர் பெரிய வாக்காங்
கோங்கிய தஞ்ச லஞ்ச லென்னவவ் வுரைகே ளாமு
னீங்கரும் பரிவிற் போந்து நீடுதம் மனைக்க ணெய்தி
யாங்குயர் நாய னாரைப் பூசைசெய் தமுது செய்தார். (அ0)

உண்டலுஞ் செய்தி யெங்ஙன் முடியுமென் றுளத்த மூங்கிக்
கண்படை கொள்ளுங் காலைக் கண்ணன கிளைஞர் வந்து
பண்பினி னுணர்த்தி மன்னர் நீதிநூல் பரக்கக் கற்றுத்
தண்புக ழமைச்ச ரானாய் சாதுமார்க் கந்த விர்ந்தே. (அக)

மன்னவ ரிதய மாரே யறிகுவார் வாத வூரா
வென்னது நினைந்தா யந்தோ வருவதே யினியா ருண்டு
நின்னுறு கிளைஞர்க் கென்ன விடும்விடு நீரார் யாமா
ரன்னிய ரல்லான் ஞாலத் தார்வெறுப் பாரு வப்பே. (அஉ)

ஈசனோர் மனிதன் போல வென்னைவந் தாண்டு கொண்டான்
மாசறு பிறப்பும் விட்டேன் மன்னவற் பிழைத்த லாகா
பேசிலிங் கதனால் வந்தேன் பெரும்பொருட் டனிசு மின்றே
யாசிலோ ருபாயத் தாலே போக்குவ லைய மின்றே. (அங)

இங்குளீர் போமி னுங்கள் காரியத் தென்று நீக்கப்
பங்கய விலையு நீரு மெனவவர் பற்றற் றுங்குத்
தங்கனெஞ் சகத்து நொந்து போயினார் தரும மாறன்
மங்கல முறைசெய் வோர்கள் வந்தனர் மீற்றை ஞான்று (அச)

புரவிவந் தனவோ வென்ன மெய்ப்பட வருமிப் போது
விரைதல்வேண் டாம்பொ றுத்து வீதிகோ டிக்கச் சொன்மின்
கருதினீங் கென்னை யின்றோர் கலியாண ஞகக் காண்மி
னுரைசெய்த மாற்றந் தப்பா துரைசெயு மரசற் கென்றார். (அரு)

ஆங்கவர் போந்து செய்தி யறைந்திடக் கேட்ட வேந்தன்
பூங்கமு கரம்பை நாட்டிப் பூரண குடங்கள் வைத்துத்
தேங்கமழ் தாம நாற்றித் திசைதொறுந் தீப மேற்றி
யோங்குபட் டாடை யான்மேல் விதானித்தா னுயர்வான் முட்ட. (அசு)

பந்திவை யாளி சங்க மண்டபம் பண்ட சாலை
கொந்தவி ழலங்கன் மாட மாமடங் கோபு ரங்கள்
சுந்தரன் பெரிய கோயி றோரண வாயில் வீதி
யிந்திர நகரி யென்ன வெங்கணு மலங்க ரித்தான். (அஎ)

மெய்ந்நெறி மன்னர் மன்னன் விளம்பிய காலஞ் சென்ற
தின்னமும் வந்த தில்லை யினப்பரி யென்று சீறி
நன்னெறி முறைசெய் வோரை விடுப்பவாங் கவர்க ணண்ணி
முன்னுறக் கேட்பப் பின்னு முன்புபோன் மொழிந்து விட்டார். (அஅ)

வேறு.

மல்லல் லோங்கு மலய முனிவகே
ணல்ல தோர்விளை யாட னவின்றனே
கல்வி மன்னன் கனக மழித்தவொண்
செல்வ மாமுனி பின்னரென் செய்தனன்*. (அகூ)

ஆகத்திருவிருத்தம் - ருகூகூ.

---

## உஅ.—நரி குதிரையான திருவிளையாடல்.

இத்தகு தியினி ருக்குங் காலையி லெழுந்தி றைஞ்சி
யொத்தபே ரமைச்சர் முன்னின் றுரைசெய்வா ரரச ரேறே
மத்தன்வார்த் தையினைக் கேட்டு வளாக ரலங்க ரித்தாய்
பித்தனீ யல்லா லுண்டோ பேசுவ தென்னை யாங்கள். (க)

பெருந்துறை யடைந்த போதே பித்துமேற் கொண்டா னங்கண்
டிருந்துசெங் கனக முற்றும் போக்கினன் செயல்வே றுளன்
பொருந்துகோ வணமு மோடு மல்லதோர் புரவி யில்லை
யிரங்கிடேல் வினைத்து வாங்கு பொன்னிழ வாதே யென்றார். (உ)

---

* இது, வெள்ளிபாட்டென்றீ சிலபிரதிகளில் எழுதப்பட்டுள்ளது.

### வே று.

தூய்ய மன்னவ னன்னவர் சொல்லகீ டுயிர்த்துச்
செய்ய தாமரைக் கண்மலர் தீயெழ விழித்து
மைய னெஞ்சனை வளைத்திடும் வளைத்திடு மென்ன
வெய்ய சொல்லுடைப் பிரம்படிக் காரரை விடுத்தான். (௩)

இன்னல் செய்குவான் சென்றவ ரிடர்கெட வோது
முன்ன ரும்பெருஞ் செய்திகள் கண்டுள மஞ்சித்
துன்னு மன்பிது கண்டில மென்றுகை தொழுதே
மன்னு மேனியி னேவன செய்திலர் வளைத்தார். (௪)

மற்று மூன்றொழித் தினைத்தவர் வளைப்பிடை யிருப்பக்
கொற்ற மன்னவன் பின்னருங் கூற்றினை யனைய
வெற்றி வீரரை விடுத்தனன் சிறைசெயு மென்றே
செற்ற மோடெழ வைதனர் வைத்தனர் சிறையில். (௫)

வேத னைப்பட விருத்திய வெங்கொடுஞ் சிறையாற்
போத நீடிய கடுந்துயர் பொறுக்கமாட் டாம
லாதி நாதனை நினைந்தழு தலர்க்கணீர் சொரிய
வாத வூரரும் புலம்புவார் வாசக மோதி. (௬)

### வே று.

மன்னுசுந் தரனே வாசி வந்தன வில்லை யென்று
தென்னவன் வளைத்து வைத்துத் தீயெழ நெருக்கா நின்றான்
முன்னது பொறுக்க கில்லேன் முடிப்பனென் னுயிரை நீயன்
றென்னையாண் டனையென் வேண்டி யின்றிரங் காத தென்றோ. (௭)

### வே று.

பொருவி லெரிவாய் சொரிந்ததெனப் புரவி வரவு சொலச்சொலவிங்
கிருநி லிருநின் மானபுர மென்னுங் கொடுமை பொறுக்ககில்லேன்
வரிசை கூர வீற்றிருக்கு மன்னர் வாழ்வு மினியமையு
மனாயும் பொருளுங் கடந்தமறை யொளியே வெளியே யுதியாயே. (௮)

மின்னும் புகழா வருளாளா மெய்யே மனிதர் போல்வந்திங்
கென்னெஞ் சுருக்கி யுரைத்தவுரை தப்பா தெனவந் தியானுரைத்தேன்
மன்னன் காண்பான் விழிகுழிய வழியை நோக்கி யிராநின்றான்
றுன்னும் புரவி கொடுவிரைவிற் றோன்றாய் தோன்றாய் தோன்றாயே. (௯)

### வே று.

ஆரிய மொழியு ளோரு மருந்தமிழ்ச் செய்யு ளோருங்
காரிய முறைசெய் வோரும் யாவருங் கசியச் சொல்வார்
சோர்வறக் குழைத்தா யென்றுஞ் சோதியே சுடரே யென்றுஞ்
சீரிய நாம மோதத் தரித்திலர் தேவர் தேவே. (௧0)

வேறு.

ஒழுக்கந் தருமந் தவந்தான முறவு வாய்மை பொறைமற்றும்
விழுப்ப முள்ள சூத்திரர்வாழ் மிழலை நாட்டு நரியெல்லா
மழைத்துத் தெருட்டி விளையாட லவனி மீது நனிவிளங்கத்
தழைத்த தலத்தை நரிக்குடியென் றின்றுஞ் சொல்வர் சான்றோரே. (கக)

வேறு.

அண்டம் விள்ள வடிப்பர் பிடிப்பர்க
ணண்டு ணுந்நரி காணரி யாதுநீர்
கொண்ட மன்ன னிடங்குறு காழுனம்
பண்டை நுங்குரல் காட்டும் பயமற. (கஉ)

வேறு.

குணங்கொண் டினைய போதித்துக் குதிரை யாக்கித் தப்பிரியா
திணங்குங் கணங்க டமக்கடைத்துப் புறப்பட் டாரே ரிவுளிமிசை
வணங்குங் கணங்கோ மாயுமா மாயப் புரவி மீதேறி
யணிந்து புறப்பட் டதுதுறையா ளுடைநா யகனைப் புடைசூழ்ந்து. (கங)

வேறு.

ஆதர வுடியார் முற்று மடிபணிந் தேத்தப் போந்து
வாதையம் புரத்து நண்ணி மணிச்சிலம் போசை காட்டத்
தீதற வாண்ட வெந்தை திருச்சிலம் போசை யென்றே
யேதமா முனிவர் தேறி யிசைபடத் துதிக்க லுற்றார். (கச)

வேறு.

கணங்கொள் சிறுவ ரிடியெனமுன் னூதுங் காளங் கறங்குற்ற
துணிந்து புடவி விசேடமுயர் துறக்கத் துணர்த்தச் செல்வதுபோன்
மணங்கொண் மதுரை காதமென வாசித் தூசி வீசியதங்
கணைந்த தறியா ராயறிவா னறைவா ரீசன் றிசைநோக்கி. (கரு)

வேறு.

கோலிய பொன்றே யில்லை குதிரையோ வரவு காணேன்
காலவெந் தூதர் போலக் காவல னேவ லாளர்
மேலெழ நெருக்கா நின்றார் மெலிவுறும் வினையே னுற்றே
னாலவா யானே சால வஞ்சினே னஞ்சி னேனே. (கசா)

நாதனே யருளிச் செய்த வார்த்தையை நம்பி வந்தேன்
வேதனை யுறவோ நாயேன் மெய்ம்மொழி மொழிந்தே னகச்
சோதிநீள் வாசி கொண்டு தோன்றெனப் புறம்போந் துள்ளத்
தேதமுற் றழுங்கா முன்ன மெய்திய தூதர் சொல்வார். (கஎ)

புண்ணிய வடிவ ரேயொண் புத்தியுள் ளவரே யிந்த
மண்மிசை யமைச்சர்க் கெல்லா மன்னர்நீ ரல்லா லுண்டோ

வெண்ணரும் புரவி வந்த வின்புறக் கண்டோர் தாழா
துண்மகிழ்ந் தேதத நீங்கி யுறைசெயு மரசற் கென்றார். (கஅ)

அத்திறங் கேளா முன்ன ரகமகிழ்ந் தரசன் பாற்சென்
றுத்தம மன்று சிற்ற மொழியொழி நகரின் பாங்கர்த்
தத்துமா வந்த வென்று சாற்றினார் தூத ரென்னச்
சித்திர மண்ட பத்துச் சேர்ந்தனன் வாழ்ந்து வேந்தன். (கக)

நிலவுசா மரையி ரட்ட நித்திலக் குடைநி ழற்றத்
தலமகி ழால வட்டந் தையலார் நின்று வீசத்
தொலைவிலா மன்னர் போற்றச் சூதமா கதர்கள் வாழ்த்த
வலகிலா வணியாற் பொங்கி யரிகொளா சனத்தி ருந்தான். (உ0)

வெம்பரி வரவு பார்த்து வீதிவா யிருக்குங் காலைச்
சம்புமா சமாதி யாலே சம்புமாத் தாழ்க்கக் கண்டு
வெம்பிநீ டம்பி ளோடி யோசனை மீண்ட தூதர்
செம்பரி வரவு நான்கு திசையிலு மில்லை யென்றார். (உக)

மற்றது சொல்ல நல்ல மந்திரி வாய்த்தா னந்தோ
வுற்றநம் பொருளை யெல்லா மழித்தலு மன்றி யோங்குங்
கொற்றமா வீங்கிப் போது வரும்வரு மென்று கூறி
முற்றிய பொய்ந்த டாத்தா னின்றன னெனமு னிந்தான். (உஉ)

நீக்கினேக் கடியார் தம்மை நிரைநிரை வரவ ழைத்துத்
தேக்கட னுகு நீங்கள் கொண்டுபோ யஞ்சிக் கூசா
தூர்க்குள புளிக்க ளோங்கி யுள்ளமா றனைத்தும் வெட்டி
மூர்க்கமந் திரியி வன்றன் முதுகிடைப் போக்கு மென்றான். (உங)

அங்கவர் கொடுபோய் நோவ வடிப்பதற் கணையக் கண்டு
செங்கணீர் வார வாரத் திருமுகம் வேர்ப்ப வேர்ப்ப
வங்கணன் றனைநி னைந்தாங் கடைக்கலப் பத்து முன்னாத்
துங்கவா சகங்க ளோதத் தொடங்கினார் வடக்கு நோக்கி. (உச)

வேறு.

வாதை மறலி தண்டமென மன்னன் சிறைசெய் கூடத்துப்
போது திகழ்பூம் பொழிலணைந்த பூங்கோ கிலத்தைப் பார்த்தருளிக்
கீத மினிய குயிலேயென் றெடுத்த திருவா சகங்கிள ர
வோதி முடியா முனமெங்கு முள்ளா னுள்ளத் தருள்சுரந்தான். (உரு)

வேறு.

தெரிதரு காள வோசை யவனியைச் செவிட தாக்கி
மருவிய கடைநாட் பொங்கு மழைமுழக் கதனைக் காட்டப்
பரியெழு குரஞ்சேர் தூளி பகன்மறைத் திரவைக் காட்ட
விருமைசேர் நகரி தன்னு ளெய்தின வெவரு ங் காண. (உசு)

மாவல வீரன் வந்தான் வணங்குவோ ரிணங்கன் வந்தான்
பாவலர் புலவன் வந்தான் பாண்டிநன் ஞடன் வந்தான்
காவலர் பெருமான் வந்தான் கடம்பமா வனத்தான் வந்தான்
றேவர்க டேவன் வந்தா னென்றன தெய்வச் சின்னம். (உஎ)

வழுதிகண் டதிச யித்து மயங்கிமால் கொண்டோர் போலத்
தொழுதுகொண் டெவருங் கண்ணீர் துளிப்பவா சகங்க ளோதி
யழுதிடு நாய னாரை யழைத்தரு ளணைத்தி ருத்திப்
பொழிதரு கண்ணி னீரைத் துடைத்தனன் பொறுக்கச் சொல்லி. (உஅ)

வேறு.

குழுவொடு திரண்டுஞ் சிதறியும் பரந்துங் கூடியுங் கடன்முது திரைபோற்
கழறிகழ் பதத்துக் கறும்பொரு செவ்வாய்க் கடையின்வெண் ணுரைநில் னென
விழுமிய வெண்சா மரைமுக மசைய விண்ணெனத் தார்மணி யார்ப்ப [ப்ப
முழவொடு சுற்று முற்றையுங் காத்து வந்தது முதுபரிச் சாத்து. (உகூ)

வேறு.

கடப்பன குதிப்பன பகைத்தவை தனித்தனி களித்தறு மணிப்ப வொருபா, லடப்பன நிலத்துறு பணப்பணி செறுக்கென நடிப்பன நெறிக்க ளொருபா, லடர்ப்பன மிகைத்தக கனப்பரி திரற்பரி யையச்சமு றவிப்ப வொருபால், விடக்கடல் கொதித்தென மிகைத்தெவ ருமுட்கிட மிதிப்பன விதத்தி னொருபால். (௩௦)

வேறு.

வாளகிரி நூறுபட நூறுவன மாறுபட வானமுறு பேரண்டநீள், கோளகையின் முட்டுவன பட்டமுறு மெட்டியாகு லக்கரிகண மத்தகமிசைத், தாளதிர வைப்பவம ரேசன்விடு மாவினொடு தண்டுவன மண்டியொழியா, நீள்கடலு டுத்தவட மேருவைநெ ருக்கியெழ நேரிடுவ மற்றுமொருபால். ()

வேறு.

இசைப்படு முகிற்குல நிகர்ப்பன நிலத்தினை யிலத்தியி னிறைப்ப வொருபாற், றிசைப்படு குலக்கிரி களொட்டையு முழக்குவ செயுத்தும றுவற்ற வகலவான், மிசைப்படு முடிக்குல மூகிர்த்திரு சுடர்கஞம் வெருக்கொள வுகைப்ப வொருபால், வசைப்படு மணத்தொடு பெருத்திடு மிலக்கண வகைப்படு வயப்ப ரிகளே. (௩உ)

வேறு.

எற்றிகழ் பலவி தஞ்சேர் பொற்றலைக் கீடி லங்க
வுற்றபன் மணியாற் பொங்கு மொப்பிலதுப் பாய மின்னுங்
கற்றையங் கவரி துற்ற வாயுதங் கையில் வாங்கி
வெற்றிகொள் சொற்ற வீரர் வீசியிர் ரெண்ட விட்டார். (௩௩)

வேறு.

மன்னியசித் திலமாலை நிலவெறிப்ப மாணிக்கக் குண்டலங்கள் வெயி
ல்வி ரிப்பத், துன்னுலகுக் கொருகுதிரை யாளாஞ் சோதி சோதிவிடு குப்
பாயமெய்ப்பான் மின்ன, முன்னைமறைப் பரியைநெறி யைந்து மோங்க
முடுகிவல மீட்டம்பரிவத் தனஞ்செய் வித்து, மின்னவணி பொலன்கலினக்
குசைவலித்து விளங்குகர வாளங்கை துளங்க வந்தான். (௩௪)

வேறு.

வெல்பரி நிறத்தாற் பீடா லொலியினா லுனையான் மிக்க
பல்கடல் கிளர்ந்த தென்னக் கிளர்ந்தன பல்க டற்பாற்
சொல்லரு மளவில் கோடி சூரிய ருதித்தா லென்ன
வெல்லொடு விளங்கி னார்க ளியைந்தசாத் தவர்க ளியாரும். (௩௫)

விழுமிய குதிரை யீடு காண்பதற் கணைந்த விண்ணோர்
வழுவிலா முனிவர் நேமி மாலயன் மகவான் மற்றுந்
தொழுதுரு மருங்கு மீண்டித் துதிசெய்தார் கற்ப கப்பூஞ்
செழுமலர் பொழிந்து வாழ்த்திச் செயசெயென் றடிசே வித்தார். (௩௬)

துங்கவெம் பரிமேற் றோன்றுஞ் சொக்கனைக் கண்ட வீதி
மங்கையர் சங்க நீப்பா ரணங்கெல சரிந்து நிற்பா
ரங்கமேற் செம்பொற் றூப்பா ரறிவொரா லெல்லா ரெங்கும்
பொங்கிய பெருஞ்சூல் கொள்வார் புலம்புவார் வீழ்வார் சோர்வார். (௩௭)

அழியினை சாரி யொன்பா ரலர்ந்ததா மரைக்கண் செவ்வி
வடிவினைப் பாரீ ரெல்லாம வல்லசுந் தரனே யென்பார்
படிமிசைக் காண்டற் கென்ன பாக்கியஞ் செய்தோ மென்பார்
கடிமைசைப புரவி தயமை யோட்டுமோ காண்டற் கென்பார். (௩௮)

அன்னவா புலம்பக் கண்ட வாடல்சேர் பாட லன்பர்
மின்னனார் தமமை வேறு மொழியமொன் றெடுத்து மெல்ல
வினவிய லலர்மேன் மேயன்று மேலமிசை படமு டித்துக்
கன்னல்வச மன்னனைப் பத்தாங் கோதநார் களியிற் கூடி. (௩௯)

நின்றெறி பரவருவார் மாந்தேனணில்பல் வியங்க ரங்கப்
பொன்மணிக வடந்தூழ்ற்ப் பொலன்கொள்சா மரையி ரட்ட
மன்னரேம்வரா மேலோ வீச வந்துவை யாளி வீதித்
துவளெய கவாங்க ளொடும் துளங்கினான் வளங்கொ ணுதன். (௪௦)

ஆங்குறை கண்ட வேந்த னதிசய முற்றி யாரு
மோங்குமா யுதமும பூணு ம் பழமு முருவு மொத்துத்
தாங்குறை வற்றி ருந்தார் தலைவர்யா ரென்னக் கேட்பப்
பாங்கணை வாத வூரர் தோன்றுவர் பரியி லென்றார் (௪௧)

அவ்வயி னெங்குந் தானே யாதார மாயி ருப்பத்
தவ்வுமோர் கோட கத்தை யாதார மாக்கிச் சால
வெவ்விய மூன்று பாச மறுக்குமென் கரத்து மிக்க
செவ்விய விரண்டு பாசம் பிடித்தனன் றிறமை கூர. (சஉ)

கருதிடி னொருகா லத்து மசைந்திடாக் கமலத் தாளைப்
பரிவொடுங் காண யாரும் பன்முறை யுறவ சைத்து
மருமல ரயனான் மாலான் மறையினா லளக்க வொண்ணாத்
தருமநீ டுருவத் தாணு தாணுவே யெனவி ருந்தான். (சங)

கள்ளநீங் கிடவ டிக்குங் கசையொலி யசனி மான
வுள்ளபே ரண்டம் விள்ள வுயர்மிடற் றோசை காட்ட
வெள்ளிமால் வரைமேற் றோன்று மேருமால் வரையே யென்னத்
துள்ளுவெண் புரவி மீது தோன்றினான் றரணி நாதன். (சச)

புண்ணியஞ் செய்த மேனிப் பூழியா வாழி வாழி
கண்ணிமை யாது சற்றுக் கண்டிடு கண்டி டென்று
பண்ணியல் குதிரை வீரர் மெச்சுசே வகன்ப ரிந்து
மண்மிசை யேறி னானவ் வாசியை வாசி யாக. (சரு)

வேறு.

கூருந் தொடையும் பெயர்ச்சியுஞ் செல்லுங் குறிப்பொடு குசைகசைக் குர
யாருங் காணச் சீருந் தொழிலு மிதம்பட விதம்பல காட்டிச் [லும்
சேரும் பாடு நேரும் விலங்குந் திறல்வல வோட்டிட வோட்டுஞ்
சாரும் மாக வாளியு மற்றுஞ் சாற்றரு மார்க்கங்க டோன்ற. (சசு)

வேறு.

விக்கிதம் வற்கி தம்புப கண்ட மேவரு முபசவஞ் சவமாஞ்
சிக்கில நடைவெம் புளைவுதா வாளி சிறுகின மெய்ந்நிறை கடுப்புப்
புக்குள பஞ்ச தாரையோ டத்த புளகித மத்தமண் டலம்பே
ருக்கிர பெகிர மண்டலங் கோமூத் திரியெனு மொன்பதும் விளங்க. (சஎ)

வேறு.

மின்பரிவு கூரவெழில் வெவ்விடைந டாத்தித்
தென்புலமி லங்குவரு தேவர்தொழு தேவ
னன்பரிரு பாலுமலர் சிந்திநனி யார்ப்ப
வின்பமுற வெம்புரவி யேறினனு வந்தே. (சஅ)

வேறு.

அரனரி யயனச் சுரவர சுமுனு
யிரமுக சுபதக் ரமமுறு நெறியே
சரிகம பதனித் தகவனு மனியா
வருமறை யயமுய்த் தன்வய முறவே. (சகூ)

வே று.

மனத்துறு செருக்கொடு மருத்தைநிகர் வெற்றிச்
சினப்பரி பொருத்தமமர் செண்டுவெளி தன்னுட்
டனத்தன தனத்தன தனத்தன வெனத்தன்
வினைப்பட நெறிப்படி மிதித்தது நடித்தே. (௯0)

முந்திய செழுங்கவரி நின்றசைய முற்றும்
பந்தமுறு கஞ்சமணி கொஞ்சவெழு பண்ணிற்
சந்துறு சதங்கைகள் சலன்சல னெனத்தன்
சுந்தர விசைப்படி நடித்ததுது டைத்தே. (௯க)

வே று.

தருமப் பரதச் சவுதத் தடைவே
தெரியத் தனதத் தனதத் தெனவே
புரையற் றுருகிப் புவிமெச் சிடவே
பருமப் பரிநற் பதம்வைத் ததுவே. (௯உ)

மெத்துந் தகவும் விதமும் படவே
தித்தோந் தொந்தோந் தித்தீ யென்றென்
றொத்துந் தாளத் தொக்கத் தத்தித்
தத்தும் பரிதன் றாள்வைத் ததுவே. (௯௩)

வே று.

பதிந்துமுன் காட்ட வெய்யோன் படியுமால் வரையிற் பாயா
வுதைந்துபின் காட்ட வெய்யோ னுதிக்குமால் வரையிற் றாவா
விதம்பட விடத்துக் காட்ட யமன்றிசைக் கிரியின் முட்டா
விதம்பட வலத்துக் காட்ட மேருவைக் கடந்த தாங்கே. (௯௪)

குறைவின்மண் டலம்வ ளைப்பக் கொள்ளிசோள் வட்ட மன்றி
மறுவற விளங்கிற் றுங்கு வளைந்ததோர் குதிரை யென்னத்
துறைநிறை வீதி காட்டத் தொடுகணைச் செலவே யன்றி
நிறைவொடு பிறங்கிற் றுங்கு நீண்டதோர் குதிரை யென்ன. (௯௫)

இடம்வலம் பரிவத் திப்ப விரண்டியர் குதிரை யென்னப்
படிமிசை விளங்கிற் றந்தப் பார்த்திவ னதிச யிப்ப
வடிபடும் வேத மென்ன வருந்தவஞ் செய்த தென்றே
யிடபமால் குதிரை யாவே னென்றியா னெனப்ப ணிந்தான். (௯௬)

மண்ணகத் தெவருங் காணா வாதவூ ரர்க்கா வந்து
நண்ணுதற் கரிய வீரர் நாற்பெருந் திசையு முட்டப்
பண்ணுறத் தூண்டு நீதிப் பரித்துகட் கிமையா விண்ணோர்
கண்ணிமைத் தார்வின் மண்ணு னதுகட் டிடரா யிற்றே. (௯௭)

ஏறனு மற்று முள்ள விருங்கண நாத ரெல்லாங்
கூறரு மல்ல மார்க்க மயின்மார்க்கங் குரக்கு மார்க்கம்
வீறுடை முயலின் மார்க்கங் கலைமார்க்கம் வியரால் வீதி
சேறுற வுகைத்தார் மற்றுங் கதிகளாற் சிறக்க வாங்கு. (ருஅ)

இடவிய கதியின் வாசி யொருவர்போ லேறற் கிந்தப்
படிமிசைக் கண்ட மில்லை தலைவர்யா ரென்னப் பல்கா
லடியிணை பரவி வந்த வருங்கண நாதர் யார்க்குங்
கடவுள ரிவர்கா ணென்று விரல்கொடு காட்டி னரால். (ருகூ)

ஆங்கவற் காணு முன்ன ரவசமா யெழுந்த தங்கந்
தேங்கமழ் முடியிற் றாமே சென்றன கரங்க டென்னன்
பாங்கல வெழுந்தி ருத்தல் பார்த்திவற் கென்றி ருந்தா
னீங்கரு மனிதர் முற்று நின்றிலர் தொழுது வீழ்ந்தார். (சுo)

மிக்கமந் திரிகா ணிந்த வெம்பரிச் செட்டி நந்தஞ்
சொக்கனே போலெ னக்குத் தோன்றிடா நின்றான் வந்த
சொக்கினைப் பாரீர் காலந் தாழ்த்ததா யினுங்கொ ணர்ந்த
மிக்கமந் திரியைப் பாரீ ரென்றுபன் முறைவி யந்தான். (சுக)

கொற்றவன் றிருமு னின்று கூறுவான் குதிரைச் செட்டி
யுற்றநின் னமைச்சன் றந்த வுயர்பெருங் கனக முற்றுங்
கற்கிக் ளிடுவ தாக நம்முளோர் கைக்கொண் டார்கள்
வெற்றிகொண் மன்னு கொற்ற வெம்பரி நீதி கேண்மோ. (சுஉ)

வே று.

புரிதிபாந் தரத்திமவான் புறத்தி னின்று போந்துபெருந் துறையிறங்கி வந்த வின்றிங், கருமறையிற் கடலமுதில் விதிகண் ணீரி லாரழலி லுலகத்தி லண்டந் தன்னி, லுரியதிசை யிருநான்கு தேவர் தம்மி லுயர்ந்தவெழு பிறப்பினவா யுளைசேர் மண்வாழ், சுரரரசர் வணிகர்சூத் திரர்நாற் சாதித் தோற்றத்த காணிந்தத் துரக மொத்தம். (சுந)

வே று.

மருவுநாய் கழுதை கோழி வாயதம் வெருகு கூகை
நரிபசா சேனம் பொல்லா நல்லன மயூரங் கீரி
பொருவிடை மடங்க லன்ன மகரம்வா னரம்பு னைக்கைக்
கரிபுலி முனிவர் வானோர் கடும்பரிச் சுபாவ மன்றே. (சுச)

வே று.

உத்தம விரலிற் காயமுஞ் சுழியு மொளிகளு நடைகளுந் துளங்குஞ்
சித்திர நிறமு நாற்றமுங் குரலுந் திறப்படு மனமுமிவ் வெட்டுஞ்
சுத்தமா வுடைய விந்திரன் றனுப்போற் றுளங்கவா டரவுபோ னலத்தான்
மெத்திநேர் வளைந்து திரண்டுநீண் டுயர்ந்து விளங்கிய கழுத்தன காணே. ()

வே று.

மல்லிகை கோங்கு காயா மாதுளை மலர்பூங் கிள்ளை
நல்லன மற்று மிக்க நவமணி நிறத்த வாகி
மெல்லிய சிவந்த நாவும் வெளுத்துநெய்த் தொத்த பத்திப்
பல்லுமாற் றக்கு றுத்த கன்னமும் பழுதி லாத. (சுசு)

வே று.

இறுகிக் குவிந்து குழிந்ததகர்க் குரம்போற் குரமு மிளநவ்வி
மறியிற் கண்ணு மகன்றுதணி முதுகு நீண்ட வாலதியுங்
குறுகிச் சிவந்த மேட்டிரமுங் குறுகா முகமும் வியனுதலுஞ்
சிறுகித் திரண்ட வண்டமுமெய் யழகுஞ் செழிய காணுயே. (சுஎ)

வே று.

மேலெழின் முசமுந் தூய விதமுடை நான்கு தாளும்
பாலதின் வெளுத்த சுத்தப் பஞ்சகல் யாணன் பாராய்
வாலதி தலைநெஞ் சொக்க மற்றவற் றொடும் வெளுத்த
வாலிய மணஞ்சி றந்த வட்டமங் கலங்கள் பாராய். (சுஅ)

உயர்கன வட்டம் போரா வூரனுளான் கொங்கான் கங்கான்
மயில்வரி நீலான் பொல்லான் மகிழ்விதை மௌவான் சேயா
னயனவஞ் சனம்பொன் மாரி பாடல நளினி பச்சை
பயமிலா மரீசி கோரம் பட்டவர்த் தனங்கள் பாரே. (சுகூ)

கஞ்சுகம் விலங்கு கொங்கை கவைக்குளம் புலக்கை கௌவ
மஞ்சுதா ளிரட்டை நாவோ ரண்டம் வேற் றண்டங் கொள்ளி
நஞ்சராத் தொழுநோய் காளா முகந்திரி கன்னங் கொம்பு
மிஞ்சிய மற்றுங் குற்ற மொன்றிலை விளம்புங் காலே. (எ0)

மன்னதி மனம்வி திர்த்தல் பிசகல்கான் மடித்தல் வீழ்த
லின்னெறி விலங்க லச்சப் படுதன்மே லேறப் பாய்தன்
முன்னெழல் கடித்தல் வீதி நிற்றறுண் முகஞ்சா டித்தல்
பின்னெழு லிருத்தன் மற்றுந் தீங்கிலை பேசற் கின்றே. (எக)

கருதின்வண் கதிவெங் கால கந்துக நிலைமை யோங்க
மருவிய குலமா மங்கை முகமுக மடங்கல் வாவல்
பொருவரு நடிகள் வைப்பிற் புயலொலி யொலியே மிக்க
பரிவுடை மன்ன நின்னைப் பரிக்குமிப் பரிமா மொத்தம். (எஉ)

முருக்கும்வெம் பட்ட யானை முகத்தலாற் றூள்கள் வையா
கருத்தினி லுலவு மாக்கள் கருத்தனைத் தையுங்க டக்கு
முருத்தெழ வொலிப்பின் வானத் தும்பர்கோன் பரியு மஞ்சு
மருத்திறங் கடிய மாக்கள் வாய்த்தன சம்பு வாணை. (எங)

வே று.

இப்பரி மாவொரி லக்கம வற்றினு ளிக்குழு வோரொருமா
முப்பஃ தாயிர மோர்பழு தின்றிமு தற்றர மித்தரமும்
வைப்பதி னூறுகு றைந்தன பின்னிவை யாயிர மற்றிவையு
மப்படி பெற்றவி லைப்பொனி லக்கம னைத்துமு ணர்ந்துகொளே. (எச)

வே று.

ஆரிருள் விடப்பே ரண்ட மாயிரங் கதிர்வி ரிக்குஞ்
சூரிய னுருஞ் சூழ்த றரிதமார் பரியா லேகாண்
கூரும்வா ரிதிகொ ளாமற் குவலயங் கிடத்தல் கௌவை
வாரிதி குடிக்குந் தீவாய் வடவையம் பரியா லேகாண்.* (எரு)

திண்டிறன் மன்னர் சென்று செற்றவர் மண்ட லங்கள்
கொண்டுதம் மன்ன ராளக் கொடுப்பதுங் குதிரை யேகாண்
மண்டுபோ ரினில்வென் னிட்ட மன்னரைப் படக்கொ டாமற்
கொண்டுபோய் விரைவி னுய்யக் கொள்வதுங் குதிரை யேகாண். (எசு)

அரும்பெருஞ் செந்தீ யில்லா வந்தணர் வாழ்வு போலும்
விரும்புதா ரகைக ளில்லா விளக்கமி லகல்வான் போலுஞ்
சுரும்புசூழ் மலரில் லாத சோலையுந் தடமும் போலு
நெருங்கிய துரக மில்லா நீள்பெருஞ் சேனை மன்னே. (எஎ)

பரியலகை யானை திண்டேர் பதாதிக ளெனும்ப டைக்குப்
புரவியில் லாத போது பொலிவுடைத் தன்று மண்ணும்
வரிசையு மற்று முற்றுந் தருவது மன்ன வர்க்குத்
துரகமே யல்லா துண்டோ தென்னவ சொல்லுங் காலே. (எஅ)

வரும்பரி தாழ்த்த வாகேள் வளர்சரா சரங்க ளெல்லாம்
புரிந்திளைப் பாறுந் தில்லைப் பொதுவினு ளாட லாலே
யரும்புக ழாயி வற்றுக் கச்சுவ மென்று நாமந்
திருந்தவோர் பொழுது நில்லா தெனுமது கொண்டு தேறே. (எகூ)

ஆதலா லறிஞர் முன்னு வறவுறப் பேசிக் கொண்டு
நீதியிற் கைக்கொ ளின்று நின்னது புரவி யாக
வீதியிற் கயிறு மாறி விட்டபி னன்மை தின்மை
யோதுவ நமது பார மல்லமே லுன்னை யென்றான். (அ0)

அத்திறஞ் சொல்ல நல்ல வறிவனீ யறைந்த தொக்கு
முத்தம நன்மை தின்மை யுன்கைவிட் டென்கை புக்கா
லெத்தையு மறிதல் வேண்டா வென்னவே முற்று மென்னச்
சித்திர மாக்க டம்மைத் தென்னவன் கைக்கொ டுத்தான். (அக)

* எரு, எசு, எஎ, எஅ, எகூ - இவ்வெண்ணிற்குரிய பாடல்கள் சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படவில்லை.

எத்திமா வறிஞர் முன்னு வினியபே ரன்பிற் கூடிச்
சேர்த்துநம் மிடத்தூண் டான செழுங்கன கங்கண் முற்றும்
பார்த்திடி னின்றி வற்றோர் பரிக்குநேர் விலைபோ தாவால்
வாய்த்தன குதிரை யென்று மன்னவன் வாங்கிக் கொண்டான். (அஉ)

ஐயமில் லாமன் முன்னின் றுவணி மூல நன்னாட்
டுய்யபே ருலகுங் கெல்லாந் துளங்குரா வுத்த ராயன்
மெய்யைமெய் யுடைய மெய்யன் மெய்யடி யானை வேண்டிப்
பொய்யிலா மன்னன் காணப் பொய்ப்பரி மாற்றஞ் செய்தான். (அங)

மின்னிய வுலகு தன்னில் வித்தின்றி நாறு செய்வோ
னன்னெறி யில்லாப் பொல்லா நரகனைத் தேவு செய்வோன்
மன்னிய நரிக டம்மை மறுகெலாம் வாவி யேறித்
தென்னன்முன் குதிரை யாகச் செய்புதோன் றுமல் விட்டான். (அச)

வந்துறக் கயிறு மாறி விட்டபின் வரிசை கூரப்
பந்தியுட் கட்டு மென்று பரித்துறை யாளர் கையின்
முந்துற வடைப்பப் போற்றி யவரவர் முதுபே ரன்பிற்
றந்தமில் வகையிற் சேர்ந்து தனித்தனி கைக்கொண் டாரால். (அரு)

இந்நெறி மன்னர் மன்ன னினிமைகூர்ந் திராவத் தற்கு
நன்மைகூர் வரிசைத் தூசு நல்குவ மென்று நல்கக்
கொன்னுறு கரஞ்சேர் செண்டி லேற்றுமுற் கொம்பிற் சேர்த்துத்
தன்னடி யானை வேண்டிச் சடைமிசைப் புனைந்து கொண்டான். (அசு)

பாடன்மா முனிவ ரேத்தப் பாண்டியன் றிருமுன் னெய்தி
நீடுமோ றேடுஞ் சொக்க னீள்பரி யுகைத்துக் காட்டிச்
சேடன்மா நிலத்தா ரன்றிச் சேனுளா ரெல்லாங் காணச்
சூடலாற் றூசு சொக்கன் றாசென வழங்கிற் றன்றே. (அஎ)

ஆங்கது செண்டி லேற்பச் சிறிய வரசற் கண்டு
தீங்ககல் வாத வூரர் தேசவா சார மென்ன
வோங்கிய தியாக வேந்த ரெக்குமென் றெவர்க்குந் தூசு
தூங்ககில் லாம னல்க வாங்கிமுன் சூடி னாரால். (அஅ)

முன்னுறச் சென்று பன்றி நேடுதாண் முளரி சூடிப்
பின்னியன் முனிவ ரங்கண் பிடித்தபத் தெடுத்துப் பா...
நின்னுடை நினைவு வந்து முடித்தன நேச மிக்க
...ன்முனி யடிவி டென்று ...ாயக னருளிச் செய்தான். (அகூ)

...ற்றிரு மேனிக்...டு ...வையும விட்டுக் கையிற்
...பொற்றகை வாளம் வாங்கிப் புரவிமேற் கொண்டு காமைச்

சற்றடி வடிம்ப சைத்துச் சடைமுடி யிலங்குந் தூசு
மற்றுமோர் கங்கை யென்ன வருபவ னுருவம் போற்றி. (௧௦)

பல்வித வலங்கா ரஞ்சேர் பாய்பரி யுகைக்கு மிக்க
செல்வமார் சிறப்பி னுசை யுடையனு மீசன் றென்ன
னெல்லையி னீந்த தூசு சூடினு னும்பர் காண
மல்லல்கூர் கமலக் கையிற் கபாலமார் வாங்கு வாரே. (௧௧)

கண்டவ ரமைச்ச னுரைக் கடவுளை வியந்து செங்கை
முண்டகங் குவிய நெஞ்ச முண்டக மலரக் கண்க
ளுண்டுளி சிந்த விந்த நுவலருங் குதிரை யீடு
கண்டன மென்று னந்தக் கடலிடைத் திளைத்தா ரன்றே. (௧௨)

வாழ்ந்துபொற் பட்ட முன்னு வரிசைகள் வாத வூரர்க்
கீந்துநல் விடையிற் போக்கி யெழுந்துதன் னுழைக்கண் வேந்த
னூர்ந்தபல் லியங்க ளாலே யவனியை நிறைத்துச் சார்ந்தான்
ரூழ்ந்துசெவ் வந்தி மாலை தபனனூர் சாத்தக் கண்டு. (௧௩)

குணர்தரு கணங்க ளோடு குறுநகை செய்து தேவர்
பணிந்துபின் வரமுன் போன பத்த கள் பத்தன் றுனும்
பிணைந்தபல் செய்தி யெல்லாம் பிறங்குதன் பெரிய கோயி
லணைந்துபே ரங்க யற்க ணுமைமயிற் கருளிச் செய்தான். (௧௪)

சயந்தரும் பெருமை மிக்க சம்புவின் குதிரை யீடு
வியந்துகற் பவர்ப ரிந்து கேட்பவ ரிடத்து மெல்ல
முயங்குநல் குரவு நீங்க மூத்தவ ணீங்க நீங்கா
நயந்தரு மிளைய மங்கை நண்ணுதற் கைய மின்றே. (௧௫)

வேறு.

அரிய நாயக னூர்விளை யாடிய
புரவி யீடு புகன்றனை மன்னவர்
பரவு மன்னவன் பந்தியிற கட்டிய
பெரிய கோடகம் பின்னரென் செய்தவால. (௧௬)

ஆகத்திருவிருத்தம் - ௬௧௬.

## உ௧.—குதிரை நரியான திருவிளையாடல்.

இருமைதரு மதுரைநகர் நின்ற மாய வினப்புரவி முகமுகம்பார்த் தென்னே னென்னல், வெருவவடி யுண்டதல்லாற் கழுத்துங் காலும் வெங்கயிற் றுற் கட்டுண்டே மேலு நிற்பிற், குருதிபடப் புண்படுவே முணவு மில்லை கொள்ளிவேர் புல்லிவேர் பாவம் பாவு, நருமினித் தொத்துவர்நாம் விடியு முன்னர் நம்முருவங் கொடுநழுவக் கடவோ மென்றே. (௧

மிடற்றிலுறு கயிறெயிற்றுற் கங்குற் போதே மென்றறுத்து மதியாது
நரிக ளாகிக், கடைத்தெருவும் வாயில்களு மடமு மன்றுங் கடிமனையு மங்க
ணமு நுழைந்து மற்றெவ், விடத்திலும்புக் கொன்றுக்கொன் றுறுமிச் சன்
னிட் டிரும்பசியா லிகல்செய்து நகரி தன்னுட், புடைத்தெவரு மெழுந்திருப்
பச் சுழல வோடிப் போகாம லூளையிடப் புகுந்த வன்றே. (உ)

வேறு.

மண்டு மமரர்கள் கண்டு நகையுற மாறன் வெருவுற நீளவே
தொண்டை விடுவன வண்டம் வெடிபட நண்டை நினைவன துன்றியே
பண்டை நெறியினின் மண்டை யகழ்வன பந்தி மனைமறு கெங்கணுங்
கண்ட வவரவ ரஞ்ச வுறுமுவ கள்ள முறுமன முள்ளவே. (௩)

வேறு.

மற்றது கண்டு நின்ற வகைத்துறை யாளர் முற்று
முற்றிய பயத்தோ டென்னை முழுபுரி தெனக்க லங்கிக்
கொற்றவன் றிருமுன் சென்று கூறுவார் புலரு முன்னம்
பற்றல ரேறே நந்தம் பந்தியுள் விசேடங் கேண்மோ. (௪)

இன்னவென் றறிந்தோ மில்லை யிரவிடை யாணர் மாக்க
ளன்னரி போர்க்கி றுத்து நம்முளோர்க் காணு முன்ன
முன்னெழ வெருவிக் கையி லகப்படா தோடி முற்றுந்
தன்னமார் தொண்டை யாலே தரணியை நிறைக்கக் கண்டேம். (௫)

பழுதில்கண் டியின்றோ மில்லை பருப்புநெய் கருப்புக் கட்டி
யெதிரர மட்டித் திட்டே மிசவிய புல்லு மிட்டேங்
கழுவிய பயறுங் கொள்ளுங் கடலையுந் துவரை யோடு
முழுவது ஞ் சிறக்க விட்டே மொக்கனி முட்டக் கட்டி. (௬)

உற்றவை மற்ற வற்று ளொன்றயி லாது பண்டை
வெற்றிகொள் புரவி துள்ளு மறிக்குழு வேழக் கன்று
குற்றமி லல்லி யாடு குக்குடஞ் சூக ரங்கள்
மற்றுமிங் குள்ள வற்றின் மணிக்குடர் பிடுங்கக் கண்டேம். (௭)

இந்நெறி விளைந்த தென்ன வேங்கினீ யெய்த்து வீழா
ரின்னற விடக்கு மேயோ விளைவதற் கேது வேதோ
நன்னெறிப் பொருட்கு நீங்கு நணுகுமோ நெறிக்கே டுண்டோ
செந்நெறி யோர்க்குக் குற்றஞ் செய்தன வுளவோ வின்றே. (௮)

குருமொழி பிழைத்த துண்டோ கோளர்வாய்க் கேட்ட துண்டோ
தருமநேர் குன்றிற் றுண்டோ சகாக்கொலை செய்த துண்டோ
வாரழக் கொண்ட துண்டோ மறைநெறி கோடிற் றுண்டோ
வரவிதி வசமோ வேறோ வறிகிலே னென்ன யர்ந்தான். (௯)

விரைகொண்மண் டபத்துப் போந்து மெலிகுவோ னென்கொ லென்று
பொருவருஞ் சிறப்பின் வந்து போற்றிடு மமைச்சர்க் கண்டு
தெரிவுறப் புகுந்த வாறு செப்பநீ டுயிர்த்தி யாரு
மிருநில நோக்கி நின்றா ரியம்பவோர் மாற்ற மின்றி. (௪௰)

தகவொடு நாளுஞ் செய்யுஞ் சடங்குகண் முடித்து ளத்து
ணகையொடும் வாத வூரர் நணுகியீ தறியார் போலப்
புகலருந் தழலிற் றோய்ந்த புண்டரீ கமபோன் மிசக
முகநனி புலரு மன்னன் முன்பணிந் தென்கொ லென்றார். (௪௧)

மாடுறக் கண்டு நல்ல மதியுடை யமைச்ச னேநீ
நாடலிங் குனையா ரொப்பார் நல்லகல் யாண னன்றோ
கூடிய பரிநன் றாகக் கொண்டுவந் தனையே யுண்டோ
தேடிய வருமை சற்றோ தீங்குவே றுண்டோ வென்ன. (௪௨)

பகையிலா வேந்தே யெங்கும் பழுதற நேடி நல்லோர்
புகழயான் கொணர்ந்த தெய்வப் புரவியிற் பொல்லாங் குண்டோ
வகைவகை நெருநற் போதே வரையறுத் தறிஞர் முன்னா
வகமகிழ் வொடுகைக் கொண்ட தாரறி யார்கூ றென்றார். (௪௩)

அனைத்திது நெஞ்சஞ் சாம லறைவதெ னெருநற் கண்ணீ
கொணர்ந்தமா நரிக ளாகிக் கொடுங்குரல் காட்டி யூருட்
பிணமபட யாவுங் கொன்று திரிகின்ற செய்தி பித்தா
வுணர்ந்தனை யிலையோ கெட்டே னினியுனை ருதியோ வின்றே. (௪௪)

மேலுயர் குருவின் மாட்டும் வேந்தர்கண் மாட்டுந் தூய்மை
சாலுநான் மறையோர் மாட்டுந் தயாவுடைத் தோழர் மாட்டுஞ்
சீலமா தவத்தோர் மாட்டுஞ் சிந்தையஞ் சாது வஞ்சங்
கோலுமூக் கருக்குத் தண்டங் கொலையலா துண்டோ வேறு. (௪௫)

வெந்திறற் சிலையை யெல்லாம் வெம்பரி யாக்கி யின்றென்
மந்துரை தன்றூட் கட்டப் பண்ணினை மதிம யக்கி
யிந்திர ஞாலஞ் செய்வ தெம்முட னேயோ சாதி
யந்தண ஞெ யான்மற் றறைவதிங் கென்னை நின்னை. (௪௬)

வேந்தர்பொன் னழித்தோர் நல்லோர் வீடுமார்க் கஞ்சா திப்போர்
வாய்ந்தமா வுகைத்த வாசி வாரியப் பெருமா னெங்கே
சேர்ந்தசாத் தவரோ சொல்லாய் திண்ணிமை யோடு மெல்லச்
சார்ந்தநின் மேனி முற்றுந் தண்டிக்க வடுக்குங் காணே. (௪௭)

ஆரண மோதிற் றிந்த வடைவுசெய் வதற்கோ வென்று
கோரமா மொழிகள் கூறிக் கூற்றென முறைசெய் வோனைத்

நீர்வற வலைழத்து வெய்ய சிறையறை வளைத்து வைத்துச்
சாரரும் பொருளை யீளத்துந் தண்டித்து வாங்கு மென்றான். (கசு)

ஆங்கவர் தம்மைக் கைக்கொண் டகன்றவ ரிணையி லாத
வோங்குபே ரன்பு கண்டுள் ளுருகிமெய்ந் நலியா ராகி
யீங்கிறை பணித்த வாறு செய்திடா விடினெ மக்குத்
தீங்குறு மென்று வெய்ய சிறையறை வளைத்து வைத்தார். (கக)

பிறங்கிய வடிவான் மிக்க பெரும்பருந் துரக மெல்லாங்
குறும்பெரு நரிக ளாகி நெடுங்குரல் காட்டக் கூற்றிற்
றிறம்பட முனிந்த தென்னன் சிறைபுகுந் தழுங்கி மிக்க
வறந்தரு முனிவன் பின்னென் செய்தன னறைதி யென்றார். (உ௦)

ஆகத்திருவிருத்தம் - எகஙு.

## ந௦.—மண்சுமந்த திருவிளையாடல்.



பொறையகத் துடைய வேந்த னமைச்சரைப் போக வேவி
யறையகத் தொழியாத் துன்பத் தொடுபுகுந் தழுங்க விப்பான்
மறையகத் தோரி ரும்பு தருமனத் தேனை யென்று
சிறையகத் தோதா முன்னஞ் சிவனகத் தருள்சு ரந்தான். (க)

வேறு.

மொதியில் வளாசேர் தமிழ்நாடும் பொய்யா வையை மாநதியு
மதுரை நகரும் பாண்டியனு மண்ணுஞ் செய்த தவத்தானுந்
துதிசெய் தொண்ட ரகமகிழத் தொண்டு செய்து பிட்டளிக்கு
முதுமா மங்கை தவத்தானு முகிலு யகனை நினைப்பிட்டான். (உ)

பணிந்த வருணன் றனைநோக்கிப் பண்டே நமக்கு நனிநலல
குணஞ்சேர் வேத முனியிருக்குங் கொடிய சிறையைக் கண்டனையே
கணஞ்சேர் பொழுதிற் றூழாது கங்குற் கண்ணே கரைகடப்ப
மணஞ்சேர் பொருள்கொண் டொருநதியை வருவிப் பாயென் றறிவித்தான்.()

மேக நாத னெழுந்திரங்கி மெய்கள் கருகி மழைவிடக்கண்
டாகங் கலங்கி வேகவதி யருங்கால் கட்ட லில்லாது
பூகந் தெங்கு பறித்தெறிந்து பொருமீன் மறியப் பாந்தழுங்கி
மாக முட்டப் பயங்கொண்டு வந்த தெவரும் பயங்கொள்ள. (ச)

மன்ற நிகழ்தென் கரைகடந்து மதுரை நகருட் புகக்கண்டு
துன்று மிரவிற் பறையறையுஞ் சும்மை கேட்டு வாள்வழுதி
கன்றி மனமென் னுருநதி கால மொழிந்த காலத்திங்
கின்று பரலவ யெனப்பரந்த தின்றே முடிவென் றழிந்தெழுந்தான். (ரு)

ஆண்ட வதிகா ரியையழைத்தின் றருள்சேர் முனியை வனைத்ததனு
ளீண்ட வந்த தோவறியே னிறைவன் செயலோ தெரியாது
மாண்ட கரையை விரைவினிற்போய் மனைக டொறுங்கோ லறையிட்டு
வேண்டி யடைப்பா யெனப்போக விட்டான் விடுந்த திருங்கங்குல். (௬)

செருவார் கணசக ருடன்கூடிச் செல்வோன் றண்டஞ் செய்தூரி
னரைசேர் கிழவர் சிறியோர்கண் முதலோர் நடுங்க வடித்தெற்றித்
திரைசேர் கரையை யளந்திட்டுக் கொடுப்பத் தெருமந் தவர்பெரிய
வரையே யெனத்தங் கோலறைகண் மகிழ்ந்து சுமத்தப் புகுந்தனரால். (௭)

முதுபேர் நகரிற் றென்கிழை மூலை மனையி லிருப்பாளோ
ரிதமார் பிட்டு வாணிச்சிக் கிடுங்கோ லறைக்கோ ராளின்றி
விதிரா வழுது விழுந்தெழுந்து மேவு தண்ட மாற்றுமற்
பதிவா யுழன்று திரியுங்காற் கண்டா னெங்கும் பரந்துள்ளான். (௮)

நாதப் பறையன் பெருங்குயத்தி பங்கன் றுங்க நஞ்சுண்டோன்
வாதைக் கிழவி பிட்டுதிர்க்கு மகிழ்ந்து மண்மீ தூருக்கொள்வான்
சோதிக் காதிற் றழைசெருகிச் சும்மா டம்மா மதியாகப்
பேதித் தறுதற் கச்சைபுனைந் ததிலே விட்டான் பெருங்கொடுக்கு. (௯)

மழுவைப் பிரமன் றலையோட்டை மண்வெட் டியுங்கூ டையுமாக்கி
யழகார் தோளின் மிசைவைத்தோன் றணிமா முடியிற் கவித்தொன்று
பழுதி லொழியா நகைதுளங்கப் பதினு றுண்டின் பருவத்துப்
புழுதி படைத்த திருமேனி பொலிய வலிய நடைநடந்தான். (௧௦)

வருந்து மவடன் பாற்கிட்டி வாரா யம்மே விழுந்தெழுந்து
பரந்து திரிகின் றனையிந்தப் பார்மே னினக்கின் றென்போலத்
திருந்து கொற்றாள் கிடையாது வேண்டு மாயிற் செப்பெவரும்
விரும்பி யழைப்பப் போகாதிங் கணைந்தே னின்னை வேண்டியென. (௧௧)

## வே று.

நல்ல வவதரத்தே நண்ணினீர் நாயகரே
தொல்லை வினையறுக்குஞ் சொக்கோ வறியகிலேன்
மெல்லியமெய்ந் நோவ வடிப்பரிகல் வேந்தராள்
வல்லையினின் மண்சுமக்க வல்லீரோ நீரென்றாள். (௧௨)

வேலை யுலகில் விறகு சுமப்பதல்லாற்
சாலுமுடி மேல்வைத்துத் தண்ணீர் சுமப்பவன்யா
னேலவரு மண்சுமக்க வல்லே னிளையாமற்
கூலியெனக் கேது தருவா யெனக்கூற. (௧௩)

அந்தித் திருக்கும பொருளில்லை யையயரே
கந்தித்து வெயதாய் நறுவிதுய்க் கண்ணுகருச

சிந்தைக் குவந்திருக்குஞ் செவ்விகூர் பிட்டுண்டு
முந்தத் தருகுவல்யா னென்றான் முதுநகையாள். (கச)

சிட்டனருட் சொக்கன் றிருவுளத்துக் கொத்தவனீ
வட்டமுறு பிட்டென்ன வேண்டா வனைந்தம்மை
யிட்ட மதுகே ளெனக்கிங்கு நீயிட்ட
பிட்டுதிரு மாமென்றான் வேள்வி யவியுவந்தான். (கரு)

## வேறு.

தக்கதோ மனிதர் பொல்லார் கோலறை தாழா தோங்க
விக்கணத் தின்க ணாற்றங் கரையடைந் தயின்றி வற்றை
யொக்கமண் வெட்டி முட்டச் சுமத்திடு முழப்பா தென்று
மிக்கமென் பிட்டுச் சுட்டுக் கொடுத்தனள் விருப்பங் கூர்ந்து. (கசு)

தின்றது வாங்கிக் கச்சைச் சுற்றுழை நெருங்கக் கட்டித்
தின்றிது போலொன் றில்லை சிவனறி குவனென் றோடி
மன்றலம் பொழில்சூழ் வையைக் கரைமருங் கடைந்து மாறா
வொன்றிய நகையி னோடு முலாவினு னகில நாதன். (கஎ)

இனியன பெற்றா னல்லோ ரெவர்க்குமிட் டயில்வ தல்லாற்
றனியயி லார்க ளென்று சாற்றுவார் பழையோ ரென்று
கனவிய வட்டப் பிட்டுக் கைக்கொடு பிட்டுப் பிட்டு
வினைபடச் சுமக்குங் கூலி வேலையா ளர்க்கு மீந்தான். (கஅ)

வனைந்தரு பிட்ட னைத்து மாண்டபின் மீண்டு மெய்தித்
தளர்ந்திடே லம்மை சாலத் தளர்ந்தியான் பசியால் வந்தே
னளந்தகோ லறைபார் சென்று சிறிதொழிந் தவற்று ளெல்லாந்
துளங்கவா றுறச்சு மந்தேன் சொக்கனு ராணை யென்றான். (கக)

சுத்தமா வுதிரை வேண்டிச் சுமந்திடான் சுமந்தே னென்ன
வுத்தம மெய்தோய் மண்கண் டுவகைகூர்ந் தரசே யின்றுஞ்
சித்திரப் பிட்டுச் சுட்டுத் தருகுவல் செல்லு மென்று
வித்தகப் பிட்டுச் சுட்டுக் கொடுத்தனள் வெம்மை கூர. (உ0)

புகழ்ந்தது வாங்கி யொல்லை போந்திரும் புனலி யாற்றின்
றருங்கரை யடைந்து முன்போற் றனயின் றெவர்க்கு நல்கி
யுகந்தகொற் றாளர் நாப்பண் வளம்பல வுரைத்து நல்ல
சுகம்பட வடைப்பான் போல வுடைப்பன்மண் சுமவா னாகி. (உக)

தூங்குகோ லறைய ளந்த வுயர்பெருங் கணக்க ரங்கட்
டீங்கறச் சுமக்கு நல்லா டெரிப்பதற் கிணையக் கண்டு
வாங்கரும் வினாவி னோடும வந்துபேர் சொக்க னல்லா
னீங்கிவனை யொப்பா ரில்லை யென்னைமுன் னெரியு மென்றான். (உஉ)

மற்றுள பெருங்கொற் றாளர் சுமவாது மருட்டி யெங்குந்
தெற்றிய விவனை யோமுன் றெரிப்பதின் றெனவி லக்கக்
கொற்றுளா விவரி லீங்கோர் கூடைமண் சுமந்தா ரில்லை
முற்றுமிங் கியானே நின்று சுமந்தன னெனமொ ழிந்தான். (௨௩)

செம்மையின் வேலை யொன்றுஞ் செய்திலனேனுஞ் சொல்லு
மம்மர்தீர் வார்த்தை யாலே யாரையு மழுப்ப வல்லா
னம்மையுங் கோளு ரைக்கத் தகுமிவ னென்ன நாடித்
தம்முளே வெருவி முன்னர்த் தெரித்தனர் தமிழ்க்க ணக்கர். (௨௪)

கொடியதிண் கணக்கர் போகக் குழம்புகொற் றாளர் நாப்பண்
முடியணை கூடை யாக முறுவல்கூர்ந் தினிய பாடித்
தடமிசைக் கொட்ட ணைத்துத் தாண்மிசைத் தாளே றிட்டுக்
கிடையற வுலக மெங்கும் படர்ந்தவன் கிடந்தான் மெல்ல. (௨௫)

வளர்கரை பார்ப்பான் வந்த மன்னவன் மனிதர் கண்டு
கிளரமண் சுமவா னாகிக் கிடப்பவன் யாவ னென்னத்
தளர்வுடை வேலை யாளர் சாற்றுவார் மற்றிவ் வூரு
ளொளிவளர் பிட்டு விற்பா ளிட்டவா ளெனவு ரைத்தார். (௨௬)

நெறிப்படக் கிடப்ப தென்னை வடிவனீ நின்னை யாருந்
துறைசீசுமை யாளென் றிங்குச் சொல்கின்றா ரின்று னக்குக்
குறித்தகோ லறையி லாங்கோர் கூடைமண் ணிட்டா யில்லை
கறுத்ததி காரிக் குன்னைக் காட்டுவம் போது கென்றார். (௨௭)

நல்லகா ரியம தென்று நயந்தவ ரோடுஞ் செல்லக்
கொல்லெறி யடிகுத் தென்று கூற்றெனத் தண்டஞ் செய்யும்
வல்லதி காரி கண்டு மனத்ததி சயித்துச் சால
மெல்லிய வடிவ னீயார் விளம்பிடு விளங்க வென்றான். (௨௮)

தந்தைதாய் நட்டோ ருற்றோர் சகோதரர் பொருளொன் றில்லை
யிந்தமா நகரி லியானோர் மூலையி லிருக்குங் கொற்ற
னுய்ந்திட வெவர்க்கு நாளு முதவுவ லென்னைக் கொண்டு
பந்ததி காரிக் கென்ன காரியம் பகர்தி யென்றான். (௨௯)

புத்தியு ளொழியாச் சீற்றம் பொருந்ததி காரி நல்ல
பத்திசேர் குணவான் போலப் பகர்ந்தனை பகுந்து னக்கு
வைத்தகோ லறைக்கோர் கூடை மண்சுமந் திட்டா யில்லை
யுத்தரஞ் சொல்லா நின்றாய் கண்டில முனைப்போ லெங்கும். (௩0)

சதமுறை யடித்தற் குன்னைத் தகுந்தகா தல்ல வுன்றன்
விதமுறு வடிவங் கண்டே மெய்யொருப் பட்ட தில்லை

யதர்பட விரைவொ டெம்போ யடையடி படாதென் றேவப்
புதியவ் னடையா ளாகிக் கிடந்தனன் போந்து முன்போல். (௬க)

வே று.

அவ்வயினில் வெய்ய வரசன் விடையின்வருஞ்
செவ்வி முறைசெய்வோர் தீரக் குறைபார்த்துக்
கவ்வைவிளைத்து வருங்காற் கரையழிந்து
தவ்வுபுனற் கோலறையைக் கண்டார்க டாழ்வாக. (௬௨)

காய்ந்து விரைவி னிகலிக் கறங்கென்னச்
சேர்ந்து சுமக்கின்ற சிற்றளை யெற்றுபுன
லூர்ந்தகரை யெங்கு முயர வுயராமற்
றாழ்ந்ததிது யார்கோ லறைவிரைவிற் சாற்றுகென. (௬௩)

மன்ற றிகழ்பிட்டு வாணிச்சி கோலறையீ
தின்றிங் கவளிட்ட கொற்ற ளிவனுழப்பி
வன்றிறலீர் யாங்கள் சுமப்பமதி யாதுகிடந்
தின்று விளையாடு கின்றான்போ யென்றார்கள். (௬௪)

வெந்தழல்கண் சிந்த வெகுண்டாங் கவர்கண்டு
சிந்தைசிறி தஞ்சாது தீரத்து மண்சுமவா
திந்த விளையாட லெக்கா ரணமென்னக்
கந்தரநோ வச்சுமப்பல் காரணமொன் றில்லென்றான். (௬௫)

இன்று விரைவி லெழுந்து சுமவாயேற்
பொன்ற வடிப்பமென வஞ்சினான் போலெழுந்து
மன்றறிகழ் கொட்டா லொருகூடை மண்வெட்டா
வென்றிமுடி மேல்வைத்து மெல்ல நடையிட்டான். (௬௬)

வே று.

உன்னவரி யான்மேன்மை யங்க யற்க ணுமைகொங்கை படச்சிவக்கு
மெய்யன் முற்றுங், தன்னுருவ மென்னுமது மண்ணிற் காட்டத் தளருநடை
யிடக்கண்டு தண்டஞ் செய்யுந், தென்னன்முறை செய்வோர்க ளந்தோ விந்
தச் செற்றயக் கொற்றளின் கையிற் சற்று, நன்மையிலை யுடைப்படையா
னெனப்பி டித்து நமுதுகிற் கறுத்தடித்தார் சிவக்க நாடி. (௬௭)

வே று.

மன்னிட வடிப்புக் கங்கைக் கரையுயர் மண்ணை யோங்கக்
கன்னல்சேர் செங்நெல் வைகைக் கரையிடா முறுவ லோடு
மென்னைபே ளடிக்கின் றீரொன் றியைந்தகொற் றாளர் நாப்பண்
[illegible]ன்று வெள்ளிதந்தான் புக்குத் தன்னிலுத்தான் பி[illegible] (௬[illegible])

படுமெழு மதியை நந்தம் பாண்டியன் மரபெ னத்தான்
முடிமிசைச் சுமத்த லன்றி முடிமிசை யுவந்து வைத்த
வடிவுடைக் கங்கை யாறு தென்னவன் வைகை யாற்றிற்
கடிபட மண்சு மந்தா னவன்றிரு வருளுக் குண்டோ.* (௩௯)

இறையவ னொளிப்ப நின்ற விறைமுறை செய்வோ ரோடிக்
கறுவியெங் கொளித்தா னென்று நேடிமுன் காணா ராகி
வெறிகமழ் பிட்டுச் சுட்டு விற்பவ ளிடத்தி மைப்பிற்
குறுகியாங் கவளைக் கண்டு தண்டிப்பான் கோலி னார்கள். (௪0)

ஆங்கவர் கோலா முன்ன ரருளினா லெவருங் காண
நீங்கரு மிளமை பெற்று நிலத்தினின் றெழுந்து தெய்வப்
பாங்குடை யுருவத் தோடும் பரசிவ லோகத் தேகத்
தேங்கிய முறைசெய் வோருந் திகைத்ததி சயித்து நின்றார். (௪௧)

வேறு.

அடித்தபுளி மாறுபல சொல்வ தென்னை யரசன்முது கோவல்ல நம்பி ராட்டி, முடிக்குரிய விந்திரனுன் முகன்மா லாதி முப்பத்து முக்கோடி தேவர் தம்மிற், பிடித்தவரி லடித்தவரிற் பாலர் பார்ப்பார் பெண்டிரின் மூத்தோரி னிற்பவற்றி, னடப்பவற்றிற் பறப்பவற்றி லூர்ப வற்றி னடுமுதுகி னிடைப் புடைப்பு நணுகிற் றன்றே. (௪௨)

பொருந்துதலத் தோர்நகரோர் புறத்தோர் நாட்டோர் பூழியன்பாற் சென்றறிவ மென்று சென்று, வனைந்தொருவன் மேலடியிங் கியாவர் மாட்டு மன்னியதென் னெனமாறன் மாற னென்றாங், கரும்பெயர்பெற் றோனுந் தன் முதுகு காட்டி யருட்சொக்க னறிகுவனென் றிருப்ப வாங்கண், டிருந்த வெழுந் ததுவிசும்பி லெவருங் கேட்பத் திருவாக்குத் திருவாத வூரர்க்காக. ()

பாண்டியனே வேதஞ்சொல் யாண்டு வாழி பாக்கியமன் னாநமக்கு வாத வூரன், பூண்டதொண்ட னிவன்முகத்தா னம்மு ளோர்க்குன் பொருளறத் தின் வந்ததனுல் வாங்கி யிட்டோம், வேண்டுவன பரியுமிட்டோம் விடுவித் தற் குன் வேலையின்மண் சுமந்தடியும் பட்டு முண்டே, மீண்டுவிடு விடுநினக்கே நன்மை சால விவனைத்தன் வழிதிரிதற் கிரங்க லென்றே. (௪௩)

அந்தவுயர் திருவாக்குத் தோன்ற யாரு மதிசயித்து மன்னவனை நோக்க மன்னன், சிந்தைபய மெய்தியுறு புளகத் தோடுந் தேவர்பிரான் பரிமதுரைத் தெருவி லேறுங், கொந்தகன்வாக் கிதுபரிமாற் றறுதி யென்று கொடுஞ்சிறை யின் விடுத்தருகு வரவ ழைத்து, வந்தனைசெய் தினியபல வுபசா ரத்தால் வணங்கினான் றிருவாத வூரர் தாளில். (௪௫)

சார்ந்தவென தறியாமை யாலே மிக்க தாழ்வுகள்செய் தேனவற்றைப் பொறுத்துச் சாலச், சேர்ந்தருகிங் கெழுந்தருளி யிருப்பீர் போவீர் திருவுளத்தி

* இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை.

லடைத்தபடி செய்யுந் தூய, வேந்தர்புக ழருட்சொக்கர் நம்மேல் வைத்த
மெய்யன்பு வையகத்துக் கண்டே மில்லை, யேந்துதிரு வாதவூர் நாய னீரோ
யெனத்துதிப்ப யாரும்வியந் திறைஞ்சி னார்கள். (௪௯)

செந்நெறிசேர் விசும்பிடையிற் றோன்றுஞ் சொல்லைத் திருவாக்கே யெ
னத்தெளிந்தாய் தேவே றுண்டோ, நின்னையடைந் ததுகொண்டிப் பேறு
பெற்றே னீக்கரிய வெம்பாசத் துவக்க றுத்தே, னென்வழியிற் போகுவலின்
றைய நீக்கி யிணையில்லா வெந்தையையுண் டென்று ணர்ந்த, வுன்னருமிப்
பிரமாணத் தானின் செல்வ மோங்கியிடுந் தீங்கின்றி யுண்மை யென்றே. ()

வே று.

வைத்தரு ணமச்சி வாய வாழ்கவென் றெடுத்தாங் கோதி
யுத்தமர் போகக் கண்ட வுவகைகூர் செழியர் கோமான்
பத்தியிற் பின்சென் றேத்திப் பணிந்துநல் விடையிற் போந்து
சித்திர மண்ட பத்து ளிருந்தனன் செயலை வாழ்த்தி. (௫அ)

வாழ்ந்தருள் பெற்ற வேந்தன் மந்திரித் தலைவ னைப்பார்த்
தேய்ந்தகா ரியந்தா னுவ தழிவதிங் கினிநீள் வாரி
சூழ்ந்தமா நிலத்துத் தூய சூத்திர ரொழிந்து நீதி
வேந்தர்மாட் டமைச்சி னுக்கு வேதிய ராகா ரென்றான். (௫௯)

தொன்னெறி வாத வூரர் சொக்கனு லயத்துப் புக்கின்
றென்னையா ளுதற்கு நாதா வினப்பரி யிட்ட தன்றி
மன்னிய முடிவ ருந்த மண்சுமந் தனையே யந்தோ
வன்னமா மேனி நோவ வடியுமுண் டனையே யென்ன. (௬0)

உத்தர கோச மங்கை கழுக்குன்றுங் குருவங் கண்டு
சித்திரக் கோவை பாடித் தில்லையம் பலத்து வாவென்
றத்தன்வா னத்து னைப்பப் போந்தருந் தமிழ்கள் பாடிப்
புத்தன்வா தையும்வென் றியாரும் போற்றுபொற் பதம டைந்தார். (௬௧)

தொல்லைமா மன்ன னெந்தை சுத்தனு விருப்ப வேடன்
பல்லுறு மிறைச்சி நஞ்சம் பாலக னிறைச்சி யம்மை
நல்லபிட் டயிலக் கண்டே நல்லடி யார்க்கு நல்லான்
மெல்லியல் பாக னல்லால் யாருள ரெனவி யந்தான். (௬௨)

பொருவருங் கோயின் முற்றும் பொன்னினுன் மேய்ந்தி யாரும்
பரவவெண் குடைக ளாசி பகசோ மனாது சேரு
னரிவையர் முதலா நல்கி முன்னையி னன்பு பூண்டு
தரையினை யளவில் காலந் தருமநன் னெறியி னுண்டான். (௬௩)

வெருவரு முற்றும் பட்ட வெந்திற லடியும் வேய்ந்த
வொருதனிக் கூடை மண்ணு லுயர்ந்தநீள் கனாயு மூத்த

நாமக ளுயர்து றக்க நண்ணிய வாறுங் கண்டு
பரவிய மனிதர் முன்னிற் பல்பெருஞ் சிறப்பின் வாழ்ந்தார். (௯௪)

நிறைவுறு மதியங் கண்ட நெடுங்கடல் போலச் செல்வம்
பிறிவற விளங்கி மன்னன் பெருதபே ருலகம் பெற்ருன்
மறைபறை யிறைவன் பிட்டுண் டடியுண்டு மண்சு மந்த
வுறுகதை கற்போர் கேட்போ ருயருல காள்வ ரன்றே. (௯௫)

சுந்தர னவதா ரங்கள் சொல்லுவோர் நினைப்போர் கேட்போர்
சந்தத முனிவர் வானோர் சாரணர் சித்த ரேத்த
முந்தொளி விமானத் தெய்தி மூவுல கத்தி னோடு
மிந்திரன் முடிமேற் ருள்வைத் தேறுவர் சிவலோ கத்தே. (௯௬)

ஆகத்திருவிருத்தம் - ௭௭௧.

---

## ௩௧.—விருத்தகுமாரபாலரான திருவிளையாடல்.

சீர்விளங்கு முன்னொருகாற் பாண்டி நாட்டுச் சிறந்தபெருங் கிராமத் தோர் மறையோன் செல்வம், பார்புகழுங் குலமொழுக்கம் விழுப்ப மிக் கோன் பணிந்துறைச் சொக்கற்கே பத்தி பூண்டோன், பேரியலாண் மகவி ன்றி யருமை யாவோர் பெண்பயந்து வேதத்தால் வடிவாற சொக்கை, நேர வரு முயர்பிரம சாரிக் கிந்த நேரிழையைக் கொடுப்பமென நிச்ச யித்தான். (௧)

இத்தகவி னிருந்தோனொண் டொடிக்கு நல்யாண் டெட்டுநிறை தரு காலை யோதி மிக்க, புத்தியினோர் பாகவதப் பிரம சாரி புக்கிலுழைப் பிச்சை கொள்வா னுகக் கண்டு, வித்தையினல் வடிவான்மற் றென்றுங் காணுன் விளைவொடுகன் னியையுதகஞ் செய்யக் கண்ட, சுத்தமுடை மாதாவுஞ் சுற் றத் தாருந் துயருழந்து நனிவெகுண்டு சோகங் கூர்ந்தே. (௨)

குன்றமனந் தாதையையிப் பிரம சாரி குடிமுதல்கே ளாதினிய வேதங் கொண்டே, நன்றிபுனை கன்னிதனை யுதகஞ் செய்தாய் நன்றறியா யென்றி கழ நல்ல தாதை, யொன்றியிவன் கோத்திரகுத் திரங்கேட் பாமிங் கும்பர் பிரா னருளினு லொத்த வாயி, னின்றிதுகாண் பேமென்று கேட்பச் சொ ன்னு னிடுகுறிகோத் திரமுதன்மற் றியாவுந் தோன்ற. (௩)

இன்பமுறு பாகவத னியாவுஞ் சொல்லி யிடுகுறிவே றென்னனுமே யே ங்கி நின்றோ, ரன்புமுதற் பலகுணங்க ளுண்டா ளுது மவனிமீ தொருகுற் றம் யாவர் மாட்டுந், துன்பமுற வுண்டாகா திராது வேத சூத்திரங்கோத் திர ங்கல்வி யொழுக்க மற்று, நன்புதரப் பெற்றேமென் ருறி யாரு நலந்திகழ்மா தாவையுஞ்சொன் னயத்தா லாற்றி. (௪)

தந்திரநூன் மறைவிதியிற் சாறு செய்தே சடங்குமுடித் துதகநெறி தப்பா வாறு, முந்தவளித் தினியபல நல்கி நல்ல மொழிமொழிந்து வழிவிடுப்ப வணங்கி னேடுஞ், சிந்தைமகிழ்ந் தருமறையோன் மாம னீந்த செல்வமொ டுந் தன்பதியிற் செல்லக் கண்ட, பந்தமுறு தந்தைமுத னல்லுற் றோர்கள் பரிவுகள்செய் தெதிர்கொண்டார் பண்பின் வாழ்த்தி. (௫)

ஆங்கினிய பரதேசம் போன பிள்ளை யணிபொலிய மணஞ்செய்து மாதி னோடு, பாங்கின்வர வென்னதவஞ் செய்தா யென்று பலர்புகழக் கண்டிருந் தும் பாவி மாதா, வீங்கிவளோர் சைவன்மக ளென்னக் கேட்டா ளெரிதரு வெப் பத்தினொடுந் தலையை மோதித், தாங்கலருந் துயருழந்தா ணெடிது யிர்த்தாள் சாற்றுமா றென்னென்று டணியா ளாகி. (௬)

வளமைமறை யோனிறைவன் செயலா லந்த வடிவுநிறை பவித்திரை பான் மனம்வை யாம, லிளமைதரு பருவத்தே யிருப்ப நாளு, மீசனுக்கே மனம்வைத்த நேச வல்லி, யளவிறந்த பாகவதர் புசித்தல் கண்டாண் டாழ் துயருற் றின்னமுது படைத்து நந்த, தளர்வகல நுதனீறு விளங்க விங் கோர் தவமுனிவர் நணுகாரோ வென்பாள் சாற்றாள். (௭)

முன்னையவ ணல்வினையான் மாமன் மாமி முதலாவவ் வுழைநின்றும் பிறிதோ ரில்லத், துன்னருமோர் காரணத்தாற் போக வோர்நா ளுற்றவர்கட் குற்றவன்மற் றியாவும் வல்லான், றென்னனையா ளுடைமதுரைச் சொக்க நாதன் றிருநீறு விரன்மூன்றுந் திகழச் சாத்தி, மின்னணிநூன் மணிமார்பில் விளங்க மூத்த விருத்தர்தள ருருக்கொண்டான் விரும்பி மாதை. (௮)

வேறு.

முன்வளை தனுவன தனுவு மூத்ததோர்
பன்னக வுரியன பழைய மேனியு
மென்மர லனநரை முடியும் வீழ்ந்தெழு
நன்மைகொ டளர்நடை யொடுந டுக்கமும். (௯)

கையுறு குடையொடு தண்டுங் காதினிற்
செய்யகுண் டலமும்வீ ழுடையுஞ் செவ்விசேர்
துய்யபுன் முறுவலுந் துளங்க மங்கலத்
தையணி பிச்சையி டென்னச் சார்ந்தனன். (௧0)

வேறு.

உழையிடை யமுது படையெனக் கண்ட வுத்தம வணங்கெதிர் வணங்கித்
தொழுதுபே ருலகிற் றனிவினை யாடுஞ் சொக்கனே வறிகிலே னடியே
னெழினுத னீறு காணுமுன் போன திடரென்ன புண்ணியஞ் செய்தே
னழகுடன் றிகழுந் தலைவரே யமுதென் றகத்தினு ளெழுந்தரு ளுதற்கே. ()

காதனே கடியள் கொடியளென் மாமி நன்குள வறைக்கத வடைத்துப்
போதிலோ ரகத்துப் போயின ளமுது படிபுறம் பில்லையென் செய்கே

ஞேதுமே லமுது செய்யுமா றென்ன வுத்தமன் சித்திர வணங்கே
சோதிசேர் கதவந் திறக்குநீ செலுங்காற் றுணிந்தினி யகம்புகுந் தெடுத்தே.()

பரிவொடு பருப்பு மன்னமு மாகப் படைவயிற் றுறுபசி பெரிதென்
றருள்பட வுரைப்பக் கேட்டலும் பதறி யறைக்கடி வாயிலிற் செலுங்கா
லூரனுறு கதவஞ் சடக்கெனத் திறப்ப வொண்டொடி கண்டதி சயித்து
விரைவினுட் புகுந்து சிறந்தன வெடுத்தாங் கமைத்தனள் விருப்புடை யடிசில்.

அரம்பையங் குருத்து மருங்குற விரித்தாங் கடைவின்மென் போனகம் படை[ப்ப
விருந்தின னுதர பூரண மாக வுண்டெழில் விரைமணக் கோலப்
பெருந்தகவிலங்க வெண்ணிரண் டாட்டைப் பிள்ளையாய் விளங்கினன் கண்ட
கருந்தடங் கண்ணி யதிசயித் தஞ்சி நின்றனள் காமனும் வருத்த. (௧௪)

வேறு.

வாசிகை முடிபி றங்க மார்புதாழ் மாலை மின்னத்
தூசெழின் மருங்கி லங்கத் துளங்குதண் கலவை சாத்தித்
தேசுடை யணிய ணிந்து திருமுகங் கவினெ றிப்ப
வாசைகூர் தருமெய் கொண்டு விளங்கின னநங்க னன. (௧௫)

இந்நெறி நிகழுங் காலை யேந்திழை தனது மாமி
பொன்மனை வாயில் வந்து புகுந்தவர் யாரோ வென்ன
வன்னமோர் மாற்ற மின்றி யங்கையை நெரித்து நின்றாள்
பன்னகா பரணன் கண்டோர் பாலக னுருவங் கொண்டான். (௧௬)

வேறு.

துன்னுபன் மணியி னல்லணி சிறந்த தொட்டிலுட் பட்டணை நிரம்பப்
பொன்னனை ஞானு நன்னுத னீறும் பொலியநோக் கஞ்சனந் துலங்க
மென்னகை செய்து தன்னடி மலரின் மேதகு பெருவிர லமுதுண்
டன்னையில் புதல்வன் முன்விளை யாடி யழுதனன் பவளவாய் நெரித்து.(௧௭)

அவ்வயின் வந்த தீவினை மாமி யகத்திடைப் புகாமுனங் கண்டே
வெவ்வுரை யோடு முள்ளழன் மண்டி வெகுண்டுமுன் னிவ்வணைக் கிடந்த
செவ்விய பால னாரென வினவத் தேவியுந் தெருமர லூற்றுக்
கொவ்வையங் கனிவாய் திறந்துரை செய்வாள் கூடனு யகன்றிரு வருளால்.

வேறு.

தீதிலா வடிவி னேங்குந் திருவினு ளெண்றோர் மிக்க
மாதவ முடையா ளிந்தத் தொட்டிலுள் வளர்த்தி வைத்திப்
போதுதன் கணவ னோடும் போயினு ளேக்கிக் கொள்ளென்
றூதர மாமி கேளென் றடைவினி னொடுங்கிச் சொன்னாள். (௧௮)

தரும்பிறர் பாலன் றன்னைத் தையலாய் நீயோ காப்பா
யிருந்தவா றழகி தைய கோவென விடித்து வீழ்த்துப்

பரந்தவொண் டொட்டி லோடும் பாலனைப் புறத்துப் போக்கி
வருந்திடக் கதவ டைத்தாண் மருமக டனையுந் தள்ளி. (உ0)

வள்ளன்மென் முறுவல் கூரா மழவுருக் கரந்து பண்டைத்
தெள்ளுபே ருருவங் கொண்டு தீதிலா மடமா துக்கு
மொள்ளிய கற்பான் மிக்க வுமையுருக் கொடுத்துக் கூட்டி
மெள்ளயான் சொக்க னென்று போயினன் விசும்பிற் காண. (உக)

அடியவர்க் கெளிய சொக்க னருடனைப் பாரீர் காணப்
பொடியணி மாது போன புதுமையைப் பாரீ ரென்று
படிமிசை யோர்க ளெல்லாம் பரவினர் நெடுமா லேத்தக்
கடிகமழ் சடையி னானுங் காவல்சேர் மதுரை புக்கான். (உஉ)

ஆகத்திருவிருத்தம் - எகங.

## ங.உ.—மாறியாடின திருவிளையாடல்.

முன்னமோர் காலந் தொல்லை முறைமையி னவனி காத்து
மன்னுமோர் தென்னர் கோமான் மதுரையம் பதியி லோங்கும்
பொன்னெயி லிலங்கு கோயிற் புனிதனுக் கன்பு பூண்டு
பன்னெறித் தானை சூழப் பகையற வாழு நாளில். (க)

குன்றவி லீச னாடுங் கூத்தினைக் கற்க லாகா
தென்றஃ தொழிந்த கல்வி யாவையு முற்றக் கற்று
வென்றிகொ ளுமை மெண்ணெண் கலைவல்லா னெனவி ளம்பி
யொன்றிய புகழை யெங்கும் பரப்பினா னுலகத் தோங்க. (உ)

அன்புறு வளவன் மிக்க சீர்த்திகேட் டாடன் முன்னா
வின்புறு கலைகள் யாவுங் கற்பமென் றிகலிக் கற்றுத்
தன்பெய ருலகி லெண்ணெண் கலைவல்லா னென்று சாற்றி
நன்புட னிருப்ப வாங்கோர் பாடக னடைந்தா னாடி. (ங)

எந்தைகேண் முற்றுங் கற்றார் நீயலா துண்டோ வென்று
முந்துறப் புகழ்ந்து வாழ்த்தி முடிவில்பல் சிறப்பு நல்க
வந்தநல் வரிசை யிற்போந் தாடக மாடக் கூடற்
கந்தனை யனைய கல்விக் கைதவன் றன்னைக் கண்டான். (ச)

மனத்தினைக் கவரு நல்ல வார்த்தைகள் சொல்ல வல்ல
வினைக்கொள்பா டகன்வ ணங்கி மீனவர் குலவி ளக்கே
கனத்தமா நிலத்து ளெண்ணெண் கலைவல்லா னென்னு நாம
நினக்கல வனைத்தும் வல்ல நேரியற் காகு மன்றே. (ரு)

வளம்படு கூத்தும் வல்லன் மற்றதோ வறியாய் நீயென்
றுளம்பட வஞ்சா னாகி யுரைத்திடக் கேட்ட மாறன்
றளர்ந்துரை செய்வான் கல்வி சாற்றின்மா நிலத்தி யாவு
'மளந்தறி வாரு முண்டிங் கறிந்திடா தாரு முண்டே. (௬)

இன்னியல் வாண வென்ன யாசக னெக்கு மென்று
பின்னரு முரைப்ப வுட்கிப் பேசரும் விளிவிற் கூடி
மன்னவன் காட்டா னாகி வாழ்த்தியா சகனை வேண்டும்
பொன்னணி யாடை நல்கி விடுத்தனன் பொல்பு கூர. (௭)

மந்திரி கட்குச் சொல்லி வழங்கிய விருதை நோக்கி
யந்தவொண் புயங்க நட்ட மாடிட வேண்டு மென்று
சந்துற வாமத் தாண்மேல் வரவலத் தாண்மே னின்று
சிந்தையால் வருந்தி முற்றக் கற்றனன் சிறிது நாளில். (௮)

நாளில முய்ய முன்ன நாயக னாடுங் கூத்தை
மானிட ராட லாகா தென்றநாம் வருந்திக் கற்றே
மீனமி லாத சென்னி செற்றத்தா லென்று சால
மீனவன் றுயர முற்று நெஞ்சக மெலிவா னாளும். (௯)

அன்றியு மொருதா ளூன்றி யடுத்ததாள் வளைத்தெ டுத்து
நின்றலு நோவக் கண்டே நினைப்பினோர் கணத்துப் போது
மின்றுநின் றிடவொண் ணாதா யிருந்ததிங் கென்றுங் கெட்டேன்
மன்றுற நின்றா னந்தோ மாறிநின் றாடா தென்றான். (௰)

தருகன முதுபே ரண்ட சராசர மனைத்துந் தாங்கும்
பெரியவ னாத லாலே பேசருந் தாள்வ ருத்தங்
கருதினாங் குண்டா காதா யிருக்கினு மிடக்குங் காணிற்
றெரிவரி தவன்றன் செய்தி யெனமனந் தெளிவன் றேறான். (௧௧)

இப்படி வருந்தல் கண்டே யிரங்கியீ சான கோணத்
தொப்பருந் திருமன் றத்தி லும்பர்கோன் வேண்ட முன்ன
மெய்ப்பட வாடுங் கூத்தை விட்டுமேல் வலத்தாள் குஞ்சித்
தப்பெரும் புதுமைக் கூத்தை யாடினா னதிர வீசி. (௧௨)

வேறு.

பேறுசால் பதஞ்சலி முனியும் பேரருள்
வீறுசால் வியாக்கிர முனியுங் கண்டுகண்
ணூறுபாய் தரமுன மாடுங் கூத்தனார்
மாறனாழ் துயர்கெட மாறி யாடினார். (௧௩)

ஏர்தரும் வலப்பத மிடம்வ ரப்பணை
சார்தரு மிடக்காம் வலம்வ ரக்தனி

வாதுறு கூத்தினை யாடி மாசறு
கோதைசூழ் தாண்மிசைக் கொடியுங் கட்டினான். (கச)

எழிறரு மன்னவ னெழிவி லேதமும்
பொழின்மிசை யாடுவோர் வலியும் போக்கிட
வழகுடன் மாறிநின் றாடுங் கூத்தினைத்
தொழுதவம் பிகையும்வெந் துயர நீங்கினாள். (கரு)

வேறு.

நத்தமார் நடுநள் ளியாமத் தருமறை நாதம் பாடப்
பெத்தமா ணிடரா லாடுங் கூத்தினை யொழிந்து பீடா
ருத்தம வருங்கூத் தாட வும்பர்கோ னயன்மா லாதி
யித்திற மியார்வல் லாரென் றதிசயித் திறைஞ்சி னாரால். (கசு)

தொண்டர்கள் விடியு முன்சென் றுரைசெயத் தொழுதுட் கண்ட
வண்டமிழ் மாறன் வைத்த மனத்தினுங் கடிது வந்து
பண்டருங் கூத்துக் கண்டான் பரவினான் றொழுது வீழ்ந்தா
னண்டர்நா யகனே யுய்ந்தே னெனவதி சயித்தா லித்தான். (கஎ)

வேறு.

தெரிதரு கருணைச் சோதியே வலப்பொற் சேவடி யாலுள திருக்கூத்
துரைசெயி னுலகத் தெங்கணுங் காண வுளதது புதுமையோ வல்ல
வருமையா விடப்பொற் சேவடி யாலிங் காடிய திதுபெரும் புதுமை
கருதிநின் றடியே னினியுனை வேண்டிக் கொள்வதோர் காரிய முண்டால். (கஅ)

படியக மிசையிற் பரிவுள நினக்கே பரிவுள மதிக்குலம் விளங்க
வடிவுறு திருக்கூத் தென்றுமிவ் விடத்தே மன்னிட வேண்டுமென் றேத்த
முடியுடை வேந்தே யதுசெய்வ லென்றே முழங்கிட வுயர்திரு வாக்குக்
கடிகொள்வான் மிசையிற் றோன்றிடக்கண்டு துதித்தனன் களித்தகண் டுளிப்ப.

வேறு.

மன்னிய பெரிய சிற்றம் பலத்தினை வரிசை கூரப்
பொன்னினான் மேய்ந்து முத்தாற் புரிவலித் தணிசி றந்த
மின்னொளி மாணிக் கத்தால் விளிம்புசேர்த் திலங்க வெங்கும்
பன்மணித் தாம நாற்றிச் சிறப்பித்தான் பண்பு கூர. (உ0)

மதியினை நிகர்த்த முத்தக் கவிகையு மாணிக் கத்தாட்
கதிர்விடு கொற்றக் கற்றைக் கவரியும் வயிரஞ் சேர்ந்து
நிதிதரு கனக சிங்கா தனமுநீண் முடியும் பூணும்
புதியவா சிகையு மற்றுப் புவியும்வேண் டுவகொ டுத்தான். (உக)

வேறு.

மன்னவர் மன்னன் பன்முறை வணங்கி மகிழ்ச்சிமாக் கடலிடை மூழ்கித்
தன்னுடை யிடத்துப் போந்தடியவர்க டம்பெருந் துயரறிந் திரங்கும்

பன்னியற் பெருமான் றன்வயின் வைத்த பரிவினைக் கண்டுகண் டுவந்து
மின்னெளி விளங்கு மடங்கலா சனத்து மேதினி வியப்பவீற் றிருந்தான். ()

வேறு.

அன்றுமுன் னதிர வீசி யாடுவா னென்று மேவார்
குன்றமுன் மாறி யாடிக் கொடியிட்ட பெருமா னென்று
மன்றுற வழங்கக் கேட்ட வளவனு மிகல்விட் டன்பிற்
சென்றுமுன் வழுத்தி னைச் சிவனினுஞ் செழியர் கோவை. (௨௩)

இத்திருக் கோலந் தன்னைத் தொழுபவ ரென்றுங் குன்றாப்
புத்தியும் பொருவி லாத பத்தியும் புகழு முண்டாய்ச்
சத்திய ஞால முற்றுந் தனிக்குடை நிழலி னாண்டு
முத்தியும் பெறுவர் தீரா மும்மல மம்மர் தீர்ந்தே. (௨௪)

கோடிய லேன மாகிக் குவலய மிடந்து முன்னந்
தேடிய நெடுமால் காணாச் செழுஞ்சுடர் மேனிச் சொக்கர்
வாடிய மாறன் றேற மதுரைமா மன்றுண் மாறி
யாடிய பாதங் கண்டே னருவினை கண்டி லேனே. (௨௫)

ஆகத்திருவிருத்தம் - ௧௧௮.

## ௩௩.—பழியஞ்சின திருவிளையாடல்.



மாசிலா மதுரையிலோர் மறையோன் முன்னாள் வனிதையொடு முலைப்பாலுண் பால னோடு, நேசமுடன் மாமனிடத் துணையப் போங்கா னெறியிடையா தவன்வெய்ய கதிரா னெந்து, பேசரிய வருந்தண்ணீர்த் தாகத் தாங்கோர் பெருமைதரு வடதருவி னீழன் மேவி, யாசின்மட மாதுனைத்துக் கிடப்பக் கண்டே யகன்றனன்முன் றண்ணீர்கொண் டணைவா னெண்ணி. (௧)

விரைவொடுபோ யினபின்னர் முன்னோர் வேடன் வேட்டையின்மேல் வந்துவிழுங் கிளியைய யெய்து, பரியவிலைக் கொம்பின்கட் டொங்கி னான்ற பகழிமருத் தாலசைந்து பாவை மார்பிற், கருகிவிழா முதுகின்க ணுருவி யப்பாற் கழலுங்காற் புனல்கொண்டு வந்து கண்ட, வரியகண வன்றரியா னுற்று னுகி யழுதுவிழுந் தலமந்தா னுவி சோர. (௨)

அழகினு லருங்குலத்தா லன்பா னின்போ லாரொப்பா ரெனக்கினியா ருண்டென் றுறு, விழிபெருக முகத்தறைந்து கொளுங்கால் வேறோர் வேட்டைவேட் டொருவேடன் விரைவிற் றேன்றப், பழிகருது மிவன்கண்டு வாரா யிந்தப் பழுதிலா வெழின்மாதை யேது வேண்டி, யிழிவுபடு குலத்தவனே கெடுவாய் கொன்று யென்றனஞ் சினனஞ்சா வீரன் றுனும். (௩)

பறையுமது கொடிதடியேன் கொன்ற தில்லை பழியையவே ருராய்ந்து கொள்ளு மென்ன, மறையவன்போ காவாறு வெகுளி பொங்கி மறித்தவனை நெறிப்படிமண் ணுலகாண் மன்ன, னறமலியும் வாயிலிற்போ தென்று கொண்டாங் கழுங்குழவி யொடுமுறையிட் டரற்றிச் சென்று, நெறியுடைய வமைச்சர்கா ளிவ்வெவ் வேட னெறியிடைக்கொன் ருனெய்தென் மாதை யென்ருன். (ச)

மந்திரிக ளவன்வருந்திப் புகன்ற வாறு மாறனுக்கு விண்ணப்பஞ் செய்ய மாறன், சிந்தைபரி தவித்துநெடு வாயில் வந்து தீராம லழுங்குழவி தனையு மிக்க, வெந்துயரத் தொடுமுறையிட் டெய்தா னென்னும் வேதியனை யுங் கண்டு மெலிதல் வேண்டா, வந்தணநீ யெனச்சொல்லி யாற்றி வெய்ய வடு ங்கணையே டனைநோக்கி யருளிச் செய்வான். (ரு)

வினையுறவே டுவநின்னைக் கொல்வ தில்லை மெய்ப்படநீ செய்தியுரை யென்ன வேடன், கனைகழற்ருண் மன்னவனே நீதி வேந்தே கருணையனே நாயடியேன் கொன்ற தில்லை, மனுநெறியி ஞராய்ந்து கொள்க வென்று வண ங்கியுட னடுங்கிவியர்த் துரைப்பக் கண்டு, தனதுளநொந் தருமறையோன் மனத்த கத்துத் தணியாத பெருந்துயரந் தணியச் சொல்வான். (சு)

எதமொழி மறையோனே கரிய வேட னியம்புமொழி கேட்டனையே யாமா ராய்ந்து, நீதிபடச் சோலநின்றே மம்பால் வீந்த நேரிழைகுன் ருவாறு நலஞ்செய் தெய்திங், காதிவித யொருவராற் றடுப்ப வொண்ணு ததுநீயு மறி தியே யெனவி டுப்ப, வேதியன்போய் நனியழுங்குங் கிளைஞர்க் கூட்டி விதி யின்கட் டகுந்தகனஞ் செய்தான் விமமி. (எ)

செந்நெறிசேர் சுந்தரனுக் கன்பு பூண்ட தென்னவன்வே டனையழைத் துத் தெளிந்திப் போதே, யுன்னையுமவ் வேடன்களைவன் சிறையிற் போ கென் றுயர்ந்தசொடுஞ் சிறைக்கூடத் தடைத்துத் தானே, யென்னையுமா ளுடைமதுரைச் சொக்க நாத னெங்குறளான் யாவுமளந் தறிவான் முன் னர், மன்னியிது விளங்கினல்லால் விளங்கா தென்று வரிசைதிக ழாலயத்து வந்து புக்கான். (அ)

தென்றமிழ்நா டுடையானே யறஞ்சொல் கோவே தேவாதி தேவேநின் னருளால் வைய, நன்றிபயந் திடக்காக்கு மடிமைக் கின்று நாடரிய பெரும்ப ழிவந் தடைந்த தெங்கு, நின்றறிய வல்லானீ யல்லா லுண்டோ நினக்கடி மை வேண்டுனறி விற்ந் தோன்ற, வென்றலுமஞ் சினவீச னகர்சோ தித் தற் கெய்தெய்ந ணறிவிப்ப மென்ருன் றேற. (கூ)

மன்னவன்விண் மிசைகேட்டு மகிழ்ந்தா லித்து வளமைபுனை தன்னி டத்து வந்து விள்ளான், முன்னைமுறை யுண்டிகழித் தருளாற் ருனே முற்றி யகங் குற்போதி னகர்சோ திப்பான், றன்விளாவிற் போந்தலவுங் காலைச்சேர் ந்தோர் தவப்பிரம சாரிமணஞ் செய்யா நின்ற, மின்னுமனைப் புறத்துறுதின் னையின்க ணியாருமவெருவுமுருப் புனிந்தவருவர் மேவக் கண்டான். (கo)

வேறு.

தெரிவுற விவனை யறிகுவ மென்று சென்றரு கணைந்துரு வொளித்துப்
பொருவரும் வீர னின்றிடுங் காலைப் புலப்பட நிலைப்பட ருரைப்பார்
விரையுருப் புனைந்து மணஞ்செயு மிவனை விரைவொடு புதுமையா வின்று
பரிவொடு கொண்டு போய்விட வேண்டும் பந்தரோர் பரிந்திட வென்றார். ()

ஈங்கிது பகரக் கேட்டவாள் வேந்த னிலங்கவீ தறிகுவ மென்றே
நீங்கருங் கருணைச் சொக்கநா தனையே நினைந்துதன் னுண்மையே துணையா
வோங்கிய மனத்தின் வெளிப்பட நணுகி யுரன்பட மருங்குற நின்றே
யாங்குல குயிர்க ளேங்கிடு முருக்கொண் டணைந்தநீர் யார்கொலோ வறியேன்.

இங்குறை செய்த வாறுகேட் டனனின் றெப்படி மெய்ப்பட மன்ற
றங்கிய பெருங்கல் யாணமுன் செய்யுந் தார்மண வாளனின் னுயிரை
மங்குறக் கவர்வ துரைசெயு மென்ன மற்றவர் தீரனு யிருந்தாய்
கொங்கவிழ் தாம வீரனே யாங்கள் யமபடர் கொண்டுபோ மாகேள். (கரு)

இம்மண வாளன் மெல்லிள மாதை யினியகைப் பிடித்திடு மளவிற்
செம்மனை யகத்துக் கொல்லவற் றூன திறம்படு கோடிலா மொட்டை
வெம்மைசேர் பசுவுண் டார்த்ததும் பறுத்து விடுப்பமற் றதுதிரண் முழவின்
சும்மையின் வெருண்டு முட்டிடக் கொண்டு போகுவந் தொழுதியு ணுடி. ()

வேறு.

இயம தூத ராய்மிலை யென்று சொல்ல மன்னவ
னயம தெய்தி நீதி வாயி னண்ணி வாடு முனிவனைப்
பயமு றாத ழைத்து வந்து படர்கள் பின்னி றுத்தியே
யயமு றாது படர்கள் சொல்லு மறிவு கேளெ னச்சொனான். (௰)

நன்றி கொண்ட முனிவ னெஞ்சு தேற நாத னருளினு
னின்ற தூத னுக்கு மற்று யர்ந்த தூத னினைவுறக்
கொன்ற வீறு கூறு மொன்று குன்ற மன்ன குஞ்சர
மொன்று சீய மொன்று நாக மொன்று புண்ட ரீகமால். (கக)

மன்னு நீதி கோடி டாத வைய மாளு மன்னவன்
றன்னை யும்ம றைத்தி றச்ச டங்க டங்க ளும்முடித்
துன்ன ருந்த வத்தி னுயர்ந்த யாக முனியையு
மின்ன முண்டு கொன்ற தெந்தை யந்த கன்ற னேவலால். (கஎ)

ஆல நீழ றன்னின் மன்னு மழகின் மிக்க பழுதிலோர்
மேல்லு லத்து நித்த செவ்வி வேதி யன்றன் மாதைமுன்
னேல வேட னோர்சு கத்தை யெய்து கொம்பின் ஞான்றதோர்
கோல சைத்து வீழ்த்தி யாவி கொண்ட தின்று கண்டனை. (கஅ)

மரணம் வந்த காற்று ரும்பும் வச்சி ரம்ம தாய்விடுங்
கருதி யிங்க தெங்ங னென்று காணின் முன்ன மன்னுமென்

பெரிய தந்தை யசனெ னுந்தொல் பெருமை மிக்க காவல
னுரிமை கொண்ட வடிவ மங்கை யுயிர்க வர்ந்த வாறுகேள். (கக)

வடிவ மிஞ்சு கவினி னிந்து மதியை ஞாலம் வெருவமென்
கொடியி லங்கு பூவின் மாலை வீழ வாவி கொண்டனன்
விடுவி டின்று கதையை யிந்த வெய்ய தேனு வான்மணந்
திடுமி லங்கு பிரம சாரி யினிமை கூரு முயிரினை. (உo)

வேறு.

வினைவொடு கொடுபோ சேமேல் வெய்யநங் கூற்று வேந்தன்
பரிவுற முனிவ னென்று பன்முறை தம்மிற் கூற
வரமுனி யதிச யித்து வழுதிகே ளிவர்கள் சொன்ன
வருளிலா வுரைகள் கேட்டே னறிவதொன் றின்னு முண்டால். (உக)

இம்மண வாளன் மேய வின்னுயிர் மருப்பில் கோவாற்
செம்மையிற் கவர்வ மென்றார் சிறிதுபோ திங்கு நின்று
மெய்ம்மையோ வன்றோ வென்று விளங்குவ மென்னக் கேட்ட
வம்மனு வேந்தர் வேந்த னதுதகு மென்று நின்றான். (உஉ)

நன்னெறிக் கன்னி மாதை நயந்துகைப் பிடியா முன்னந்
துன்னுபல் லியமு ழக்கிற் றும்பிடைக் கிடந்த தேனு
முன்னெழ வெருட்சி பொங்கி முளைத்தளை யறுத்து மொட்டை
மன்னிய சிரத்தான் முட்டிக் கொன்றது மன்ற லோனை. (உ௩)

வேறு.

அணிபொலி மறையவன் வீய வக்கண
மணமனை பிணமனை யாக மற்றவ
ணணுகிய மனிதர்கள் கண்டு நாமொடு
தணிவற வரற்றினர் தலையை மோதினர். (உச)

உயிர்நிலை யாமையை யுணர்ந்து மன்னனும்
பயமொடு கூடினன் படரும் போயினர்*
நயமுறு மாமுனி தெளிந்து நாவுறச்
செயிரற வழுத்தினன் றென்ன னீதியை. (உரு)

வேறு.

அரிய வெந்தை செயல்கண் டதிசயித் தந்த ணன்றன் றெவேந்தன் னிடத்திடைப், பரிவி ஞேடு மடைந்தாங் கமைச்சரைப் பரிதித் தோற்றத் தழைத்துப் பழுதறத், தெரிய வோதிட யாமினி யிற்புக்க செய்தி யாவையுங் கேட்டருட் டென்னவ, தரும நூனெறி யாய்ந்திடு மன்னவர் தலைவ னீயல தில்லெனச் சாற்றினான். (உசு)

வழுத்த மைச்சரை நோக்கியின் றிங்கெனை வரிசை கூரப் புகழுவ தென்கொனீ, ரிழுக்க தாமிப் பழிக்கஞ்சி நீக்கினுன் யாவும் வல்ல வருட்சொக்க

நாயக, னழித்தி யாவையு மாக்கவல் லான்றன தருளை வாழ்த்து மெனவாழ்த்தி யேத்தினர், பொழிற்குள் வாழு மனிதருஞ் சுந்தரன் பொருவி னீதிகண் டேத்திப் புகழ்ந்தனர். (௨௭)

வேட னைச்சிறை விட்டவ னெஞ்சகம் விரும்ப வேண்டுப நல்கிநின் னுற்றவர், தேடு முன்னநீ போகெனப் போக்கியே நீதி லாத முனிக்குஞ் சிறப்புட, னுடி நன்மணஞ் செய்யென் றிரும்பொரு ணல்க வாங்கி நயந்து வியந்துபோ, யாடி நன்மணஞ் செயதொண் புதல்வனோ டருளை வாழ்த்தி யிருந்தன னந்தணன். (௨௮)

வேறு.

அத்தனப் படுபழிக்கே யஞ்சியக் கணத்துத் தோன்ற
வுத்தமப் பத்தி மாறற் குணர்வுற வுணர்த்த லாலே
பத்தர்கள் பத்த னுக்குப் பழியஞ்சுஞ் சொக்க னென்றோர்
வித்தகப் பெரிய நாமம் விளங்கிய தவனி மீது. (௨௯)

வேறு.

மூட்டிப் பார்ப்பான் முறையீடு
மொட்டைப் பசுவின் பாய்ச்சலொடும்
விட்டுப் போன தெனவின்றும்
வட்டத் தலத்து வழங்கியதே. (௩௦)

ஆகத்திருவிருத்தம் - அ௪அ.

## ௩௪.—மகாபாதகந்தீர்த்த திருவிளையாடல்.

வளமியதோர் நன்னாட்டு முன்னோர் கால மாசிலா வுயர்மறையோன் றனக்கு மிக்க, விளமைதரு பருவத்தே மனைவி யுண்டா யிவள்வயினோர் புதல்வன்விதி வசத்தாற் றோன்றி, யளியினுற வளர்ந்தநங்க னேவா லேவுண் டன்புடைமா தாவைமன மருட்டிப் புல்ல, வுளமறிந்த தாதையவ மான வஞ்ச முணர்வுடையோர் விள்ளாரென் றுளித்துப் போந்தான். (௧)

பிறாறியி னீதிகுன்று மென்று கொண்டு பேணியுள மெலிந்திருப் போன் றனித்தோர் நாளிற், பொறையறியா மைந்தனுமா தாவுந் தம்மிற் புணருமிடத் தறியாது செல்லக் கண்ட, வுறுபுதல்வன் மண்வெட்டுங் கொட்டால் வெட்டா வுயிர்கவர்ந்தான் மற்றிதனை யோர்ந்து பார்ப்பி, னறிவிலிவேள் கொடுங்கணைபட் டுளைந்தார்க் கந்தோ வறமெங்கே நெறியெங்கே யன்போ வெங்கே. (௨)

மற்றவனுந் தந்தையுயிர் செகுத்த பின்றை வஞ்சமுடன் றற்சேர்ந்தார் தம்மைக் கூட்டி, யுற்றதுணை யாளினிய பாலுஞ் சோறு முண்ணுங்காலையில் விக்கிச் செத்தா னென்று, சற்றுமிரங் கரதிருண்ட கங்குற் போதே தாழாம

லெடுத்தழலுந் தழலிற் சுட்டுப், பெற்றகொடும் பாவியொடு மில்லத் துள்ள பிறங்குபொருள் கவர்ந்தகன்றான் பெரிது தூரம். (௩)

ஆங்கொருவ ரறியாம லிரவிற் போங்கா லாறலைக்குங் கொடுவேடர் கண்டு சோர, வீங்கிவன்ற னுடல்புடைப்ப வடித்துக் கையி னிரும்பொரு ளுங் கவர்ந்தெழின்மா தையுங்கைக் கொண்டு, தாங்கருதி யேகினர்மற் றென்னே யின்று சாற்றுவது தலத்தின்க ணெவருங் காணத், தீங்ககல நினைப்பதொர்கா ரியந்தா னுகுஞ் சிவன்கொடுபோய் விடுவதொர்கா ரியந்தா னுமே. (௪)

ஆறிடையி லலறிவிழுந் தெழுந்து வெய்ய வரும்பாவி யடியுண்ட புண்ணீ மொய்ப்ப, வேறொருவர் துணையின்றிப் புழுத்துத் தானே விரித்தசிரந் தொடு ந்துணிக்கோ வணத்தினொடு, நாறுமுட லகத்தோடு மடவி தோறு நாணமின்றி மனைகடொறுஞ் சென்று சென்று, சோறிரந்து தின்றுழன்று திரிந்தான் கண்டோர் சொல்லுகொடும் பாவியிவ னுரோ வென்ன. (௫)

தன்னுணர்வால் விதிவசத்தை நினைந்து நொந்து சார்ந்தபெரும் பாதகத்தைத் தணிப்பா னெண்ணி, முன்னருந்தீ வினைதீர்க்குங் கங்கை கன்னி முதலான தீர்த்தங்கள் விரும்பிப் போங்காற், பன்னெறிசேர் பிரமகத்தி பற்கடித்துப் பயமுறுத்திப் பின்றொடரப் பரிந்து பார்ப்பான், பின்னொருவர்க் கரிதான் முன னதனைக் கண்டு பிரமிப்பன் வெருவிப்பன் முறைகம் பிப்பன். (௬)

ஆர்ந்தபெரும் புனற்றீர்த்தத் துறைசெ லுங்கா லாடாமற் புறத்தீர்த்துப் போடக் கண்டு, போர்ந்தவனி யோரிடத்துந் தரிப்ப தின்றிப் புகழ்த்தாதை வதைபொருவில் கருணை யாயைச், சேர்ந்தகொடும் பாவமிரண் டானு நொந்து திரிதருவோ னெந்நாளும் யாவ ரேனுஞ், சார்ந்தவர்வெம் பாவங்க ளீக் குஞ் சொக்கன் றருகடம்ப மாவனத்தைச் சார்ந்தான் வந்தே. (எ)

நீக்கலரும் புகழ்க்கினியான் கருணை மெய்ய னீதிநிகழ் பதியினெறி வசத்தான் முன்ன, ராக்கியநற் றவத்தால்வந் தணையுங் காலை யங்கயற்கண் மங்கையைநல் லணிதி ருத்தி, நோக்கிநயந் தணைசெய்வா னுமைமையே மார னுவலரும்பூங் கொடுங்கணையே தைத்தால் யாவர், காக்கவலா ரிதரிதெய் விடத்து மந்தக் கணைக்கிலக்கா காதாரு முண்டோ காணின். (அ)

மதன்கணையா னொந்தவன்றான் வரைந்த கற்பின் மனைவியின்க ணின்றானே னிரயங் காணு, னிதஞ்செய்பிறர் மனைச்சேறல் விரும்பி னுனே லினிமைதரு முயர்துறக்கங் காணுன் மற்றும், விதங்கடரு மநங்கனே யில்வாழ் வுக்கோர் வேராவா னுனெலன் வரம்பி னில்லான், பதங்கொடுத்த நமையும் விடா னவனுக் கென்றும் பட்டகுணஞ் சுட்டாலுந் தீரா தன்றே. (௯)

வேறு.

இன்னன சொல்லி நல்ல வினிமைகூ ரின்பந் துய்த்து
மன்னவீற் றிருக்குங் காலை வருபெரும் பாவி மண்ணிற்

றன்னிக ரில்லா வந்தத் தானவை பவத்தி னாலே
முன்னுறச் சென்றான் கண்டான் மூவருங் காணு தானே. (௧௦)

அறமலி நந்தி தேவ ரருங்கொடும் பாவி நீயார்
முறையிலா தவனே சீசீ போவெனக் கேட்ட முக்க
ணிறையவன் கருணை மெய்ய னாதலா லிரங்கிச் செட்டே
னறிவிலான் யாரு மில்லான் வரவிடென் றருள்சு ரந்தான். (௧௧)

ஆக்கிய வுலகத் தின்க ணறிவுடைப் பெரியோ ராலு
நீக்கருங் கொடிய பாவ நின்னிடத் தடைந்த தந்தோ
போக்கவோர் விதியு மில்லை யாயினும் போக்கு கின்றேம்
பாக்கிய வசத்தா னம்மைக் காணலாற் பரிவு கூர்ந்தே. (௧௨)

ஒண்பொரு ளின்கை யில்லை யுயர்ந்ததா னஞ்செய் யென்னப்
பண்புறக் கேணி னக்குப் பரிந்தியாம் விதிக்கு மாறு
மண்புகழ் தருகோ வுக்குப் புற்பிடி வழங்கு நந்தம்
விண்கொளா லயத்தை யங்கப் பதக்கணஞ் செய்மெய்ந் நோவ. (௧௩)

இன்புற வினிய காயத் திரியையா யிரத்தெட் டோது
நன்புறு முருத்தி ரத்தை நாளுமத் தியய னஞ்செ
யன்பின்மெய்ம் முழுதும் பூதி யணியெழுத் தைந்து மோது
மென்பொரு டருந்தொல் வேத விதியிவை யின்னுங் கேண்மோ. (௧௪)

வேறு.

நம்மடி யவர்க டம்மடி மலரி னணுகுமொண் புனல்பரு குறைப்பின்,
மெய்ம்மையை யுளாயா மாடிய புனலில் விதியின்முச் சந்தியு மூழ்கு, செம்
மையோர் பொழுது பிச்சைகொண் டுண்டைம் புலனையுஞ் செறுவிடா திவற்
றை, மும்மைசேர் யாண்டு நோக்கிரும் பாவ நீக்குவை முனிவரும் வியப்ப.

அப்பெரும் பாவிக் கித்திறஞ் செய்யென் றடைவுற விதித்தல்கண் டெழில்சே
ரொப்பரும் பரிவி னங்கயற் கண்ணி யுளத்ததி சயித்தடி பரவிச்
செப்பரும் பாவிக் கருள்சுரந் தறங்கள் செப்பிய தெப்படி யென்று
மெய்ப்படவினவத் துப்பமர் மெய்யன் விருப்புற வறத்திற முரைப்பான். (௧௬)

மங்கைகே ளறிவு பொறையற நீதி வாய்மைநே ரச்சமன் புடையோ
ரங்கவர்க் காப்ப ததிசய மல்ல வாங்கவை யவர்தமைக் காக்குந்
தங்கிய விவற்றுட் பிறங்கிட வொன்றுஞ் சார்விலா தின்னுயிர் தளர்வோ
ரிங்கவர் தம்மைக் காத்தல்கா ணுலகி லதிசய மியம்பிடி லன்றே. (௧௭)

ஆதலா லிவன்கட் கருணையாஞ் செய்தே மென்றுபே ரன்பொடுங் கூடி
வேதநா யகனு மாதிநா யகியும் விருப்புவைத் தறத்திறம் வினவி
நீதியின் மறைய மறையவ னிறைவ னிகழ்த்திய வாறுசெய் தொழிலில்
பாதக நீங்கி விளங்கின னெவரும் பன்முறை யதிசயித் தேத்த. (௧௮)

வே று.

உன்ன ரும்பெரும் பாவ மொழித்தது
முன்னங் கண்டனிர் முக்கட் சிவனலா
லன்னை யொப்ப வனுக்கட்கு நல்லவர்
பின்ன ருஞ்சில ருண்டோ பிதற்றரே. (கக)

உருகாதநீச...........ஆணையால். [ந - ம் பக்கம் பார்க்க.]

ஆகத்திருவிருத்தம் - அகஅஎ.

## நரு.—அங்கம்வெட்டின திருவிளையாடல்.

தெண்டிரைவா ரிதியுடுத்த மண்மகட்குத் திலகமெனு மதுரையின்கண் முன்னோர் காலம், பண்புடையா னொருபணிக்கன் றோன்றி யெண்ணில் பத்திநிகழ் புதல்வர்க்குப் பலவித் தஞ்சே, ரொண்டிறலா யுதகலைகள் பயிற்றி யங்க னொருசாமப் பொழுதொழித்தா லயத்தி னண்ணி, வண்புகழ்சேர் சொக்கனருள் கூர நாளும் வலஞ்செய்தன் பாற்றொழுவன் மற்றெப் போதும். (க)

எற்றிசமு முடன்மூத்தோன் மனைவி தானு மிளமைதரு பருவத்தே கற பான் மூத்தாண், மற்றவன்றன் கைப்பட்ட புதல்வ ரெல்லாம் வழிபாடு செய்துதமக் கியன்ற தொன்று, குற்றமறக் கொடுத்தடைவிற் போதுங் காலக் குழுவின்கட் சித்தனெனு மொருவன் கூடாச், செற்றமொடு மனத்தொன்று வைத்து நாளுஞ் செய்தொன்று பின்றிரிவன் சிறந்தோர் போல. (உ)

நிநிலா வினிமைதரு முயர்ப ணிக்கன் றீங்கறியா னுதலினுற் றீமை கூறு, மேநிலா னுளக்கருத்தை யறியா னாகி யிட்டதிசைச் சொட்டைமுத லெண்ணில் கோடிக், கோதில்படைக் கலமுற்று மன்பு கூர்ந்து கொடுத்தனை யா ரொப்பரெனக் கூற மண்ணிற், சாதனையா லெனையெல்லா ரில்லை யென்று தலையியந்தாங் காரித்துத் திரிவன் சால. (ந)

வே று.

மன்றவங் கங்கள் வென்றே யிகல்படத் தானும வேறோ
ரான்றவொன் கொடி கட்டி யளவிலா மைந்தர்க் கூட்டித்
தோன்றமுன் சாதிப் பித்த றானெறிச் சிரம நீதி
சான்றவ ராய மற்றைத் தயாவுளோர் கண்டு சீறி. (ச)

ஆயுத கலைகள் வல்ல வசையிலா சானை நண்ணி
நாயனே சொரீ ரொன்று மறிகிலீர் நம்மு ளோரா
னேயமி லாத வஞ்ச நெஞ்சகச் சித்த னீங்கித்
தாயமாய்க் கெருடி கட்டிச் சாதிப்பிக் கின்று னின்றே. (ரு)

என்றவர் கூறக் கேட்ட வினையிலா னவன்செய் குற்ற
மொன்றையுங் காணு னம்பே ரோங்கடி யார்க்கு நல்லான்
சன்றல்வேண் டான மக்கோர் கருணையுள் ளானென் றூறி
நன்றிகூர் பணிக்கு மீந்து போதுநா னஞ்ச நெஞ்சன். (௬)

நற்குரு மனைவி தன்னைக் கவருவா னயந்து கொண்டாங்
குற்றகா ரியத்தை யுள்ளத் தொளித்தொழுங் குள்ளான் போலப்
பொற்புறு மனைக்கண் வந்து நல்லன மொழிவன் போற்றி
மற்றவன் றனைக்கா ணேல் வளஞ்சொல்வ னிறைஞ்சி மெல்ல. (௭)

நன்னுதன் மாத ராரே நாதரெங் கடைந்தா ரென்று
மின்னருண் மடந்தை சார்ந்த விவன்கருத் தறியா ளாகிப்
பொன்னெயி லால யத்துப் போயினுர் போந்த தேதிங்
கென்னவாய் விடாமற் போவா னுடொறு மிடம்பெ றுமல். (௮)

மீண்டுறு கயவ னோர்நாள் வேறொரு வர்க்கா ணுமற்
கண்டுமா தினைப்பி டிப்பக் கற்புளா ளாத லாலே
புண்டரு நெஞ்சத் தோடும் போயினு ளுதறி விட்டு
மண்டிடிய பயத்திற் போனான் வஞ்சகக் கயவன் றானும். (௯)

பின்னவ மான வஞ்சம் பிறர்க்குரை யார்க ணல்லோ
ரென்னுமவ் வுரையை நோக்கி யேதமின் முல்லை வல்லி
தன்னுயிர்த் தலைவ னுக்குஞ் சாற்றிடா ளெங்கு முள்ள
வின்னெறிச் சொக்கன் றானே யறிகுவ னெனவி ருந்தாள். (௧௦)

அடியவர் நன்மை தின்மை யறிபவ னறிந்தி ரங்கிக்
கடிதிவன் வடிவங் கொண்டு கயவனை நணுகிச் சொல்வான்
வடிவிளை யவனீ யானோ கிழவன்மா நிலம திப்பப்
படிமிசை மறுகி லேறி வெட்டவா பாடை கூறி. (௧௧)

நின்றெனை வென்று யேனீ நினைத்தகா ரியம்ப லித்தற்
கின்றுகே ளைய மில்லை யிருந்திடு பேடி யாயி
னன்றியோ ரானே யாயிற் புறப்படு புறப்ப டங்கம்
வென்றியில் லானே யென்னப் புறப்பட்டான் வெகுளி பொங்கி. (௧௨)

பலகைவாள் கடிது வாங்கிப் படைக்கல வினைஞர் தம்மு
ளிலகிய வுலகத் தென்னோ டெதிர்ப்பவ ரில்லை யின்று
வலியிலாக் கிழவ னீயோ வெதிர்ப்பவ னென்று வஞ்சப்
புலையனு மெதிர்த்தான் மற்றொ ரெதிரிலாப் புனித னோடும். (௧௩)

சோதிலா மனப்ப ணிக்கன் குலத்தினைக் காக்க வேண்டி
வீதியி லேறி யங்கம் வெட்டுதற் கியைந்து நின்றான்

காதிய புரங்க டந்தோன் கணத்திடை வெட்டி வீழ்த்துத்
தீதட வல்ல னாகி யிருந்துமே செய்யா னாகி. (கச)

வலம்படு திறத்தி னோடும் வந்தியை யாவ லத்தி
விலங்குபத் திரத்தி னோடு மிடம்படு தடியி னோடுங்
கலங்கிட வொட்டி முட்டிப் பிடித்தனன் கையும் வாளும்
விலங்கெனா மணிய ணிந்து மேதினி யதிச யிப்ப. (கரு)

நாகமா புரத்து வாழ்வோ னல்லடி யார்க்கு நல்லோ
னேகநா யகன ணிந்த வணியினுக் கிகல்வே றின்றிப்
போகெனிற் போகொ ணாதாய் வரவெனில் வரவொ ணாதா
யாகம்வேர்த் தஞ்சி நின்றா னங்கநாற் றெட்டும் வென்றான். (கசு)

அஞ்சிய நெஞ்சன் றேறி யறிகிலேன் முன்போ லல்லை
நெஞ்சுளோ ரஞ்சும் வித்தை நீணிலத் தெங்கே கற்றாய்
மிஞ்சுபத் திரத்தோ டொள்வாள் வெட்டுவோ மென்ன விட்டுக்
கஞ்சவாள் பலகை வாங்கி நடந்தனன் கடுமை கூர. (கஎ)

இலகுவாள் விதிர்ப்பக் கண்ட விமையவ ரருளை வாழ்த்த
வுலகிலா சாரம் பேணி யுலாவிட வுணராச் சித்த
னிலமிசை யஞ்ச முட்டி வெட்டுவ னியமத் தோடும்
வலியநீ பார்த்துக் கொள்ளென் றிறக்கினான் வலிய தோர்கை. (கஅ)

செறுத்துமே னடத்தல் கண்டு சிறிதுமெய் வியர்த்துக் கம்பித்
தறத்துளா னெவர்க்கு மஞ்சா னஞ்சினார் போன டித்தாங்
கிறக்கின கைக்கு மாறா யிட்டகை யிறக்கி முன்னங்
குறித்தவன் கொள்வ தான நிலத்தையுங் கொண்டு சொல்வான். (ககூ)

வடிதர நொட்பத் தூண்ட றாக்கமட் டயங்கு ளிப்ப
நடுவெழ வீசச் சாரக் கலப்பநேர் நடக்க முட்டக்
கடகுள கோச ரக்கை வெட்டவுட் கணக்கி லாதாய்
படிமிசை வலக்கை வீழ வெட்டுவல் பார்த்தி யென்றான். (உ0)

இந்திர னயன்மால் சோம வெனவிகல் பேசி முட்டி
முந்துற வெட்ட வெட்டுங் கையினைப் பிடிப்பான் முந்தும்
வெந்திறற் பணிக்கன் கையை மீளவும் விட்டு வெட்டச்
சந்துடன் வீழ்ந்த வந்தத் தலத்திடை வாளுங் கையும். (உக)

கையற வெட்டா முன்னங் கட்டிய சொட்டை யாலே
வெய்யசொற் சொன்ன நாவை விரைவொடு மரிந்து நாளும்
பொய்ம்மைசெய் தொழுகு நெஞ்சைப் புரையறக் குத்திப் பத்திச்
செய்தியின் வணங்கி டாத சிரத்தையு மறுத்து வீழ்த்தான். (உஉ)

கண்டவர் பயந்த ணிந்து கடுமைகண் டதிச யித்து
வெண்டலை விருத்த ராயும் விளங்குநம் பணிக்கர் தம்மை
மண்டலத் தாரே யொப்பார் மற்றிவ ருருக்கொண் டெய்தி
யண்டர்நா யகன்வென் றானோ வென்னுமுன் னொளித்தா னார்த்து. (உங)

வென்றிகொண் மைந்த ரெல்லாம் வென்றவர் தமைக்கா ணாமற்
சென்றணி பொலியில் லத்துத் தேவியை வணங்கி வாழ்த்தி
வன்றிற னாத ரெங்கே போயினா ரென்ன மங்கை
கொன்றையஞ் சடிலச் சொக்கைக் கும்பிடப் போனா ரென்றாள். (உச)

அவ்வுரை தெரியக் கேட்டே யவரவர் முகமு கம்பார்த்
திவ்வுரைக் கேது வென்கொ லென்னுங்கா லிரும்ப ணிக்க
னவ்விசேர் கையி னானை நலந்தரு தாளி னானைச்
செவ்வியி னிறைஞ்சி வந்தான் சேபவடக் கரமுந் தானும். (உரு)

வந்தவன் றொழுது நின்ற வாயிலிற் றொகுதி கண்டிங்
கெந்துநீர் புதல்வீ ரெல்லா மிப்பொழு தணைந்த தென்ன
முந்துநம் முருப்போல் வந்து முன்னைநம் பகைவ னாய
வெந்திறற் சித்தன் றன்னை வென்றன னொருவ னென்றார். (உசு)

விரைவொடுங் களத்து வீழ வெட்டிடா மறைந்தோர் தம்மைத்
தெரிவுற வென்றீர் நீரென் றிருந்தனஞ் சிறியே மென்னக்
கருதியாங் கவன்முன் னுற்ற கருத்தறி யாமை யாலே
புரையிலா மனையிற் புக்கான் புகலவோர் மாற்ற மின்றி. (உஎ)

சித்திர மனைய கோலத் தேவியை வினவத் தேவி
பொத்திய செய்தி சொல்லிப் புனிதனே வென்றா னென்ன
மெத்திய பரிவிற் போந்து வெளிப்பட வெவர்க்குங் கூறிப்
பத்தர்கள் பத்த னல்லா லாருளர் பழுது தீர்க்க. (உஅ)

மேவிய புதல்வீ ரென்று விளம்பியா லயத்து நண்ணித்
தேவதே வனைவ ணங்கிச் செப்புவா னொப்பி லானே
யாவிநா யகனே நின்பா லன்பிலா வென்பால் வைத்த
வோவிலா நின்பே ரன்பை யெப்படி யுரைக்கு மாறே. (உகூ)

கருதியென் னுயிரையின்றென் குலத்தினைக் காக்க வேண்டிப்
பொருவின்மெய் கரந்து பொல்லாப் புலையனே னுருப்பு னைந்திங்
கரியபே ரங்கம் வெட்ட வியைந்தனை யடிமை வேறு
தரைமிசை யின்மை யாலோ தலைவனே யெனத்து தித்தான். (ஙo)

மற்றுமன் னவன்முன் னான மனிதர்கண் டதிச யித்துப்
பற்றிய வடியார் தம்மேற் பழுதுவா ராமற் காக்கு

முற்றவன் றன்னைக் கற்பார் மடந்தையை யுண்டென் றேத்தும்
வெற்றிகொள் பணிக்கன் றன்னை வியந்தனர் நயந்து வாழ்த்தி. (௩௧)

பணியடி யார்க்கு நல்லார் பத்திர மென்னுஞ் சொல்லு
மணிபொலி திறத்தி னோங்கு மழகிய சொக்க னென்னுந்
துணிவுடைத் தோலாக் கையுந் துளங்கிட வன்று முன்னு
வினையிலா வுலகத் தின்கண் வழங்கின வெவரும் போற்ற. (௩௨)

ஆகத்திருவிருத்தம் - ௮௯௯.

---

## ௩௯.—மதுரையான திருவிளையாடல்.

மன்னிய புகழ்க்க டம்ப வனத்திரு நகரி தன்னுட்
செந்நெறித் தத்த னென்னும் பெயருடைச் செழியர் கோமான்
றொன்னெறி மறைநூ திக்குஞ் சுந்தரற் கன்பு பூண்டு
முன்னமோர் காலந் தால முறைமையிற் பரிந்து காத்தான். (௧)

அறமலி வைதி கத்தி னருடரு நெறிபொ ருமற்
சறுவியாங் கதற்கு லைப்பான் வேண்டுப கணத்திற் கூட்டி
மறமலி யமண ரெல்லா மந்திர வாதஞ் செய்தோர்
திறலுடை யரக்கன் றன்னைத் தோற்றுவித் தார்தி ரண்டு. (௨)

வெண்பிறை யெயிற்றுக் கொற்றக் கருநிற விரிசெங் குஞ்சிப்
பண்பிலா வரக்கன் றன்னோர் பாம்புருக் கொள்ளப் பாம்பு
விண்படர் வரைபோற் றோன்றி மேதினி நடுங்க நஞ்சங்
கண்பட விழித்துச் சீறி யெழுந்தது கனன்று பொங்கி. (௩)

செல்வமார் செழியன் மிக்க சிவபத்தி முதிர்வா னம்மைக்
கொல்லுமா றெண்ணி னனீ கூசிடா தணுகி யாங்க
ணெல்லைமா நகரி யோடு முரனுடை யவனை நின்வாய்ப்
பல்லுற விழுங்கி டென்று பாம்பினை யேவி னார்கள். (௪)

தூவிட வெண்பற் செங்கட் கருநிறச் சுத்தத் தூத்திப்
பாவகப் பகுவாய் நாகம் படம்விரித் தடர்ந்து நீண்ட
வால்விதிர்த் துடன்று றுக்கி வச்சிர விரட்டை நெட்டை
நாவசைத் துயிர்த்து ரத்திற் சேர்ந்தது நகரின் பாங்கர். (௫)

தானது கண்டோ ரோடித் தலத்துளோர் தம்மை யெல்லா
மூழுயிர் கொள்வான் கூற்ற மணைந்ததோ வறியோ மோங்க
மானுறு வரைபோ லின்னோர் நாகவந்த தென்று
மீனவர்க் குரைப்பக் கேட்டு வந்தனன் விரைவிற் கூடல். (௬)

தெரிவுறத் தடுப்பான் வந்த தென்னவன் போகி நெட்டை
வரையுயர் வடிவங் கண்டீ தேதென மருண்டு நின்று
பெரியபாம் பணியுஞ் சொக்கப் பிஞ்ஞகா வென்று நெஞ்சத்
துரனொடுந் தியானித் தெய்தா னொருதனிப் பாணங் காண. (௭)

வாளர வதனைத் தாவி வருமுனங் கடிப்பத் தேறி
மீளவும் விட்ட கொற்றப் பகழிலை வெவ்வாய் வாளி
நீளுருச் சின்ன மாக வீர்ந்திட நீத்த மென்னக்
கோளழல் விடத்தை வாயா லுமிழ்ந்தது கொடிய நாகம். (அ)

கடியபாம் புமிழ்ந்த வேகக் கடுவிடம் பெருக்கா றாகிப்
படிபுகழ் நகரிற் சென்று பரந்திட வழலாற் றாமற்
குடிதழூஉ மன்னன் முன்னா மானிடர் குழறிச் சென்று
சடைமுடி யழகன் கோயி லடைந்தனர் சரண மென்று. (௯)

வேறு.

அரவா பரனே சரணஞ் சரணம் மடியார் துயரங் களைவாய் சரணங்
குருமா மதிசேர் சடையாய் சரணங் கொடுமா விடமுண் டவனே சரணந்
தரைநா யகனே சரணஞ் சரணந் தக்கோர் பரவுஞ் சொக்கே சரணங்
கருதார் புரமெய் தவனே சரணங் கருணா கரனே சரணஞ் சரணம். (௧0)

பாரோர் பரவும் பரனே சரணம் பணிவா னவர்கட் கணியாய் சரணம்
வீரா விதழித் தாரா சரணம் மெய்யா வுமைசேர் கையா சரணந்
தேரா விருவர்க் கரியாய் சரணந் தெளிவா ரொருவர்க் கெளியாய் சரண
மாரா வமுதே சரணஞ் சரண மழகா வருளா கரனே சரணம். (௧௧)

மழுவார் படையாய் கொடுமால் விடையாய் வரிதோ லுடையாய் புடைமா றுடையா, யழகா வென்றிப் புழகா வன்பர்க் கரியா யன்பர்க் கெளி யா யிந்தத், தழலார் வஞ்சக் கொடுமா நஞ்சைத் தணியா யிங்குத் தணியா யென்றுய்த், தழுவார் தொழுவார் விழுவா ரெழுவா ரானார் சோர்வா ரானா ரவரே. (௧௨)

வேறு.

புகலென வந்து போற்றப் புண்ணியச் சொக்க மூர்த்தி
பகரரு மனிதர் முற்றும் படுந்துயர் தனையு மஞ்சச்
சகமிசை யோடு நஞ்சத் தடிவெம் மையையுங் கண்டு
மிகவருள் சுரந்தான் கோளை விளைவினிற் றணிப்பா னெண்ணி. (௧௩)

சடைமுடி யமுத விந்து விந்துவைத் தெறித்துச் சார்ந்த
விடமெலா மதுர மாக்க வெப்பமுற் றடைந்தோர் யாற்று
ளிடரெலா நீங்கப் புக்காங் கின்பமெய் திந்தி ளைத்து
நடாவின் றார்க ளெந்தை பெருமையை நயந்து வாழ்த்தி. (௧௪)

திருவமரருள்சேர் சொக்கன் றேவர்க டேவன் வெய்ய
வரவுமி ழால வாற்றை மதுரமாக் குதலா லாங்கு
வரர்புகழ் பதிக்கு நாம மதுரைமா நகரி யென்றே
பரிவுற வன்று முன்னுப் பரந்தது பாரின் மீது. (கரு)

காவல னெய்ய வெய்ய கடுவிட முடியக் கக்கி
யேவொடு மறிந்து கம்பித் தின்னுயிர் விட்ட பாம்பைத்
தேவியு நயப்ப மண்ணிற் றிருவிளை யாடல் காண
மாவளை யாக்க நாக மலையென வழங்கிற் றன்றே. (கசு)

வேறு.

"விதுவரவ..................மதுரைநகரே" [இச்செய்யுளின் முழுப்பா கத்தை இப்புத்தகத்தின் ௩ - ம் பக்கத்திற்பார்க்க.]

வேறு.

நாணமி லாதோர் மீண்டு நச்சரா மாண்டி மைப்பிற்
கேணுயர் விலங்க லாதல் கண்டும்பின் றெளியா ராகி
மாணுடைத் தத்தன் றன்னை மதுரைமா நகரி யோடுங்
காணமுற் கொல்வோ மென்றாங் கவரவர் கழறிப் பேசி. (கஎ)

வேறு.

நறையி லங்க சோக நீழ லண்ணி யெண்ணி லாதவா
மறம லிந்த சந்த மிஞ்சும் வஞ்ச மந்தி ரங்களா
லிறையி னம்பர் வெள்ளி வெற்பை யெள்ள வுள்ள மஞ்சவோர்
திறம்வி ளங்கு வலியி லங்கு தேனு வைப்ப டைத்தனர். (கஅ)

படைத்த வெய்ய பசுவை யீசர் பத்தர் வாழு மதுரையைப்
புடைத்த ழித்து ழக்கெ னப்பு கன்று போக விட்டலும்
கடுத்த வெஞ்சி னத்தி னோடு கால மேக மென்னவே
யிடித்த திர்ந்து சென்ற தெந்நி லத்த ரும்வெ ருக்கொள. (க௯)

வேறு.

வெல்லருங் கோவைக் கண்டு வேந்தன்முன் னோர்ந டுங்கிக்
கொல்லொணாப் படையெ வர்க்கும் வெல்லொணா தென்று கொற்றத்
தொல்லையா லயத்துச் சென்று சொக்கனே யென்ன வெல்லாம்
வல்லநா யகனி தற்கென் செய்குவே மாற்றற் கென்றே. (உ௦)

அறமறக் கொல்ல வந்த தாயினும் பசுவைக் கோறன்
மறைவழக் கல்ல வீரம் வாங்குத றகுமென் றெண்ணி
முறையிடு பவரைக் காப்பான் வரையென முன்கி டந்த
திறலுடை யடல்வெள் ளேற்றை யேவினான் றேனு மீது (உக)

படிமிசை யெவருங் காணப் பாற்கடல் கிளர்ந்த தென்ன
விடைவிடை கொண்டெ ழுந்து வெள்ளிமால் வரைமீ தேற

விடிதரு பெரிய வெள்ளை யிகலுடைக் கடிய மேக
நடையொடு செல்வ போலச் சென்றது நாசி மூசி. (௨௨)

வாவுறு வடிவா னேற்றைக் கண்டபோ தேம யங்கி
மேவுவீ ரியத்தை யெல்லாம் விட்டிணை விழியை மூடி
யாவுரு நடுங்கி வீய வார்த்தெழுந் தகிலத் தோர்க
டேவதே வனைத்து தித்தா ருறுபயந் தீர்ந்து தேறி. (௨௩)

தாருறு நெடிய சேவாற் பேருடற் றழைந்த தாடிக்
கூரிய பெரிய கோட்டுக் கோவுயிர் விட்ட பின்னர்ச்
சீரிய பிறங்க லாக்கித் திருவிளை யாடல் காணப்
பார்மிசை வழங்கு வித்தான் பசுமலை யென்ன வாங்கு. (௨௪)

மந்திர வாதஞ் செய்த மானமில் சமணர் தந்தம்
வெந்தசந் தங்க ளோடும் போயினர் விளிவோ டஞ்சிச்
சிந்துரத் துங்கச் செங்கட் பெருந்திமிற் றிரண்ட நேர்வாற்
சந்திரப் பகிர்ம ருப்புச் சுந்தரத் தரும வேறு. (௨௫)

கொடுந்தலை மேரு வெற்பைக் கோட்டுமண் கொண்டு வெய்யோ
னெடுங்குமால் வரையின் பான்மேய்ந் துதயமால் வரையிற் றாவி
யடுங்கட லேழு நீருண் டவனிகாற் சிறைகொண் டப்பா
லிடங்கொள்பே ரண்ட முட்ட விட்டிறுத் திட்ட தாங்கு. (௨௬)

வினையற வந்தி றைஞ்சு மெழின்மழ விடையை நோக்கி
மனமகிழ்ந் தணிக ளோடு மதிதவ ழுயர்பி றேடு
மினிமையிற் கிடத்தி நாம மிடபவெற் பென்னப் போந்த
தனுவொடுங் கிடந்த தோங்கத் தண்டலை மலையதாகி. (௨௭)

அங்கது கண்டோ ரெல்லா மதிசயித் தருளை வாழ்த்தித்
தாங்கரு முவகை கூர்ந்தார் தனிவிளை யாட றன்னைப்
பாங்குமைக் கருளிச் செய்து பத்தர்கள் பத்த னங்க
ணீங்கரும் விடையை நோக்கி யிருந்தன னேசங் கூர்ந்தே. (௨௮)

ஆகத்திருவிருத்தம் - ௧௨௭.

---

# ௩௭.—வெப்புத்தீர்த்த திருவிளையாடல்.

ஞான முற்றிய வெற்றி கொ ணற்றவர்
பானி றத்திரு நீறு பரப்பியே
மீன வற்கடு வெப்பு கொழுத்தறு
கூனி மிர்த்த திருக்கதை கூறுவாம். (௧)

வேறு.

நன்னெறிசேர் காவிரிசூழ் நன்னாட்டு முன்னொருகாற்
பன்னிரண்டு பெயருடைய செழும்புகலிப் பழம்பதியுண்
மன்னுமறை யோர்குலத்து வைதிகவா ரணமென்றோர்
தன்னன்மொழிப் பாலகனார் கவுணியகோத் திரத்துதித்தார். (உ)

பானலங்கட் கவுரிமுலைப் பாலமுது செய்தருளி
யூனமிலா வருங்கலைக ளோதாம லுணர்ந்துயர்ந்த
ஞானநிறைந் தரும்பதிகம் பாடிமறை நாடரிய
மானமர்கை யான்மாட்டு வரிசைகள்வேண் டிபெற்றார். (ங)

அன்புடைநா வுக்கரசோ டாதிமறைக் காட்டெய்தி
நன்புறுகா விரிநாடு திருநீறு நனிவிளங்க
மன்புகழ்சேர் புனல்வையை வளநாடு சமணர்களாற்
றுன்புறுமென் றேனோருஞ் சொல்கின்றா ரென்றழுங்கி. (௪)

சாதிமுறை யறியாத சமணர்வழி யொழிவித்தே
யாதரவி னமர்ந்த நாட்டனுகி யஞ்செழுத்தும்
வேதநெறி யுஞ்சால விளங்குவிக்க வேண்டுமென
வோதரிய திருவுள்ளத் துணருங்கா லிறையருளால். (ரு)

மன்னமைச்சன் குலச்சிறையும் வளவர்கோன் றிருமகளார்
தென்னவன்றன் மாதேவி திருவுடைமங் கையர்க்கரசு
முன்னரிய சிவபத்தி முதிர்ச்சியினு லொளித்தோலை
யின்னல்கெட விடுத்தாரங் கெய்தியவா றதுகேட்டு. (சு)

வேறு.

அருண்ஞான சம்பந்தர்க் கடிமை யாற்றா வலமானி குலச்சிறையின் னைப்ப மின்று, பெரியோராற் றிருவுள்ளப் பெருமை கேட்டேம் பேசரிய திறத்தமணர் தம்மை முற்றும், விரைவாக வெழுந்தருளிக் கோறல் வேண்டும் வெண்ணீறு மஞ்செழுத்தும் விளங்க விங்குப், பரிவோடு மெழுந்தருளா தொழியி னுடு பறிதலைய ராற்சாலப் பழுதா மென்றே. (எ)

வேறு.

சென்ற வோலையின் செய்திகண் டின்புறா
நன்றி கூர்தரு ஞானசம் பந்தரும்
வென்றி யாலவாய் மெய்யனை வாழ்த்துதற்
கின்று கால மெனவொருப் பட்டனர். (அ)

சார்ந்த நாவுக் கரசுந் தவாநலஞ்
சேர்ந்த மாந்தருஞ் செந்நெறிப் பாலரே
வாய்ந்த நாட்டிதி வாரம்பொல் லாவெனச்
சூழ்ந்து பன்முறை சொல்லி விலக்கினார். (கூ)

என்னை யாளுடைச் சொக்கை யிறைஞ்சுதற்
குன்னு நெஞ்சுடை யேனுக் குணர்வுளீர்
புன்மை நாளும் புனிதமா மென்றுயர்
நன்மை யாப்பு நவிலுவா ரின்புற. (௧௦)

## வே று.

ஏயுற வச்சமுற்ற மாந்தர்க ளினிமை கூரப்
போயுறு காரி யங்கள் பலிப்பதன் பொருட்டு முன்னர்
வேயுறு தோளி பங்க னென்றுயர் மேன்மை கூர்ந்த
பாயிரப் பதிக மோதிப் புறப்பட்டார் பரிய யாரும். (௧௧)

மெய்திக ழப்பர் தம்மை விடுத்தியன் மதுரை நோக்கி
வைதிக நெறியைக் காக்க மானமில் சமணர்க் காயப்
பொய்யிலா ஞான யானை மதம்பட்டுப் போகா நின்ற
தையம தில்லை யென்ன வறைந்தன காக ளங்கள். (௧௨)

கழுமலப் பால னோலை கருணைகூர் மானி யோடு
விழுமிய வமைச்சன் காண்க மேதினி முழுது மெச்சக்
குழுவமண் குண்டர் தம்மைக் கூரிய கழுவி லேற்றி
வழுதிநா டடைய நீறு பரப்பிட வருகின் றேமால். (௧௩)

## வே று.

ஐயமிலை யென்றினிய திருமுகத்தை முன்னடைந்தோர்
துய்யகரம் விடுத்தடைந்த தொண்டர்குழாஞ் சூழ்ந்தேத்தச்
செய்யபுனற் காவிரிசூழ் சென்னிவள நாடகன்று
வையைநதித் தென்பாண்டி நன்னாடு வந்தடைந்தார். (௧௪)

ஏந்துமறை வேந்தாதிருப் புத்தூ ரிறைஞ்சிமதி
தோய்ந்தகொடுங் குன்றந் தொழுது திருப்பதிகஞ்
சேர்ந்திசையின் வானிற் பொலியென்று தேர்ந்தோதிப்
போந்துமது ராபுரியி னெல்லை புகுந்தனரால். (௧௫)

## வே று.

மல்லல்சேர் நகரத் தேயெண் வாயகத் தமணர் முற்றுஞ்
சொல்லருந் தீக்க ணுக்க டுன்னிமித் தங்கள் கண்டு
வெல்லரும் பகையுண் டாகு மென்றவர் வெருக்கொண் டுள்ளத்
தொல்லையின் மன்னன் பாற்சென் றுரைசெய்வார் பரசி மெல்ல. (௧௬)

பிண்டிவே ரற்று வீழப் பிரம்புநேர் பிளப்பக் கையிற்
குண்டிகை யுடையப் பாய்முக் குடையுகக் கழுவா யேறக்
கண்டனங் கொடுங்க ணுத்தோள் கண்ணிடந் துடிக்கு மூர்வேம
பண்டிகழ் கூகை யாந்தை பாழிமேற் குழறுங் காணே. (௧௭)

இன்னதென் றறியே மென்று மெனவஞ்சா வரச னஞ்சித்
துன்னியோர் தமைவி டுத்துத் துயருறத் திருமு கங்கண்
டின்னநீர் மானி யாரு மின்புறு மமைச்ச ருரு
நுன்னிமித் தங்கள் செய்யக் கண்டுள நனிந யந்தார். (கஅ)

இந்தவா றுறுங்கா லங்க ணினிமையிற் சிலர்வந் தெய்தி
மந்தர முலையி னார்க்கு வைதிக யானை நந்தஞ்
செந்தமிழ் நகரின் பாங்கர்ச் சேர்ந்ததென் றுரைகை கூறத்
தந்திர வமைச்ச ரானா யேவினார் தயாவு கூர்ந்து. (கசு)

ஆண்டுமுன் சென்று காணு மறிவுடை யமைச்ச னார்முன்
பூண்டபே ரன்பு நீடப் புளகெழ வுடல்கம் பிப்ப
வீண்டுகண் ணருவி சோர வெதிர்துதித் திறைஞ்சி வீழ்ந்தார்
காண்டகு பிள்ளை யாருங் கண்டெடுத் தணைத்தார் வாழ்த்தி. (உ0)

முதிருமா மறைமு ழங்க முத்தமிழ் வாணர் போற்றக்
கதிர்விடு முத்தச் சொற்றச் சிவிகைமேற் கவிகை துன்றப்
புதியசா மரையி ரட்டப் பொருவரும் வாது காண்பான்
றுதிசெய்து வந்த வானோர் சூழ்ந்தலர் மாரி பெய்ய. (உக)

வேறு.

சுரருலகு புகவொலிக்குந் துன்றுசெழுங் காகளங்கள்
பரசமய கோளரிவந் தானென்று பணிமாற
வரிசைகள்கொண் டெதிர்கொண்ட மாமறையோர் குணலையொடும்
பொரியலர்சிந் திடத்தொண்டர் போற்றிசய சயவென்ன. (உஉ)

வேறு.

அதிர மாமுழ வருமுரு மிருடிக ளார்த்துத்
துதியி னேத்திடச் சாத்திய சுட்டிநீ றிலங்க
வெதிரி லாதசெம் பவளவெண் ணகைநிலா வெறிப்பப்
பதியின் மேவினர் நித்திலப் பந்தரி னீழல். (உங)

வேறு.

அறமுறநன் ணியஞான முனிவரள விடவொண்ணு
மறுவிலுயர் கோபுரம்பொன் மதிலிலங்கு நகர்கண்டிங்
கிறைவர்திரு வாலவா யெம்மருங்க தெனுமளவிற்
றுறவுநெறி தரும்பெரிய தொண்டரர கரவென்றே. (உச)

மாசறுபூம் பொழில்புடைசூழ் மதில்வாள விரிகாட்ட
வீசுதொடி விசும்பளப்ப விண்ணவர்சூழ் மேருவெனத்
தேசொடுவான் முகடுதொடுஞ் செழுமணிக்கோ புரமிலங்கு
மீசனுறை திருவால வாயிதுவே யெனக்காட்ட. (உரு)

வே று.

மாசில்கை கூப்பிக் கண்டுமுன் பதிக மங்கையர்க் கரசியென் றெடுத்துக்
கூசியா லயத்துச் சென்றெழு நிலைசேர் கோபுரத் தணைந்துவீழ்ந் திறைஞ்சிப்
பேசருந் துதியால் வலஞ்செய்துட் புகுந்து பெருங்கவிப் புலவனைக் கண்டு
நேசமார் விதியின் வணங்கியொண் பதிக நீலமா மிடற்றென வெடுத்தார். ()

வே று.

உளநெ கிழ்ந்திட வொழிவிலா விழிபுனல் சொரியப்
புளக மேவிடப் பொடியணி மெய்விதிர் விதிர்ப்பக்
கிளர வோதிடுங் கீதவொண் பவளவாய் குழறக்
களிகொள் வேதியர் மூழ்கின ரானந்தக் கடலுள். (உ௭)

போது மெல்லையிற் புகழுடைச் செம்பியன் மகளார்
காது நெஞ்சுடைக் காரமண் குண்டர்க டம்மை
வாதின் வெல்லுவான் பிள்ளையார் வந்தன ரென்றே
யாதி யாலவாய் மெய்யனை வணங்கவென் றடைந்தார். (உ௮)

வந்து காதலிற் பிள்ளையார் மலரடி வணங்கிச்
சந்து மேவுடல் புளகெழக் கண்ணினீர் ததும்பச்
சிந்தை யன்புறக் கண்டுநின் றிருமுகங் காண்பா
னெந்தை யேயென்ன புண்ணியஞ் செய்தன னின்றே. (உ௯)

வே று.

மையறுகற் பகக்கன்றே வரையரையன் றிருமகளார்
துய்யதனத் தமுதுண்டு சோதிவிடு மணிவிளக்கே
மெய்முகிலே தமிழ்க்கடலே யருட்குன்றே மேதினியோர்
செய்தவமே மறைப்பயனே செழும்பதுமப் பதம்போற்றி. (ந0)

வே று.

என்று போற்றிட விரக்கமுற் றருமறைத் தலைவர்
மன்ற லங்குழற் பாண்டிமா தேவிகேண் மகிழ்வி
னின்று வந்தன னின்பரி வாலென நயந்தாங்
கொன்ற வேண்டுப நல்கிமுன் போயின ரொல்லை. (ந௧)

வே று.

இன்னருள்சே ரமைச்சனு ரிடங்காட்டப் போந்தினிய
தொன்னெறிசேர் வாகீசச் சுவாமிமடத் தவதரிப்ப
வன்னதுகேட் டிருஞ்சமணர் திரண்டறிவான் விடுத்ததிறன்
முன்னரிகழொற் றினர்சொல்ல முட்டுச்சஞ் சலமுற்றார். (ந௨)

வே று.

விட்ட வாறது கேட்குமுன் வெய்யவூழ் கினற்றுட்
கட்டி வீழ்ந்தனர் சிலர்சிலர் களத்திடைக் கயிறுங்

ஒட்டி ஞான்றனர் சோர்ந்தன ரெட்டிதின் றசோதின்
முட்டி மாண்டனர் புரத்தமண் குரத்தியர் முடிய. (௩௩)

மதியி லாதவ ராங்கது கண்டுளம் வாடி
யெதிரி லாதாஞ் சமயமின் றிறந்தது விரைந்தே
முதிரு முன்னர்யா மொழிகுவம் வழுதிமாட் டெனவே
யதிர்வி ஞேடிசென் றுரைசெய்வா ரரசனைப் பரசி. (௩௪)

வேறு.

மறைஞானி யென்பானோர் சோதியவை திகச்சிறுவன் மதுரை மேவிப்
பொறையாருஞ் சுந்தரன்ற னடிவணங்கித் தானறிந்த புதுமை கூர்ந்த
வறமாருந் தமிழ்பாடி யருவிவிழி யொடும்புளகத் தோடு நின்று
துறையாரும் வாகீசச் சுவாமிமடத் தவதரித்தான் சுருதி பாடி. (௩௫)

மன்னவகேண் மதியாதிந் நகர்வந்தா னவனம்மை வாதின் வெல்வா
னிந்நகர்வந் ததுகண்டே யேனோரு முட்டானே மென்னக் கேட்கு
மன்னவனு மடிகளே யான்கேட்டு முட்டென்ன வருக ரெல்லா
மின்னழலை மந்திரித்து விடுத்தேக விவெமுள மெலியே லென்றார். (௩௬)

செந்நெறியி னுற்றதுசெய் தோட்டுமெனக் கேட்டெழுந்து சிற்றத் தேகி
வன்னியைமந் திரித்தேவச் செல்லாது நின்றுழன்று மறுகக் கண்ட
பின்னறிவன் சிறியனலன் பெருநெருப்பை யிடுவமெனக் கங்குல் பேர்முன்
மன்னுமடத் தெரியிட்டார் தங்கள்வயிற் றெரியிட்டார் மறைந்து சென்றே. ()

வேறு.

இங்கது கானு முன்ன ரெங்குமாஞ் சொக்கன் மங்கை
தங்கிய வங்கங் கமபித் தெரிதரு தழல்சு டாம
லங்குமுன் சென்று காப்ப வருந்தமிழ்க் காழி வேந்தர்
தங்கிய தறியா ராகித் தனியணைப் பள்ளி கொண்டார். (௩௮)

காதல்சே ரடியார் சூழ்ந்து கைவிதிர்க் கொண்டு ணர்த்த
தீதியி னெழுந்தி தற்குக் காரண திருப னென்றே
காதலை நினைந்து மானி மங்கல நன்ஞண் பார்த்தாங்
கோதினர் செய்ய னேயென் றுயர்திருப் பதிக மோங்க. (௩௯)

வேறு.

சண்பை நாயக ரேவிய தழலிறை யருளாற்
றொண்டர் வாழ்திரு மடத்தினைச் சுடாதுபோய் விரைவிற்
குண்டர் கேள்வியான் கூறுடை மீனவ னுடன்மேன்
மண்டி வெப்பென வருத்திய தியாவரும் வருந்த. (௪௦)

வரிசை நீடிய ராடக மாளிகைப் புறத்து
விரைகொள் சோலையும் வெஞ்சுருட் கொண்டது வெப்பாற்

கருதி மெல்லணைப் படுத்ததண் கதலியங் குருத்தஞ்
சருகெ ழுந்தது புலர்ந்தன சந்தனம் பனிநீர். (௬௪)

மூடு பாயுடைக் கையர்கண் முகமுகம் பார்த்து
நாடி யொல்லைவந் திரவிடை நாமிடு நெருப்பு
நீடு மிம்மடஞ் சுட்டதி லென்றுநீ டுயிரா
வோடி யாழ்ந்ததம் பாழியின் விடியுமு ளொளித்தார். (௬௫)

வேறு.

பழுதினூல் வல்ல மருத்துவர் முதலோர் மருந்திறாற் பார்ப்பவுந் தணியா, தெழுமனல் கண்டீ தென்கொலென் றறியோ மெங்களாற் றணிந்திடா தென்னச், செழியனு மவரை வெருவுற முனிந்து சிறந்தயந் திரங்கண்மந் திரங்கண், முழுவதும் வல்ல வடிகண்மார் தம்மை முடுகவிங் கழையுமி னென்றான். (௬௬)

ஆங்கது சொல்லப் பாங்குறு மடியா ரவரவர் தொடர்விடா தேகி
நீங்கருந் துயரச் செய்தியைத் தோன்ற நீதியி னிகழ்த்தினின் றழைப்ப
வோங்கிய திறஞ்சே ரெண்பெருங் குன்றத் துறையுமெண் ணாயிரஞ் சமணர்
தாங்கரும் வினைவிற் றிரண்டுவந் தாற்றாத் தழலெழு மரசனைக் கண்டார். ()

கண்டவர் வருந்தே றிண்டிறன் மன்னு கடிதினிக் கொடுங் கொடுஞ் சுரத்தை
மண்டல மதிப்ப மாற்றுவ மென்றே வரைந்தயந் திரங் கணமந் திரங்கள்
கொண்டுறப் பார்க்கு மளவினின் முனனர்க் கொடுஞ்சுர மாங்கவை கண்டு
பண்டையின் வருத்த நிலத்தினு மரசன் றரித்திலன் மிப்பரி தவித்தான். ()

வேறு.

அனைவரும் புறத்துப் போந்தி தென்கொலென் றலையக் கண்டு
புனிதநீ றணியா தஞ்சிப் புனலொடு நீறு சாத்து
மனமுடை யானி யாரு மந்திரித் தலைவ ருரு
நினைவறிந் திருந்து சொல்வார் நிலைமையா டரசற் கூடி. (௬௯)

நறைமுடிச் சொக்கை யேத்த ஞானசம் பந்த ரென்றோர்
சிறுவர்வந் தாரிவ் வெப்பந் தீர்ப்பரோ வறியோம் யாரு
மறமலி சத்தி மானென் றறைகின்றார் வரவ ழைத்தற்
கிறைவநின் றிருவு ளந்தா னறிகிலே மெனப்ப ணிந்தார். (௭௦)

மெல்லெனச் சொல்லக் கேட்ட மீனவன் சிறி யாறிக்
கொல்சுர நீக்க நீங்கள் கூறிய புதல்வன் வந்தா
னல்லமண் கேள்விக் குள்ளே முழுகுவேன் றன்னை நண்ணிச்
சொல்வருஞ் சாம்பல் கொண்டு தொடுவனே சொன்மி னென்றான். (௭௧)

பண்டிதர் தமையு மந்தப் பாலகன் றனையு மின்று
தண்டமிழ் மன்ன நின்றன் சந்நிதி வரவ ழைத்து

மண்டழன் மாற்று மென்று விளம்புக மாற்றி யிட்ட
வொண்டிறற் சத்தி மானைக் கைக்கொள்கென் றுறுதி சொன்னார். (௬௯)

ஆசிலீர் நல்ல தொல்லை யழையுமி னெனவ ழைப்பப்
பேசிவந் தமணர் முன்ன ரிருந்தனர் பிள்ளை யாரும்
பூசுநீ றிலங்க முன்னிற் பொருவருஞ் சிறப்பி னெய்தி
யீசனை நினைந்தி ருந்தா ரிட்டசிங் காசனத்து. (௫௦)

திறம்படு கொடிய வெண்ணா யிரம்பெருஞ் சிங்க நாப்பண்
மறங்கடிந் துளதோர் யானைக் கன்றுநேர் மன்னிற் றென்னக்
கறம்படு மனத்தி னோங்குங் காரமண் குண்டர் நாப்ப
ணறங்களை நாவி னானு நிகழ்ந்தன னருளுட் கொண்டே. (௫௧)

கழுமல முனியை மன்னன் காணுமுன் சிறிது வெப்ப
மொழியகீ ரெங்கு ளீரொன் றுவகையின் வினவக் கண்டு
பழுதறு பிரம னூரென் றெடுத்தரும் பதிக மோதக்
குழுவொடு திரண்ட மற்றைக் குவலயத் தருந யந்தார். (௫௨)

வேறு.

எழின்மட மாத ரமைச்சனா திரண்ட வேதிலார் திறங்களைக் கண்டே
செழியனுக் கருக ரருகராக் கண்டேஞ் சேர்ந்தனி ரிங்குநம் முகத்தாற்
குழுவில்வெல் பவர்யார் தோற்பவ ரியாரென் றறிக்லே மெனப்பயங் கூர்ந்து
தொழமதி யாது மானினேர் விழியென் றெடுத்தனர் தொடுத்திரும் பதிகம்.()

குன்றியோர் தமைமெய் யறிகுறி யாலுங் குளிருவித் திருப்பமற் றருகர்
வென்றிமந் திரிகேண் மங்கைகே ளின்று மெய்தரு நீங்கள்சான் றாக
வன்றிறன் மன்ன னிடப்புறத் தழலை மாற்றுவம் யாங்களிங் கிவனு [தார்.
மொன்றிய விரைவின் வலப்புறத் தழலை யொழித்திடக் கடவனென் றுரைத்

இப்பொழு தளந்திங் கிவன்றிற மறிவோ மென்றுதங் கல்வியை மதித்துச்
செப்பிய மொழியை மாறனுங் கேட்டுச் செழுமுனி மேவினு னம்மை
மெய்ப்பட நீற்றாற் றெருடுமெனக் கூசி வெருவிய நெஞ்சமு மிருப்ப
வப்படிச் செயுமென் றியைந்தனன் முன்ன ரரும்பெருந் தவத்திரும் பயனால்.

அங்கவ னியைய நனிமன மகிழ்ந்த வமைச்சரு மரசமங் கையரும்
வெங்குரு வரசே யங்கநோய் மருந்தே விளங்குநின் சந்நிதிப் பட்ட
பொங்கொளி யரசற் கிவ்வழ றகுமோ வெனவிழிப் புனலுக நின்று
செங்கரங் கூப்பி யடிமிசை வீழ வெழுந்தனர் திருவுளத் திரங்கி. (௫௬)

உரைகெழு வேத மாகமம் புராணம் யாவையு மோதிடா துணர்ந்தோர்
விரைகமழ் நீற்றுக் கோயிலு னீற்றை யென்கரத் தள்ளிமந் திரித்துப்
பரிவுறு சிவனை நயமுற நினைந்து பாண்டியன் றனைநனு குங்காற்
பெருகிளா யமணர் நில்லென வெழுந்து பேசுவா ரிடியென முழங்கி. (௫௭)

மண்டழன் மாற்ற வல்லையேன் மாற்று மற்றுநின் வழிகளைக் கொண்டே
பண்டைநின் கரத்துக் கொண்டநீ றுகா பகைமருந் திட்டநீ றின்று
கண்டிடிற் சென்னி மண்டலத் தவனீ யென்றுமுன் கண்டது விலக்க
முண்டக வதன மழகெழச் சிறிது முறுவல்கொண் டுரைசெய்வார் முனிவர்.()

செந்தமிழ் பயிலுஞ் சுந்தரன் கோயிற் றிருமடைப் பள்ளியுட் கிடக்கு
மந்திர நீற்றை நீங்களே யெடுத்து வரினுமா மென்றலும் வெருண்டு
வெந்தநீ றியாங்க டொடுவமோ வென்று விளம்பநந் தொண்டர்போ யெடுத்து
வந்திடு கென்றார் மிண்டர்க ளதுவும் விலக்கினர் வழக்கல வென்றே. (௫௯)

மன்னிய விபூதி கொடுவரு வதற்கு மனத்திலோர் சூழ்ச்சியு மில்லீ
ரென்னிது பகர்ந்தீர் நீங்களோ நனுகீ ரெம்முளோர் போகவு மொட்டீர்
புன்னெறி யிலாதோர் தமைவிடு நமக்குப் பொருந்திறே ரெமக்குமா மென்ன
மன்னவன் முறையோர் தம்மைமுன் விடுப்ப வந்தனர் வெள்ளைநீ றள்ளி. ()

வேறு.

மற்றவர் கொடுப்ப வாங்கி மந்திர மென்றெ டுத்து
முற்றிய பதிகத் தாலே முதிர்ந்தன பாடி யிந்தக்
கொற்றவன் றனைநங் கையாற் றொடத்தகா தென்று கூசி
நற்றிரு நீற்றை யள்ளி யெறிந்தனர் வலப்பா லண்ணி. (௬௧)

துய்யநீ றணுகா முன்னங் குளிர்ந்திடச் சூழ்ச்சிக் கையர்
பையுண்மந் திரங்கள் கொண்டு பன்முறை யடித்துப் பார்க்குங்
கையுறு நொய்ய பீலி படபடக் கனன்றெ ழுந்து
நெய்யுறு நெருப்பே யென்ன நீடிய தப்பால் வெப்பம். (௬௨)

பண்டைமந் திரங்கள் வெந்து படைத்தவெந் திரங்கள் வெந்து
பிண்டியுந் தண்டும் பாயும் பீலியுங் குடையும் வெந்து
மண்டழ றணிப்பா னங்கண் டெளிப்பமந் திரித்த கையிற்
குண்டிகை நீரு நின்று கொதித்திடக் கண்டார் குண்டர். (௬௩)

ஆங்கது கண்ட மன்ன னருவருத் தவரை யெள்ளி
யீங்குநீர் தொடத்தொ டத்தீ யெழுந்திரா நின்ற தின்றே
ரோங்கிய கொச்சைப் பால னுள்ளிய நீற்றை யள்ளிப்
பாங்குற வெறியும் பாகங் குளிர்ந்தது பரிவு கூர. (௬௪)

என்னது நீங்கள் செய்யுங் காரிய மியம்பு மென்ன
மன்னவர் மன்ன கேண்மோ விந்நெறி வந்த வாறு
முன்னிவ னமுத பாகத் தணைதலாற் றீர்த்தான் முன்னம்
புன்மைசேர் விடத்தாற் றீரா திருந்ததிப் புறத்து வெப்பம். (௬௫)

ஆங்குண ரிதுவே யென்ன வருந்தமிழ்க் காழி வேந்த
ரோங்குபுன் முறுவ லோடு முரைசெய்வா ரரச ரேறே

யீங்கிவர் விளிவில் லாம லிம்மொழி மொழிந்தார் காணத்
தீங்குறு மப்பால் வெப்புந் தீர்த்திடக் கடவ மென்றார். (சுசு)

ஐயமில் பதிகத் தோடு மப்புறத் தணையா முன்னர்
வெய்யபால் குளிர்ந்து தங்கண் மேவுவெப் பனு மிப்பாற்
பொய்யர்கள் பார்க்கும் பீலி சுருணறிப் புகைந்து முன்னிற்
கையற வெந்த தந்தக் கைதவன் கண்டு வைதான். (சுஎ)

பண்டிதர் நீங்கு மென்று பலவிதத் தவனை நீக்கிக்
கொண்டலங் குழலி னாைக் குலச்சிறை யாரை வாழ்த்தி
மண்டலத் தாரே யொப்பா ரிவர்க்கென வரிசை கூர
முண்டகக் கரங்கள் கூப்பி முனிவரைத் துதிக்க லுற்றான். (சுஅ)

பழுதறு சத்தி மானே பாலனே யான்முன் செய்த
வழுவுறு பெரும்பா வத்தா லழுந்தினே னிந்நாண் மேலிக்
குழுவுடை யமண்கைப் பட்ட கொடுவினைச் சேற்றை நீற்றாற்
கழுவியாட் கொள்ளு கென்று வணங்கினன் கமலத் தாளில். (சுகூ)

மன்றுநோக் குபதே சத்தால் வழுவற வுபதே சித்தாங்
கின்னருள் சுரந்து நீற்றை யிருகரத் தானு மள்ளி
வென்றொடு முன்னுந் தொட்டுப் பூசுமுன் வெப்புத் தீர்ந்து
முன்னிமி ராத கூனு நிமிர்ந்ததம் மூர்க்கர் காண. (எ௦)

கொடியவெஞ் சுரந்த ணிந்து கூனிமிர்ந் திலங்கி நல்ல
வடிவொடு மெழுந்து பல்கால் வணங்கிடு மரசற் கண்டே
சுடர்முடி மன்ன நின்பேர் சுந்தர மாற னென்றே
படிமிசை தனில்வ ழங்கப் படுவதென் றருள்சு ரந்தார். (எக)

பொன்னுயர் பீடத் தேற்றிப் புரத்தினை வலங்கொண் டார்த்து
மின்னவேன் டுபெகொ டுத்து வேந்தன்றான் விடுப்பக் கண்ட
வந்நக ரோரு மிந்த வருமபொருட் பாலன் காணிற்
பன்னிய கந்த னென்றே பணிந்தன ரணிந்து நீறு. (எஉ)

வரிவிழி மாணி யார்க்கு மந்திரி யார்க்கு மிக்க
கருணைசெய் தடைந்த வன்பர் கருத்தினை முடிப்பா னைய
சுருதிபா லிலங்கு நீதிச் சொக்கனு லயத்துப் புக்குப்
பரவியொண் புகலி வேந்தர் பண்டைமா மடத்த ணைந்தார். (எங)

பழுதுளம் வேவா நின்ற பறிதலைக் கையர் முற்று
மொழியவோர் மாற்ற மின்றி முட்டுப்பட் டினிக ளோடு
மழலுறு பாழி செல்லக் கதுப்பிடை யழுமு கங்கள்
சுழியகீள் விரல்கொண் டிட்டுக் குரத்தியர் துரத்தி வைதார். (எச)

சுந்தரன் றனைத்து தித்துச் சுந்தர மாறன் கோயில்
வந்துமா பூசை செய்து மவுலிமா ணிக்க வாசி
முந்துசிங் காத னம்பூண் முத்துமேற் கட்டி பட்டங்
கந்தமார் கவரி திண்டேர் கற்பகத் தருவோ டீந்தான். (எ௫)

செல்வமார் செழியர் கோமான் செய்யவெம் மெய்யிற் சார்ந்த
கொல்லும்வெஞ் சுரமுந் தீர்ந்து கூனிமிர்ந் ததுவுஞ் சொற்றாய்
மல்லல்கூர் மலய வெற்ப வல்லப மெல்லாம் வல்ல
வெல்லருஞ் சமணர் பின்னென் செய்தனர் விளம்பி டென்றார். (எ௬)

வேறு.

கட்டு செஞ்சொன் மலயக் கடவுள்கே
ணிட்டை நீங்கி நிசியிடை யெய்தியே
மட்டு லாவு மடத்து மறைந்தெரி
யிட்ட பாதக வஞ்சக ரென்செய்தார். (எஎ)

ஆகத்திருவிருத்தம் - ௪00௪.

## ௩அ.—கழுவேற்றின திருவிளையாடல்.



சட்டெழன் மாறனுறு காசினிவி ளங்கச்
சிட்டர்புகழ் கொச்சைமுனி சென்றருளின் விட்ட
மட்டவிழ்பொ ழிற்றிரும டத்திலெரி யிட்ட
துட்டர்கழு வேறுகதை சொல்லலுறு கின்றேன். (௧)

வேறு.

கன்னன்மொழி மடவாரு மமைச்ச ருருங் காழிநகர்ப் பெருமானைத் தனியழைத்து, முன்னவில்வா ருயர்ந்தசிவ சமயங் குன்றி முழுநிலமுஞ் சமண்மூடிற் றியாவும் வல்ல, வின்னருள்சேர் சைவசிகா மணியே வெல்வ தெங்ஙனவர் பலரொருவர் நாம கிழ்ந்த, தென்னனெனின் மன்னருள மறியொ ணாது திருவுள்ள மறியகிலே மெனப்ப ணிந்தார். (௨)

இத்தகவென் னவில்கின்றீ ரிறையுண் டஞ்ச லேகுமென விடுத்துமடத் தமளி மேவி, நத்தநடு வெழுந்துணர்வா ர்புகன்ற தொக்கு நாமொருவ ரவரெண்ணி யிரவர் காணின், மெத்தியசூழ்ச் சியும்வல்லா ரவர்க டம்மை வெல்வதற்குப் பல்புகழ்க்கு நல்ல சொக்கன், பத்தர்கள்பத் தனையல்லாற் றுணைவே றில்லை பரசியவன் றிருவுள்ள மறிவோ மென்றே. (௩)

வேறு.

சோதி வேதியர் துணைசெயு மவரொடுங் கூடி
யேத நீங்கிட விடியுமுன் னாலயத் தெய்தி

* இச்செய்யுள், சிலபிரதிகளில் இல்லை.

வேத வேள்வியென் றெடுத்திசை மேதகு பதிக
மோது மெல்லையோ மோமென வோங்கிய தோர்சொல். (ச)

அனைத்தும் வல்லவ னருட்டிரு வாக்கெனத் தேறி
நினைத்த காரிய முடித்தபே ரமைச்சரு நிறைந்த
மனத்து மாதருங் களித்தடி வணங்கிட நயந்த
வினைக்க ணில்லவர் சொல்லுவர் பின்னரு மெல்ல. (ரு)

கலக வெஞ்சமண் கையரைக் களைந்திடா தொழியி
னிலகு சைவசித் தாந்தமுன் னிறந்திடு மிறந்தா
லலகில் வேதமும் வேள்வியு மழிந்திடு மழிந்தா
லுலக வேந்தனு மாரியு முலகமுங் கெடுமால். (சு)

ஐய மில்லென வறைந்திட வாங்கவர் விரைந்து
வைய மன்னனே வருநலந் தீங்கினுக் குரியான்
றுய்ய காரிய மவன்வயிற் சொல்வமென் றடைந்து
பைய வோதுமுன் வழுதியும் பழுதிலை யென்றான். (எ)

பின்ன மானெறிச் சமணரைப் பெருந்தண்டஞ் செய்வான்
கன்னி மன்னவ னியைந்தது கேட்டலுங் கடுகித்
தென்னன் முன்னரின் முன்னையிற் சிறப்பொடு மடைந்தே
மன்னு மாசனத் திருந்தனர் வைதிகத் தலைவர். (அ)

வேறு.

மீற்றவ ரிருப்பக் கேட்டெண் வரைப்பெருந் தலைவ ராய
செற்றமில் சமண ரெண்ணா யிரவருஞ் செற்றங் கூர்ந்து
கொற்றவன் கான வென்றி குலைத்திடக் கடவே மென்றே
வெற்றிகொண் முரச மெற்றி யடைந்தனர் விரைவிற் கூடி. (கூ)

கருதினிச் சிறுவ னெண்ணெண் கலைமுதற் கல்வி யாவு
முறைசெழு முளத்து ளோதா துணர்ந்தவ னுயர்த ருக்க
மரியபல் கலையால் வெல்ல லரிதுகை கண்ட நந்தஞ்
சுருதிமந் திரத்தால் வெல்வந் தோன்றவென் றெண்ணி யாரும். (க0)

வாரடா சிறுவ நீதான் மந்திர மேத றிந்தா
யோரினின் வேத நான்கி னோதிய வெழுத்த னைத்தின்
வீரியம் புழுத்தி ரண்டு வெட்டிய தொப்ப தல்லாற்
காரிய முண்டோ வென்றி கண்டிங்ஙன் களித்தல் வேண்டா. (கக)

படுவழி நினக்கொ ருக்காற் பலித்தது கொண்டா லித்தாய்
விடுவிடு காகஞ் செல்லப் பனைக்கனி விழுந்த தொக்குங்
கடைவழி யிதுகொண் டோநீ சாதிக்க வந்தாய் கற்றுப்
புடவியி லெம்மை வெல்வா ரில்லைகாண் புகலுங் காலே. (கஉ)

மணிதிக ழுன்றன் மிக்க மந்திரந் தனையு மெங்க
ளிணையிலா வீர மிக்க மந்திரந் தனையு மின்று
துணிவுற வெழுதி யேட்டைத் தோற்பவர் வெல்வார்க் காணத்
தணிவிலா நெருப்பி னுப்பண் டனித்தனி யிடவா காண்பேம். (௧௩)

வேகாவே டேடையா ரீங்கு வென்றவர் போது கென்னப்
பாகாரு மொழியாள் கொங்கைப் பாலமு துண்டோர் மெல்ல,
வாகாதோ வென்றி யைந்தாங் கெழுந்தணி முரச மார்ப்பப்
போகாமுன் முருட்டுக் கையர் புறப்பட்டார் புரட்டுப் பேசி. (௧௪)

வஞ்சனை செய்வா னெண்ணி மறைந்துநின் றுதவி செய்யுங்
குஞ்சரந் தாங்கு கோயிற் கூத்தன்வாழ் தேத்தி னுகா
தெஞ்சழல் வடகீழ்க் கோணத் திடுமென வேவல் செய்வோர்
மிஞ்சிட நெருப்பிட் டார்கள் விண்குடி வாங்க வாங்கு. (௧௫)

மானமி லாதோர் தம்மை மதித்துமு னடைந்த தேத்து
ஞானமா முனிவர் தாமு நணுகிடக் கண்ட வீச
னீனமில் புனிற்றி னம்பாற் கன்றின்பி னிரங்கிச் செல்லுந்
தேனுவே யெனக்க ரந்து சென்றன னிரங்கி யாங்கு. (௧௬)

நீதிசேர் செழியர் கோமா னேசமார் தேவி யோடு
மாதர் வமைச்ச ரோடு மளவில்சான் றவர்க ளோடுந்
தீதில்பல் லியங்க றங்கச் சிறப்பொடு விளங்கி மிக்க
வாதினைக் காண்பா னுசை யுடையனு யடைந்தான் வந்து. (௧௭)

சுற்றநற் றவர்க ணெஞ்சந் துயருழந் தென்னு மென்ன
வெற்றியே நமக்கென் றெண்ணி விரைந்தியந் திரங்கண் மற்றுங்
கற்றமந் திரங்க ளெல்லாந் தனித்தனி கனத்த வேட்டி
லெற்றருந் தலைவ ரெண்ணு யிரவரு மெழுதி யிட்டார். (௧௮)

சிரபுரப் பால ரெந்தை திருவுள்ள மறிவே மென்றே
கருதிநின் றெழுங்கி முன்னர்த் திருமுறை வகுந்த காலைப்
பொருவரும் போக மார்த்த பூண்முலை யென்னு மிக்க
வரர்புகழ் பதிகந் தோன்ற வாங்கினுர் மலர்க்க ரத்து. (௧௯)

கழறுமா மறைவி ளங்கக் கையுறு தூய்ய வேட்டைத்
தழைவுறு பதிக மோங்கத் தளிரின வளரென் றேதி
யழலிடை யிடவே வாம லாதிமெய் யாத லாலே
பழுதற விளங்கிற் றியாரும் பரிவுறப் பச்சை யாகி. (௨௦)

தருக்கமார் சமணர் தோர்ந்தென் ணுயிரர் தகுதி யாக
வரிப்பட வெழுதி யிட்ட மந்திர வேட்டினைத்து

நெருப்பிடை நணுகா முன்னர் நின்றவர் நகைப்ப வற்றற்
கருப்பிலை போலெ ரிந்து கணத்துநீ றெழுந்த தாலோ. (உ௧)

யாவையும் வேவ வேவா திலங்கிய வேடெ டுத்துப்
பாவமை முறையிற் கோப்பப் பத்தர்க ளெள்ளி யார்த்தார்
காவலன் முதலா வுள்ளோர் களித்தனர் காண்யான் வந்த
தேவரு மிசை யித்தார் செழுமலர் மாரி பெய்து. (உ௨)

தெளிவுறக் கண்டெந் தீயிற் றெளித்துநீ ரரித்துப் பார்ப்போர்
விளிவிலா துவைப்பா ரங்கித் தம்பனை கொண்டு வென்று
யொளியுறக் காணுங் காலை மும்முறை யுண்டு வாது
களியுற வேண்டா வின்னுங் காண்பமுன் கல்வி யென்றார். (உ௩)

பெருகிமுன் விரைவி னோடும் பெரும்புனல் வையை யாற்றுட்
பரிவுற வெதிர்போ யேறும் பத்திரம் வென்ற தாக
நரபதி சான்ற தாக நானிலத் தெவருங் காண
விருவர்மந் திரத்தை யுஞ்சேர்த் தெழுதியிங் கிடவா காண்பேம். (உ௪)

சிறுவநின் னேடெ திர்ந்து சென்றதே லின்று னக்கே
யறிவுடை யாங்க ளெல்லா மடிமையாக் கடவே மற்றும்
பறைதலிங் கொன்றும் வேண்டா பாடைக்குத் தப்பே மென்னப்
புறவமா நகர்வாழ் ஞான பூரண ரருளிச் செய்வார். (உ௫)

அடிமையி லாசை யில்லை யின்றுநீ ரவையிற் சொன்ன
படிபுகழ் வாதுஞ் சொக்கன் பரிவினால் வென்றே மாயிற்
கடிமையி னும்மை முற்றுங் கழுநுதி யேற்று தற்கு
முடியவே யாசை யென்றா ரியைந்தனர் வினையான் மூடர். (உ௬)

உளப்படு மமைச்ச னை யுயிர்க்கழு வினவா முன்ன
ரளப்பருந் தயாவு கூர்ந்திங் கையரே கையர் தம்மைக்
களத்தள வேற்றற் கென்றே கருதியான் முன்னஞ் செத்திக்
குளத்துற விட்டு வைத்தே னருளினு லெனக்கொ ணர்ந்தார். (உ௭)

ஆங்கது கண்டு சால வதிசய முற்று மற்றைப்
பாங்கிறீ வினையான் மூடும் பாதகர்க் கருள்சு ரந்தே
யோங்குநன் னலங்கள் கண்டு முணர்விலா மூர்க்கர் நீங்க
வீங்கிதற் கியைந்த தென்ன காரிய மெடுத்தற் கின்றே. (உ௮)

## வேறு.

பவங்க ணீக்கும்வெம் பாதக மாற்றுநற்
றவங்க ளல்குந் தலைமை தருக்தொழுஞ்
சிவந்த தாணிழல் சேர்த்திடுங் காத்திரத்
துவந்து பூணி னுருத்திர சாதனம். (உ௯)

வே று.

நினைவினை முடிக்குந் தூய்மை யாக்கும்வெம் பாவ நீக்கு
மனவிடர் விடம்பேய் தெவ்வு மறலிவா ராமற் காக்கும்
புனையற மின்பம் வீடு பொருண்முத லெவையு நல்கும்
வினைகடி நால்வே தத்து மிக்கமந் திரவெண் ணீறு.　　　　(௩0)

குலந்தரு நீதி மிக்க குணந்தரும் வேதஞ் சொல்லும்
பலந்தரு முயர்ந்த சாயுச் சியந்தரும் பழுதிலாத
தலந்தரு மெல்லாம் வல்ல சயந்தரு நிறைந்த செல்வ
நலந்தரும் பெருமை குன்றா நயந்தரு நமச்சி வாய.　　　　(௩௧)

நாணிலீர் மன்னன் முன்ன நல்லசொல் லின்றேன் கண்டீ
பூணும்வெண் ணீறு பூசும் போற்றியஞ் செழுத்தை யோதுங்
காணொணு முத்தி யின்பங் காணலா மென்னக் கேட்ட
சோணுறு சமண ரெண்ணு யிரவருங் கொதித்தெ ழுந்தார்.　　　　(௩௨)

முற்றிய சீற்றம் பொங்கி மொழிவன கேட்டுக் கெட்டேன்
வற்றிய தவத்தார் நும்போற் கண்டிலம் வைய கத்திங்
கிற்றைநாட் டோற்பின் யாமே யேறுவ மெனவி யைந்தீர்
பொற்புடைக் கழுக்க டம்மை வாங்குமி னெனப்பு கன்றார்.　　　　(௩௩)

வே று.

எண்டே துஞ்சொன்மு குந்த னிறைஞ்சொளி
வண்டே துங்கழல் வாழ்த்தவர் பாத்தொகை
கண்டே துந்தொனிக் காளத்தர் ஞான்றுமேற்
கொண்டே தும்மெனக் காளங் கொடுத்தனர்.　　　　(௩௪)

வே று.

மெய்யுறக் கேட்டு ணக்கிம் மிகையெலா மென்கொல் வேண்டா
கையறத் தோற்பி னன்றே கழுநுதி யணேவோ மென்று
துய்யவை யங்கை வாங்கித் தோளில்வைத் தங்கை வீசி
வையைமா நதியின் பாங்கர் நணுகினார் மன்னன் காண.　　　　(௩௫)

மேவிய திறங்க ளோடு மவரவர் வீரம் பேசித்
தீவினைப் பயத்தி னாலே வரும்வினை தெளியா ராகிக்
காவல்சேர் மந்தி ரங்கள் கற்றயந் திரங்கண் மற்றும்
யாவையுங் காண வேட்டில் யாற்றிடைத் தீட்டி யிட்டார்.　　　　(௩௬)

வே று.

காழி நாயகர் கருணைசே ரழகனை நினைந்து
வாழ்க வந்தண ரென்றுயர் வண்டமிழ்ப் பதிகந்
தாழ வோதியே தடமலி யேட்டிடைத் தீட்டி
யாழு மாற்றிடை யிட்டன ரீகிலமுந் தழைப்ப.　　　　(௩௭)

கொடிய நெஞ்சுடைக் கூற்றினை யனையவர் வரைவுற்
றடைவின் மூந்துற விட்டவெண் ணாயிர வேடு
மிடையி னின்றவர் கிளரநீ ரைகையுற விமைப்பிற்
கடுகி நீர்வழி யோடிமுன் புகுந்தன கடலுள். (௩௮)

மாறி லாமறை ஞானசம் பந்தர்தம் மனத்துட்
டேறி யிட்டவொண் செந்தமிழ் மந்திர வேடு
கூறும் வெம்மொழிச் சமணர்கள் கூரிய கழுக்க
ளேற வேறிய தெழவரு மாற்றிடை யெதிர்த்தே. (௩௯)

வே று.

இயல்பட வெங்குரு வரசர்ப தம்பெற வெழுதிவ ரைந்திடுமே
டுயர்தரு தண்புன லடுவுகி ழிந்திட வுரனொடெ திர்ந்திடவே
நயமலி யன்பர்க ணமறைமொழி யந்தணர் நடமிடு தொண்டருளோர்
செயசெய வென்றன ரரகர வென்றனர் சிவசிவ வென்றனரே. (௪௦)

வே று.

பொங்கு மங்கைய ரமைச்சனர் பூழியன் முதலாத்
துங்க வைதிகஞ் சைவமோங் கியவெனத் துதிப்ப
விங்கெ ணருமென் றிரங்கிய முனிவர்க ளமரர்
சிங்க நாதங்கள் செய்தலர்ச் செழுமழை பொழிந்தார். (௪௧)

வே று.

நிறங்கள்வே றுய்வி யர்த்து நெஞ்சுலர்ந் தாங்கா ரங்கள்
குறைந்துகை தவமோ வில்லை கைதவ வென்று கூறி
யறம்புரி பால னார்த மணிமலர்ப் பாதம் போற்றி
மறம்புரி யமண ரெண்ணா யிரவரும் வணங்கி னரால். (௪௨)

நேசமார் ஞான வேந்தர் நெடுங்கழுத் தரித்த போதே
யாசற விருந்தி ரின்னு மறைகுவ மடிதல் வேண்டா
பூசமி னினிய நீற்றைப் போற்றுமி னீசன் றனை
மாசற நீரு நாமும் வாழலாங் கூடி யென்றார். (௪௩)

முன்னையூழ் வினையால் வென்ற முனிவகேண் மடிவ தல்லாற்
சொன்னவெஞ் சாம்பல் சீசீ தொடுவமோ வென்று கொண்டு
நன்மைகள் சொல்லா நின்ற ஞானசம் பந்தர் தம்மைப்
புன்மைகள் சொல்லக் கண்டு பொறுத்திலர் பூதித் தொண்டர். (௪௪)

வே று.

கையர் தங்களைக் களையுமின் களையுமி னெனவே
துய்ய மன்னவன் சொல்லுமுன் கறுவிய தொண்டர்
பொய்செய் பாதகக் குழுவெலாந் தொலைத்திமைப் பொழுதில்
வெய்ய நீள்கழு வேற்றினர் மெலிந்துயிர் பதைப்ப. (௪௫)

புகல்வ தேதெதி ரிருந்திடுங் குதவழிப் புகுந்து
பகைகொண் முட்டுடைப் பட்டினி வயிற்றிடைக் குளித்துத்
தகவில் வஞ்சக நெஞ்சகந் தனினிண மருந்தி
யிகழும் வாய்முகங் காட்டிட வேறினர் கழுக்கள். (சகூ)

வேறு.

பவமுறு சையர் வெய்ய பாறுசெங் குடர்பி டுங்கச்
சிவையவை சூழக் காக நிழலிடத் திரண்டோர் தாளிற்
றவமுய லலகை யென்னச் சாலவே வாயங் காந்து
கவடிவெண் பற்கள் காட்டி யிருந்தனர் கழுக்க டோறும். (சஎ)

சாணகம் பூசி யேடா சுட்டிடத் தரியே மென்பார்
கோணில்கன் றெடுத்து நீறு தருந்திருக் கோயி லென்பார்
காணநீ றின்றி வெள்ளை கண்டன வணிவா ராகி
வீணழிந் தொழிந்த கையர் விலாவொடி யாக்கி னரால். (சஅ)

தளம்புநெஞ் சுடைய வெண்ணா யிரஞ்சமண் டலைவர் தம்மை
யுளம்பரி வொடுக ழுக்கண் யோசனை யகல மேற்ற
வளம்பட வாது செய்த வாரண மென்னு நாமம்
விளங்கிய தன்று முன்னு மேதகு தராத லத்தே. (சகூ)

வேறு.

பாசமற நீறணிவான் பாக்கியமில் சாக்கியர்க
ணேசமுற விருந்தகழு நிரைமுடிந்த விடமின்றும்
பூசுரர்கள் பணிந்தேத்தும் பூவணநன் னகர்மருங்கிற்
காசினிமேல் விளங்கியது கழுவர்படை வீடெனவே. (ருo)

வேறு.

உறைத்த மன்னவன் முன்ன ருயர்ந்திடக்
குறித்த சாமரம் பெற்றது குற்றமோ
பொறுத்த தோணி புரத்தவர் தம்மொடுங்
கறுத்த செங்கழுக் காணிச் சமணரே. (ருக)

வேறு.

நன்னெறி யேடு காண்பா னுசையாய் நலங்கள் செய்து
மன்னவன் றுதிப்ப நாலு கவிப்பெரு மாண்ம கிழ்ந்து
முன்னுறக் காட்டு கின்றேம் போகென முடுகிச் சென்றார்
கன்னல்சூழ் புனலி யாற்றங் கரைவழிக் குடபா னேக்கி. (ருஉ)

வேறு.

ஆர்ந்து செல்கதி கண்டுகண் டன்புறு நெஞ்சம்
வாழ்ந்து செல்வுழி மந்திரச் செந்தமி ழேடு
சூழ்ந்த தெண்டிரைக் கடலெனு வருநதித் துறைக்கட்
சேர்ந்து மூழ்கிய தோசனை யொன்றரை சென்று. (ருந)

ஆங்குக் காணுமு னிழிந்தன ராதர முதிர்வா
லோங்கு நாயக னுணையா லுணர்வுடைத் தடினி
தாங்க ருந்திற லொடுவரும் வெம்மையைத் தணிந்தே
பாங்க ரிந்துதாள் படிந்தது பாரதி சயிப்ப. (ருச)

வே று.

வடகரை யேறி யேறு மேடுகா ணுமல் வாடிப்
புடைவரும் புலவர்க் கண்டு புதுமைவே றுண்டோ வென்னப்
படிபுகழ் நிரையான் மேய்ப்போர் யாங்கள்கேள் பழைய தாய்நன்
குடையதோர் சிவலிங் கந்தா னுண்டுகா ணென்றார் காட்டி. (ருரு)

ஞானசம் பந்தர் கண்டு நணுகியா லயத்தி றைஞ்சித்
தேனுற வன்னி யென்று செந்தமிழ்ப் பதிக மோதப்
பானரை பிறங்க மூத்துப் பழுத்தவோர் விருத்த னாகிக்
கூனிவந் துயர்காப் பிட்டான் சேடனூர் நீடு கோமான். (ருசு)

மிக்கபா லககே ளிந்த வேடெதிர் மேவி யாற்றுட்
புக்கியான் மூழ்குங் காலென் காலிடைப் பொருந்தல் கண்டு
திக்கறிந் தெடுத்தேன் மூத்தே னாதலாற் றெரிந்த தில்லை
மக்களுண் டவர்க்கு நல்க வாசித்துத் தருதி யென்றான். (ருஎ)

சித்திர நுதற்க ணிட்ட தெய்வநீ றிலங்க வுச்சி
வைத்தவொண் சிகைவி ளங்கப் பிணங்குநூன் மார்பின் மின்ன
வித்தக வடிவின் வந்த விருத்தவே தியரே நும்மை
யுத்தமச் சிவனே யென்ன வுதிக்கின்ற துளத்தெ னக்கே. (ருஅ)

சிறியனேன் பனுவல் கல்வி சிறந்தநின் றிருமைந் தர்க்கு
முறுவலே தருவ தல்லால் வேறிலை முடுகிக் காண்பான்
மறுவறு தென்னன் வந்தான் வருந்தியோர் கார ணத்தா
லிறையவ காட்டல் வேண்டு மென்றுமெய் யொடுங்கிச் சொன்னார். (ருகூ)

அவ்வுரை கேளா முன்ன ரருமறைக் கிழவ னக்கென்
செவ்விய மைந்தர் கட்குத் தேடிவே றளிப்ப ரோன்ற
மெய்வரு தென்னன் கையின் மேதினி முழுது மெச்ச
விவ்வுரை தீட்டு மேட்டை யீயென வீந்தா னன்றே. (சுo)

வே று.

சிறுபா லகனீ சிவபத் தனுமா
யறிவால் விறலா லருளா லுயர்வா
னிறைவா வியிருந் தனைநீள் பகைவென்
றுறவா ழுதிநான் மறையோ தியநாள். (சுக)

எனவாழ்த் தியொளிக் குமுனின் பழுறுந்
தனியா னைவியந் துயர்தா னையொடு

மனவா தரவால் வருமன் கரமீ
தனைவோ ரும்வியப் பவளித் திடவே. (௬௨)

வேறு.

மன்னவ னதிச யித்து வந்தவா றெங்ங னென்னத்
தன்னிக ரில்லா விந்தத் தலத்திடை நயந்தி ருக்கு
முன்னிகழ் சிவன்மெய் மூத்தோர் முனிவனில் வந்த ளித்தா
னென்னுமுன் பணிந்தான் பல்கா லேத்தினன் கூத்து மாடி. (௬௩)

இகலமண் பரிச னத்தா லேறிய பாவ நீங்கச்
சிகரநீள் கோயில் கண்டு சிவனைநா டொறும்வ ழுத்தித்
தகுநதித் தென்பா னன்கு தரும்படை வீடு செய்து
பகையற விருந்தா னங்கண் பாண்டியன் சிறிது காலம். (௬௪)

வேறு.

விரைவோ டிகலா விடுமே டெதிர்போய்க்
கரைசேர் தலின விறைகா ரணனைப்
பரவே டகனென் றிடவே பதியுந்
திருவே டகமென் றுசிறந் ததுவே. (௬௫)

வேறு.

உன்னி மாலு முவணனுஞ் சேடனு
மன்னு சாத்தனு நான்குகம வாழ்த்தகந்
துன்னு பல்பொரு டோன்றி யொடுங்கக
மென்னை யாளுடை யானுறை யேடகம். (௬௬)

வேறு.

அறநெறிக் காழி வேந்த ராதரத் தேடெ திர்ந்த
துறைவயிற் சமண ரோடும் பாடித்த தோடந் தீர
வுறவுறத் தமது பேரா லுயர்வுடைச் சிவலிங் கத்தைச்
சிறுமையிற் றெள்ளி யாரென் றருச்சித்தார் செழியன் காண. (௬௭)

வேறு.

பொழிலார் மதுரா புரிமே விவியத்
தழகா யதனு ரணநா யகனைத்
தொழுதாய் தமிழ்பா டியபின் றுதியா
லெழிலா லயமற் றுமிறைஞ் சினரால். (௬௮)

புகழ்நீ டியபூ ழியன்மண் டலமும்
மிகநா ளுமுளத் துவிளக் கமுறத்
தகவார் தருமந் தருமீ சனையும்
மகிழ்வா லணிநீ றுமறந் திலதே. (௬௯)

நயமெய் தியதென் னவனு டடைவே
வியனீ றுபரப் பியவித் தகனு
ரியலோ டியர்தென் னனிலங் கவிருந்
துயர்கா விரிநா டுறமே வினரால். (எO)

வேறு.

தூண்டுரும் பாக்கி யின்றோர் துரும்புதூ ளுக்கி யேழுன்
றூண்டிலோர் புதல்வ ஞலெண் ணுயிரஞ் சமணர் தம்மைக்
காண்டகு கழுவி லேற்றல் கண்டுநீ றணியா தந்தோ
மாண்டரு கடவுள் வேறுண் டென்பரே மதியி லாரே. (எக)

[illegible] மன்னன் கூனிமிர்த் தழலி னீரின்
[illegible] டேறு யிட்டு வெல்லருஞ் சமணர் தம்மைச்
[illegible] ல்லிநீள் கழுவில் வைத்த தொல்கதை கற்போர் கேட்போர்க்
கெல்லையில் செல்வ மொல்லை யெய்துதற் கைய மின்றே. (எஉ)

ஆகத்திருவிருத்தம் - கOஎகூ.

## ருகூ.—மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.



பூமகட்கு மணிமுடியா மதுரை யந்தண் புரத்தின்கண் முன்னொருகான் மன்னர்க் கென்றுஞ், சேமமுறு படைத்தலைவ னுகும் வென்றித் தேசுடைய வுயர்சோழக் குலத்துட் டோன்றித், தூய்மைதரு சுந்தரனுக் கன்பு பூண்டு சுந்தரசா மந்தனெனு நாமம் பெற்றுக், காமுறுபே ராண்மையினோர் தோலா வீரன் கசிந்தன்பர்க் கன்புசெய்து போது நாளில். (க)

அங்குலக மனுநெறிசோ டாமற் காக்கு மடல்வீர மாறனெனு மரசன் றன்மேற், றேங்குபுகழ் வன்னியர்க டலைவ னுய சேதிபர்கோ னென்பானோர் கிராதர் கோமா, ளுேங்குபெரும் பலபடையி ஞேடுங் கூடி யொருப்படுவா னெண்ணியவா றொற்றர் கேட்டுத், தாங்கரிய விரைவினெடும் போந்து வாய்ந்த தருமநெறிக் கவுரியனைச் சார்ந்து சொன்னார். (உ)

முன்னமது கேட்டலுமே விரைவிற் கூடி முரணுடைபல் படையாள்வே மெனக்க ணித்துக், கொன்னுனைவேற் சுந்தரசா மந்த னென்னுங் கொடுந்திறற்சே னுபதியை யழைத்துச் சொல்வான், செந்நெறிசேர் வடதிசையாள் கிராதர் கோமான் சேதிபர்கோ னென்பானோர் பெரியோ னம்மேன், மின்னுபடை யொடும்பொருவான் வருகின் றுனும் விளம்புங்கா ரியமொன்று விளங்கக் கேண்மோ. (ங)

பல்படையைப் பல்படையாற் றள்ளல் வேண்டும் பார்புகழ்வீ ராபடையோ மாண்ட தில்லை, யொல்லையினஞ் சரக்கறையிற் புக்கு வேண்டு மொண்

கனக மெடுத்திட்டுப் படையா ளென்று, புல்லியரு ளொடுந்திருக்கைச் சிற
ப்பு மிட்டுப் போவென்று விடைகொடுப்ப விரைவு கண்டு, சொல்லிலிவன்
றனக்கொப்பிங் கிவனே யென்று சுடர்மணிமா முடிச்செழியன் றுதித்தான்
சால. (௪)

அரியபெருஞ் சரக்கறையிற் காவ லோடு மடைந்தடைவிற் பெரும்ப
டைக ளாளத் தக்க, பொருள்பலவும் வகைவகைக் கொண்டு நல்ல போர்
வீரர் தமைத்தேடி வாரு மென்று, பரிவினொடுந் தன்னடைந்தோர்ப் போக்கி
நோக்கிப் பரிப்பவராற் கொடுபோந்து தனதில் லத்து, விரைவினொடும் புகுந்
தான்செங் கனகங் கண்டான் விதிர்விதிர்த்தான் சிவனடியார்க் கிடுவா னெ
ண்ணி. (௫)

வேறு.

மிஞ்சிட வடைந்த கைப்பொருள் கொண்டே மெய்ப்பொரு டேடுவான்
விரும்பிச், செஞ்சுடர் மகுடக் கோயிலுள் வேந்தன் செழும்பொரு டன்னொ
டுஞ் சென்று, பஞ்சின்மெல் லடியா ளங்கயற் கண்ணி பங்கனை யங்கையாற்
றொழுது, மிஞ்சுமிப் பொருளுன் னடியவர்க் கிடுவான் விருப்புறு முளக்கருத்
தெனக்கே. (௬)

நம்பனை யும்பர் தம்பதி பரவு நாதனே காத்தரு ளெனக்குன்
றம்பமே யல்லாற் பிறிதிலை யென்று சாற்றிமுன் போந்தடி யவரைக்
கம்பமீ ருடலு மம்புசோர் விழியுங் கசிதரு நெஞ்சுமா யிறைஞ்சிச் [த்தே.
சம்புவே யென்ன வமுதுசெய் வித்தான் றனங்கள்வேண் டுபவெடுத் தளி

நட்பொடு மெல்ல மன்னன்பொன் முழுது நாடொறு நாடொறு மெடுத்தாங்
குட்பய மின்றி மாதொடுங் கூடி யுவகைகூர்ந் தரனடி யவர்தங்
கட்பய மெய்தி யாவரா யினுமுட் கருத்தறிந் தமுதுசெய் வித்துத்
தட்பமார் மனத்தன் மூவிரு திங்க டம்முளத் தனமெலா மழித்தான். (௮)

அரசனுந் திங்க ளாறுசே றலுமே யடற்படைத் தலைவனை யழைத்துப்
பரிகர மெவள வாண்டனை யென்னப் பழுதுறா யாதவ னுரைப்பான்
றிருவரு ளதனாற் சொக்கநா யகனைச் சிந்தைசெய் துள்ளதை யன்றிப்
பொருபடை மன்ன வொருபடை யாண்ட திலையிது பொய்யல வின்றே. ()

வந்தனை யடியேன் கருத்தினை முடிப்பான் வழிபடு மடியவர்க் கெளிய
சுந்தர னுண்டு வேண்டிய பொழுது படையுமுண் டெனத்துணிந் துரைப்ப
வந்தமன் னவனு மென்கொலா மீதென் றங்கயித் தன்னினை விங்க
ணெந்தைநா யகனும் வருவனேற் காண்பே மின்றுபோய் நாளைவா வென்றான்.

கருத்துடைச் சேனைத் தலைவகே ளினிக் காலையி னின்படை மெய்க்காட்
டுருப்படக் காண்பேம் போவெனப் போந்த வுத்தமன் புத்தியுட் சால [ணிப்
வருத்தமுற் றென்னு மெனத்தனக் கினிய வள்ளலுக் குரைசெய்வா னெண்
பொருத்தவா லயத்துச் சேர்ந்துபொற் கமலப் பொய்கையு ணண்ணிநீ ராடி.

நீறணிந் தருள்சேர் கடவுளை யடைந்து நியதியென் னூன்கறஞ் செய்வாள், கூறனே யடியே னென்செய்கே னுனையாய் கொற்றவன் றனமெலா மெடுத்துன், வீறுடை யடியார் தங்கள்பா னிறைத்தே னுளைமெய்க் காட்டெனப் போந்தே, னுறுபூ மவுலி மாறனுர் திருமு னுன்படை காட்டுமா றென்கொல். (கஉ)

வேறு.

பன்னிய பொருளு மில்லை படையுமோ வாண்ட தில்லை
தென்னன்மு னீயுண் டென்று செப்பினே னெப்பி லானே
மன்னவர் தண்ட மாரே யாற்றுவார் வழிசெய் யாயே
லின்னுயிர் செகுப்ப தல்லால் வேறிலை யெனப்ப ணிந்தான். (கஙு)

வேறு.

நெறியிலை சாத லலாதெனக் கேட்ட நிருமல னிரங்கிநீள் விசும்பி
லறிவுற வுரைப்பா னுறுபடைத் தலைவ வசைவிலா மனத்தொடு சென்னீ
குறைவற வேண்டும் படைகொடு நாளைக் கொற்றவன் காணயாம் வருவேந்
திறமுறு படையின் றகுதிகண் டுவந்து சேலையுந் தருவனு னமக்கே. (கச)

என்னுமத் திருவாக் கதிசய முறக்கேட் டினிமையி னெழுந்துகூத் தாடி
யுன்னருங் களிப்பிற் போந்துதன் னுழையி னுற்றதன் மனையவட் குரைப்பத்
தன்னுடை யச்சந் துண்ணெனத் தள்ளித் தலைவகே ணிலைமையை விடாது
நின்னுடைத் தருமங் கைதரு நாளை யுதவுவ னேசவெம் பெருமான். (கரு)

வெறிகமழ் குழலா ளுய்ந்தன மென்றே மெய்ப்பட வித்திற முரைப்பக்
கறைகெழு நெடுவேல் வீரனு மற்று மற்றைநாட் காலையி லெழுந்து
திறமுறு படைக்காம் பல்கலன் பூண்டு சிறிதுசே வகரொடுங் கூடிப்
பிறையணி சடையான் றனையுளத் திருத்தி நடந்தனன் பெரியவாள் வாங்கி. ()

தன்னுழை கடந்து மன்னவன் வாயிற் றலைப்படுங் காலிறை யருளாற்
பொன்னக ரமரர் முன்னிரு மருங்கும் பூமழை பொழிந்துநின் றூர்ப்பச்
சின்னமுஞ் சங்குந் தாரையுங் கொம்புஞ் செம்பொனின் காளமுங் குழலுந்
துன்னுவங் கியமுந் தம்முனெம் மருங்குந் தொகுபுவி செவிடுறக் கறங்க. ()

சீர்மணி தாளஞ் சச்சரி கஞ்சஞ் சிலம்பவின் றண்ணுமை தடாரி
பேரிகை காடி மத்தளஞ் சல்லி பெரும்பறை துடிகடி முரசம்
பார்புக ழிடக்கை யுடுக்கைநன் னியாளம் படகம்வண் டிமிலைதெண் டுடுமை
வார்படு படகம் பெருந்தகு ணிச்ச மெங்கணும் வானுற முழங்க. (கஅ)

வில்லொடு கணைவாள் கேடகங் கடகு வேன்மழுக் கடைத்தலைக் கழுக்கோ
ரெல்கதை பாரா வளைவளை யெறிகோல் சுரிகைபத் திரங்கொடுங் கணிச்சி
பல்வித முயலங் குந்தமொண் பிண்டி பாலம்வெஞ் சூலநீள் கழைக்கோல்
கொல்லெழுத் தண்டு முதலிய வளவில் கோடிபல் படைக்கலம் பிறங்க. (ககூ)

பொருந்துபூங் கொடிக ளாடைக ளாடப் பொருவருஞ் சாமரை யிரட்டத்
திருந்துபல் கவிகை நிழற்றவெம் மருங்குஞ் சேர்தரு தோரைகள் வீச
நெருங்கடை யாளந் துளங்கமட் பாம்பு நெளியநுண் ணிவான் முட்டப்
பெருங்கட லென்னப் படர்ந்தொலி மிக்கு நடந்தது பெரும்படைச் சாத்து.()

வேறு.

இப்பெருங் கொற்றத் தானை யிரும்படைத் தலைவன் முன்னு ,
மெய்ப்படத் தோன்றக் கண்டு வேந்தனீ தென்கொ லென்று
செப்பரும் பயத்தி னேடுஞ் செல்லவாள் வல்ல வீர
னப்பொழு தடிவ ணங்கி நம்படை யஞ்சே லென்றான். (௨௧)

ஓடுவன் மீள்வ னிற்ப னுன்மத்தர் போலே நோக்கி
யாடுவ னணிவன் றாண்டி யரகர வென்று லிப்ப
னேடவி ழலங்கற் றென்ன விடுபடை மெய்க்காட் டின்று
கூடிமுன் காண்பா யென்று கூறுவன் றேற வாங்கு. (௨௨)

ஓதரும் பரிவு கூர்ந்து காண்பதற் கொருப்பட் டந்த
மாதவச் செழியர் கோமான் மந்திரத் தலைவர் சூழத்
தீதறு பொலிவிற் போந்து சித்திர மண்ட பத்து
மீதுற விருந்தான் சால வியர்தலங் காரத் தோங்கி. (௨௩)

விசையவெம் படையைத் தோன்ற வீரநீ காட்டி டென்னத்
திசைவரும் பரிக ரத்தைச் செல்லநில் வரநில் லென்று
வசையொடுஞ் செறுத்து ணைத்து வகைவகை தொறுநி றுத்தி
நசையுறக் காட்டு வானந் நானில மன்னன் காண. (௨௪)

வேறு.

வங்கர் கலிங்கர் தெலுங்கர் நலங்கிளர் மாளவர் கேரளர்வெங்
கொங்க ரிலாடர்கள் பாகதர் மாகதர் குச்சரர் பப்பரர்திண்
செங்கரு நாடர்கள் காடவர் வேடுவர் சிங்களர் கொங்கணர்மற்
றிங்கிவ ரிங்கிவ ரங்கவ ரங்கவ ருங்குவ ருங்குவரே. (௨௫)

துன்னிய வெய்ய துருக்க ரிரக்கமில் சோனகர் சீனர்கண்மா
மன்ன ரிரட்டிய ரொட்டியர் தொட்டியர் வத்தவர் கத்திரியர்
செந்நெறி யாரியர் கோசலர் போசலர் சேதிபர் யாதவர்மற்
றிந்நிரை யிந்நிரை யந்நிரை யந்நிரை யுந்நிரை யுந்நிரையே. (௨௬)

வேறு.

இன்னன வகையிற் கூறி யினப்படை முற்றுங் காட்ட
மன்னனிவ் வீர னைப்போற் கண்டிலே மெனம கிழ்ந்து
கொன்னுற வழைத்து நாமங் கொந்தகப் பெருமா னென்றே
நன்னெறிப் பட்டங் கட்டி நல்கினன் பரிவட் டங்கள். (௨௭)

இறையவ னழகு பொங்க விரும்பெரும் பரிமேற் கொண்டு
விறலுடைக் குந்தம் வாங்கி வெண்மதிக் கவிகை நீழன்
மறையநின் றுலாவக் கண்ட மன்னனங் குலாவு கின்ற
அறுபடைத் தலைவன் யார்கொல் வீரநீ யுரைத்தி யென்ன. (௨௮)

இனிமைகூர் செழியர் கோவே யாவரிங் கறிவார் சூழ்ந்த
மனமுடை யமைச்ச ரோடிங் கேட்டிநீ யுரைக்கு மாற்ற
நினையினிங் கடிய னேற்சா நின்பெரும் பொருட னக்குப்
பணிமதிச் சடையர் காணிப் பரிகரங் கொணர்ந்தா ரென்றான். (௨௯)

நன்றெழில் வீர நீசென் றழையென நயந்து சென்றே
யின்றுயி ரளித்த கோவே யெழுந்தரு டென்னன் காண்பா
னுன்றனை விரும்பா நின்றா னென்றலு முவகை கூர்ந்து
வென்றிகொள் படையை நீக்கி வேந்தனை நணுகிச் சொல்வான். (௩௦)

மன்னகேள் புள்ளி சொல்லிற் களத்திடை மறுவொன் றுண்டு
முன்னிகழ் வடிவுஞ் சொல்லின் முடியில்விற் றழும்பொன் றுண்டிங்
கென்னைமு னெழுது நல்ல சேவக னுனக்கெனைப்போ
லுன்னரு முலகத் தெய்தா னென்றன னுவகை கூர. (௩௧)

என்னவின் னுடலங் கம்பித் தெழுவதற் றுன்று நின்ற
துன்னரு மிருக ரங்க ளொருவழிக் கொள்ளா நின்ற
வன்னையே போலு நல்ல வருளுடைச் சொக்கே யென்ன
நின்னையான் காணுந் தோறு நிகழ்கின்ற துளத்தெ னக்கே. (௩௨)

நின்னெழிற் புரவி யேற்ற நீதியைக் கண்டா லுன்னை
யென்னவேட் டெழுது கின்றே னெனத்துகி லளிப்ப வாங்கித்
தன்னடி யாரை வேண்டிச் சடைமிசைப் புனைந்து கொண்டு
தென்னவ காண்டி யென்று செழும்பரி யுகைப்பன் காண. (௩௩)

வேறு.

அற்புறநி னைப்பவர கத்தினுவி ருப்பவன னைத்தையும டக்கு பவனீள்
கற்பனைக டப்பவன டக்குபுபி டித்துறுக திப்படவு கைப்ப வடபால் [தார்
வெற்பின்முது கிற்றிசைமி சைக்கரிமு கத்திளின்மி தித்ததொழி யப்பி லம
சர்பமும்வெ ருக்கொளந டித்ததும ருத்தைநிகர் தத்துகவ னத்து ரகமே. ()

வேறு.

பரிவொடு கண்ட மன்னன் பன்முறை யதிச யித்துப்
பொருபரி யுகைக்க வல்லா ரிப்படிப் புவிமீ தில்லை
யரிதரி தெனவி யப்ப வைந்துதா ளையினுந் தூண்டி
லளைவிங் கொளித்தா னந்த வெங்கொடும் படையுட் புக்கு. (௩௫)

அவ்வயின் வருந்தித் தேடு மரசன்முன் விளைவின் வந்தோர்
பொய்வழி யுரையாத் தூதன் புகலுவா னரச ரேறே

தெவ்வுறு படையான் மிக்க சேதிபர் கோமான் றன்னை
வெவ்வலிச் சிங்கங் கொன்ற தென்றனன் வேட்டைக் காட்டில். (௩௬)

அத்திறங் கேட்ட வேந்த னென்கொலென் றருளை வாழ்த்திச்
சித்தநன் பரிவு கூர்ந்து திகைத்ததி சயித்தி ருப்ப
வத்தலத் தமைச்ச ரானோ ராதரத் தோடெங் கூடி
யுத்தர மற்றி ருந்தா ரும்பர்கோ னருளை யேத்தி. (௩௭)

கொந்தகப் பெருமான் கேண்மோ கொடும்பகை போன திந்த
வெந்திறற் றந்தி ரத்தை வருத்தவேண் டுவதோ வில்லை
தந்தம திடத்துப் போகச் சாற்றுதி தாழா தின்று
சுந்தர னமக்குண் டாக வேண்டுமோ துணையிங் கென்றான். (௩௮)

நிறுத்துதல் கரும மென்று நிரம்பிய படையை வாழ்த்திச்
சிறப்பொடும் போக வேவ வாங்கது சிலைத்தெ ழுந்தே
யிறைப்பொழு தின்க ணங்கண் மறைந்திட வெழுந்து துள்ளி
யறப்பெருந் தவத்தி னானு மூழ்கினா னனந் தத்துள். (௩௯)

பொய்யிலாத் தெய்வச் சேனை பொலிவொடு மறையக் கண்ட
வையகத் தோருஞ் சொக்க னருளினை வியந்தார் வாழ்த்தித்
துய்யபே ரன்பன் முன்னிற் சுந்தரற் கன்பு பூண்டு
மெய்யொடு மடைந்தான் றாளில் விண்ணவர் வியக்க வாங்கு. (௪௦)

அரசனு லயத்துச் சென்றாங் கடியவர் நினைவு தன்னிற்
பரிவொடுஞ் செல்லும் பத்தர் பத்தனை யல்லாற் றெய்வங்
கருதின்வே றுண்டோ வென்று களித்தடி துதித்தா னேத்திப்
பெரியவா சிகைமா ணிக்கக் கோவைகள் பிறவு நல்கி. (௪௧)

ஆகத்திருவிருத்தம் - ககசஎ.

---

## ௪௦.—உலவாக்கிழி கொடுத்த திருவிளையாடல்.



வளமை நீடிய மதுரையின் முன்னொரு தென்னன்
றளர்வில் செல்வமுஞ் சாற்றருஞ் சேனையு மோங்கி
யெளிய சொக்கனை யிறைஞ்சிமுச் சந்தியு மினிதா
வளவில் வெம்பகை கடிந்துல காளுநா டன்னில். (௧)

தெரிய முத்தழ லுன்மறை வேதியர் தேத்துப்
பரிவு செய்திடா திகழ்ந்துயர் பரனையே வழுத்த
வுரிய வேள்விக ளொழுக்கநல் குரவினா லொழிந்து
சுருதி யந்தணர் தாழ்ந்துபுன் றொழிலிடை யிழிந்தார். (௨)

வேறு.

ஈனமா நெறிக டம்மி லிழிந்தபி னினிய தேவர்
போனக வேள்வி போகப் போனது பொய்யா மாரி
பானலங் கழனி மேய நென்முதற் பல்வ ளங்க
ளானவ் விளைவு போன போயின வறமுன் றன்கும். (ங)

வாரிதி யுலகின் மிக்க மதுரைமண் டலத்து வாழுஞ்
சீரிய மனிதர் குன்றித் திசைதிசை போனார் மன்னன்
வாரணம் புரவி குன்று மாதனங் கோத னங்க
ளேர்பொலி யாரா மங்கள் யாவையுங் குறைந்த மன்றே. (ச)

ஓங்கிய மன்னன் சால வுலேந்துல கேதங் கண்டே
யீங்கிதற் கேது வென்கொ லிலங்கவீ தறிவா னெங்கு
நீங்கருஞ் சொக்க னல்லா லிலையென நினைந்து நெஞ்சத்
தாங்குய ரால யத்து ளணைந்தடி பணிந்து சொல்வான். (ரு)

அய்யனே செய்ய கோவே யடியனே னின்னை யென்றும்
பொய்யற வணங்கி வாழ்த்தப் புவிதுய ருறுவ தென்னை
மெய்யுற வுணர்த்தல் வேண்டும் விளங்கவென் றுரைத்துப் போந்து
துய்யபே ரமளி யின்கட் டுயரொடுந் துயிலுங் காலை. (சு)

உத்தம னெத்த லத்து முயிர்க்குயி ராகி நிற்கும்
பத்தர்கள் பத்தன் வந்து பகருவா னென்பா லன்பு
வைத்தவ னுதலாலே மாறனே தேற வின்று
சத்திய மாவு னக்குச் சாற்றுவன் புக்க வாறு. (எ)

வேறு.

மேவரு நான்மறை நமக்கு மெய்யதற்
கியாவர்நல் லவரவர் தமக்கி யாநலோ
மார்வுறு மேதினிக் கமர ராகிய
சார்வுறு மறையவர் தமையி கழ்ந்தனை. (அ)

ஆதலா னல்குர வெய்தி யாங்கவர்
சோதிசேர் மறைவழித் தொழின்ம றந்தனர்
சோதிசேர் மறைவழித் தொழின்ம றத்தலாற்
கூதிர்வான் பொழிமழை குன்றிற் றிம்பரே. (கூ)

நெறிதரு மறையவர் நெஞ்சம் வாழுமேன்
முறைதரு வையக முழுதும் வாழுமா
னெறிதரு மறையவர் நெஞ்சம் வாடுமேன்
முறைதரு வையக முழுதும் வாடுமால். (கo)

பாமறை யந்தணர் தம்மைப் பார்த்திப
நாமவ ராகவே நாளுங் கண்டிடு
நாமவ ராகவே நாளுங் காண்பையேற்
பூமட மாமகள் போவ தில்லையே. (கக)

நன்புலூட யறத்தவர் நமக்கு நல்லவர்
துன்பமெய் தாதவர் துன்ப மெய்தலா
லின்புறு மண்டல மினிமை குன்றிய
தன்புடை யாயுனக் கறியக் கூறினேம். (கஉ)

வே று.

இன்புற வழைத்த வர்க்கா மினிமைசெய் விளைவிற் சால
நன்புற நினக்கு மிக்க நலந்தரு செல்வ முண்டாந்
தென்புவி நயக்க நீங்காச் செல்லலை நீக்க வற்றோர்
பொன்பொதி கிழியும் வாழத் தருகுவம் புதுமை கூர. (கங)

அக்கிழி யிற்பொன் கோடி யழிப்பினுந் தொலையா தானம்
மிக்கபே ராணை யாலே வேண்டுப வெடுத்த ளித்துத்
தக்கவர் தமக்கு மிட்டுத் தருமமுஞ் செய்து நீயுன்
புக்கிலி லியாரும் வாழ வாழுதி புவிமீ தூழி. (கச)

வே று.

அஞ்ச லஞ்சலென் றன்புடைத் தென்னவ
னெஞ்சில் வேண்டுப நல்கிடு நீவியைப்
பஞ்சின் மெல்லணைப் பான்முடிப் பான்மிசை
வஞ்ச மாசற வைத்து மறைந்தனன். (கரு)

வே று.

தனமுறுபொற் கிழிகண்டு துயி லுணர்ந்த தார்வேந்த
னெனையடிமை யுடையானை யல்லதுவே றிருநிலத்து
நினையினொரு தேவுண்டோ நேசமுளா ரெனவியந்து
கனவுநிலை யுரைசெய்யக் கேட்டபெருங் களியமைச்சர். (கசு)

வே று.

கனவிடைக் கண்ட செம்பொன் கண்டதுன் கருத்துட் டங்கு
நினைவதற் கரிய வீச னல்கலா னீடு சிங்கா
தனமிசை வைத்துப் பூசித் தருளுதி தணிவ தில்லை
யினியுனக் குயர்ந்த செல்வ மியைவதற் கைய மின்றே. (கஎ)

ஒப்பிலா னுரைத்தல் போல வொண்பெருந் தனமெ டுத்துச்
செப்பரு மறையோர் தம்மைச் சிறப்பொடும் பூசை செய்து
மெய்ப்படுந் தலத்தி ருத்தி வேண்டுவ நல்கி டென்ன
வப்படிச் செய்வ லென்று செய்தன னரசர் கோமான். (கஅ)

நல்லவர் பரவுஞ் சொக்க நாயக னருளி னாலே
தொல்லையா ருதிக ளோங்கிச் சுருதியும் வழங்கி யெங்குஞ்
செல்லனல் குரவு நீங்கித் திங்கண்மும் மாரி பெய்து
பல்வித விழாவும் பொங்கி நிறைந்தது பாண்டி நாடு. (௧௯)

வேறு.

கோடிபொன் னெடுப்பினுங் குறைவி லாததோ
ராடக நீவிகண் டதிச யத்தொடு
நாடவர் துதித்தனர் நாடி நாடொறும்
பாடினர் செந்தமிழ்ப் பனுவல் சான்றவர். (௨௦)

வேறு.

செய்தவ முயற்சி யாலே சிவனடி யார்க ளன்பும்
வைதிக நெறிக்க ணன்புங் கண்டுமண் டலத்தோ ரெல்லாங்
கைதவன் றனையு மந்தக் கைதவற் கன்பு பூண்ட
மெய்திகழ் சொக்க நாதன் றன்னையும் வியந்தார் சால. (௨௧)

ஆகத்திருவிருத்தம் - ௧௧௩௮.

## ௪௧.—மாமனாகவந்து வழக்குரைத்த திருவிளையாடல்.

தளர்வில் பல்புகழ் மதுரை யம்பதி தன்னின் முன்னொரு காலநீ
ளளவில் செல்வமு முற்ற சுற்றமு மமைவி னோடுவி ளங்கிமற்
றுளம்வி ரும்பிய வாணி கஞ்செய்தொ ழுக்கம் வாய்மைசி றக்குமோர்
வளமை சேர்தன பால னென்றொரு வணிகன் மாசற வாழ்ந்தனன். (௧)

செல்வ முற்றிய வண்மை முற்றிகழ் நீதி லொண்குல மோங்குவா
னல்வி னைத்தணி வால ளித்தவொர் மைந்த னந்தவி லாமையா
லொல்லை யிற்றனு டன்பி றந்தவண் மைந்த னைத்தனு வப்பொடு
மெல்லை யற்றசி றப்பொ டும்மக வாவெ டுத்துவ ளர்த்தனன். (௨)

வளர்த்த நன்புதல் வன்வ யிற்றன்வ ளந்த ரும்பொருள் யாவையு
மளித்தி யைந்தத னத்தொ டும்புதல் வற்பெ றப்பெரு காசையா
லுளத்து நல்லன பேர றங்களு வந்து செய்துயர் கங்கைநீர்
குளித்தி யாம்வரு வேமெ னத்தனி கூறி மாதொடு மேகினன். (௩)

வேறு.

ஆங்கவன் போய பின்ன ரடுந்திறற் றாயத் தார்க
டாங்கிளந் திறந்தா னென்று மனையொடு தனமுங் கைக்கொண்
டீங்குநீ யேடி யார்கொல் போவெனவிரழ்ந்து கூறி
யோங்குமா தினையு மைந்தன் றன்னையு மொதுக்கி னாரால். (௪)

ஆடைசோ றளவு மீயா தகற்றிட வகன்று ளுள்ளம்
வாடிமுன் றுவர்ப்பி டித்து மறிப்பவு மில்லா ராகி
யாடகம் பலர்க்கு நல்கி யளவில்வா ணிகங்கள் செய்து
நாடாரும் வலியைக் காட்டி யிருந்தனர் நடுக்க மின்றி. (ரு)

மங்கல நாணி ழந்த மடந்தையோர் மதிநி னைந்து
செங்கணீர் வார வாரச் சிறுவரோ டிவ்வி டுக்க
ணங்கயற் கண்ணி பங்கன் றனையலா லாற்று வார்க
ளிங்கொரு கேளி ரில்லை யென்றிறை கோயில் புக்காள். (சு)

மைத்திக ழளகஞ் சோர மைந்தனை நிலத்துப் போகட்
டத்தநேர் குவித்து முன்னின் றறநெறி வளர்க்குங் கோவே
சத்தியக் குன்றே மிக்க தயாப்பெருங் கடலே போற்றும்
பத்தர்கள் பத்த னேயான் பகர்வதொன் றுண்டு கேண்மோ. (எ)

வையகத் தோர்கள் காண மருகனை மகன்மை கொண்டு
செய்வன வடைவிற் செய்து செல்வமுள் ளனவு நல்கித்
துய்யவென் னுடன்பி றந்தான் போயினன் றூரத் தின்று
வெய்யதா யத்தார் தள்ளி மிகைகள்செய் கின்று ரன்றே. (அ)

பற்றலர் சொல்லும் வெய்ய படிற்றுரை பொறுக்க கில்லேன்
மற்றொரு கேளி ரில்லை மன்னவ னுணை யில்லை
பெற்றதாய் தந்தை நீயே யென்றுபே ரவசத் தோடு
மற்றவர்க் குற்ற செல்வன் சந்நிதி யரற்றி வீழ்ந்தாள். (க)

மற்றது கண்டி ரங்கி மாசிலா னனுகி மாதே
யுற்றநின் புதல்வ ரோடு மெழுந்துசென் றுலகோர் காணப்
பற்றலர் தம்மை நாடிப் பயப்படே றுவர்ப்பி டித்துச்
சற்றுமோ ரடியி டாமற் றடுத்துவா தரும மன்றுள். (கo)

மன்றிடை முன்னோன் றந்த மாசறு பொருள்க ளெல்லா
மொன்றிய வணிக னாகி யுற்றவர் முற்றுங் காண
வின்றியாம் வந்து தோலா திகல்பட வழக்குப் பேசி
யொன்றுமே காமல் வாங்கித் தருகுவ முண்மை யீதால். (கக)

இன்னநீர்ந் துள்ளந் தேறி யேகென மறையக் கண்டு
தன்னுளே யதிச யித்துத் தாங்கரு மவச நீங்கிப்
பின்னரொன் றுரையா ளாகி யெழுந்துபே ரருளை வாழ்த்திப்
பன்முறை வணங்கிப் போந்தாள் பழுதிலா வணிக மாது. (கஉ)

தெரிவுறச் சென்று மன்றிற் போதுமி னென்னச் சீறி
விரைவொடுந் தடுப்பக் கண்டு மேவலர் சரல வைது

மருவிய புதல்வ னோடு மண்மிசை மறியத் தள்ளித்
தருமவா சனத்தி லேறச் சங்கரன் றரித்தா னில்லை. (கங)

குறைவற மாமன் கோலங் கொண்டுவெண் ணீறு சாத்தி
யிறுவையுந் தழையச் சுற்றி யணிமுடிச் சாத்துஞ் சாத்திச்
செறியமோ திரஞ்செ றித்த செழுமலர்க் கரங்கள் வீசி
முறைமையிற் றருஞ்சி றுக்கன் பின்வர முன்ன டந்தான். (கச)

அன்புடை யவள்கண் டைய கோவென வயிற்ற றைந்து
தன்பெரும் புழுக்கந் தீரத் தமையனைத் தழுவிக் கொண்டே
யென்பெருந் துணைநீ போக யானுமென் மகவு முற்ற
துன்பமோ தொலையா தென்ன வரற்றினாள் கண்ணீர் சோர. (கரு)

கருணையன் ருனு மேனி கம்பித்துக் கண்ணீர் வார
வொருமரு மகனை யென்ற னுடன்பிறந் தவளை மண்மேல்
வெருவுற வொருவன் சொல்வ தேயெனா விம்மி விம்மிப்
பொருமிநின் றழுதான் யாருங் கலுழமெய் பூண்டு கொண்டு. (கசு)

வஞ்சகர் தள்ள வீழ்ந்த மைந்தனை யெடுத்து மோந்து
பஞ்சவ னகரி தன்னுட் பழுதுறா பசர்வா ரில்லை
நெஞ்சின்மே லஞ்ச வேண்டா நீங்களிங் கியாம்வந் தேமென்
றஞ்சினோர் தம்மைத் தேற்றி யாற்றினான் போற்றி யாங்கு. (கஎ)

வணிகரு ரியரே வாரீர் வாணிக நன்றோ சொல்லீர்
பணிநெடு விலைமா ணிக்கம் விற்றதோ பயனென் போதுங்
குணமுடை யளகைக் கோனீர் மருகனோர் குமர னுண்டே
வணியநீ ரறியீ ரோவென் றவரவர்த் தழுவிக் கொண்டான். (கஅ)

கடம்பரே யுயர்ந்த பொன்னுக் காளுண்டோ காதல் வீதி
விடங்கரே யமரர் கோனூர் பணையமீட் டிலரோ மெல்ல
நடந்திரீர் வைத்த முத்து விற்றதோ நான்முன் வைத்த
குடங்கள்போ யினவோ வென்று கூறியென் னென்றுன் றேற. (கக)

ஆங்கவை யிருந்தோர் நல்ல வவதரத் தணைந்தான் மாம
னீங்குடன் பிறக்கிற் கெட்டே னிப்படி வேண்டு மென்று
தாங்கருந் தாயத் தாரை நிறுத்திநின் றனிவ முக்கை
யோங்கிய தனபா லாசொ லென்றன ருவகை கூர்ந்து. (உ௦)

மனைகுடி யடிமை காணி மாடுமா ணிக்க முத்துக்
கனகவொண் கிழிநூ றாசு காசுசா தனங்கள் கஞ்ச
மினமுறு பணைய நாம மடையாள மெவையுந் தோன்றச்
சினமுறு தாயத் தாருஞ் சுற்றமுந் தெளியச் சொல்லி. (உக)

என்னுடன் பிறந்தாண் மைந்த னீங்கிவன் றனையெ டுத்து
முன்னமே பிள்ளை யாக வளர்த்தியான் முறைமை தன்னின்
மன்னிய செல்வ மெல்லாங் கொடுத்தனன் மகவி லாமற்
றென்னவன் பெரிய நீதி குன்றுமோ செப்பு மென்றான். (உ௨)

மன்றிடை யிருந்தோ ரெல்லா மாதுல னவின்ற வாறு
நன்றென வியந்து கண்டு ஞாதிக டங்குற் றத்தா
லொன்றுமங் குரையா ராய்விட் டொளித்தனர் தரும மாறன்
றன்றிரு நீதி நாட்டுத் தண்டமுண் டாமென் றஞ்சி. (உ௩)

மாற்றவ ரொளிக்கக் கண்டென் மருமகன் றன்னைக் கொல்வான்
கூற்றென வந்த தாயக் கொடுமைகண் டீர்க ணீங்க
ளேற்றலை செய்தோர் தம்மை யிறைநெறி முறைமை யோங்கச்
சாற்றரும் பெரிய தண்டங் கொள்ளுமின் சான்றோ ராயின். (உ௪)

தருமமோ வெனக்கம் பித்த சான்றவர் காணுந் தோறு
முருவநீ சொக்க னென்ன விளங்கினை யுளங்க டோறு
மருவலர் விட்டார் விட்ட வகைதொறும் பொருள்கள் கைக்கொண்
டிரியநின் மருகனோடும் போதிநின் னுழைக்க னென்றார். (உ௫)

மன்றுளே வழக்குச் சொல்ல வல்லவ னின்போ லில்லை
யென்றனர் வணிகன் போந்தாங் கிலங்குதன் மருகனோடு
நின்றதன் றங்கை யோடு நேசமார் கிளைஞ ரோடுங்
கன்றினர் விட்டுப் போன கனகமா ளிகையுட் புக்கான். (உ௬)

பாங்கொரு பொருள்சோ ராமற் காட்டிவெம் பயம கற்றி
யாங்கவர் தமையி ருத்தி யவ்வயி னெவருங் காண
வோங்கிய புகழ்க்கு நல்ல சொக்கனு மெனவு ரைத்துத்
தாங்கரு முறுவ லோடு மறைந்தனன் றனிவி சும்பில். (உ௭)

இக்கணக் கிப்ப டிக்கார் வெல்லுவா ரிரங்கி நந்தஞ்
சொக்கனே யல்லா லுண்டோ தொழுபவர்க் கெளியா னென்று
மிக்கநீ தியையு மாட்டாக் கைந்தலை விரைந்து நோக்குந்
தக்கபே ரன்பை யுங்கண் டதிசயித் தார்கள் சான்றோர். (உ௮)

மண்மிசை வழக்கு வெல்வான் மாமன்மெய் புனைந்த தன்றி
யெண்மறை யுரைக்கும் வாயா லிகல்வழக் குரைப்ப தேயொண்
கண்ணினீர் சோர வாய்விட் டழுவதே கடவு ளென்றாங்
கெண்ணரும் வணிகர் முற்று மேத்தினா ரருளை வாழ்த்தி. (உ௯)

ஆகத்திருவிருத்தம் - ககசுஎ.

---

## ௪௨.—அட்டமாசித்தி பகர்ந்த திருவிளையாடல்.

மல்லலஞ் சிறப்பி னோங்கும் வான்றோடுங் கயிலை யங்கண்
பல்வித மணியி றங்கு பளிக்குமண் டபத்தி ருந்து
சொல்லரும் பல்க ணங்க டுதிசெய்து விதியிற் கேட்ப
நல்வினைக் கதைந வின்றா னாயகன் முன்னோர் நாளில். (க)

முறைமையி னவிலுங் காலை முனைநெடு வேற்ற டக்கை
யறுமுகக் கடவுட் கின்பா லன்பொடு நல்கிச் சற்று
மறுவிலா வியக்க மாத ரறுவரு மகிழ்ந்து வந்து
நெறியொடு சிறந்த நல்கி நின்றடி தொழுது போற்றி. (௨)

கருணைமே னியனே தேவர் தேவனே கயிலை வேந்தே
யரியவை யெவையு நல்கு மட்டமா சித்தி தம்மை
யுரையொடு முரைத்தல் வேண்டு முணர்வுற வெங்கட் கென்னப்
பரமனு முவகை கூர்ந்து பகர்ந்தன னிருந்த வாங்கு. (௩)

வேறு.

இருந்தணி மாமுத லெட்டுச் சித்தியுந்
திருந்திய பொருளொடு செப்புங் காலையில்
விரும்பிய மடந்தையர் வினவ சத்தினாற்
பரம்பிய பொருள்களைப் பராமு கஞ்செய்தார். (௪)

அப்பொழு திறைவெகுண் டவர்க டம்மையாஞ்
செப்பிய சித்தியைத் தெளியக் கேட்டிலீர்
மெய்ப்படு ஞானமுங் குறையு மேலுமக்
கொப்பொடு நவில்வதொன் றுண்டு கேண்மினோ. (௫)

சிட்டர்வாழ் தென்னவ னாட்டிற் சீருடைப்
பட்டமங் கலமெனும் பதியொன் றுண்டதில்
விட்டகோ டியோசனை போந்து விண்மிசை
முட்டுமோர் வடதரு வுண்டு முன்னரோ. (௬)

ஆங்கதி னீழலி லாறு மாதருந்
தூங்ககில் விசும்பிடைச் சுழன்றெ ழுந்துபோ
யோங்குரு வொழிந்துகல் லுருவ மாகியே
தாங்குத லறவிழு மெனச்ச பித்தனன். (௭)

குன்றிய மனத்தொடும் வணங்கிக் கோதையர்
மன்றுறை யிறைவனே மங்கை பங்கனே
யின்றிரும் பிழைபொறுத் தருளி யெங்கண்மே
லொன்றிய சாபமு மொழித்தி யென்றனர். (௮)

ஓதிய பகுதிகேட் டுவகை கூர்ந்தியற்
போதமின் மாதரீர் புகன்ற நாட்டிடைச்
சோதிசே ரருளுடைச் சொக்க னென்றியா
மேதகு மதுரையி லிருப்ப மேம்பட. (கூ)

வேறு.

செறிவொடு மாங்கு நீங்கள் சேருமின் சேர்ந்த வாற்கீழ்
முறைமையின் வெளிப்பட் டுங்கள் சாபமு நீக்கி முன்னி
னெறிபட வறிய வெட்டுச் சித்தியு நிகழ்த்து வேமென்
றிறையருள் புரியப் போந்தா ரிளைப்பொடு மினிமை கூர்ந்து. (க0)

ஆங்கிறை யிறைவி யோடு மவ்வயி னெழுந்து வெற்பின்
பாங்குறு திருக்கோ யிற்கண் மேவினன் பாவை மாருந்
தூங்கலில் லாமல் வானிற் சுழன்றுசென் றிழிந்து வீழ்ந்து
நீங்கரு நிழலிற் கல்லாய் நின்றனர் நெடிது காலம். (கக)

வேறு.

மன்னிய குருவடி வாகி வள்ளலும்
பின்னொரு நாணினைந் தணுகப் பேதைய
ருன்னருஞ் சிலைவடி வொழிந்து காணுமுன்
பொன்னுயர் வடிவொடும் போதம் பெற்றனர். (கஉ)

மைப்படு கண்டனே மதுரை வள்ளலே
துப்பமர் மெய்யனே சொக்க நாதனே
யொப்பொடு கேட்பமென் றுள்ளம் பற்றியே
மெய்ப்படு சித்தியை விளம்பென் றேத்தினர். (கங)

மஞ்சமை குழலுமை மங்கை பங்கனு
மஞ்சலீ ரப்படிச் செய்வம் யாமென
வெஞ்சலில் சொல்லொடு மெட்டுச் சித்தியும்
விஞ்சிய பொருளொடும் விரித்து ரைத்தனன். (கச)

வேறு.

அணிமா மகிமா கரிமா லகிமா
கணுகீ சத்துவம் வசித்துவ நன்குள
வினைசேர் பிராத்திப் பிராகா மியமென்
குணமார் சித்திக ளெங்கக் கூறினன். (கரு)

வேறு.

தெரிவைய ரருளிச் செய்த சித்தியாற் சித்தி பெற்றுங்
குருவொடு மிடையூ றின்றி யுலாவினர் திசைக டோறும்
பொருவில்கல் லுயிர்த்தெ ழுந்து போனது கண்டு மண்ணோர்
பரவயான் சொக்க னென்றே பரமனு மதுரை புக்கான். (கசு)

ஆகத்திருவிருத்தம் - ககசரு.

## சஈ.—தண்ணீர்ப்பந்தர்வைத்த திருவிளையாடல்.

மருவு முன்னொரு காலமெய் யழகான் மன்மத னிவனெனச் சிறந்து
தருமம் வீரியந் தைரிய முளனாய்த் தனதுயர் மரபினுக் கொத்த
திருவை வேட்டிடா தகிலமுந் தழைப்பத் தீதறு செய்யகோ லோச்சிப் [யன்.
பெருமை மிக்கதென் மதுரையில் வாழ்ந்தான் பிஞ்ஞகற் கன்புளோர் செழி

அன்னவ னுடனேர் தொன்னெறி வளவ னருங்குல மரபின்யான் பயந்த, கன்னியைக் கொடுத்தே யுறவுகொள் வேமென் றெண்ணியொண் காரியத் தோரை, முன்னுற வேண்டும் பொருளொடு விடுப்ப மொய்ம்புடை வழுதிகண் டுவந்து, மன்னிய வுலகத் தியாவரு மதிப்ப மறுபொரு ளெதிர்செல விடுத்தான். (உ)

வேறு.

இனிமையுற வித்தகவி னடக்கு நாளி லெதிரிலா வுயர்வழுதிக் கிளையனாய, சினமலியு மொருவயவன் படையி னோடுஞ் சென்னிமக டனைக்கொள்வா னெண்ணி நீங்கி, மனவலியி னுடன்செல்லக் கண்ட சென்னி மற்றவன்ற னுடனெதிர்க்க மாட்டா னாகி, யனநடைசேர் மடமகளைக் கொடுத்தான் மிக்க வறிவுடைய னாயிருந்து மச்சங் கூர்ந்தே. (ங)

மன்னுபுகழ்க் கிள்ளிமரு மகனா மந்த மாறனுடன் கூடிமுனம் வெல்லற் கொண்ணாத், தன்னுடைய பெரும்பகைவ னாய மிக்க தானையுடை வடபுடவி யரசன்றன்மேற், றுன்னியவெங் கயமுதனாற் படையி னோடுந் தோலாது சென்றவினை தொலைத்து மீண்ட, பின்னரள வில்லாத சேனை கூட்டி யிருந் தனன்வெந் திறங்கள்பல பிறங்கப் பேசி. (ச)

தருமநெறி கோடாத தமையன் றன்னைச் சமரிடைவென் றியாமதுரை கொள்வ மென்றே, யிருநிலத்தோர் பரிவேத்தா வென்னும் புன்சொற் கிளையாதோ னடலபய னோடுங் கூடிக், கரிபுரவி நெருங்குபெரும் படையி னோடுங் கடிமதில்சூழ் மாமதுரை மண்ட லத்து, விரைமருவும் வஞ்சிமிலைந் தணுகக் கண்ட விமலனடி மறவாத வீர மாறன். (ரு)

செம்பியன்றன் னொடும்பெரிய சேனை யோடுந் திறம்பேசித் தான்வீர னாயி ருக்கு, மெம்பிவரு கின்றுன்யா மெதிர்க்க மாட்டே மென்செய்கே மெவ்விடத்து முள்ளான் வல்லான், றும்பிவரை யினம்பரிக்கும் பெரிய கோயிற் சொக்கனுக்கு விண்ணப்பஞ் செய்வே மென்று, கம்பமுறு மெய்யினொடும் புளகத் தோடுங் காரியமுள் ளனசொல்லிப் பணிந்தான் போற்றி. (சு)

வேறு.

மற்றவன் கண்டஞ் சாது நன்னெறி மன்னு வொல்லை
யுற்றநின் படையி னோடு மோசனை யெதிர்சென் றேறி

வெற்றியி னணியாம் வென்றி தருகுவ மென்று விண்மேற்
கொற்றவன் றேற வங்கட் கிளர்ந்ததோர் குளிர்ந்த வாக்கு. (எ)

இடரொழிந் திறைவாக் கென்றே யினிமையிற் போந்து நொச்சித்
தொடைமிலை யாது பண்டைச் சூழ்ந்ததன் றானை யோடு
மடைவுறக் காஞ்சி சூடி நின்றன னஞ்சா னுகித்
தடமலி மதுரை விட்டாங் கியோசனை யெதிரே சார்ந்து. (அ)

மாற்றலர் வெய்ய தானை மற்றது காணு முன்னங்
காற்றென விசையிற் பாயும் புரவியுங் களிறுந் தேருங்
கூற்றன வீரர் தாமுங் குலவுற வாரி யென்ன
வாற்றரு மொலியி னோடும் பரந்ததாங் கவனி யெங்க. (கூ)

சென்றவன் கண்டு தேறித் திறத்தெதிர் நடந்து சீறி
யொன்றிய சிங்க நாதஞ் செய்துதன் னுடைத்தாம் வெய்ய
துன்றிய தானை யோடுஞ் சொக்கனை நினைந்து ளத்து
வென்றிகொண் ஞாட்புச் செய்யத் தொடங்கினன் மிலைந்து தும்பை. (க0)

அங்கது காணு முன்ன ரடற்பெருந் தானை மிக்க
வெங்கொடும் பரிவேத் தாவும் வெடிக்கவா னுறச்சி ரித்துத்
துங்கவேன் மாம னோடுந் தோன்றிவெம் பூசல் செய்தா
னிங்கெனோ டெதிர்த்தற் கின்று வலியுனக் கேதோ வென்றே. (கக)

அணிபொலி தேருந் தேரு மலைந்தன வாளு மாளுந்
துணிவொடு நின்ற டர்ந்து பொருதனர் துரகத் தோடு
தணிவிலாத் துரகஞ் சென்று தாக்கின தந்தி யோடங்
கிணையிலாத் தந்தி வந்து மூண்டன வெங்கு மெங்கும். (க௨)

இந்நெறி யாகுங் காலை யிறைதிரு வருளால் வெம்மை
மன்னிய கோடை முற்றி வாயுலர்ந் துதக மின்றிச்
செந்நிற வினன்றீ யென்னத் தீக்கதிர் விரிப்ப வாற்று
தொன்னலர் படையி னோத்து வீழ்ந்ததவ் வுறுக ளத்து. (கங)

மேவருந் தலத்து மேவி வெஞ்சமர் செய்த பத்திக்
காவலன் சேனை தானுங் காலநீ தியினல் வாடி
யாவிசேர் தண்ணீர் வேட்டங் காவிசோர்ந் தருங்க ளத்துப்
போர்வினை மாட்டா தாகி நின்றது பொலிவ ழிந்து. (கச)

கருணையன் கண்டி ரங்கிக் கடிதுதற் சேர்ந்த பத்தன்
பொருபடை நடுவு சென்று பொருவருஞ் சயமுண் டாகத்
திருவுருக் கரந்து மற்றோர் சேவக னுருப்பு னைந்து
தருமநேர் விளங்க வைத்தான் றண்ணீர்ப் பந்த ரோங்க. (க௫)

தாதவிழ் கழுநீ ரேலஞ் சந்தன மூசிரங் கோட்டங்
கேதகை யிலவங் கஞ்சண் பகமதி மதுரங் கேழில்
பாதிரி முதற்கற் பூர மளவிய பரிம ளஞ்சேர்
சீதள வமுதை நல்கத் தெளிந்தது குடித்த சேனை. (௧௬)

தெளிந்தவ ருயிர்ம ருந்தாய்த் தெள்ளிதாய் மணந்து நொய்தாய்க்
குளிர்ந்தநீ ரிவ்வி டத்தார் நல்குந ரெனக்கொண் டாடிக்
கிளர்ந்தமர் செய்யக் கண்ட கேளலர் தானை பின்னும்
விளிந்தொரு சாம முன்னின் மலைந்தது மிலைந்து தும்பை. (௧௭)

வெந்திறல் வீரர் நின்று மடிந்தனர் மேல டர்ந்த
சிந்துரப் பட்ட யானை பட்டன திசைப ரந்து
வந்தவெந் துரக வெள்ளம் வற்றின மற்ற டர்ந்த
கொந்தவி ழலங்கல் வையங் குலைந்தன நலங்கு லைந்தே. (௧௮)

சேயவேற் றடக்கை வீரர் செங்குடர் பிடுங்கி யேறிப்
பாய்பருந் திட்ட நெட்டைப் பவளக்காற் பந்தர் நீழ
லாயசெங் குருதி யாற்றிற் குளித்தவி நயங்கள் காட்டிப்
பேயிருங் கணங்க டம்மிற் பிணங்கின நிணங்க டின்று. (௧௯)

வன்புறு கவந்த மாட மடிந்தசெங் கொடுங்க ளத்து
முன்புறப் போனார் போனா ரொழிந்தவர் முளிந்து மாண்டார்
மின்பொலி வேற்ற டக்கை வீரனும் வீர மிக்க
தன்பரி வேத்தா வான தம்பியு நிற்பக் கண்டான். (௨0)

இருவரு முகமு கம்பார்த் திளைத்துமு னிற்ப வாகைத்
திருமலி தொடையன் மார்பன் சிரித்துயர் களிப்பி னோடுஞ்
சுரரடி பரவுஞ் சொக்கன் கருணையைத் தொழுது வாழ்த்தி
யுரனுடை யோர்க டம்மைப் பிடித்தன னுறுதி கூர. (௨௧)

திருந்தல ரகப்ப டாமுன் றிண்டிறற் சேனை யுய்யப்
புரந்தர னயன்மா லாதி சயசய போற்றி யென்ன
வருந்திரு மேனி வேர்ப்ப வோடிமீண் டரிய தண்ணீர்
பரிந்தளித் தானொ ளிப்பப் பந்தருங் கண்டா ரில்லை. (௨௨)

எந்தைவல் லனயார் வல்லா ரெனமனத் ததிச யித்து
வெந்திறத் தவர்க டம்மை வெற்றிமா முரசத் தோடுந்
தந்திரத் தலைவ ரோடுஞ் சாற்றரு மமைச்ச ரோடுஞ்
சுந்தரன் றிருமுன் சென்று காட்டினான் றொழுது வாழ்த்தி. (௨௩)

## வேறு.

துய்ய தண்ணீ ரளித்துச் சுவைபட
மைய நீர்த்தெனை வாழ்வித்த வள்ளலே

ஐயய னேயின் றிவரை யடியனேன்
செய்யு மாறுரை செய்யெனச் செப்பினான். (உச)

சீல மன்ன சிறந்தநின் காரிய
மேல வின்று முடித்தே மிவர்தமை
மேனு ளக்கினி வேண்டுப செய்யெனச்
சால நல்லவன் சாற்றினன் றேற்றிட. (உரு)

வேறு.

மெய்ப்பட வுயர்திரு வாக்கு விண்மிசைச்
செப்பிட வடியவர் திறத்து நல்லவன்
றுப்பமர் வடிவுடைச் சொக்கை யல்லதிங்
கிப்படி யாருள ரெனத்து தித்தனன். (உசு)

முன்னுற நின்றதி சயித்து முத்தணி
பொன்னணி செம்மணி யிலங்கு பூணணி
பின்னரும் வேண்டுவ பிறங்க நல்கியே
தன்னுடைத் திருமனைத் தலத்துச் சார்ந்தனன். (உஎ)

வேறு.

அருளுடைச் சுந்த ரற்கே யடிமைபூண் டதனு லந்தப்
பெருவலிச் சோழன் செய்த பிழைபொறுத் துவந்து காத்துப்
பொருவரும் புகழ்வி ளங்க வேண்டுப கொடுத்துப் போகத்
தரமொடும் விடுத்தா னுளோ னாங்கினிற் றனது தேத்து. (உஅ)

கயவனுந் தம்பி தன்னைக் காசினி காணத் தாழ்ந்த
நயமிலாத் தொழில்க டம்மி னிறுத்தினு னுனென்று
சயமுற மாலை யிட்டுத் தண்டிவந் தெதிர்ம லைந்த
வயமுறு சேனை வெள்ளம் வற்றிடச் செற்ற மாறன். (உகூ)

பகையறக் கூபங் கண்டு பந்தருட் டண்ணீர் வைத்த
புகலருங் கருணை மேனிப் புண்ணியன் றனையு நாளுந்
தகவவன் றனக்கே யன்பு சார்ந்ததென் னனையுங் கண்டாங்
ககமகிழ்ந் தேத்தி னுர்க ளவனியோ ரதிச யித்தே. (௩0)

ஆகத்திருவிருத்தம் - கஉகங.

## சச.—இந்திரன்முடிமேல் வளையெறிந்த திருவிளையாடல்.



விண்ணகத் தலைவ னுய தேவர்கள் வேந்த னுக்கு
மண்ணகத் தலைவ னுய பாண்டிய மன்ன னுக்கு
மெண்ணறச் சிறிது ளத்துள் வெறுப்புள திமையோ ராலுங்
கண்ணுற வறியொ ணுது காரண மதனுக் கென்ன. (க)

முனிவர்கள் கேட்பான் வேட்டு முந்திய வுலகத் தெல்லா
நினைவையு முணர வல்ல நிகரிலா மலயக் கோவே
மனமகிழ் வோடு மந்த மறைப்பொரு டன்னை யின்று
விணையற விளம்பல் வேண்டும் விளங்கிட வெங்கட் கென்றார். (உ)

ஆங்கது சொல்ல ஞான வகத்தியன் பகர்வா னீதி
யோங்கிய முன்னோர் கால மொளிவளர் சேர னாடு
நீங்கரும் வளமை குன்றா நிகரிலா வளவ னாடும்
பாங்குடை யறிவான் மிக்க பாண்டியன் பெரிய நாடும். (ஙு)

ஈனமில் வளங்க ணல்கு மிரும்புனன் மழைம றுத்துத்
தானமுந் தவமுங் குன்றி நென்முதற் றானி யங்க
ளானவை விளைவி லாம லாதவன் கதிராற் காய்ந்து
மானிட ரற்ற முற்று வாடினர் வருத்தங் கூர்ந்து. (ச)

இந்நெறி யொழுக்கங் கண்டவ் விருநிலங் காக்கு மிக்க
பொன்முடிச் சேரன் சோழன் பாண்டியன் புகழ்வி ளங்க
முன்னுறத் தம்மிற் கூடி முறைமையின் வான நாட்டு
மன்னிய புரந்த ரன்பாற் சென்றனர் மழையை வேண்டி. (ரு)

பைந்தமிழ்ப் பொறையன் கிள்ளி பாங்குதா மாச னத்து
முந்துற விருப்பக் கண்ட மொய்ம்புடை நிம்ப மாறன்
சுந்தரன் றனை நினைந்து துதிசெயா தெதிர்சென் றேறி
யிந்திரன் பெரிய சிங்கா சனத்திடை யுடனி ருந்தான். (கா)

அரியபே ரவனி காக்கு மரசர்மூ வருந்தி ரண்டு
பரிவொடும் வருதற் கென்ன பாக்கியஞ் செய்தே மென்று
சுரர்பதி யதுகாட் டாமற் காரியம் வினவத் தோன்ற
வுரைசெய்வா ரவரின் முன்ன ரொளிவளர் சேரன் சோழன். (எ)

எங்கண்மா நிலங்க டம்மு ளெழிலிபெய் யாமல் யாரு
மங்குதல் கண்டி ரங்கி வந்தன மழையை வேண்டிச்
சங்குசெங் கமலஞ் சிந்தா மணிதரு சுரபி யுள்ள
பொங்கெழி லுடை யனேயென் றினையன புகழ்ந்து சொன்னார். (அ)

மற்றவர் புகழா முன்னர் வாசவ னினிமை கூர்ந்தாண்
டுற்றெழு மழைக்கு லத்தை யழைத்திவ ரொளிசேர் நாடு
முற்றுநீர் தாழா தெய்தி முழங்கியின் னருள்சு ரந்து
பொற்பமர் புனலைச் சாலப் பொழியுமி னெனமொ ழிந்தான். (கூ)

வென்றிகொள் செழியன் குன்றா மேதகு விழுப்ப மிக்க
தன்றலை மானங் காத்துத் தன்னுறு காரி யத்தை

யின்றுநா மொருவன் பாற்றூழ்ந் திரக்குமா றெங்ங னென்று
சென்றவ னுரையா குகி யிருந்தனன் றிறமை பூண்டு. (கo)

ஆங்கது கண்டு வானோ ரதிபதி பொறாமை யெய்தி
வாங்கரு நலங்கள் செய்து மற்றவர்க் கன்பு கூர்ந்து
தாங்குபொற் பூணு ரங்க டலமெலா மதிப்ப நல்க
வோங்கிய துதியின் வாங்கி யாங்கவ ருவந்தார் பூண்டு. (கக)

அலைவிலா நெஞ்ச மாற னடல்வலி யறிவா னெண்ணித்
தொலைவிலா விமையோ ராலுஞ் சுமக்கொணுக் கனமு டைத்தாய்
விலையில தாயெ வர்க்கும் வேதனை செய்ய வற்று
யிலருபன் மணியாற் பொங்கி யிருப்பதோ ரார மீந்தான். (கஉ)

சகமகிழ் வெய்த வங்கட் டானது காணு முன்னர்
மிகவதி சயித்து வாங்கி மென்மலர் மாலை யென்னப்
பகையறப் பூண்டான் வென்றி யாயிர முகஞ்சேர் பாரத்
தொகுமணி தரும்பே ராரச் சொக்கனை யகத்துள் வைத்தே. (கங)

சேணுளார் மண்ணு ளார்கீழ்த் திசையுளா ரொருவ ராலும்
பூணொணு மணிப்பே ராரம் பூண்டபே ராண்மை கண்டு
மாணுற வாழ்த்தி னார்கள் வாடிய முனியர் வானோர்
நாணிய தேவர் கோனு நனிநயந் ததிச யித்தான். (கச)

நேர்வலி கண்டு கொண்டு நெஞ்சுறு வினைம றைத்துப்
பேரியன் மன்னு சாலப் பெரிமையயா யிருந்தாய் கூட
லூரின்மும் முலையாள் பெற்ற வுக்கிர குலதது தித்த
வீரனீ யென்னுந் தன்மை கண்டன மெனவி யந்தான். (கரு)

வென்றியா லாரம் பூண்ட பாண்டிய னென்று மேன்மை
துன்றிய வழகான் மிகக சுந்தர மாற னென்று
நன்றியி னேங்கு நாம நானில மீது னக்கே
யின்றுமுன் னுவ ழங்கக் கடவவென் றிலங்கச் சொன்னான். (கசு)

வேறு.

தென்ன மன்னனுங் கண்டவன் செய்திபோற்
பின்ன மற்ற வுறவாற் பெருமையா
லுன்னை யொப்பா ரிலையென் றுயர்புற
மன்னு ளத்தொன்று வைத்துப் புகழ்ந்தனன். (கஎ)

வாய்ந்த கொற்ற மகவான் மழைக்குமுன்
சார்ந்த மூன்று முடிமன்னர் தம்மையுஞ்
சேர்ந்து நல்லன சொல்லிச் சிறந்தன
வீந்து போக விடுத்தாங் கிருந்தனன். (கஅ)

மற்றை மன்னவர் மாசறு மீனவன்
வெற்றி கண்டு புகழவம் மீனவ
னுற்ற காலத் துதவுவ னுய்யவென்
சுற்ற மாகிய சுந்தர னென்றனன். (கக)

பாரின் மன்னவர் தத்தம் பதியிடைச்
சாரு மன்பொடு சார்ந்தனர் சாருமுன்
சேர னாட்டினுஞ் செம்பிய னாட்டினு
நீர்கொண் மேக நிறையப் பொழிந்ததால். (உO)

வேறு.

புன்மைதீர் சராச ரங்கள் பொலிவுடை யனவா யோங்கி
தென்முதற் றானி யங்க ளெங்கணு நிறைய மல்கி
மன்னிய மனித ரெல்லாம் வரவர மகிழ்ச்சி யெய்தி
நன்னய முடைய தத்தம் வேந்தனை நனிவி யந்தார். (உக)

*துங்கமா றனுஞ்சேய் துர்க்கை தும்புரு வாதி போதன்
சங்கமால் கின்ன ராதி சனகாதி கணேசன் வியாழங்
கங்கைமா விதுவென் றேத்துங் கடவுட்டென் கயிலை யென்னுஞ்
சிங்கமா தங்க நீங்காத் திருப்பரங் குன்றைச் சார்ந்தான் (உஉ)

*தருமலி பரங்குன் றத்துச் சரவணப் பொய்கைப் பர்ரத்
தரசுறு பன்னம் வீழ்ந்த தப்புறின் மீனு மன்றிக்
கரையுறிற் பறவை யாகுங் கரையினன் னீரி னோர்கான்
மருவுமோர் பன்ன மீனின் பறவையின் வடிவா யிற்றே. (உங)

*ஒன்றுநீர் மிசையி ழுப்ப வான்மிசை யொன்றி ழுப்பக்
குன்றியாங் குழலுங் காலைக் குறுகிய கீர னோர்ந்து
வென்றியின் விடாத தொன்றை விடுவிப்பான் முயன்று னின்ற
கன்றிய பிரம ராக்க தம்பிடித் ததுக றுத்தே. (உச)

*அங்கது கொடுபோய்க் குன்றோர் முழைஞ்சினு ளடைத்துப் போகத்
தங்கிய துயராற் றூது சரவண பவவென் றன்பிற்
றுங்கமந் திரத்தை நூல்கள் சொன்னநீ தியிற்றியா னித்தோர்
கங்குலும் பகலு மோதக் கண்டருள் சுரந்தா னன்றே. (உரு)

*தலமகிழ் தமிழ்க்கு நல்ல தண்டமிழ் முருகன் சென்று
நலமுறு கனவிற் சொல்வா னற்றமிழ் முருக னம்பேர்
பலமிகு தமிழி னுலோர் பாட்டாற்றுப் படையா நம்மை
யுலகமென் றெடுத்துப் பாடென் றுள்ளுறை கொடுத்தா னன்றே. (உசு)

* இவ்வடையாளமுள்ளசெய்யுட்கள் சிலபிரதிகளில் இல்லை.

வேறு.

*உயர்வுற வுலக முவப்பவென் றெடுத்தாங் கொண்டமிழ்த் தண்டல முவப்ப
வியனுற வுரைப்பக் கேட்டலு மடைந்து வெற்பகந் திறக்கவேல் விட்டு
நயனொடு மெடுத்து வினைகடீர்த் தருளு நன்சுனை காட்டிநீ ராட்டி
யயிலுடை நம்மைக் கிழவனென் றனையென் றாலயத் தடைந்தனன் காண.

வேறு.

*இனிதொர்கவி குன்றமெறிந் தாயெ னப்பி
னென்றுமிளை யாயழகி யாயென் னுங்கான்
மனமகிழ்ந்தீ தியார்பகர்வா ரவர்க்கு வேண்டும்
வரங்கொடுப்போ மதுரையிற்போ கென்னப் போந்து
கனமலிசங் கத்துரைப்பக் கேட்டி யாருங்
களிகூர்ந்தார் தமிழ்முருக னருளை வாழ்த்திப்
பனுவறிரு முருகாற்றுப் படையென் றோங்கிற்
றெனநயந்து பாண்டியனென் செய்தா னென்றார். (௨௮)

வேறு.

பாண்டியன் கந்தற் போற்றிப் பரமெனப் பரங்குன் றத்துப்
பூண்டபே ராரம் வைத்துப் போந்துய ரால யத்திங்
காண்டநா யகனே நின்ற னருளினா லடைந்தே னென்று
வேண்டியே துதிப்ப வாண்ட விமலனு மஞ்சே லென்றான். (௨௯)

வேறு.

சீத மண்ட லக்கு லத்து தித்த தீதின் மன்னவ
னோது மண்ட லத்தர் மாரி யின்றி யுள்ளம் வாடியே
கோதை மண்ட லத்தி னுங்கு ணம்பொ ருந்து சென்னித
னீதி மண்ட லத்தி னும்ப ரந்து போவர் நித்தலும். (௩௦)

மூண்டம் வெம்ப நெஞ்ச நோவ முந்த வந்து தானியங்
கொண்டு வந்தி யாவ ருங்கு டும்ப நீதி செய்யமுன்
கண்டு கண்டி ரங்கி நெஞ்ச மிஞ்ச நாணு கைதவன்
பண்டை வெந்தி றத்தி னாலி ருந்த னன்ப கர்ந்திலன். (௩௧)

வேறு.

பிறிவிலா வெறுப்பி வர்க்கிங் கிப்படிப் பிறங்கிற் றென்ன
வுறவுடை முனிவர் ஞான முனிவகே ளுணர வொண்ணா
மறையுரை பகர்ந்தா யந்த வரிசைமா மானி மாறன்
றிறமொடு பின்னென் செய்தான் செப்பெனச் செப்பு வான்முன். (௩௨)

வேறு.

அந்த மன்னவ னடற்பெரு வேட்டைவேட் டொருகாற்
சந்து மேவிய வரையினும் வனத்தினுஞ் சார்ந்து
சிந்தை யின்புறத் திண்டிறல் விலங்குகா ணுமை
யூந்து வீரர்க டம்மொடு மெங்கணு முலாவி. (௩௩)

தக்க வேங்கைக டழைசெவிக் கயங்கள்சிங் கங்கண்
மிக்க மாக்கள்கான் மேதிகள் கரடிகள் கலைக
டொக்க மானினம் பன்றிக டுவன்றிய சாரன்
மைக்கு லங்கள்சேர் மலயமாக் கிரியினை யடைந்தான். (௩௪)

வேறு.

வன்பெரு ஞாளி விட்டும் வார்வலை விட்டும் விட்ட
தன்கொடுங் கணையால் வாளாற் சத்தியாற் பதைத்தெ ழுந்த
முன்பொரு மாக்க டம்மை முகத்திடை மனமுங் கண்ணு
மின்புற மலைந்தான் குன்ற மெங்கணுஞ் சூழ்ந்த திர்ந்து. (௩௫)

இத்தக வாற்சி றக்கு மெல்லையி னிரவி யென்ன
வொத்தொளி மணிவி ரிக்கு முயர்ந்ததாள் வரைப்பு றத்துப்
பொய்த்திடா தென்றுஞ் சேரும் புட்கல முன்னு மின்னும்
வித்தக நான்கு மேக வேந்தரை விளங்கக் கண்டான். (௩௬)

சொல்லரும் பரிவா லெந்தை சுந்தர னருளா லிந்தச்
செல்லுய ரரசர் தம்மைக் கண்டன மென்று தேறி
நல்லசே வகரான் மூன்று நாட்டரு மதிச யிப்ப
வொல்லையி னவரை மெல்லப் பிடித்தன னுறுதி கூர்ந்து. ௩௭)

பிடித்தலு நயக்கு வேட்டை வாய்த்ததின் றென்னப் பேசிச்
சடக்கெனப் போந்து கட்டித் தன்னுடை வினைஞ ராலே
துடிப்பற விலங்கு பூட்டித் துணிந்திருஞ் சிறைவைத் தானவ்
விடப்பெயர் கட்டு நல்லூ ரிருஞ்சிறை யென்ப ரின்றும். (௩௮)

கண்டவர் விரைவிற் சென்று ககனநா யகனே யுன்றன்
றிண்டிற லெங்கே கண்டேஞ் சிக்கெனப் பிடித்துக் கட்டி
மண்டலத் திடையி ருக்கு மாறனென் றொருவன் கொண்மூ
விண்டலத் தரசர் தம்மை விலங்கிட்டான் கொடுபோ யென்றார். (௩௯)

ஆங்கது கேளா முன்ன ரழல்விழித் தெழுந்து சீறி
யீங்கியா னிருப்ப வெண்ணு தொருநர னிருநி லத்துப்
பாங்குவா னரசர் தம்மைப் பருவிலங் கிடுவ தேயென்
றோங்கிய தானை யோடு மிழிந்தன னுயர்ந்த மண்ணில். (௪0)

சூடுமா லைகட யங்கச் சுடர்விடு மகுட மோங்கச்
சேடுவான் முகடு விம்மச் சிறந்தது ரியங்க றங்க
நீடிய சேட னாக நெளியமுப் பத்து மூன்று
கோடிவா னவரும் வந்தார் குவலயத் திடைக்கொ தித்து. (௪௧)

ஒளிவளர் வீர மாற னும்பர்கோன் வரவு கேட்டுத்
தளர்வில்பார் வேந்தர் மொய்ப்பத் தரளவெண் குடைநி ழற்ற

வளவில்பல் லியங்க றங்க வடர்ந்தெழு தானை பொங்க
வளனெடும் பொருவான் சென்றான் மதுரைவிட் டெதிரே பேசி. (சஉ)

வியனுறு சிறப்பாற் பொங்கு மிருவகைத் தானை வெள்ளங்
கயமுறு முழக்கத் தானுங் காகளச் சும்மை யானுஞ்
சயமுறு வீர ரங்கைத் தனுமணி யொலியி னானு
முயர்தரு கடைநாட் பொங்கு முததியிற் கலித்த வன்றே. (சரு)

வாசவன் கண்டாண் டேடா வழுதியின் றெதிரே வந்தாய்
பூசல்செய் வதற்கோ நல்லை புரந்தரன் யான்காண் வேண்டா
வீசிய புகழ்கெ டாமன் மேகமன் னவனை விட்டுத்
தேசொடும் போபோ வென்று செப்பிவச் சிரம சைத்தான். (சச)

விருத்திரா சுரனைக் கொன்ற வென்றியா ரறியார் வென்றிப்
பொருப்பெலாஞ் சிறக ரிந்த புகழுடைப் பெரியோன் மண்மீ
துரைப்பின்மா னிடனீ யான்வா னுள்பவ னுன்னை வெல்லல்
பெருத்ததொன் றல்ல வென்று பேசினான் வாசி காட்டி. (சு)

நரபதி யதுகே ளாமுன் னனிநகை செய்து நாணு
துரைசெய்தா யெனக்கி ரண்டு கண்ணுனக் காயி ரங்கண்
பரிகரி தேரா னீண்டும் படையினை வருத்தல் வேண்டா
விருவரும் பொருவோ நந்த மிகல்வலி யறிவே மின்றே. (சசு)

தொண்டர்கள் பரவுங் கூடற் சொக்கனிங் கிருப்ப வேடா
வண்டர்கோ னேயு னக்கிங் கஞ்சுவா னொருவ னல்லேன்
மண்டலத் தெவருங் காண வலியவென் வளையி னாலுன்
றிண்டிறன் முடிபி ளக்க வெற்றுத றிண்ண மென்றான். (சஎ)

இன்னன பேசிச் சிங்க மிரண்டுபோர் மூண்ட வென்னக்
கொன்னுற முழங்கி நீங்காக் கோடக வமர்செய் காலைப்
பொன்னுல காளு மன்னன் பொன்முடி சிந்த மண்ணாண்
மன்னவர் மன்னன் சேர்ந்து வளையினா லுருத்த டித்தான். (சஅ)

கொத்தலர் முடியிற் சாடக் கோபம்விட் டமர ரோடுஞ்
சுத்தமா தவர்சூ ழெந்தை சுந்தரன் பரிந்தி ருக்கும்
வித்தகன் றனையார் வெல்வா ரென்றுவிண் ணவர்கோன் போனான்
புத்தியாற் றனித்து வென்ற புரந்தனிச் சயம தென்பர். (சகூ)

பொருவரு மறிவான் மிக்க புகழுடைப் பெரியோ ரெல்லா
முரைசெய்வா ரதனை யானு முரைத்தன னுமக்கு மிக்க
வானுளார் தேவ ரென்று மற்றவர் மனித ரென்றுந்
தெரிதர வேண்டா சத்தி தெய்வீக மன்றே காணின். (ருo)

சோகநீ யுறேன்முற் சாப மென்னநல்லோர் சொல்ல வாறி
மேகநா யகனை யொல்லை விடுவிப்பா னயங்கள் கூற
வாகைவேன் மாற னுக்கு வாசவன் ஞழ வோலை
போகயாம் விடுவ மென்றே யெழுதுவான் பூண வோலை. (நக)

வேறு.

தேவர் கோனெழுது மோலை மானம்வலி சேர்ந்த வாள்வழுதி காண்கநல்
லார்வ மேவுகுல மேக மன்னனைவி லங்கு விட்டருள்க வரவிடுன்
சார்வு நாடுதழை வெய்த நாண்மழைபொ ழிந்தி டக்கடவ தென்றுதன்
காவன் மேவுமுயர் தூதர் பாணியுழை கட்டி யோலைவர விட்டனன். (நஉ)

வந்த வோலையினி யைந்த பாசுரமி ருந்து கண்டுளம கிழ்ந்துபின்
முந்தை மன்னர்நெறி நீதி யாய்ந்துயர்மு கிற்கு லத்தலைவர் தங்களைப்
பந்த நீக்கிடவு ளத்து நன்கொடுபு ணைப்ப டும்பெரிய பண்புளா
ரிந்த நல்லவையு ளாரெ னக்கடிதெ ழுந்து முன்சிலரி றைஞ்சினர். (நங)

வேறு.

பரிந்தது காணு முன்னோர் பாண்டியன் சோழற் காய்ந்து
பெருங்கள வேள்வி செய்த பீடுடைக் காட்டு நாட்டு
ஞரங்கொளே ழூர்க டம்பி லொருவனு முன்னென் றோதி
வருமபெயர் தம்மைத் தள்ளிப் புணைநின்றான் மண்ணிற் றேறி. (நச)

விரைவொடு மவன்றன் மாட்டு மேகமன் னவனை விட்டுப்
பரிவுசெய் யாமு னந்தப் பாண்டியன் பாண்டி நாட்டுக்
கருணைகூர்ந் தெழுமு ழங்கிக் காலங்க டோறும் பெய்யா
தருண்மழை பொழியக் கண்ட வமரரு மதிச யித்தார். (நரு)

றென்முதற் றானி யங்க ளெங்கனு நிறையக் கண்ட
நன்மறை யோர்கண் முன்னு நானிலத் தெவரும் வாழ்ந்து
தென்னவன் றனையு மந்தத் தென்னவற் கன்பு பூண்ட
பொன்முடிச் சொக்க நாதன் றன்னையும் புகழ்ந்தார் போற்றி. (நசு)

தொழுதமுன் னெழுந்தா ரென்று துவனைநன் ஞட்டுட் டோன்றிப்
பொழின்மிசை நம்மைத் தேறிப் புணைநின்ற னன்று டென்றாங்
கெழிலிகா னூன்றிப் பெய்யு மிருங்கள வேள்வி நாட்டு
மொழிகுவ ரவனூர் நாமுன் னெனவினு முன்னூ ரென்றே. (நஎ)

வந்திருந் தாரம பூண்டு மலைவலி தொலைத்த வென்றி
யிந்திரன் முடிமேன் மிக்க வினவளை புடைத்து மற்றைக்
கந்தர வரசர் தம்மைக் கனவிலங் கிடவுங் கண்டி
ரெந்தையை நினைவார் தங்கட் கியாதுசெய் திடவொண் ணுதால். (நஅ)

ஆகத்திருவிருத்தம் - கஉஎக.

## சரு.—பொன்னனையாளுக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.



தென்னவனுட் டினியமனே கரமாந் தொல்லைத் தென்றிருப்பூ வணந கர்வாழ் பதியி லாரிற், பொன்னனையா ளென்பாளோர் பூவை யாடற் பூவை யர்தந் திலகமத வேள்பண் டார, மன்னியகா முகர்கொடுக்கும் பொருளனைத்தும் வருந்தொண்டர்க் கறுசுவையி னமுது செய்வித், தின்னல்கெட முன்னொருகா லிருக்கு நாளி லிறைவனுருத் தாபிப்பா னெண்ணி ளுளால்.(க)

நித்தனரு ளானமது நினைவிங் கொல்லை நிறைவுறுமென் றுறுதிபட நினைந்து கொண்டு, சித்தம்வருஞ் சிற்பர்களான் மெழுகு சாத்தி யிருந்தவடான் வரும்பொருள்கள் சிவனை நீங்காப், பத்தருயர் பூசனைக்கே போதி னல்லாற் பரமனுக்குப் போதுகின்ற தில்லை யென்று, புத்தியழுங் குறநாளுங் கண்டி ரங்கிப் புகழ்ச்சொக்க னருட்சித்த ளுகி வந்தான். (உ)

வே று.

மனையிடை யமுது செய்வான் வந்தவொண் டொண்டர் நாப்பண்
டுனிவற வணைந்த சித்தன் றொண்டரைப் பூசை செய்வான்
றனவட வாரசு மந்து தனியிடை யிடைய வந்த
வனிநடை மாதை நோக்கி யருள்பட முறுவல் கூர்ந்தான். (ங)

ஆங்கவ டானுந் தன்க ணணையமேல் வைத்த கண்ணி
னீங்கருங் கருணை கண்டிட் புகுந்தன ணிறைவு செய்தே
பூங்கழற் றொண்டர் துய்த்துப் போகவும் போகா ளுகி
யோங்குகூ டத்தி ருந்தா னுயர்ந்தமாத் திளைக்கோ லூன்றி. (ச)

தேற்றுதா தியர்கள் கண்டு சென்றுநா யகியே யாரும்
போற்றவீற் றிருந்த சித்தர் போயினா ரில்லை யென்ன
வேற்றருங் களாணண் மிக்க விருப்பொடுஞ் சார்ந்தி றைஞ்சிச்
சாற்றுவா ளிறைவன் றானே வறிகிலேன் றமியே னென்றாள். (ரு)

கொல்லுமை நீல வொண்கட் கொவ்வையஞ் செவ்வாய் மாதே
நல்லணி மெய்வி ளங்க நாசிகா பரண மாகச்
சொல்லருங் குன்றி தேடிச் சூடிய தென்னை யென்ன
வல்லிவாய் புதைத்தி மைப்பிற் றொழுமகிழ்ந் துயர்முத் தென்றான். (சா)

கண்ணிலா னென்ப துண்மை காமனைப் பெரிய நீரு
மெண்ணிலா வென்னை யெண்ணற் கென்னபுண் ணியஞ்செய் தேன்மற்
றண்ணிய கரும மில்லை யடியவர் கருமமல்லா
லுண்ணிறை விருப்பிற் றாழா துள்ளெழுந் தருளு மென்றாள். (எ)

நற்றவன் கண்டு மெல்ல நகைத்துமா னிகர்த்த மாதே
முற்றிய பத்தி யுள்ளார் கண்டில முனைப்போன் முன்னர்
மற்றுநின் வருத்தங் கேட்டே மதுரையி னின்று வந்தேங்
கொற்றரு மிருப்பு முட்டு முட்டறக் கொடுவா வென்றான். (அ)

கேட்குமுன் பழைய வாள்வேல் கிடந்தபே ராசு சீரா
வீட்டிகீள் கொழுக்கு டார மினையவேண் டுபகொ ணர்ந்து
காட்டவோர் மருந்து பூசிக் கரத்தினுற் பரிசஞ் செய்து
கூட்டின னயங்கள் கூரக் கூறுவான் றேற வாங்கு. (க)

மெத்திய தழலிற் றாழச் செருகிவை விடியு முன்னம்
பத்துமாற் றினிற்சி றந்த பசும்பொனு மெழுகு பூண்ட
வுத்தம நாய னுறை யுயர்ந்தசெங் கனகங் கொண்டே
சித்திர மாவ மைத்துக் கும்பிடுன் றுயரந் தீர. (கo)

என்றவு மேத நீங்கி யின்றிரா விங்குத் தங்கி
வென்றிகொ ளுய னீரே விடிந்தெழுந் தருளு மென்ன
வொன்றவஞ் சினர்போ லின்று நன்றுநன் றுரைத்த தென்று
சென்றவன் விசும்பிற் காண மறைந்தனன் சிரித்தெ ழுந்து. (கக)

உயர்தரு சித்தர் கைவிட் டொளித்தன ரென்று சால
வயருவாள் விரைவிற் கூட்டி யறைந்தவா றடைவிற் செய்யப்
புயறவழ் மேரு வென்னப் பொன்னிருங் குவையைக் கண்டா
ளயனுற வதிச யித்தாள் விடியுமு னடித்தெ ழுந்தே. (கஉ)

வே று.

அந்த ணாளர் தபதிய ராங்கது
வந்து கண்டு மனமகிழ்ந் தன்பர்கள்
சிந்தை யாகுலந் தீர்க்கவல் லானருட்
சுந்த ரன்னல துண்டோ வெனச்சொனார். (கங)

காய்ந்த செங்கன கங்கொடு காமுற
வேய்ந்த நாயகர் மேனி யமைத்துயர்
வாய்ந்த வாகம மந்திரத் தானெறி
சேர்ந்த நல்லபி டேகமுஞ் செய்தனள். (கச)

வே று.

பணிபவ ளழகு கண்டே பரவுமெம் பெருமா னுக்கிங்
கணிபொலி வடிவ மச்சோ வழகிய வாவென் றன்பி
னிணையிலா வருங்க போலத் திருகையான் மாறி யள்ளித்
தணிவற முத்த முண்டாள் சம்புவி னருளை வாழ்த்தி. (கரு)

அள்ளியுண் டிடக்கு ழைந்த வங்குலிச் சுவடு கண்டே
தெள்ளுமெய் யர்க்கு மெய்யன் சிவனலா லுண்டோ வென்று
வள்ளலை யன்பு பூண்ட வல்லியை வியந்தார் யாரு
மொள்ளிழை விழாவுங் கற்பித் தரியன சிறக்கச் செய்தாள். (கசு)

மணமலி பெருமாற் கச்சோ வழகிய தெனலான் மண்மீ
தணிதிரு நாம நின்ற தழகிய பெருமா னென்றே
யுணர்வுளா ரனைத்துஞ் சித்தர் சித்தரென் றொழியா ளாகி
யிணையிலா வடிவத் தோடு மேகினாள் சிவலோ கத்து. (கஎ)

அற்புதன் மேனி கும்பிட் டருளினோர் கணிகை மாதும்
பொற்சிவ லோகத் தியாரும் போற்றவீற் றிருப்பக் கண்ட
ரெற்றரும் பிரமா ணத்தோ டியாவரா யினுமி றைஞ்சி
னற்சிவ லோகத் தின்று நணுகுதற் கைய மின்றே. (கஅ)

ஆகத்திருவிருத்தம் - கஉஅகூ.

---

## சசு.—சோழனைக் கொண்டாழியிற் றாழ்த்த திருவிளையாடல்.

முந்தையோர் காலத் தின்கண் முதுவலித் திறத்தோர் சோழ
னந்தமில் படையான் மிஞ்சி யாயிரம் பரிக்கி யானோர்
வெந்திறற் பரியா னென்று விளம்பியோர் நாமம் பூண்டு
சந்தமா மறைக்கன் பின்றி வாழ்ந்தனன் றனைவி யந்து. (க)

வேறு.

ஆங்கவன் றிசைவிச யஞ்செ யாதர
நீங்கரும் பெருவிளை யாட்டி னெஞ்சுவைத்
தோங்கமுத் திசைமுடி வுலாவி மீண்டியற்
றேங்கிய பெரியதென் றிசையை நோக்கினான். (உ)

மன்னவர் மன்னவன் மாசி றேசுடைக்
கன்னிநன் னாட்டுள்வாழ் கருணைத் தென்னவன்
றன்னைமுன் வெல்லுவான் றானை யோடுசூழ்
பொன்னெயின் மதுரையம் புரத்த ணைந்தனன். (ஙு)

வேறு.

மற்றவ னணைய விப்பால் வழுதிவாழ் சொக்கன் மாட்டுப்
பற்றிய பத்தி பூண்டு படையினை நிந்தை செய்தே
யுற்றகா லத்துத் தெய்வ மலாதிலை யுதவி யென்று
நற்றவர் சொல்வா ரென்று நவின்றுளத் துணர்ந்து தேறி. (ச)

புரவியா யிரமி யானை நூறுபோர் புரியும் வீர
ரொருபதி னாயி ரந்தே ருற்றன வமையு முண்மைக்
கரியகீ லெகாள் வேந்தர்க் கிதொழிந் தளவில் சேனை
பெருமைசா ரணம தல்லாற் பிறிதுவே றில்லை காணின். (௬)

ஈதொழிந் தெமக்கு மிக்க விரும்படை யாளு தற்கோ
ராதர மில்லை நெஞ்ச மமைவுடைத் தான தொண்பூ
மீதிலிச் சேனை கொண்டே வெல்லரும் பகையும் வெல்வே
மேதகுஞ் சொக்குண் டாக வேணுமோ வுயர்ந்த தானை. (௬)

மன்னுநம் மறையுட் பட்ட வான்பொரு டன்னை நோக்கி
மின்னுமிப் படைவா டாமல் வேண்டிப விட்டு நின்ற
பொன்னைநஞ் சொக்க னுக்கும் பூசுரர் தமக்கு மிக்க
வின்னருட் டொண்டர் கட்கு மீயுமி னிரங்க லென்றே. (எ)

இத்தக வமைச்சர் தங்கட் கியம்பவாங் கவர்க டம்முட்
சித்தநன் குற்றி யைந்தார் சிலர்சில ரியைந்தா ரில்லை
பத்திசேர் நிலைமை யோடிப் பகுதியி னடத்திக் கொண்டாங்
கொத்தவெம் படையி னோடு மிருந்தன னுயர்புண் டாக. (அ)

இந்நெறி யிருப்போன் றன்மே லிகல்செய்வா னடைந்த சென்னி
தன்னுடை வலியும் வெற்றித் தலம்புகழ் விருது மிக்க
துன்னிய படையும் வல்ல சூழ்ச்சியுங் கேட்டுச் சற்றுந்
தன்னுள மிளைத்தா னில்லை சங்கர னமக்குண் டென்று. (௯)

வேறு.

உன்னரு மிறைவனுக் குணர்த்து வேமென
மின்னமர் கோபுரம் விண்ட லத்தமர்
பொன்னெயி லாலயத் தணைந்து பொங்கருண்
மன்னிய சொக்கனை வணங்கிச் சொல்லுவான். (௧௦)

வேறு.

புக்கவா யிரம்ப ரிக்கோர் புரவியா ளவன மக்கோ
மிக்கவா யிரம தல்லா லில்லைவெம் புரங்க டந்த
சொக்கனே யடிமை செய்யுங் காரிய மருள்செய் தோன்றத்
திக்கெலாம் வென்று நம்மேற் செம்பிய னடைந்தா னென்றான். (௧௧)

விரிவுடைப் பகைவன் வெய்ய படையையும் விளங்க முன்ன
மொருதனக் குள்ள வைய படையையு முள்ளவாறும்
பொருவிலா னுண்ணி னைத்துப் புறம்புடைத் தீர னாகி
யுரைசெயச் சண்டு விண்மீ துரைசெய்வா னன்பர்க் கன்பன். (௧௨)

மனநல முடைய பத்தி வழுதிகே ணினக்கே நல்லே
மினியநம் முரையைத் தேறி யிளைத்திடா தெதிர்சென் றேறி

நினதுறு படையி னோடு மமர்செய்நீ டுலக வேந்த
ரனைவரு மெச்ச வென்றி தருகுவ மைய மின்றே. (கரு)

விரைவொடு மென்று முன்னம் வேந்தனு லித்தெ ழுந்து
பெரியவ னன்பர்க் கன்பன் பேரருட் டிருவாக் கென்றே
தருமநீ டுரையைச் சேலைத் தலைமிசை முடிந்து கொண்டு
பொருவருந் துதியி னேத்திப் போந்துதன் கோயில் புக்கான். (கச)

வே று.

மற்ற வன்செய லின்ன தன்மையின் மன்னவைர் துதி னத்தியா
முற்றி வெஞ்சமர் செய்வ மென்றுமொ ழிந்து முன்னம டைந்தவக்
கொற்ற வன்றறு கட்பெ ரும்படை கொண்டு மண்டல மசையவே
வெற்றி மாமுர செற்றி யங்கண டர்ந்து வந்தனன் மேலெழ. (கரு)

வளமை யோங்கிய செழிய னுங்கது கண்டு மாறற நீறிடா
வுளந யந்தெதிர் சென்ற ணிந்தன னும்பர் நாதனை நம்பியே
களம்வி ரும்பிய பின்ன ரன்புறு காவ லன்சிறு தானையு
மளவில் வெம்படை யாய்வி ளங்கிய தப்பெ ரும்படை தன்னினும். (கசு)

வே று.

வெந்திறல் பேசி யங்கண் மேவரும் வினைக்க ளத்து
வந்தமர் செய்யுங் காலை மாறனூர் சிறுதா னைக்குச்
சுந்தர னருளால் வெய்ய தொலைவிலா வலிய தானை
முந்துற வாற்ற தாகி முதுகிட்ட தமர்விட் டாங்கு. (கஎ)

என்னுடை விருதை வையத் தியாரறி யார்கொ லென்று
மின்னெழ விழித்து மூல பலத்தொடும் வெகுண்டு கிள்ளி
முன்னெதிர் நடப்பக் கண்டு மொழிந்தது கொண்டெ திர்ந்தே
யென்னையா ளுடையா யென்னப் பொறுத்தில னெங்கு முள்ளான். (கஅ)

வே று.

திருந்தியபொற் பீலிமுடி முடியிற் சாத்தித் திங்களென வெண்ணீற்றுத் திலக மிட்டுக், கருங்களத்து வெண்கவடித் தாமஞ் சேர்த்துக் காதின்க ணிப மருப்புத் தோடு பெய்து, மருங்கெங்கு மயிற்கழுத்து நாற்றி வேங்கை வரித்த ண்டை யுத்தரியம் விளங்க மார்பிற், றருங்கவன மாவேறி நெடுவேல் வாங்கித் தந்தமணித் தொடைபிறங்கத் தாண்ட விட்டான். (கக)

வே று.

விரைவின்வெங் களத்துத் தோன்றி வேட்டுவப் பரியா ளாகித்
திரள்கொளா யிரம்ப ரிக்கோர் திண்டிறற் குதிரை யாணீ
குரைகழ லபயா நூறு குதிரைக்கோர் குதிரை யாள்யான்
பொருவது நினக்கு நன்றோ புகலென நகைத்தெ திர்ந்தான். (உ௦)

வேறு.

சாற்றரு மிடும்பையன் றனைம றைத்துயர்
வேற்றருஞ் செழியன்யா னென்ன வெய்யகால்
போற்றிகழ் கோரமா முகத்துப் போய்ப்புகக்
கூற்றென வெறிந்தனன் கொடிய வேலினை. (உக)

வேறு.

கூசமுன் விட்ட வேல்வாய் குருதிகொப் புளிப்பக் கண்ட
வாசையாள் வளவ னுணி யவனிமீ தொருவ னென்முன்
பூசலென் றெதிர்க்க மாட்டான் புகுமிடம் புகுந்து சேர்ந்து
வாசியோ டென்னை நாடிப் பிடிப்பன்மா வேந்தர் மெச்ச. (உ௨)

விளங்கயா னெனவி ளம்பி மேல்விட வென்றிச் சொக்கன்
றளர்ந்தவர் போன டித்துத் தளர்ந்தமன் னனைமுன் போக்கிக்
களந்தனை விட்டு விட்டுக் கடிதுவென் னிட்டுக் காணத்
துளங்குமா வோடும் போகத் தொடங்கினுன் மதுரை நோக்கி. (உ௩)

தாதகித் தெரியன் மார்பன் றன்விதி வசத்தா லின்று
தீதில்வேற் றுருவங் கொண்டு தென்னவன் புறமிட் டானென்
றுதரித் தவனி கொள்ளா வடிபடை வெள்ளத் தோடுந்
தாய்தகு சிங்க நாதஞ் செய்துபின் றொடர்த லுற்றான். (உ௪)

வம்பவி ழிதழிச் சொக்கன் வன்கன வட்டத் தூங்க
வெம்பரி காட்டிக் காட்டி விளிவுறக் கொண்டு போந்து
நம்புறு நகருண் மேல்பா னுகமீ தளவுந் தாழ்ந்து
பம்புறு மலர்த்த டத்துட் பாய்ந்தன னபயன் காண. (உ௫)

சுந்தர னகையி னேடுந் தூண்டுவெம் பரிமா வோடும்
வந்துபாய் வதன்முன் றீரத் தேறினுன் வருத்த மின்றி
வெந்திறற் சோழன் செல்லும் விசையினிற் குசைதாங் காம
லந்தவொண் டடத்துப் பாய்ந்தா னேறினு னில்லை யாழ்ந்தான். (உ௬)

பண்டாழு மொழியாள் பங்கன் பத்தர்கள் பத்தன் மண்ணிற்
கண்டார்க ளதிச யிப்பக் கடற்பெருஞ் சேனை யோடுந்
தண்டாம வளவன் றன்னைத் தாழ்த்திட வன்று முன்னுக்
கொண்டாழி யென்னு நாமம் பெற்றது குடபா லோடை. (உ௭)

வேறு.

துன்று பல்படைச் சோழனை யாழ்த்திய
கொன்றை மாலைக் குதிரை யிராவுத்தன்
வென்றி நீள்குரல் காட்டி விளங்குபொன்
மன்று ளாலயம் புக்கு மறைந்தனன். (உ௮)

ஒளித்த சென்னிமற் றுய்ந்த படையினைக்
களித்த மன்னவன் கைக்கொண்டு காத்துயி
ரளித்த நாதவென் றாலயத் தெய்தியே
விளித்துக் காட்டினன் மெச்சவ மைச்சர்கள். (உக)

வே று.

மின்னுயிர் கோயின் முற்றும் விளங்குசெம் பொன்னான் மேய்ந்து
பொன்முடி யாடை மற்றும் பூடண முதலா நல்கித்
தென்னவர் கிளைக்கு நல்ல செல்வனே யுய்ந்தே னென்று
பன்முறை யிறைஞ்சி யேத்திப் போந்தனன் பரிவிற் கூடி. (ங0)

ஓதரும் பிரமா ணத்தோர்க் கேதுசெய் திடவொண் ணாது
வேதநன் னெறிகோ டாமல் வழுவின்றி விளங்க நாளு
மாதரஞ் செய்வோர்க் கேது சாதிப்ப வரிதி ரண்டு
ளேதுமொன் றிலாதா ரனரோ விடுக்கணுக் கிரையே யாவார். (ஙக)

தொழுதுதே வர்க்குத் தேவன் சொக்கனை யல்லா வில்லை
பழுதின்மன் னவர்க்கு மன்னன் பாண்டிய னல்லா வில்லை
யழிகலி யுகத்துங் காணி லறுதியீ தென்று கொண்டு
விழுமிய முனித ரெல்லாம் வியந்தன ரெங்கு மென்றும். (ஙஉ)

ஆகத்திருவிருத்தம் - கஙஉக.

---

## சஎ.—திருவாலவாயான திருவிளையாடல்.



முன்னமோர் பிரம கற்ப முடிவினின் முடிவி லாத
செந்நிறப் பரிதி விட்ட தீக்கிர ணங்க ளானு
மின்னிடி மேகம் விட்ட வெங்கொடுந் துளியி னானுந்
தன்னிக ரில்லா மண்ணிற் சராசர மாண்ட வன்றே. (க)

ஒண்சரா சரங்கண் மாண்ட வுலகினை யொலித்தெ ழுந்து
திண்கடல் கொள்ளக் கண்ட செந்தமிழ்ச் சுந்த ரன்றன்
வண்பெருஞ் சமாதி யாலே மண்மகட் குயிராந் தொல்லைப்
பண்புடை யால யத்தைக் காத்தனன் பழுது றாமல். (உ)

ஒன்றிய பெருவெள் ளத்து நடுச்சிதை யாம லோங்கி
நன்றிய வுலகுக் கெல்லாம் படிமமா நலஞ்சேர் வெள்ளி
மன்றுடன் விளங்க லாலே மண்மிசை நகர்க்கு நாம
மன்றுமுன் னடுவூ ரென்று விளங்கிய தமரர் மெச்ச. (ங)

பிரளய காலஞ் சென்று முடிந்தபின் பெருகி வந்த
திரைபொருங் கடலு முன்போற் சேர்ந்துதன் னிலையி னிற்பச்

சுரர்பர னருளால் வையந் தோன்றிடு மடைவின் முன்னோர்
தருமமார் வடிவ மன்னன் ரேன்றினன் சசிகு லத்து. (௪)

தேனலர் நிம்ப மாலைத் தென்னவன் பிரள யத்து
மாநில முழுதுங் குன்ற வடிவுகுன் றாம னின்ற
வீனமி லால யஞ்சே ரிருந்திரு நகரி கண்டு
தானுள மகிழ யித்துத் துதித்தன னருளைச் சால. (௫)

நன்குரு மித்த லத்து நயம்பெற விருப்ப மென்று
தன்குறி யறிவா லாங்கு நகர்செய்து சயமுண் டாக
வின்புறச் சிறிதி யாண்டாண் டிருந்தவ னிடம் பெறுமற்
பின்புதுன் புறப்பு குந்தான் பெருங்குடி நெருங்கக் கண்டு. (௬)

அன்பொடு விளங்கு மெந்தைக் கறிவிப்ப மென்று சென்று
நின்படை வீடு காணி னீள்பெரும் படைவீ டாகு
மன்சிறி தறிவால் வாழு மனிதரு ளறிவா ரில்லை
யின்புற வறிய வல்லா யெல்லையை யுரைத்தி யென்றான். (௭)

பத்தர்கள் பத்தன் பத்தன் பத்தியைக் கண்டு பூண்ட
வுத்தம நாகந் தம்மு ளொருபெரு நாகந் தன்னை
யித்திரு நகரி னெல்லை காட்டெனக் கன்பு பூண்ட
வித்தக மாறற் கென்று விளம்பினன் விளங்க வாங்கு. (௮)

விளம்புமு னெழுந்தி றைஞ்சி வெய்யவென் செலவு சொல்லி
னொளிந்திடு நேர்போ காது பொறுத்தரு ணோர்குன் றூத
விளம்பிறை மவுலி யானே யெனத்திரு வுள்ளம் வாழ்ந்தே
யுளம்படும் விருப்பத் தோடும் புறப்பட்டா னுரக நாதன். (௯)

வாலினைச் சுந்த ரேசன் வலத்திரு மருங்கு வைத்துக்
கோலமா ருடலை நீள நிமிர்த்தெல்லை குன்றா வாறு
சாலமுன் வலம தாகத் தன்னுடைச் செலவி னூற்சூழ்ந்
தாலவாய் வைத்துக் காட்டிற் றிடத்திரு மருங்கி னூங்கு. (௧0

ஓசனை யகல நீள் முத்தரத் திசைபு றம்பாத்
தேசுடைத் தான தந்தத் திருப்பதிக் கெல்லை நாம
மாசற வன்று முன்னு வாலவா யெனவ ழங்க
வாசற வாயை முன்னிட் டாலவா யெனவுஞ் சொன்னார். (௧௧

உளமகிழ்ந் தரவு போன நெறிமிசை யோங்க மன்னன்
வளமதில் கண்டா ராம மறுகுகோ புரந்த டாகங்
கிளரொளி மாடங் கூட மண்டபங் தெருடி மற்று
மளகையம் புரமே யென்ன வாக்கினு னேக்கி யாங்கு. (௧௨

பொருவரு மால யத்தைப் பொன்னினான் மேய்ந்து வேண்டும்
பரிவுசெய் தளவில் வானோர் பணிதிரு வால வாயான்
திருவடி மறவா தங்க ணிருந்தனன் சீரார் பேரூர்
பிரளய காலத் திற்கு முன்னையிற் பிறங்கிற் றன்றே. (கரு)

நன்மறை யோரைப் போற்றி நவையற வறநெ றிக்கண்
முன்வரு மன்னர் மன்னன் முறைமையான் மனுவே யென்ன
மன்னுல கனைத்துஞ் செங்கோல் செலுத்தவு மன்றி ருக்காற்
பின்னரும் பதிபை நல்லோர் பெயர்திரு முடங்க லென்றார். (கச)

உருகாத நீசராயினும்...........ஆணையால். [இச்செய்யுளின் முழுப் பாகத்தை ரு - ம் பக்கத்திற்பார்க்க.]

ஆகத்திருவிருத்தம் - கருரு.

---

## சஅ.—வரகுணனுக்குச் சிவலோகங்காட்டின திருவிளையாடல்.

இதமுற முன்னோர் கால மிருநில மடைவிற் காத்துச்
சுதையெயின் மதுரை தன்னுட் சுந்தரற் கன்ப பூண்டு
முதுவலி கூர்ந்து வாழ்ந்தான் முரசொடுந் தானை சூழ
மதிகுல திலக னாய வரகுண னென்பான் மன்னோ. (க)

ஆங்கவ னொருகால் வேட்டை யாடுவான் கவச முன்னா
வோங்குபல் கலன்கள் பூண்டு போகிவெவ் வனத்து லாவிப்
பாங்குறு மாக்க ளோடு பகலொழித் துழையை நோக்கி
நீங்கரும் விரைவிற் கூடி நிசியிடை மீண்ட காலே. (உ)

மின்னும்வெம் புரவி நோன்றாள் விசையினிற் றுகையுண் டாங்கே
மன்னிமுன் விதிவ சத்தால் வழியிடைக் கிடந்து றங்கு
நன்னெறி மறையோ னொந்து நாவெழக் குழறி யாற்றா
தின்னுயிர் விட்டான் விட்ட தறிந்தில னினிய தென்னன். (ங)

வேறு.

உன்னான் மறையோ னுயிர்விட் டனனிங்
கென்னாமிதுவென் றறியே மினியாய்
நன்னீ தியனே நந்தா வருள்சேர்
மன்னா முறையோ வென்றார் மறையோர். (ச)

அந்நான் முதலா வறநீ தியின்வாழ்
முன்னா வலவா முறையோ முறையோ
தென்னா முறையோ செழியா முறையோ
மன்னா முறையோ வென்றார் மறையோர். (ரு)

வேறு.

வெறிகமழ் தாரான் கேட்டு வாயிலில் விடியு முன்னர்
முறையிடு வானே னென்ன வேவினன் முறைசெய் வோர்கண்
மறையவர் தமைவ ணங்கி மரித்தவற் கினிய செய்வா
னுறுபொரு ளல்கி மீண்டாங் குரைத்தவா றுரைப்பார் மெல்ல. (௬)

னென்னனின் குதிரைத் தாளி னெறியிடைக் கிடந்தோர் பார்ப்பான்
முன்னுற விறந்தா னென்று முறையிட்டார் மறையோர் விம்மி
யென்னுமுன் றென்ன னேங்கா வென்னிது விளைந்த தென்று
மின்னெழ விழுவன் சோர்வன் விதிவச மிதுவோ வென்பான். (௭)

அந்தண ரமைச்சர் நீங்காப் புரோகித ரதுகண் டஞ்சிச்
சிந்தையா குலமி தற்குத் தீர்வையன் றபாயத் தான்மேல்
வந்தவிப் பிரம கத்தி யுபாயத்தான் மாறும் வேதச்
சந்தைக ளறைந்த வாற்றாற் றணிப்பதே தரும மாகும். (௮)

பொன்பரி திலமி யானை தாதியர் புவிபே ரில்ல
முன்பெருங் கொடித்தேர் கன்னி பசுவென மொழிந்த பத்து
நன்பெருந் தான மாக நல்கிமா முனிவர் தம்மை
யின்புறு தலத்தி லேற்றி யினியசெய் திறைஞ்சி யேத்தே. (௯)

அன்றியும் விசேட மிக்க வகமரு டணங்க ளான
வென்றிமந் திரங்கள் கொண்டு விழுமிய குருக்க டம்மா
லின்றுய ரோமஞ் செய்வித் திடந்தொறுந் தண்ணி ணீர்வைத்
தொன்றிய வதிதி கட்கு முணவுநல் கெனவி தித்தார். (௧௦)

ஆங்கவர் விதித்த தூய வருமறைத் திறத்தி னுள்ள
வோங்கிய வறம்பி றங்க வொல்லையிற் செய்த பின்னும்
பாங்குறு பிரம சாயை பழுதறு குணத்தான் மிக்க
தேங்கம ழலங்கன் மார்பச் செழியனை விட்ட தில்லை. (௧௧)

எரிந்தசெங் குஞ்சி வெண்பற் கருநிறத் துடனி ருப்பப்
பெருந்தடி யதிர வூன்றிப் பின்றொடர்ந் துணைவு முன்னுப்
பொருந்திய கைக்கொண் டஞ்சப் பூணித்துப் பற்க டித்துத்
திரிந்தது பிரம சாயை சிரித்தவி னயங்கள் காட்டி. (௧௨)

அப்பெருந் துன்பந் தன்னு லலைந்துட றளர்ந்த மூங்கிச்
செப்பரும் பயத்தி னோடென் செய்வமென் றிருப்ப விப்பாற்
றுப்பமர் திறத்தோர் சோழன் றொகுபெரும் படையி னோடு
மிப்பொழு திவனை வெல்லக் காலமென் றெண்ணி வந்தான். (௧௩)

ஆங்கது கண்ட தென்ன னுலயத் தணைந்து சென்னி
பாங்குற வடைந்தான் செய்வ துரையெனப் பரவுங் காலைத்

தூங்கிடா தெதிர்சென் றோட்டிச் சோழனாட் டேகி யேகாத்
தீங்கொழித் தெய்தென் றீசன் விண்மிசைச் செப்பத் தேறி. (௧௪)

வேறு.

இந்து நாயிறு தாரகை வந்திளைப் பாறுஞ்
சந்து மேவிய தண்டலை மதுரையம் புரத்து
வந்த தெவ்வின்மேல் வலம்படு படையொடு மெதிர்சென்
றந்த மெய்யொடும் பொருதன னவன்வலி தொலைய. (௧௫)

மற்று நேரொவ்வா வரகுணன் பெருவலி வளவன்
றுற்று சேனையுஞ் சுந்தர னருளினாற் றொலைத்து
வெற்றி பூண்டபின் மகிழ்ந்தவன் மேதகு நாடுங்
கொற்ற மேன்மையுங் கொண்டனன் மண்டல மதிக்க. (௧௬)

பொன்னி நாட்டிய ராலயம் போற்றுவ மென்றே
மன்னு மாலய முள்ளன வணங்கிமுன் வருங்கா
லின்ன றீருவா னிருடிக ளமரர்க ளிறைஞ்சுஞ்
செந்நெ னீள்வயற் றிருவிடை மருதிடை யடைந்தான். (௧௭)

ஆதி நாதனை யன்பொடு வணங்குவான் விரும்பிச்
சோதி யாலயத் தணுகுமுன் றொழுதுவிட் டஞ்சி
நீதி வாயிலினின்றது நீண்மதிற் புறத்தாங்
கேத மேதர வருந்திற விரும்பிர மகத்தி. (௧௮)

வெய்ய சாயைவிட் டகன்றபின் வினைவினுட் புகுந்து
நொய்ய மேனியு நோக்கருங் குளிர்ச்சியுங் கண்டே
யைய னேயருள் வாரியே யடைந்தவர் துணையே
தையல் பாகனே சரண்சரண் சரணெனத் துதித்தான். (௧௯)

வேறு.

வெம்பெருந் துயரா லிந்நாண் மெலிந்தன னென்மேல்வா ராம
லெம்பிரான் காத்தல் வேண்டு மின்றுனை யடைந்தே னென்று
செம்பொன்வேண் டுபவ ழுங்கிச் செய்யதாள் பரவி நிற்ப
வும்பர்கோன் றிருவாக் கங்க ணோங்கிய துயர்வா னத்து. (௨௦)

வேண்டிய தருமெம் மாட்டும் விசேடித்து மறையோர் மாட்டும்
பாண்டியர் தலைவா வென்றும் பரிவுளை யாயி ருப்ப
வீண்டிமுன் வினைவ சத்தா லேறிய பிரம சாயை
பூண்டவிங் குன்னை விட்டுப் போனது போன தின்றே. (௨௧)

என்றுகொண் டிலங்கத் தேறி யிறைஞ்சிய மன்னன் முன்ன
ரொன்றிய பயத்தால் வேறோர் வாயிலாற் போந்தாங் கோங்கப்
பொன்றிகழ் தருவி மானப் புரிசைசெய் தகர மேற்றி
நன்றிகொ டேவ தான நல்கியாங் கிருக்கு நாளில். (௨௨)

மிஞ்சிடை மருதர் கோயிற் பதக்கணம் வரும்வீ திக்க
ணஞ்சிநாய்க் கட்டங் கண்டீ தெடுத்தவர்க் கவனி பாதி
நெஞ்சினாற் கொடுப்ப லென்றே நினைந்தன னெடுப்பக் காணான்
பஞ்சவன் பகுதி யில்லென் றெடுத்தனன் பரிவட் டத்தால். (௨௩)

தேம்படு பழனஞ் சூழ்ந்த திருவிடை மருதி னெல்லைப்
பாம்பொடு மதியஞ் சூடும் பரமனா ருருவ மென்னக்
காம்பவிழ்ந் துதிர்ந்த செய்ய கனியுருக் கண்டாங் கெல்லாம்
வேம்புகட் குயர்வி மானஞ் சாத்தினான் வேந்தர் வேந்தன். (௨௪)

பரிந்திடை மருதர் நன்னீ ராடமுன் பரப்பு மெள்ளைக்
கரந்தொரு கள்ளன் றின்னக் கண்டவர் கொடுசெ லுங்கா
லருந்திய தென்னை யென்ன வரன்றமர்க் கடிமை யாக
வரும்பிற வியின்க ணென்றான் மன்னவ னயின்றான் வாங்கி. (௨௫)

சோதிசேர் மருதர் தேர்போம் வீதியிற் றொழுவான்செல்லும்
போதின்முன் கிடந்த பொல்லாப் புன்றலை யோடு கண்டு
நாதவித் தலைபோ லென்றனாய்த்தலை யோடு மிந்த
வீதியிற் கிடக்க வென்றே மிலைந்தன னிலங்கு தென்னன். (௨௬)

கள்ளனைக் கட்டிச் செல்லுங் காலையிற் கள்ள னிமத்
தெள்ளிய நீற்றின் வீழ்ந்து சிரித்தர கரவென் றெய்த
வுள்ளம்வாழ்ந் தெதிர்கொள் வேந்தன் விடும்விடு முயர்பாண்மிக்க
வெள்ளைக் கள்ள ரென்றோ விளம்புவ தெனப்ப ணிந்தான். (௨௭)

தேடருஞ் சிறப்பின் மிக்க திருவிடை மருதி னெல்லைக்
காடிடை நரிகள் விட்ட கடுங்குர லோசை சேட்டுப்
பீடுடை யிறைவன் றன்னைப் பேசரும் விருப்பத் தோடும்
பாடிய வென்று தென்னன் பல்பெரும் படாங்கொ டுத்தான். (௨௮)

நேசமார் தேவி தன்னை நின்னுடை யடிமைக் காமென்
றாசைகூர்ந் தளித்தவ் வேந்த னாலயிற் றவளை பல்காற்
றேசுற வொலிப்பக் கேட்டுச் சிவனையே பாடிற் றென்று
காசொடு பொன்னு மின்னக் கலந்தது விளங்க சிந்து. (௨௯)

இன்னன பலவுஞ் செய்தவ் வெல்லையைத் தொழுது போந்து
கன்னிநா டடைந்து கூடற் கடவுளா லயத்துப் புக்குச்
சென்னிநாட் டுளவி சேடஞ் செப்பிடக் கருணைச் சொக்கன்
முன்னுற விசும்பிற் றேற மொழிந்தன னறிந்தோ மென்று. (௩௰)

மன்னவன் கேட்டுச் சால மனமகிழ்ந் திறைஞ்சி வேண்டும்
பொன்னணி யாடை நல்கிப் பொலிவொடும் போந்தி லங்குந்

தன்னுழை யிருந்து வேதந் தருமநூல் சிவபு ராண
நன்னெறி யடக மங்க ளனைத்து மோதுங் கேட்கப் புக்கான் (௩௧)

ஓதரு முலகுக் கெல்லா முயர்ந்துள துணர்வுக் கெட்டா
வாதிநா யகனி ருக்கு மருஞ்சிவ லோக மென்று
வேதநூல் விளம்பக் கேட்ட வேந்தர்புங் கவனு மிக்க
காதல்கூர்ந் ததனைத் தன்னான் கண்ணிணற் காண்பான் வேட்டு. (௩௨)

நீணய வடியார் தங்க ளினைவினை முடிக்க வல்லான்
மாணெழிற் சொக்க னல்லால் வல்லவ ரில்லென் றெண்ணிச்
சேணுய ரால யத்துச் சென்றருட் டேவே நின்றன்
காணரு முலகங் காண்பான் கருதுகின் றதுக ருத்தே. (௩௩)

வேறு.

நின்றம ரடியனே னினைவு தீரவே
யொன்றிய வுகங்கலி யுகம தாயினு
மின்றிசழ் பெருஞ்சிவ லோக மேம்பட
வின்றுகாட் டாயெனி னிறப்ப லென்னுமுன். (௩௪)

குளிர்ந்தருள் புரிபவன் கோடி நாயிறு
கிளர்ந்தன வெனவிடு கிரணம் வானெழ
விளங்கிய வொளிவளர் விமான மெங்கணுந்
துளங்கிய வுலகினைத் துலங்கக் காட்டினன். (௩௫)

நடநவி றும்புரு நார தாதிகள்
படிபுகழ் துந்துபி யார்த்துப் பாடினர்
சுடர்விடு கற்பக மலர்க ளேவியே
வடிவுடை யரம்பையர் வாழ்த்தெ டுத்தனர் (௩௬)

விண்ணுல கெவற்றினு மேல தாகிய
நண்ணரு முலகமு நண்ணக் கண்டனி
ரெண்ணிய மதுரையை யொப்ப தேதிறை
கண்ணுறி லெதுமுடி யாத காரியம். (௩௭)

வேறு.

இருகரங் குவித்தி றைஞ்சி யெழுந்தெழுந் தருளா னந்தத்
திரைபொருங் கடலு ளாடித் திளைத்தனன் கண்ட தென்னன்
விரைநறு மலர்சொ ரிந்து வெண்பொரி சிந்தித் தொண்ட
ரரகர வென்று துள்ளி யார்த்தன ரதிச யித்தே. (௩௮)

நெறிப்படக் கண்டு ளங்க ணிறைந்தன நிறைந்த வெந்தாய்
மறைத்திடு மறைத்தி டென்ன மனோகர வுலக மங்க

ணிறைப்பொழு திடைவா னுச்சி மறைந்திட விறைஞ்சி மண்ணோர்
சிறப்பொடுந் துதித்தார் சொக்கன் றிருவிளை யாடல் கண்டு. (நகூ)

மறுவறு தென்ன னுண்டென் றேகிவந் திராம னைக்க
ணறிவுறு புதல்வன் றன்னை யிழந்ததன் மனைவி யாற்று
துறைதரு கிணற்றில் வீழ வுதவிய மறையோன் றன்னை
யிறையினில் வெட்ட முட்ட வெழுந்ததென் பாரு முண்டால். (சo)

உறுபிர மகத்தி யாலே யூண்முதற் சுகங்க ளான
பிறவெலா மொழிந்த மன்னன் வரகுணன் பெருந்துன் பத்தை
யிறையினின் மாற்றிக் காணு வினியதன் னுலகங் காட்டு
மறைநெறி குலவு மால வாயனை வாழ்த்தல் செய்வாம். (சக)

ஆகத்திருவிருத்தம் - கநஎசு.

## சக.—விடைக்குறியம்பெய்த திருவிளையாடல்.

வரகுண மன்ன வற்கு மனமகிழ் மைந்தன் வென்றிப்
பொருவிலா வறிவி னோர் பூழியன் மதுரை தன்னுட்
சுராடி பரவு மேன்மைச் சொக்கனுக் கன்பு பூண்டே
யுரனொடும் வாழ்ந்தான் முன்ன முலகினை யடைவிற் காத்து. (க)

நம்புற வாழ்வோன் றன்மே னவையிலா வறிவான் மிக்க
செம்பிய னொருவன் பேசித் தெறுங்கரு நாடர்க் கூட்டி
வெம்பெரும் படையி னோடும் வினைசெய்வா னடைந்தா னுரு
மும்பர்சூழ் மதுரா மூதூ ரோசனை யென்ன வாங்கு. (உ)

வேறு.

தடங்களை யுடைத்து மானிரை கவர்ந்துந் தானிய நனுகிடா வாறு
தொடர்ந்ததர் மறித்தும் பொழில்களைச் சிதைத்துஞ் சூழ்தரு பலகுடி நடுங்க
வடர்ந்திடை விடாம லிகல்செயக் கண்டாண் டனையவுஞ் சுருங்கவாற் றுது
மடங்கலை யனைய வபேந்திறன் மாற னமைச்சரை வரவழைத் துரைப்பான். ()

புத்திரன் குள்ளீ ரென்செய்கேம் வேறு புகலிலை யிரவொடு பகலு
மெத்திய படையால் வரும்பெருஞ் சோழன் மேலெழ வினைசெயா நின்று
னொத்துடன் பொருதற் கிரும்படை யில்லை யொல்லைநம் மாலவாய் மெய்ய
னத்தியன் றெய்த சேவகன் றனக்கின் றடைக்கலம் புகுவமென் றறைந்தான்.

நின்றது சொல்லக் கண்டமந் திரிக ணிலைமைகண் டிசையித் தேத்தத்
தென்றல்வந் துலவுங் கோயிலட் டாலைச் சேவகன் சந்நிதி யடைந்து
வென்றிசேர் வீர செம்பொன்மா மன்ற வெள்ளியம் பலவநீ புகலென்
றொன்றிய வடியார் தந்துயர் தீர்க்கு மொருவகே ளடிமைவின் னப்பம். (ங)

பின்னமில் குணஞ்சே ரெந்தையு மடியேன் பேதையாம் யாண்டினி னினது
மன்னிய வுலகத் தடைந்தனன் கிடந்த வரைபுரை காஞ்சன மனைத்து
மன்னிய ஞாதி கொள்ளலா விளைத்தே னடைந்தனன் பெரும்படை யபய
னின்னுடைப் பதிக்கோர் தாழ்வுறி னினக்கே தாழ்வது நிச்சய மீதால். (சு)

அற்றவர்க் குற்ற சிவனென நின்னை யறைகுவ ரடைக்கல முனக்கே
மற்றொரு பற்று மில்லையென் பதனை யறிந்தனை மாசற நாடிக்
கற்பனை யொழிப்பாய் நீயலா லுண்டோ காத்தருள் காத்தருளென்று
கொற்றவ னிறைஞ்சி நின்றனன் சாலக் குறைந்துகண் ணிறைந்தநீர் ததும்ப.

நிருபகே ளஞ்ச னிலைமையை விடாது நின்னுள படையொடு மெதிர்சென்
றுரனொடு மமர்செய் விரைவுடன் யாம்வந் துதவுவ முதவுவ மென்றென்
றிருநில மன்னன் செவிப்புல நிறைய யாவருந் தெளிவுற வங்கண்
வரமலி விசும்பிற் பிறங்கிட வருளான் மலர்ந்தது பெருந்திரு வாக்கு. (அ)

அவ்வுரை கேட்டு முனமகிழ்ந் திறைஞ்சி யதிசய மனத்தொடும் போந்து
மெய்யிடு கவசம் பூதியென் றிட்டு மேதகு நாமமுச் சரித்துச்
செவ்விய நெறிசேர் பல்சிறப் புறுந்தன் சிறுபடை தன்னொடும் விரைவிற்
பௌவநேர் படைமுன் சென்றெதி ரணிந்தான் பத்திசேர் பார்த்திபர் தலைவன்.

வறுவிய படையூ னெதிர்வதே யென்று வருபெரு நேரிபன் சீறித்
திறமுடைச் செழியன் வெருவுற வடர்த்துச் சிங்கநா தஞ்செயச் செழியன்
நிறைதரு கருணைப் பெருமைய வெங்கு நிறைந்தவ நிறைந்தவ வெனுமுன்
றுறைபடு மிறைவ னுதவின னிரங்கித் தும்மினர் சிவாயபோற் றொடர்ந்து.

பொருவில்வில் லாளாய்த் தோன்றிமுன் னிளைத்த பூழியன் சரிபடை நடுவு
தெரிவுற நின்று விடையிணைப் பொறித்தோர் திண்டிற வேலினை யேவக்
கரிபரி படர்ந்த படையுட றுணிந்து களத்திடைக் களத்திடை விழக்கண்
டெனுடை வளவ னறிஞரு தலினு ளத்ததி சயத்தொடு முரைப்பான். (கக)

துப்பமர் மெய்ய ரொப்பிலா வறஞ்சேர் சொக்கநா யகன்பெருஞ் செய்தி
செப்பிடற் பத்த ரளவினிற் காம தேனுவென் றியாவரு மறைவர்
மெய்ப்பட விவனு மவனைமுன் னிட்டே வென்றனன் மற்றியார் வெல்வார்
தப்பில யிவன்றன் றந்தையன் றனக்கு முதவினன் றுரணியியப்ப. (கஉ)

விடைக்குறி யம்பொன் றளப்பருஞ் சேனை விழத்தனி துளைத்தது களத்
துத், தொடைச்செயல் கண்டீர் மனிதரோ வல்லர் சொக்கனென் றுணரு
மின் றெளிய, வடர்த்தறி வின்றிப் பொருவமேல் யாமு மடிகுவம் விடைத
ரப் பெற்றோம், படைத்தொழில் வேண்டா நமக்கெனப் பிழைத்த படைக்கு
ளந் தெளிவுறப் பகர்ந்தான். (கங)

சேட்டவெஞ் சேனைத் தலைவர்தாழ்ந் திறைஞ்சிக் கிளர்ந்தவெங் கொடு
ம்பகைப் படைக, ளோட்டிய தானை வீரனே யாராய்ந் துரைத்தவா றெருக்கு

மென் றுவந்து, நாட்டெயர் படையை மீட்டிட வங்க ணணுகிய காரிய முண ரா, வேட்டுவர் யவனர் கருநடர் முதலா வேற்றுருத் தானையர் வெகுண்டு. ()

ஒள்ளிய இள்ளி தன்னுளம் விளிய வுறுபடைக் கஞ்சினை யென்று
தள்ளிமுன் சொல்லிச் செல்லமுன் கண்டு தனக்குவந் துதவுபே ராண்மைத்
தெள்ளிய வில்லி யழகனட் டாலேச் சேவகன் றனையுளத் திருத்தித்
துள்ளிமுன் சிங்கநாதமுஞ் செய்து தோன்றினன் வென்றுயர் செழியன்.(கஉ)

வேறு.

துன்றமர் தெரியா தென்று சுந்தரன் முன்போற் றோன்றி
வன்றிற லிடப மிட்ட வாளியை யேவ வாளி
யொன்றள விலாத தாகித் துணித்ததாங் குறுக ளத்து
வென்றிகள் பேசி வந்த வெந்திறற் றனை வீழ. (கசு)

வேறு.

தரமுற்றெதிர் வரும்வெற்றிகொ டனிவீரர்கள் வலிகூர்
சிரமற்றன புயமற்றன வதுவோதிறன் முகமோ
டுரமற்றன குரமற்றன வுடலற்றன துரகங்
கரமற்றன சரணற்றன களமற்றன விப்மே. (கஎ)

வேறு.

நெற்றியிற் பாய்கோ ணேக்கு வித்தைகாட் டுநரை நேரு
முற்றவாய் தைத்த வாளி யொத்தையூ துநரை யேய்க்கு
முற்றுமெய் புகுந்த பாண முட்பன்றி நிகரு மூடிச்
சற்றிடை விடாது பெய்த சரமழை தன்னி லன்றே. (கஅ)

திரைபடுங் குருதி வெள்ளச் செங்கொடுங் கடலு ளாடிப்
பெரியவான் முகடு தோயும் பிணப்பெருங் குன்றத் தேறிப்
பொருவருங் கணங்கள் கூளி பூதசா லங்கண் மற்றும்
வரிசையி னாடிப் பாடி யிருந்தன மண்ட வுண்டு. (கக)

பெருமைசேர் சென்னி பின்னும் பிணம்படக் கொன்று வீழ்த்த
சரமுகத் திடபங் கண்டு தன்னுளத் ததிச யித்திங்
கரனயந் திருப்ப வெல்வா ராரென விரைவின் வாங்கி
முரணுறு பிழைத்த சேனை பின்வர முன்னர்ப் போனான். (உ0)

நலங்கொள்பே ராண்மை வில்லி நயந்துயர் கோயின் மேவ
வலந்தரு மன்னன் கண்டு மகிழ்ச்சிமாக் கடலின் மூழ்கிக்
கலந்துபோ காது நின்ற கருநடர் முதலோர்க் கூட்டித்
தலம்புக ழால யத்துச் சார்ந்தனன் பரவ யாரும். (உக)

வேறு.

இந்து மன்னர் குலத்துக் கிறைவன்
சுந்த ரன்னல துண்டோ வெனச்சொலி

மூர்த்த வேண்டுப நல்கி முறைமையிற்
பந்த நீங்க வணங்கினன் பன்முறை. (உ௨).

வேறு.

திருமதிற் புடையட் டாலச் சேவகன் றன்னை யன்பிற்
பொருவரு மமைச்ச ரெல்லாம் புகழ்ந்ததி சயித்தார் போற்றி
வரகுணன் மைந்த னென்று வந்தித்தா னன்று முன்னுப்
பரவுபாண் டியர்க ளெல்லாம் வந்தித்தார் பகைக டீர. (உ௩)

செழுமைசேர் புரத்தி ருந்து சென்னிமண் டலமே யன்றி
யழகுறு நிலைமை மாற னளவின்மண் டலங்கள் கொண்டு
விழுமிய யானை முன்னு வெம்பெருந் தானை யாண்டு
தொழுபுவி யடைவிற் காத்துத் துயரொழிந் தூழி வாழ்ந்தான். (உ௪)

ஆகத்திருவிருத்தம் - க௪௦௦.

## ரு௦.—உலவாக்கோட்டை வைத்த திருவிளையாடல்.

மூதுரை வாணர் போற்று மதுரையம் பதியின் முன்னந்
தூய்தரு குணத்தான் மிக்க சூத்திர குலத்தோர் பத்தன்
றீதிலா வுழவான் மல்குஞ் செல்வத்தான் மிகவு நீடிக்
காதல்கூர் நினைவின் மேவுங் காதலி யோடும் வாழ்ந்தான். (க)

பூதிசா தனங்கண் டாலங் கியாவரா யினும்பொ ருந்திப்
பாதநே ரிறைஞ்சி யில்லுட் பரிவொடுங் கொண்டு புக்குத்
தீதிலா சனத்தி ருத்திச் சிறந்தசே வடிவி ளக்கிக்
கோதைதூ பாதி மற்றுங் கொடுத்தருச் சனைகள் செய்து. (உ)

முருகெழ வமைத்த வன்ன முறைமையிற் படைத்து நான்கு
மருவிய விதத்தி னாறு சுவையினுண் மகிழ்ச்சி கூரக்
கருதினின் றமுது செய்வித் தவரவர் கசிந்து வைத்த
பரிகல சேட முண்டு வாழுவன் பத்தி கூர்ந்து. (௩)

உருத்தகு மனைவி யோடு மொருவழிப் பட்ட நெஞ்ச
னிரைத்தெழு தொண்டர் கொண்ட நினைவினிற் பூசை செய்யுஞ்
சரித்திரங் கண்டு நாளுஞ் சம்புவுங் கருணை கூர்ந்து
திருத்தகு மங்க யற்கட் டேமொழிக் கருளிச் செய்வான். (௪)

இந்நெறி யொழுகு வோனல் குரவினு மினிமை கூர்ந்து
மன்னுமிச் செய்தி செய்ய வல்லனென் றறிவித் தற்கே
நன்னெறிச் செல்வ மெல்லா நாடொறு மாற்றி மற்றும்
பன்னெறி விளைவுங் குன்றப் பண்ணின னெல்லாம் வல்லான். (௫)

பல்பெருஞ் செல்வ மெல்லாஞ் சுருங்கவும் பத்தி மிக்கோன்
சொல்லரும் பெரிய நெஞ்சஞ் சுருங்கிடான் பெருங்க டன்கள்
செல்வர்பால் வருபோ கத்துத் தருகுவ லென்று சென்று
நல்லன சொல்லி வாங்கி நாடொறும் பூசை செய்தான். (சு)

வீறுசான் மழைம றுத்து விளைதலில் லாமை யாலே
மாறரும் விருப்பத் தோடும் வாங்கிய பெருங்க டன்கள்
கூறிய நாட்க டம்மிற் கொடாதது கண்டி யாரும்
பேறிலை யென்றுங் கெண்ணிக் கொடுத்திலர் கடன்கள் பின்னர். (எ)

களக்கமில் லாதோன் மண்ணிற் கடன்கொடா ததுகண் டாரு
துளத்துறு துயரத் தோடுங் கடன்றரு வாரை யோங்கல்
வளைத்தவன் காட்டி னேனற் காண்கின்றே மென்று வாடி
யிளைத்தயர் மனைவி யோடு மெண்ணியா லயத்த டைந்தான். (அ)

வேறு.

ஆத ரத்தொடு பேணி நின்னடி யாரை முன்னயில் வித்தபின்
கோதி லாதவர் வைத்த சேட.ம ருந்தி யோர்குறை வின்றியெப்
போது நின்னரு ளேக்கி நான்முனி ருந்த னன்புகழ் குன்றவே
வாதை யேதரு மாய மாமிடி வந்த டைந்தத றிந்திலேன். (கூ)

வேறு.

நினைப்பினிங் கிறுத்தற் கொண்ணு நீள்கடன் கொண்டு பின்னு
மனைக்கணு லாறு திங்கண் மன்னநின் னருளி னாலே
யனைத்துப் சாரத் தோடு மமுது செய் வித்தேன் வையத்
தினிக்கடன் றருவா ரில்லை யிளைத்தனன் காட்டி டின்றே. (௧௦)

கடந்தரு வாரை யொல்லைக் காட்டிடா யாயி னிங்கே
மடிந்திட லல்லான் மற்றோர் கதியில்லை யென்று மண்ணிற்
படிந்துவீழ்ந் தழுது விம்மிப் பழிச்சுதல் கண்டி ரங்கி
யிடும்பைநீக் கிடுவா னங்க ணிலங்கிய துயர்ந்த வாக்கு. (௧௧)

வேறு.

தொல்லுலகி னம்மடியார்க் கன்பு செய்த சூத்திரகு ளாமணிகே ணின்னைப் போனின், மெல்லியலா டன்னைப்போற் கண்டே மில்லை மெல்லியதா யடுசோறு பொலிய வற்றாய்க், கல்லிலதாய் வெள்ளியதாய்ப் புதிதாய் நல்ல கந்தமலி பந்தமுறு மரிசிக் கோட்டை, நல்லவர்க ளதிசயிப்ப நின்னி டத்து நணுகுவித்தே நல்குரவு நீங்க வென்றே. (௧௨)

அப்பெருமை தருமுலவாக் கோட்டை தன்னை யருச்சனைசெய் தரிவை யொடு நினக்கு வேண்டு, மொப்பருந்தண் டலமெடுத்தொண் டொண்டர்க் கெல்லா மூட்டுவித்து நயந்தபொருள் விற்றுண் டாக்கித், தப்பறமற் றுயர்ந்

தபெருந் தருமஞ்செய்து தணியாத பெருங்கடன்க டணித்து வாடா, திப்படி யில் வேதஞ்சொ லியாண்டும் வாழ்ந்தாண் டிருந்துவா நம்முலகத் தெவரும் போற்ற. (கங)

## வேறு.

அவ்வுரை கேளா முன்ன ராதரங் கூர்ந்து வாழ்ந்து
கொவ்வையங் கனிவாய் மாதுங் கும்பிடு மன்பன் றானு
மெய்விதிர்ப் போடு நின்று மிகவதி சயித்துச் செங்கை
நவ்விய னருளை வாழ்த்தி நடமொடு தொழுது போந்தார். (கச)

வணங்கியே தொண்டர் தன்று மனைபுகா நேர்தாங் கண்டாங்
கணைந்தபே ரார்வத் தோடு மதிசயித் துள்ள ரங்கிற்
பணிந்துய ராசனத்துப் பற்றிவைத் தருச்சித் துள்ளத்
துணர்ந்துசெல் வத்தின் வாழ்ந்தா ருறைத்தவா றடைவிற்செய்து. (கரு)

மன்னிய செய்தி கேட்ட மதுரையம் பதியோ ரெல்லாந்
துன்னிய செல்வ மீந்த தொலைவிலாக் கோட்டை கண்டு
முன்னுற வதிச யித்து வாழ்த்தினர் முற்றும் வல்ல
செந்நெறிச் சொக்க னல்லாற் றெய்வம்வே றுண்டோ வென்றே. (கசு)

சூத்திரர் தலைவன் வேதஞ் சொல்லுநல் லியாண்டும் புக்குக்
கோத்திர மனைவி யோடுங் குவலயத் தெவருங் காணப்
பார்த்திப ரதிச யிப்பப் பல்பெருஞ் சிறப்பி னோங்கி
யேத்தருஞ் சிவலோ கத்தி லேறினு னிமையோ ரேத்த. (கஎ)

பத்தியான் மிக்க வேளாண் டலைவன்றன் பத்தி காண்பா
னத்துயர் மிடியை யேவி யம்மிடி யினும வன்றன்
சத்திய பத்தி கண்டு தண்டுல வுலவாக் கோட்டை
வைத்தவ னெவன வன்றன் மலரடி வாழ்த்தல் செய்வாம். (கஅ)

ஆகத்திருவிருத்தம் - கசகஅ.

# ருக.—மூர்த்தியார்க்கு அரசளித்த திருவிளையாடல்.



வளமை நீடிய மதுரையின் முன்னொரு கால
மளவி லன்புடை மூர்த்தியென் றறையுமோர் வணிகர்
தளர்வில் சுந்தரற் கானது சந்தன மென்றே
யுளவி ருப்பொடு சாத்துவா ரொழிவற நாளும். (க)

துன்னு சேனையிற் றுளங்கிய வொருகரு நாட
மன்ன னன்னாள் வந்தருட் டென்னனை யோட்டிக்

கன்னி மண்டலங் கொண்டமன் கையர்கை விழுந்து
முன்ன நீடிய வைதிக முறைமையு மொழித்தான். (உ)

சாற்று மீசனை யல்லது சமணரை வணிகர்
போற்றி டாதது கண்டுதன் புண்ணிய முடிவால்
வேற்று ளோர்களுஞ் சந்தனம் விற்றிடா வாறு
மாற்றி முன்னது வரும்பெருந் துறைகளு மடைத்தான். (ங)

மிறைகள் செய்யவும் விடாதவ ராங்கது கண்டு
பறித லைச்சமண் பாதகன் மாண்டயர் வேத
நெறிவி ளங்குவ தென்றுகொ லென்றுணர்ந் தொருநாள்
வெறிகொள் சந்தனந் தேடினர் பகலெலா மெலிந்து. (ச)

எங்கு முன்கிடை யாதது கண்டிருட் போதிற்
றுங்க ருமபயத் தோடிறை கோயிலுட் சார்ந்து
தேங்கொள் சந்தன முட்டிய தாயினுந் தேய்க்கு
மோங்கு செங்கையு முட்டுமோ வென்றுறத் தேய்த்தார். (ரு)

வட்டப் பாறையின் முழங்கையை மணங்கொள்சந் தனமா
முட்டப் பாடற மூளையுஞ் சோரியுஞ் சோர
விட்டுத் தோறசை தேய்வுறத் தேய்க்குமுன் விரைவிற்
கிட்டிச் சார்வுறக் கிளர்ந்தது பரன்றிரு வாக்கு. (சு)

வேறு.

அரியசந் தனம ணிந்தே மையனே விடுவி டன்பிற்
பெருமைகண் டனஞ்ச லஞ்செய் பேரமண் குண்டர் மன்ன
னிரவிடை மாள்வன் வேந்தா யிவ்வுல கடைவிற் காத்து
மருவிய பணியுஞ் செய்து வாமகிழ்ந் தென்று கொண்டே. (எ)

இந்நெறி யாகா யத்தி லெழுந்திடா முன்ன ரென்பு
முன்னுற நரம்பு மூளுஞ் சொரிந்தபுண் ணூறி மேனி
மன்னொளி பெற்று ரேவு மண்மழை தன்னு விலுண்
மின்னுமக் கங்குற் போதே மாண்டனன் வடுக வேந்தன். (அ)

மற்றது கண்ட மைச்சர் வள்ளலை வியந்து பாண்டிக்
கொற்றவன் வழியோ ரில்லை யென்செய்கேங் கோவி லாமை
யுற்றதோன் றல்ல வென்று புலருமுன் னுடைக் குன்றைப்
விற்றரு கண்ணைக் கட்டி விட்டனர் பூசித் தாங்கு. (கூ)

பாய்விடை யிறைவன் சொன்ன பகுதியை நினைந்து கொண்டு
கோயிலின் பாங்கர் நின்ற குணப்பெருங் குன்றைத் தாழ்ந்து
போயுல கெங்குஞ் சூழ்ந்து புரவலற் றேடி மீண்ட
காய்தழ லுமிழ்கட் குன்றங் கண்டிகைக் கொண்ட தன்றே. (கய)

பிடர்மிசை யெடுத்து வைத்துப் பிறங்கமுற் செல்லக் கண்ட
நடமலி யமைச்சர் முன்ன நகர்வலங் கொண்டி ழிச்சி
முடிபுனை மண்ட பத்து முழவொடு புகுந்தி யாரு
மடிதொழு தார்க டுங்க வரிசொளா சனத்து வைத்து. (௧௧)

தடமணிக் குடம்பூ ரித்துத் தந்திர விதியின் முற்றக்
கடவபி டேகஞ் செய்வா னணைவது கண்டு மூர்த்தி
முடிசடை முடிபூ ணென்னின் முக்கணன் சாத னங்கள்
சுடரபி டேக நீற்றுத் தூளன மல்லா லுண்டோ. (௧௨)

வன்சம ணிருள்விட் டேக வைதிகத் தீப மேற்றி
யின்பர சாள்வ லென்ன வினையந்தியா வருமுன் சொன்ன
வன்புறு பகுதி மூன்றுஞ் செய்தருச் சித்தார் போற்றி
முன்பருள் சுரந்த சொக்க மூர்த்தியின் மூர்த்தி வேந்தை. (௧௩)

சடைமுடி முடியா வந்து தமக்கருள் சுரந்த செம்பொற்
சுடர்முடிச் சொக்க வேந்தைத் தொழுதெழின் மதவே ழத்துத்
தடமுழ வொலிப்பக் கற்றைச் சாமரை யிரட்டக் கொற்றக்
குடைநிழ னிழற்றப் போந்து குவலய நெறியிற் காத்தார். (௧௪)

மம்மர்சேர் சமணர்க் காய்ந்து வைதிக நெறிவி ளக்கி
வெம்மைசேர் தெவ்வை மாதர் விருப்பையைம் புலனை வென்று
செம்மையி னூழி வாழ்ந்து சிவனுல கத்த டைந்த
மும்மையா லுலகை யாண்ட மூர்த்தியை வாழ்த்தல் செய்வாம். (௧௫)

ஆகத்திருவிருத்தம் - ௧௪௩௩.

---

## ௫௨.—காரியார்நாரியார்பாப்பகுந்த திருவிளையாடல்.

கற்பமார் முன்னோர் நாளிற் காரியார் நாரி யாரென்
றற்புதப் புலவர் நீதி யரசனைக் கவிதை பாடி
யுற்றபல் சிறப்பி னோடு முயர்வட நாட்டி னின்றும்
வெற்றியி னணைந்தார் கொற்ற வியன்றமிழ் மதுரை நோக்கி. (௧)

வருபவர் நெறிம யங்கி வனத்திடைப் புகுந்து சாலத்
தெருமரு லுறுங்காற் கண்டு செந்தமிழ்க் கினிய சொக்க
னிறைதரு சாலி மேய்த்தோ ரிடையனாய் நேயங் கூர்ந்து
பொருவரும் புலவர் காணத் தோன்றினான் புகழை வேட்டு. (௨)

கனகவொண் குழைசேர் காதிற் களங்கனிக் கொத்த ணிந்து
புனையும்வெண் பாசி பூண்டு பூதிமெய் பூசி யாவு

மனமுரு கிடவாய் வைத்து வளைநெடுங் குழலு மூதித்
தனிநெடுந் தண்டு மூன்றி நின்றனன் றானுந் தெற்றி. (௩)

ஆங்கவர் காணு முன்ன ரதிசயித் தச்ச நீங்கி
யோங்கிய மதுரை யூர்க்குப் போம்வழி யுரைத்தி யென்னப்
பாங்குடைப் புலவீர் நீங்கள் பல்சிறப் பொடுமே டைந்தீ
ரீங்குளா யீர்நு மக்குக் காரிய மென்கொ லென்றான். (௪)

என்றுமன் றாடி சொல்ல வேடநீ யென்ன சொன்னு
யொன்றிய காரி யந்தா னுன்றனக் குரைக்க வற்றோ
வன்றுகாண் பெரிய வெங்கட் கதர்சொலென் றடரக் கண்டு
நின்றவ னுவ னைத்து நெறிசொலே னென்று நக்கான். (௫)

வேறு.

மென்புலவ ரதுகண்டு வழிவிருப்பான் மீனவனை
யின்புறுநற் கவிபாடி வருகின்றே மெனக்கேட்டு
வன்புலவ ரிருக்கின்ற விடமஃதான் மதியாது
நன்கவிதை சொன்னேமென் றுரைத்தீரே நாணுது. (௬)

அளந்தபுல வீரான தாகவவற் றொருகவிதை
விளம்பிடுமி னெனவிடையன் கொச்சையல னதிவிடமன்
றுளங்கியநங் கவிதைசொலு லொழியவழி சொல்லானென்
றுளம்படுமோர் கவிபகர்ந்தா ருயர்புலவர் தாழாது. (௭)

அக்கவிதை கேட்டலுமே யழகியது நுமதென்று
சொக்கனுமங் கணரிட்டுத் துடைதட்டிச் சிரித்தருளி
யிக்கவிதை யோநவின்றீ ரேழையீர் யாரறியார்
மிக்கவிது தனைமாடு மேய்ப்பவர்வாய்க் கேட்டிடுமின். (௮)

கேட்டிடுமி னெனவடைவிற் கிளர்வுறவெங் கணுநிறைந்த
காட்டிடையன் பாட்டனைத்துங் கற்றுரைப்ப மற்றவரு
நாட்டிடைய னல்லனிவ னார்கொலென நனிநாணி
மீட்டுரையா ரொன்றையுமுள் வெருவுற்று ருடல்வியர்த்தார். (௯)

நல்லவடி வனுமாகி யிருக்கின்றாய் நான்மறைகள்
சொல்லரியான் சொல்லினல்லான் மற்றொருவர் சொல்வாரில்
வல்லவுனக் கிதுவந்த வாறுரைப்பை யேன்மன்னன்
செல்வமுறத் தந்தவெலாந் தருகின்றே மெனச்செப்ப. (௧௦)

மட்டவிழ்பூம் பொழில்புடைசூழ் மாமதுரை யூர்ப்பொதுவன்
சிட்டர்புகழ் தருமண்டன் சிற்றிடைச்சி மணவாளன்
விட்டபசு முட்டாமன் மேய்த்தடக்கி பாசத்தாற்
கட்டிவிடு மன்றாடி கான்மாறி யாளுவேன். (௧௧)

பெரும்பொருளி ஞசையிலை பெயர்பெரிய சொக்கக்கோன்
பரிக்கிடுநுங் கவிதைகளிற் பாதிபகுந் தின்றெண்மேற்
றிருந்தகவின் றிடவீரேற் சேர்ந்தவழி யானுமக்குப்
பொருந்தவுரை செய்வலெனப் புலவர்களு மியைந்தனரால். (௧௨)

ஆங்கவர்க ளியையாமு னதர்காட்டி யொளித்தருள
வீங்கிவனும் பாங்கருள்சே ரியற்சிவனே யெனத்தெளிந்து
தேங்குபுகழ் தருமதுரை சேர்ந்தயரா லயத்தணைந்து
தாங்கருமன் பொடுபெருந்து சாத்தினர் தமிழ்மாலை. (௧௩)

சாத்தியநற் றமிழ்கொண்டு தமிழ்ச்சொக்கன் புவிபோற்றும்
பார்த்திவரே யெனப்பார்த்து விடைகொடுப்பப் பாவலர்கள்
சேர்த்ததமிழ்ப் பாதிகொடு தென்னனையுங் கண்டறிஞ
ரேத்துசிறப் பொடுங்களித்துப் போயினர்த மியனாட்டு. (௧௪)

ஆகத்திருவிருத்தம் - ௧௭௪௭.

## ௫௩.—புலிமுலை புல்வாய்க்கருளின திருவிளையாடல்.



தலமிலங்க மூன்றொருகாற் றண்கடம்ப வனத்தின்கட்
புலிநெருங்கி வரும்புல்வாய் பொலிவின்றி யுலவுங்காற்
பலமிலங்கோர் நிலைப்புல்வாய் பயந்தபுனிற் றிளமறியை
நிலைதவன்று முதுதூற்றின் புடையொதுக்கி நீர்வேட்டு. (௧)

போயெங்கும் புக்குழன்று புற்றீந்த கோடையின்கண்
வாயுலர்ந்தோர் வாவியின்கண் வந்துபுனல் பருகுங்கா
னேயமிலா வொருவேட னீங்காம லொளிநிற்பான்
காய்பசியா லதுகண்டு களிகொண்டு படவெய்தான். (௨)

கணைபடுங்கான் மறியைநினைந் தழுதுகனி கசிந்துவிழுந்
திணையிலுயிர் நீக்கியபின் யாவுக்குந் தாயாகித்
தணிவறவெங் கனுநிற்பான் றரியாது பிரியாத
வணியதொரு புலியைமுலை யூட்டென்ன வருள்சுரந்தான். (௩)

பாய்புலியு மிரங்கிமனஞ் சுரந்துமுலைப் பாலளிப்பா
னேயமொடு வரக்கண்டு வால்குழைத்து நேர்வந்து
தாய்வரவு காணமற் றளர்ந்தமறி பயந்தணிந்து
தூயமுலைப் பாலுண்டு துள்ளிவிளை யாடியதால். (௪)

வேறு.

மலரய னணி முன்னர் வரும்விதி மூற்றல் கண்டு
நிலைமலை வில்லா னல்ல தியார்வல்லா ரென்று சென்று

தலையினால் வணங்கி வாழ்த்தச் சசிபதி யதிசயிப்பப்
புலிமுலை புல்வா யுண்டு பொலிவுற வளரு நாளில். (௫)

பொருளினு மொழுக்கத் தானும் பொருவரும் போதத் தானு
மருளினுஞ் சிறந்து நீடோ ரருங்குல வணிகன் பொங்கர்
மருமலி மலர்த்த டஞ்சூழ் மாமண வூரி னின்றுங்
கருதிய பொருள்கண் மேலுந் தேடுவான் கருதிப் போனான். (௬)

பச்சிம திசையை நோக்கிப் பரிவொடும் போகி நன்கு
நச்சின தேயம் புக்கு நன்பொரு டேடி மீண்டாங்
கிச்சையி னடந்து மெல்ல விலங்குதன் பதியை நோக்கி
யச்சமற் றெல்லு மல்லு மதரிடை வருத லுற்றான். (௭)

வேறு.

வழிவசத்தினி ருங்கடம்பவ னத்துவந்துழி வணிகனும்
பொழுதுபுக்கது கண்டுவெம்பியு ளம்புலம்புறு காலையி
லெழின்மிகுத்ததொ ரொலியொலித்திட வேழம்விட்டதன் வழியினே
ரொழுகவற்புத மாவிருப்பதொ ருத்தமப்பதி கண்டனன். (௮)

கண்டவந்நகர் தன்னுளன்பொடு கண்டனன்சனி றெட்டும்வாழ்
பண்டைபாயத லத்தையும்பழு தொன்றிலான்படி மத்தையு
மண்டர்நாயக தொண்டர்நாதவெ னத்துதித்தரு ளாலருந்
தொண்டுசெய்துவ ணங்கியங்கொரி டத்தமர்ந்து துயின்றனன். (௯)

துயில்கொளுந்தனி வணிகனுஞ்செறி தொலைவிலாவிரு டொலையவே
வெயில்விரித்தபி னனுகரும்பெரு வனமதாகவெ ருண்டெழுந்
தெயிலிலங்கிய கோயில்கண்டுநி னைத்திதென்கொலெ னத்தெருண்
டயில்விளங்குமு னற்புரத்தர சற்குவந்தறி வித்தனன். (௧௦)

வேறு.

மன்னிய வமைச்ச ரோடும் வணிகன்முன் னவின்ற வெல்லா
முன்னுற நவின்று காண்பா னுசையான் முடுகி யாங்கட்
டென்னவ னடைந்தா னென்றுஞ் சித்தநாச் சித்த னாக்குப்
பொன்னகர் மகவான் வந்து போற்றுமா நகரி தன்னுள். (௧௧)

வேறு.

குணமோ டடைந்தி ரன்பரவுங் குளிர்ந்த கடம்ப வனத்தினையு
மணிசே ரந்த வனத்திலங்கு மழகா ருயரா லயத்தினையுந்
துணைசே ரந்த வாலயத்து ளிருந்தருளுஞ் சொக்க நாதனையும்
பணிகோ யிற்றென் றிசைபாற்பொற் பதுமத் தினையுங் கண்டிறைஞ்சி. (௧௨)

மற்றும் புதுமை பலகண்டு வருவோன் சொக்கன் றிருவருளாற்
புற்றின் புல்வாம் புலிமுலைப்பா லுண்டு பொருந்தி விளையாடல்

கொற்றந் தருநெஞ் சுறக்கண்டு விசேட நிலமீ தெனக்குறித்துச்
சற்றுந் தாழா தித்தலத்தி லிருப்ப லென்றான் சயங்கூர. (கங)

இந்தத் தெய்வப் பதிக்கெல்லை யாதோ வென்று மயக்குற்றுச்
சிந்தைக் கினிமை தரும்பரம சிவனை யடைந்து துதிசெய்ய
முந்தைக் கியைந்த மயனூலின் முறையே சித்த ருருக்கொள்ளா
வந்திப் பிறையோ னெழுந்தருளி நடந்தா னெல்லை யடைவாக. (கச)

எல்லை நடவா வொளித்தருள வேத்தி யருளை யதிசயித்துத்
தொல்லை மரபின் மணிமாடங் கூட மஞ்சு தோயிஞ்சி
மல்லல் வீதி மடங்கழக மற்றுந் திருத்தி மாறின்றி
நல்ல குடியும் பல்படையு நயப்ப வியப்ப வீற்றிருந்தான். (கரு)

வேறு.

செந்நெறித் தானை சூழத் திறைகொணர்ந் தரச ரேத்த
மன்னம ரேசன் சால வாழ்த்திட வேத்தி நாளுங்
கன்னிமால் காளி யீசன் காக்குமா நகரி தன்னு
ளின்னறீர்ந் திருந்து தென்ன னெண்டிசை விசயஞ் செய்தான். (கசு)

ஆகத்திருவிருத்தம் - கசஅங.

## டுரு.—சாதாரிபாடின திருவிளையாடல்.

ஓங்கிய முன்னோர் சால முயர்விறு லறிவான் மிக்க
தேங்கமழ் நிம்ப மாலைத் தென்னவ னொருவன் றெண்ணீர்
வாங்கிருங்கடல்சூழ் வைய மதுரையி லிருந்து காப்பப்
பாங்குடன் சிறந்தா னங்கட் பத்திர னென்றோர் பாணன். (க)

கண்ணுத லழக னுக்குங் காவலன் றனக்கு மிக்க
பண்ணியல் பாடி யீசன் பத்தர்கட் கன்பு செய்தாங்
குண்ணெகிழ் நெஞ்சு நீற்றி னொளிதிகழ் மெய்யு மாகி
மண்ணவர் விருப்ப மெய்த வளம்பட வாழு நாளில். (உ)

பலர்புகழ் சென்னி மன்னும் பண்புடை நாட்டி னின்று
மிலகிய பரிசில் வேட்டங் கிசைவல்லா னென்றோர் பாணன்
றலமதி சயிப்ப வந்து தண்டமிழ் மதுரை புக்கு
வலியுடை மன்னற் கண்டு பாடினன் மதுர மாக. (ங)

வேறு.

மின்னும் புகழ்க்கு நல்லோனே வீரா கரனே வியனுலகின்
மன்னர் பரவு மன்னவனே மலயா நிலஞ்சேர் நாட்டரசே
முன்னை நெறிநூ லியலிசைகண் முழுது முணர்ந்த பெருமானே
யென்னை யொப்ப விசைவல்லா ரில்லை யுலகி லெனவுரைத்தான் (ச)

பாணன் பகரு மதுகேட்டுப் பழுதில் வழுதி யுளம்பெருக
காணி யதனைக் காட்டாம னல்ல சொல்லி யணியாடை
யூணின் பயனு மினவெல்லா மொருங்கே கொடுத்து நாளும்வர
வேணும் பாண போவென்று விடுத்தான் விடுத்தற் கிடங்கூறி. (௬)

பீடொன் றியவன் றனைமதித்துப் போய பின்னர்ப் பிரிவின்றி
மாடு நின்ற முறைசெய்வோர் தம்மைப் பார்த்து மதியுடைநம்
பாடும் பாண பத்திரனை யழையு மழையும் பரிவினென
வோடுந் தகைமை யவர்விரைவி னோடி யழைப்ப வுடன்வந்தான். (௭)

பதறு வந்த விசைப்பாணன் பட்டுச் சட்டை யிட்டணியின்
புதுமா மணிகள் கதிர்வீசப் பொன்மண் டபங்கள் பொலிந்திலங்கு
மதிதோய் கோயி லுட்புக்கு மன்னர் பெருமா டனைக்கண்டு
துதிசெய் திறைஞ்சி வாய்புதைத்துச் சொன்னு னழைத்த தென்னெனவே.

வளவன் பொன்னி நன்னுட்டில் வரிசை கூர வொருபாண
னளவில் பாணர் புடைசூழ வரிவைக் குழாத்தி னெடும்வந்து
விளரி முதலா நல்லிசைகண் மேன்மை பயக்கப் பாடியுளங்
களிகொண் டகத்துப் போனதுகொண் டழைத்தே னிங்குக் கடிதுன்னை. (அ)

இன்று பூசை குடமுழக்கம் பருந்து மூங்கி லிலைவீழ்ச்சி
யொன்று முயர்சிச் சிலிபறவை யுச்சி மலைநீர் விழுக்காடு
நின்ற வோசை யிசையனைத்து நெறியிற் பாடு கேனென்று
வென்றி கூறி வந்தவனை வெல்ல வலையோ வெனக்கேட்டான். (௯)

கேட்ட மாறன் றிருமுன்பு கீத நாத னுரைப்பான்வான்
றீட்டும் புகழாய் நீயிருப்பச் சேர்ந்த வடியார்க் குயர்புகொடுத்
தேட்டை நீக்கு மிசைச்சொக்க னிருப்பக் கேட்ட தென்னையிசைப்
பாட்டின் றகுதிக் கெனையொப்பப் பாடற்குண்டோ படிமீது. (௧0)

அஞ்சே னஞ்சே னொருவர்க்கு மஞ்சா திங்கு வந்தவனை
மிஞ்ச வஞ்சும் படிபாடி வென்றே யோட்டி விடக்கடவேன்
செஞ்சொல் வல்லாய் தோற்றவர்கள் செயுங்கா ரியங்க ளுரையென்னப்
பஞ்ச வனுநன் பரிவெய்தி வியந்தா னுயர்ந்த பணிநல்கி. (௧௧)

வேறு.

நலமலி கான நாதா நல்லிசை காண்பே னுனைப்
பொலிவுடை நின்னி டத்துப் போவென விடைகொ டுப்பக்
கலைமுழு துணர்ந்த செல்வக் காயக னினிமை கூர்ந்து
தலையினுல் வணங்கி வாழ்த்திப் போயினுன் றனது தேத்து. (௧௨)

இத்தக வறியா ராகி யெதிரிலே யென்று பேசி
யொத்திய ருளம் வல்ல பாடுவா னுடனே வந்த

வாலவாய்ச், சொக்கன்", "தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச், சொக்கனே." (திருஞா. தேவாரம்.)

௨௫-௨௬.) "வேதியன் படைக்க மாலவன் காக்கப், பெருந்தேரா திருவீருத் தான்பெரிது நிறுத்தி, யமுதயில் வாழ்க்கைத் தேவர்கோ னிழிச்சிய, மதமலை யிருநான்கு பிடர்சுமந் தோங்கிச், செம்பொன்மணி குயிற்றிய சிகரக் கோயிலு, ளமையாத் தண்ணளி யுமையுட னிறைந்த, வாலவா யுறைதரு மூல காரணன்." கல். ௩௨.)

௨அ. திறலுடையவனைக் கொன்ற பாவம் - வீரகத்தி; ௨: "மேதகு வீரமிக்க விருத்திரா சுரனைக் கொன்ற, வோதரும் பழியால்." காணார் - விளங்க அறியார்.

௨௯. ஆரா - தணியாத.

௨௯-௩௦. "காருடற் பிறையெயிற் றரக்கனைக் கொன்று, வச்சிரத் தடக்கை வரைப்பகை சுமந்த, பழவுடற் காட்டுந் தீராப் பெரும்பழி, பனிமலை பயந்த மாதுடன் றீர்த்தருள், பெம்மான்." (கல். ௯.)

௩௧. வாரம் - கிழமை.

௩௨. (திருவிளை. தீர்த்த. ௧௯.)

௩௩. சித்திரைச் சித்திரைத்தினத்து - சித்திரைமாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில். ஒப்பிலழகன் - சுந்தரேசர்.

௩௬. நிறைவு - மகிழ்ச்சி; (௨) ௨.

## ௨-ம் திருவிளையாடல்.

௧. கிளைகள் - யானைகள்.

௨. கொளுவுதல் - பொருந்துதல். முன்னைத்தவம்.

௩. தும்பை இபக் கடவுளை-தும்பைமலர்போன்ற வெண்மை நிறம் பொருந்திய தெய்வயானையே. கோ - அரசன்; இந்திரன். புத்தியினிமை - மனமகிழ்ச்சி. கந்தம் - கழுத்து.

௪. இயம்பக் கேட்டருளாய். உபகாரம் - கையுறை; காணிக்கை.

௫. சுந்தரவடிவ, விளி; (௫) ௩.

௬. தோன்றி நின்ற மத்தகம்.

௭. வாங்கித் துகைத்தேன்.

௯. பூழியன் - பாண்டியன். வளை- ஒருவகை ஆயுதம். தேவர் கோன், விளி. எற்றுண் - அடிக்கப்படுவாய்; (கடம்ப. இலீலா. ௨.)

௧௦. அவமதியினூற் காட்டு யானையாகி உழல்வாயாக.

௧௨. பிறிது சாபம் - சாபத்தின் பரிகாரம்; ௧௩; இது, 'மறுசாபம்' எனவும் வழங்கும்; (௫அ) அ: "மறு பெருஞ்சாபமுங் கொடுத்தான்."

௧௩. அருந்தவன்-சிவபெருமான்; "தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே." (புறநா. ௧.) தரம் - தகுதி.

௧௪. உதரநெருப்பு - வயிற்றுத்தீ; ஜாடராக்கினி.

௧௭ பழுது - சாபம்.

## ௩-ம் திருவிளையாடல்.

௧. மலயத்துவசன் - பொதியின் மலையின் உருவமெழுதிய கொடியையுடையவன்; (௪) ௧. இப்பாண்டியன் அகத்தியமுனிவர் அருளாற்பிறந்தவனாதலின், அவருக்கு இருப்பிடமாகவுள்ளதும் துவசம்போலே, உயர்ந்து தோன்றுவதுமாகிய பொதியின் மலையின் சம்பந்தமான பெயர் இவனுக்கு இட்டனரென்று அஷ்டமிப் பிரதக்ஷிணமான்மியம் தெரிவிக்கின்றது.

௨. எலம் - மயிர்ச்சாந்து. குழற்கா - கூந்தலாகியசோலை. பரிந்தான்- அன்புற்றான்.

௩. ஆதிமரபு, மரபின்பெயர்; சூரியவம்சமென்று கருதுதற்கும் இடமுண்டு. வடிவமங்கையென்பது அப்பெண்ணின்பெயர்; (௧௧) ௩.

௪. முற்றுதல் - வளைதல்.

௫. அல், ஒடு.

௭. இணையிலான் - சிவபெருமான். ஏதம்-துன்பம். ஆரெம் - ஆருவாள்.

அ. மிகை - அதிகம்.

௯. அவர் இசைய்ந்த. தொல்லைத் தந்திரம் - பழமையாகிய நூல்; வேதாகமங்கள்.

௧௦. வாரித்தலம் - பூமி.

௧௨. முகுத்தம் - முகூர்த்தம். அன்றினர் - விரோதித்தவர்கள்; அன்றினர் சிங்கம் - மலயத்துவசன். முடித்தலை, கிரீடம்.

**௪-ம் திருவிளையாடல்.**

௧. மலைக்கொடிமன்னன் - மலயத்துவச பாண்டியன்; "ஏருதோடு கலையோடு சிலையோடு மலையோட விபமோட நேர், விருதோடு பொருதேறு புலிநேமி கிரிசூழ விளையாடவே" என்னும் தக்கயாகபரணியும், 'பருவதத்தைக் கொடிக்கணெழுதும் பாண்டியன் குலபதி இலாஞ்சனையும்' என்னும் அதன் உரைப்பகுதியும் இங்கே அறியற்பாலன.

௩. வெந்திட - புறங்கொடுக்க; வெரிந், விகாரம், திசைவிசயம் - திக்குவிசயம்.

௫. மதுரைமன்னன் - சோமசுந்தரக்கடவுள்; (௬) ௭. தாள் வரை - மலையின் அடி; 'பாதசயிலம்' என்பர்வடநூலார். மதுரைமன்னன் இருந்தான்.

௬. கொம்மை - வட்டம்.

௭. துற்று - நெருங்கி. மிண்டுகள் - தருக்காற் சொல்லும் சொற்கள். சண்டவெங்கோபம் - மிக்க கோபம்.

௮. ஞாட்பு - போர்க்களம்.

௯. கண்டது இல் - பார்த்ததில்லை.

௧௦. அஞ்சல் - அஞ்சற்க.

௧௧. வரை வில் - மலையாகிய வில். புரிகுழல், எழுவாய்.

௧௨. இருமை-பெருமை; (திருநக. ௧௯.) மந்திரி, எழுவாய்; அவன்சொல்லியதை, (௩) அ-ம் செய்யுளாலுணர்க.

௧௩. முறுவல் செய்தவர், சிவபெருமான்.

௧௪. முகுளம் - அரும்பு

௧௭. பயந்தவட்கு - தாய்க்கு.

௧௮. சுபகாலங்களிற் பூரணகும்பத்தின்மீது கமுகம் பாளைகளைச் செருகிவைத்தல் மரபு; "கீழ்பாற் றிசையின் மிசைவைத்த, வெள்ளிக்கும்பத் திளங்கமுகின் பாளை போன்று விரிந்தளதால்." (கம்ப. பால. மிதிலை ௭௨.)

௨௧. ஆலவட்டம் - விசிறி. இரட்ட - மாறியசைய.

௨௨. குணலை - ஒருவகைக்கூத்து அது, பல்வரிக்கூத்திலொன்று. சார்ந்தது சொன்னநாள், பங்குனி உத்தரம்.

௨௩. துகிலும் குழையும் இலங்க. வாசிகை - கோத்தமாலை.

௨௪. மதிநெறி - சந்திரகுலம்.

௨௫. நாரதாதிகள் கானத்தைப்பாட. மைந்தன் - முருகக்கடவுள்; இவர் திருமணச்சடங்கு நடத்தியதை, "மருளாரும் பவத்தொடரை மாற்றிய தென் னன்மகளாய் மவுலிசூடிப், பொருளாரும் புவிவிசயஞ் செய்தரசு செலுத்தியமும் மூலைப்பூந் தேனைத், தெருளாருந் தமிழ்மதுரை நாதன்மணஞ் செயவிதிநூற் சடங்கு செய்தே, யருளாருங் கடம்பவனத் துறைகுமர குருபரனை யகத்துள் வைப்பாம்." (கடம்ப. பாயிரம், ௫.) என்னும் திருவிருத்தத்தாலுமுணர்க. இதுபற்றியே, 'சடங்குக்கந்தன்' என்பர்பின்னும்; (எ) ௯.

௨௫. "நான்கெயிற் றொருத்தற் பிடர்ப்பொலி வரைப்பகை, யறுகால் குளிக்கு மதுத்தொடை யேந்த, முட்டாட் செம்மலர் நான்முகத் தொருவ, னெண்ணிநெய் யிறைத்து மணவழலோம்பப்,புவியளந் துண்ட திருநெடுமாலோ, ணிருகர மடுக்கிப் பெறுநீர் வார்ப்ப, வொற்றை யாழியன் முயலுடற் றண்சுட, ரண்டம் விளர்ப்பப் பெருவிளக் கெடுப்ப, வளவாப் புலன்கொள் விஞ்சைய ரெண்மரும், வள்ளையிற் கருவியிற் பெரும்புகழ் விளைப்ப, முனிவர் செங்கரஞ் சென்னியாக, வுருப்பசி முதலோர் முன்வாழ்த்தெடுப்ப, மும்முலை யொருத்தியை மணந்துல காண்ட, கூடற் கிறைவன்." (கல். ௩௪.)

௨௬. "பெருநீர் வையைவளைநீர்க் கூட, லுடலுயி ரென்ன வுறைதரு நாயகன், கடுக்கைமலர் மாற்றி வேப்பலர் சூடி, யைவாய்க் காப்புவிட் டணிபூ ணணிந்து, விரிசடை மறைத்து

மணிமுடி கவித்து, விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடி யெடுத்து, வழுதி யாகி முழுதுல களிக்கும், பேரருளாளன்.'', "மதுரை மாநகர்ப் பூழிய ளுகிக், கதிர்முடி கவித்த விறைவன்." (கல். உ, உ௫.)

உஎ. எழுத்து-கையொப்பம். சோமசுந்தரக்கடவுள், பாண்டியராசாவாக வீற்றிருந்தபொழுது, 'சுந்தரமாறன்' என்று கைச்சாத்திட்டருளினர்.

உஅ. இருக்கு - வேதம். "மதிக்குலம் வாய்த்த மன்னவ ளுகி, மேதினி புரக்கும் விதியுடை நன்ஞ, ணடூர் நகர்செய் தடுபவர் தடைக்கு, மருட்குறி நிறுவி யருச்சனை செய்த, தேவர் நாயகன் கூடல் வாழிறை.'' (கல். க௬.)

௫ - ம் திருவிளையாடல்.

க. ஆகண்டலன் - இந்திரன்.

உ. சடங்கு - நித்தியகன்மம். அநந்தமாமுனிவர் - பதஞ்சலிமுனிவர்.

௩. ஏத் தரும் - மேன்மையைத்தரும்; துதித்தற்கரியவென்றுமாம்.

௪. நீபமாவனம் - கடம்பவனம். இருந்தது, அளவில்கால முண்டு. பணிந்து அளித்த.

௫. சொக்கத்தாண்டவமென்பது, சாந்திக்கூத்தின்வகையிளுள் ஒன்ருன சுத்தநிருத்தம்; சுந்தரதாண்டவமென்றும் கூறப்படும். இது, நூற்றெட்டுக்கரணமுடைத்தென்பர்; (சிலப். பக்கம், ௬௪.)

எ. கஞ்சுகம் - சட்டை. இதஞ்செய் அசஞ்சலன். உளம் நிறைஞ்சு - மனமகிழ்ந்து.

௬ - ம் திருவிளையாடல்.

க. நன்கு - இன்பம்.

உ. உடு - நட்சத்திரம்.

௩. இவ்வரையென்றது, சோற்றுமலையை.

௪. முதுமடைநூல்-முதிய பாகசாஸ்திரம். தெய்வவான் வழுதி, விளி.

௫. தேவி, விளி.

௬. சொன்றி - சோறு. பூதம் அணைந்தது.

எ. எண்மை - எளிமை.

௯. மிதவை - சோறு.

எ - ம் திருவிளையாடல்.

க. துய்த்தும் - உண்டும். குறள்பூதம்; தனு - உடம்பு.

உ. அடுக்களை - மடைப்பள்ளி. அற - மிக. ஆவி - புகை.

௩. ஈறு - பூமியின்கீழெல்லை.

௫. பரிதாப வெப்பம் - மிக்கவெப்பம். அமராமல் - அடங்காமல்.

௬. எழ - மிக. வேகவதியாறு-வையைநதி.

எ. சென்றநீர் - கிழக்கேசென்ற வெள்ளம். மண்டுறு நீர் - மிக்கு வரும்வெள்ளம்; மண் துறுநீர், மண்ணிலே ஊறுகின்றநீருமாம்.

அ. ஆரவும் - உண்ணவும். அயினி. சோறு.

௯. கண்டது - செய்தது. பந்தரையும் நீராவியையுமுடைய வாவி.

க0. காவணம - பந்தர்.

கக. ஓலிட - முழங்க. "வனிக்கதிர்க் குலவன் பயந்தருள் பாவையைத், திருப்பெரு வதுவை பொருந்திய வந்நாட், சொன்றிப் பெருமலை தின்று நனி தொலைத்த, காருடற் சிறுநகைக் குறுந்தாட் பாரிட, மாற்ரு தலந்த நீர் நசை யடக்க, மதிநிரைப் பெருநதி வரவழைத் தருளிய, கூடலம் பதியுறை குணப்பெருங் கடவுள்.'' (கல். க௪.)

அ - ம் திருவிளையாடல்.

க. பரவசத்தைவிட்டுக் கேண்மின்.

உ. கதம்பக்கான் - கடம்பவனம். நாளில் - காலக்கிரமத்தில்; (கஉ) கக. மனத்தினைத் தன்னுடைநினைவின் ஆக்கிளுள்.

௩. சதமுறை - பலமுறை; (௩0)

௩க. அதர்படும் - வழிப்படுகின்ற. தாய் அமங்கலி. உததி - கடல். திருவுளத்தடைத்து - அங்கீகரித்து; திருவுளம்பற்றி.

௪. பயம் - பிரயோசனம்.

௫. மோனமாக இருந்தது. முகச்சோகம் - முகவாட்டம்.

௬. ஏதம் - துன்பம்.
௭. சண்டம் - வேகம்.
௯. அங்கிமூலை - அக்கினிமூலை. "மாமியாடப் புணரியழைத்த,காமர் கூடற் கிறைவன்" (கல். உ௯.)
௧௦. மனோகரம் - மகிழ்ச்சி.

## ௯ - ம் திருவிளையாடல்.

௧. வழுத்தி - சொல்லி; "வழுத்தீர் மதிச் செங்கண்மால்" (அழகர்கல. ௭௭). மாதா - தாய். புணரி - கடல்.
௨. பெருமையால் வந்த.
௩. காதலன் - கணவன். நரலை - கடல். மடந்தையர் ஆடாரென்பர்.
௪. யாய் - தாய். மன்றல் - கல்யாணம்.
௫. அவை - சபை. நம்ம - நம்முடைய; தனித்தன்மைப்பன்மை. கல்லோலம் - அலை. மாமடிகளென்பது மாமனுரென்னும் பொருளைத் தருவதொருசொல்; (உ௨) ௬௨: "நின்பால் வந்தனன் மாமடி."; "ஊத்தைத் தலைகீத் துயிர்கொழிந்த வொருமா மடிகளொருமுருட்டு, மோத்தைத் தலை பெற்றமைபாடமூரிக் கபாடந் திறமினோ" (தக்க. ௪௬); "மாமடிகளிடு சாபமும்." (மீனாட்சி. அம்புலி. ௬.)
௭. உந்தை - உன்தந்தை.
௮. தடாதகை, எழுவாய்.
௯. தெய்வத்தனு - திவ்யசரீரம்.

## ௧௦ - ம் திருவிளையாடல்.

௧.—(௧௧) ௫.
௩. உக்கிரப்பெருவழுதியார் சடையோடுபிறந்தனரென்பதை,"பனிறலைப்பாந்தட் சுமைதிருத் தோளிற், றரித்தல களிக்குந் திருத்தகு நாளி, னெடுநாட் டிருவயிற் றருடா ணிருந்த, நெடுஞ்சடை யுக்கிரப் பயந்தரு ணிமலன்"(கல். ௭௮) என்பதனாலும், "வேலோன் விமலைதடா தகைவயிறுக் கிறைரென்றோர், நன்மகவாய்ச் சடையொடுமூற் பவிக்க" (கடம்ப. இலீலா. ௧௦) என்பதனாலும் உணர்க.
௪. ஒலித்து - ஒலிப்பித்து. நெய்யாடல் - நெய்விழவு.
௫. உருவம் உக்கிரமானதுகொண்டு.
௭. முடிசூட்டியவர், சுந்தரமாறர்.
௮. சடிலம் - சடை. விதுகுடுமிப் பெருவழுதி - சுந்தரமாறர்.

## ௧௧ - ம் திருவிளையாடல்.

௧. காலத்திற் கடப்பர்.
௨. வளை, செண்டு என்பன ஆயுத விசேடங்கள். அறி வடகிரி - எல்லாராலும் அறியப்படும் மேரு.
௩. 'வடிவணங்கு' என்பது பெயர்.
௪. அபிடேகச்சொக்கன் - கிரீடத்தையணிந்த சொக்கநாயகர்; அபிடேகம்-கிரீடம்; வைஷ்ணவஸம்பிரதாயத்திலும் இப்பெயர் இப்பொருளில் வழங்குகின்றது.
௫. இச்செய்யுள், "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த, வப்பார் சடையப்பன்" (திருவா. திருவம்மானை. ௧௧.) என்னும் திருவாக்கின் பொருளைத் தழுவியது.

## ௧௨ - ம் திருவிளையாடல்.

௧. வேலை-கடல், காலம், தொழில்.
௨. கொள்ளை - கடல்கொள்ளை.
௩. எவரும் இறப்பம். தம்பம் - பற்றுக்கோடு; "தம்பத்துணை நிக்கித்தொருவேள்விதொடங்குந், தக்கன்" (தத்துவ. பிள்ளை. சிற்றில். ௫.)
௪. மேகங்கள் நான்குவகை; "மேக்கு நால்வகை மேகமுங் கீழ்விழ" (கம்ப. சுந்தர. ஊர்தேடு. ௧௪௬.)
௫. அணுக்கள் - உயிர்கள்.
௬. கொண்மூக்கள் - மேகங்கள். வள்ளுறை - பெரியதுளிகள்.
௭. கூடம் - வீட்டின் ஒருபகுதி, வஞ்சனை.
௮. நீர், முன்னிலைப்பன்மை. ஆதரம் - அன்பு.
௯. கருவி - தொகுதி.
௧௦. புயல் - மேகம், நீர். ஆசை - திசை. சடைப்புறை - சடையின்உள்வெளி.
௧௨. போற்ற - பாதுகாத்தற்கு.
௧௩. கொண்மூ, விகாரம்.

## ௧௩ - ம் திருவிளையாடல்.

௨. வென்றுநீள்கழல், ஆறும்கழலெனக. மனோகரம் - மகிழ்ச்சி.

ங. சற்பம்=சர்ப்பம்-பாம்பு. பொக்கணம் - ஒருவகைப்பை; "சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கம்" (திருச்சிற். உசஉ.) எனவும், "சுட்ட வெண்பொடிப் பொக்கணந் தூக்கிய தோளும்" (திருவிளை. எல்லாம். ங.) எனவும் வரும்; பின், "பொக்கணச் சித்தன்" என்பர்; கக.

ச. முத்திரை - அடையாளம்; சித்தவேடத்திற்குரியகுண்டலம். குஞ்சிச்சடை - சிறுசடை.

சு. ஆழிமண்கடவாமல் - கடலானது மண்ணைக்கடவாமல். ஈழம் - பொன்.

எ. ஆதிநாதன் - நவசித்தர்களில் ஒருவர்; சிவபெருமானென்பது மற்றொருபொருள். தோதகம் - குறிப்பு.

அ. கரப்பெருங்குன்று - யானை. ஐய - சிறிய. அம்பலம், சிலேடை.

கூ. காந்தன் - தலைவன். குழப்பி - குழம்பச்செய்து.

கO. முறைசெய்வோர்-ஏவலாளர்.

கக. தக்கரம=தஸ்கரம் - கள்ளத்தன்மை.

கஉ. அனிலமார்மூலை - வாயுமூலை.

கங. வேத்திரம் - பிரம்பு. கஞ்சுகியர் - சட்டையிட்டோர்.

கச. பூண்தகும்நீற்று மூண்டி - அணியத்தக்க திருநீற்றுலாகிய திரிபுண்டரத்தையுடையாய்.

கரு. அனுபமன்-ஒப்பில்லாதவன். நீத்து - வெறுத்து.

கசு. மதித்தவன் - மதிக்கப்பெற்றவன். என்பாங்கு - என்னிடம்.

கஎ. என்ன - என்று அகத்தியமுனிவர் சொல்ல.

கச - ம் திருவிளையாடல்.

க. ஆசையற்றுமொழிந்தான். அறிவோமென்று அரசன்கருதி.

உ. ஆக்கினைச்சித்தர் - வலிவினால் எல்லாம் செய்விப்பவர்; இஃது, எல்லாம்வல்ல சித்தமூர்த்தியின் திருநாமம். நன்குற - தெளிய.

ச. சடக்கென,ஒலிக்குறிப்பு; சடக்கெனத் தின்னென இயைக்க; "சடக்கென, வாங்கயின்று." அ. கண்கொடு ஏவினன்.

ரு. அழல் விழித்து - தீப்புறப்பட விழித்து. கண் - கணு, விழி. வேழம் - கரும்பு, யானை.

சு. "நதிமதந் தறுதண் புகர்கொலை மறுத்த, கல்லிப மதனைக் கரும்பு கொள வைத்த, வாலவா யமர்ந்த நீலநிறை கண்டன்." (கல். ௩௩.)

எ. தந்து - நூல். நாளம் - தண்டு. ஏகாவலி - ஒற்றைவடமாகிய முத்தமாலை.

கூ. உளமழன்று. சித்தர்க்குவென்றி.

கக. சோமசுந்தரக்கடவுளின் ஆலயத்தை யாண்டும் பெரியகோயிலென்பர். பணி - திருவிளையாடல், ஆணையுமாம.

கரு - ம் திருவிளையாடல்.

க. இயல்வாணர் - புலவர்கள்.

உ. தவிசு - அசனம். கோணம் - சதுரம். பாஅறி ஞானப்பலகை: (பதி) உ. (கசு) அ.

ங. ஆய - ஆராய. நீடு ஆசனம் - பெரிய ஆசனம. பரிவு - அன்பு.

ச. மண்டபத்துடை நடு - மண்டபத்தில் நடுவே; இடை, எழாமவேற்றுமையுருபு; இடைநடு - ஒருபொருட்பன்மொழியுமாம. தாழ்த்தல் கொடாது - தாமதியாது; (கஎ) ரு.

ரு. பயன்கள் நான்கு - அறமுதலியன. முத்தமிழ்க்கொத்து - முத்தமிழ்நூல்களின் தொகுதி; கூ, கO; (கஅ) எ. நற்றவன் - சிவபெருமான். செற்றம் - தணியாக்கோபம். சித்திரம் - வியப்பு.

சு. செந்தமிழை - செந்தமிழ்ச்செய்யுட்களை; எ. உயர்ந்த, முற்று.

எ. தொடர் - நட்பு. மலைந்து - மாறுபட்டு.

அ. இரங்கி வந்தனன்.

கூ. இருந்திர் - இருந்தனிர். போக்கலாவிருப்பின் - நீக்குதற்குரியதாக இருந்தால்.

கO. அதர்பட - வழிப்பட.

கக. கேவலனல்லன் - ஸாதாரண னல்லன்.

கஉ. பொருள் - அகப்பொருளிலக்கணம்; பொருள்நூல் - அப்பொருளிலக்கணநூல். "அன்பினைந்திணை" என்பது, இறையனாரகப்பொருளின் முதற்சூத்திரத்தின் முதற்குறிப்பு; "உலகிய னிறுத்தும் பொருண்மரபொடுங்க, மாறனும் புலவரு மயங்குறு காலை, முந்நூறும் பெருமறை முளைத்தருள் வாக்கா, லன்பினைந் திணையென் றறுபது சூத்திரங், கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத், தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்.", "அருமறை விதியுமுலகியல் வழக்குங், கருத்துறை பொருளும் விதிப்பட நினைந்து, வடசொன் மயக்கமும் வருவன புணர்த்தி, யைந்திணை வழுவா தகப்பொரு ளமுதினைக், குறுமுனி தேறவும் பெறுமுதற் புலவர்க,ளேழெழு பெயருங் கோதறப் பருகவும், புலநெறி வழக்கிற் புணருல கவர்க்கு, முற்றவம் பெருக்கு முதற்றூ பதர்க்கு, நின்றறிந் துணரத் தமிழ்ப்பெயர் நிறுத்தி, யெடுத்துப் பரப்பிய விமையவர் நாயகன்" (கல். ௯, ௬௭.)

கச. ஒருகவிதைதொடா - ஒருசெய்யுள் தொடுத்து; தொடுத்தவர், சிவபெருமான்.

க௬. திறைந்திருந்தார் - மகிழ்ந்திருந்தார்.

கஎ. விடுவிப்பான் காரணமா-விடுவித்தற்பொருட்டு.

க௯. சோமசுந்தரக்கடவுள் புலவர் வடிவங்கொண்டு சங்கப்புலவருக்கு இடையே நெடுநாள் எழுந்தருளியிருந்தபொழுது, அவர்கொண்டருளிய திருநாமம், மதுரைப்பேராலவாயாரென்பது; (கஅ) அ.

**க௫ - ம் திருவிளையாடல்.**

க. விடுதலம் - நிலாமுற்றம்.

உ. மாதேவி-பாண்டியன்மனைவி. மாருதவசத்தால் - காற்றுவழியால்.

ச. கிழி - துகிற்பொதி; ஆகுபெயர். ஆசிரியர் - சங்கப்புலவர். சீயம் - சிங்கம். தூக்கினன் - தொங்கக்கட்டினன்.

௬. சமாதி - சங்கற்பம்: (உ௯) ச; (உஅ) உக; (சஎ) உ.

௫. அதில் - அக்கவிகளில்; சாதியொருமை. ஆவிநன்கு - மனமகிழ்ச்சி; "என்னாவிமலர்மேன்மிதித்தொதுங்குவாய்." (சீவக. கனக. ௯உ.)

எ. நீங்ககில்லாமல் - நீங்காமல்.

அ. தந்தை - சிவமுனி. மெல்லச் சொல்லுவான்.

க௦. 'கொங்குதேர் வாழ்க்கை' என்னுங்கவிதைவருமாறு: "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற், செறியெயிற் றரிவை கூந்தலி, னறியவு முளவோநீ யறியும் பூவே" (குறு. உ.); "பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ்கூறிப், பொற்குவை தருமிக் கற்புடனுதவி, யென்னுளங் குடிகொண் டிரும்பயனளிக்கும், கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்." (கல். க.)

கக. கவிதை ஏடு - செய்யுள் எழுதப்பெற்ற ஏடு. வாய்மையுரியவர் - சங்கப்புலவர். கீலி - கிழி. கொள், ஏவல்.

கஉ. நன்பு - நன்மை. புலவர்கள் வெளிப்படையாகப் புகழவில்லை.

க௩. வேதியன் - தருமி.

க௬. அரவம் - முழக்கம்.

கஎ. இதை - இக்கவியை. நீ கொண்டுவா.

க௯. கற்றுச்சொல்வோர் - கற்றுச்சொல்லிகள். திருமுடிச்சாத்து-தலைக்கட்டு; (உ௩) ௫: "தனிமுடிச்சாத்துஞ் சாத்தி". ஆழிகள் - மோதிரங்கள். தேத்து - இடத்து.

உ௦. பிழம்பு - திரட்சி.

உக. வாளா - சும்மா.

உ௨. கவிதைகளிரண்டும் வருமாறு:—வெண்பா. "அங்கங் குலுங்க வரிவாளி னெய்தடவிப், பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் - சங்கதனைக், கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ வென் கவியை, யாராயு முள்ளத் தவன்." "சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிரார்க் கேதுகுலம், பங்கமுறச் சொன்னாற் பழுதாமோ - சங்கை, யரிந்துண்டு வாழ்வோ மரனாரைப் போல, விரந்துண்டு வாழ்வ திலை."; 'சங்கரனார்க் கேதுகுலம்' என்றும் பாடம். விளிந்து - நாணமுற்று.

உ௩. செய்யாவிடின், மேற் சிக்கு நாறுமே.

உ௪. ஒக்குமே - பொருந்துமா. செற்றி - நெருங்கி. அல் தரும். இயற்கை இலை.

உ௫. அதுகண்டு - அதுதெரிந்து. சடிலம் - சடை.

உ௭. எயென - விரைவாக.

உ௮. பேச்சைக்கண்டு - சொல்லை யறிந்து. இகலைவிட்டு வழக்கைக் காணுமென்க.

உ௯. சிற்புட்பகேசி - ஞானப்பூங் கோதை; இது, சீகாளத்தியிலுள்ள அம்பிகையின் திருநாமம்; "இன்னபூவாசகேசி" என்பர்; ௩0. கூப்பிடுகின்றவாறு தெளிந்தறிந் திலையோ.

௩௧. நார ற - அச்சமற.

௩௨. வாய்த்ததென்று வாழ்ந்தனன்.

௩௩. மிக்க தேவியை. ஊழி - பலநாள்.

௩௪. தி ந்து இருக்கு உள் அத்ர் - தி ந்திய வேதம் தியானிக்கின்ற தலை ். தி ளத்து - அழகிய நெற்றிய . தி ா பொரும் திருக்குளத்து - அலைகள் மோதுகின்ற பொற்றாமரை யில். உளத்து பெருந்தி க்கு உள்ளான் - உள்ளத்திற் பெரியமாறுபாட்டையுடைய நக்கீரர்.

## கஎ - ம் திருவிளையாடல்.

௩. ஓர் அந்தாதி - கயிலைபாதிகாளத்திபாதியந்தாதி.

௪. ப ச்சி - துதித்து.

௫. மேற்கூறிய அந்தாதியின் முதல்வெண்பாவின் முதல், "சொல்லும் பொருளுமே" என்பதாதலின், 'சொல்லெனுமருந்தமிழ்' என்றார். தாங்குதல் கொடாது - தாமதியாமல். அடுத்து நின்று தடத்தினின்று இனி தெடுத்தானென்க.

௬. வன்னியென்றது நெற்றிவிழித் தீயை. சான்றவர் - சங்கப்புலவர்.

௭. பூண - தொண்டுபூண. 'அங்கு' என்றது சங்கமண்டபத்தை. அறிஞர் - சங்கப்புலவர்.

## க௮ - ம் திருவிளையாடல்.

௧. போதம் - போதித்தல்.

௩. தென்றல்வரை - பொதியில். சேர்ந்து அபயமென்று.

௬. பொற்ற - பொலிவுபெற்ற.

௯. பரிசஞ்செய்து - தீண்டி.

௧0. அன்னுழை - அவ்விடம். வாய்மையான் - சிவபெருமான்; எழுவாய்.

௧௨. பிறர்கண் அக்கரம் பொறாதவன் - பிறரிடமுள்ள வித்தையைச் சகியாதவன்; அக்கரம், ஆகுபெயர்.

௧௩. தமிழ்க்களும் - செய்யுட்களும். இருளைக்கினான் - நக்கீரர்.

## க௯ - ம் திருவிளையாடல்.

௧. (௨0) ௩: "ஆலவாயமுதே", (௨௭) ௧: "அலவா யமுத வாயான்" என்பர் பின்னும். பொருட்சூத்திரத்திற்கு - இறையனாரகப்பொருட்சூத்திரத்திற்கு. ஒருகாலத்தில்.

௪. இயல்வாணர்,விளி. உப்பூரிகிழாரென்பது உருத்திரசன்மனாருடைய தந்தையார் பெயர்.

௬. யாமொருசெய்யுள்-எந்த உரையை; உரையும் செய்யுளென்றுவழங்கப்பெறும்; "இலக்கண மிலக்கிய முறையெனப் பெயர்பட், டிருக்குமென் றெண்ணுக செய்யுளி னியல்பே" (இல. கொ. ஒழி. சஙி.) என்னும் சூத்திரத்தாலும் அதன் உரையாலும் உணர்க. உணடோ - உண்டாமோ.

௧0. செட்டி - வணிகன், முருகக் கடவுள்; (௨௨) ௯: "செட்டியுஞ் செட்டியா யுதித்தான்."

## உ0-ம் திருவிளையாடல்.

௧. "தோழனுங்கபிலன்" என்பர் பின்னும்; ௩. இதவியோன் - இன்பத்தைச்செய்பவன்; (உ௧) ௬: "இதவிய புல்லு மிட்டேம்."

உ. பாண்டியன் இடைக்காடனைத் தள்ளியது, ௧௧· "உன்னுடை மதத்தாற் றள்ளி யோட்டியதென்னை" என்பதனாலும் துணியப்படும். பொலாமணி=பொல்லாமணி - துளையிடாதமணி; சிவபெருமான்; "புகவே தகேனுனக்கன்பருள் யானென்பொலாமணியே." (திருவா. திருச்சதக. ௧0); "என்பொலா மணிமன மிரங்கிற் றென்பவே." (பிரபு. முனிவர். ௬.)

௩. இதில், சொல் உமை, பொருள் சிவபெருமானென்றதை, "என்னையிகழ்ந்தனனேசொல் வடிவாய்நின்னிடம்பிரியா விமயப் பாவை, தன்னையுஞ்சொற் பொருளான வுன்னையுமே யிகழ்ந்தனன்" (திருவிளை. இடைக்காடன். ௧0.) என்பதனாலுமுணர்க.

௫. மின் - உமாதேவியார். மேவ - சிவபெருமான் எழுந்தருள; "முன்னிடைக்காடன் பின்னெழ நடந்து." (கல். ௭௬.)

௭. எண்ணமொன்றிலாமல் - புத்திபூர்வமின்றி.

௮. கவிமனர் - கவியரசர்; சங்கப்புலவர்.

௯. கால் நடை.

௧0. கிஞ்சில்=கிஞ்சித் - சிறிது; இது, மலைநாட்டுவழக்கு.

௧௧. அந்தாதியென்றது, சிவபெருமான்திருவந்தாதியினை; இது, ௧௧-ம் திருமுறையிலுள்ளது. சொன்னவனுகிய கபிலன். என்னை - யாது.

௧உ. உனக்குப் போதுமோ - உனக்கு இத்தன்மை உண்டாதல் தகுமோ.

௧௪. நன்புலவன் - இடைக்காடர்.

௧௫. பன்னியதமிழ் - இடைக்காடர்பாடியதமிழ்ப்பாடல்கள். இடைப்படுப்பதத்து எருத்தம்-யானைப்பிடர்.

## உ௧-ம் திருவிளையாடல்.

உ. உறை - வீடு.

௩. நாவல்பயில் தென்புலம - நாவலந்தீவு. நாம் அளித்த வேலை அற அச்சத்தைக்கொடுத்த கடல் வற்றும்படி. சென்று எறி.

௪. பரவை வரக் கண்டு.

௬. சிவந்து-கோபித்து. அடிவடிம்பு அலம்ப-பாதத்தின் ஓரத்தைக்கழுவ.

௮. சத்து - வலி, மேவல்.

௯. நினைக்குங்கண் - நினைக்குமிடத்து. தமிழ்ச்சங்கம், முதற்சங்கம் இடைச்சங்கம் இவற்றின் நிலையையுடையதாகும். கங்கைக்கரை - பொற்றாமரைக்கரை; கங்காநதியின்கரையுமாம். ஸ்ரீஹாலாஸ்யமாஹாத்மியம், ௩௩-வது லீலை, ௪௬-ம் சுலோகமுதலியவற்றைப்பார்க்க.

## உஉ-ம் திருவிளையாடல்.

௧. ஆகமங்களைத் திருவாய்மலர்ந்தனன்.

உ. நனிவெகுண்டு.

௩. தந்திமத்தகப்பிள்ளை-விநாயகர்; மத்தகம்-தலை. துதிக்கை-துதித்தல், தும்பிக்கை. பௌவம் - கடல்.

௬. பல கை - பன்னிருகைகள்.

௭. மூங்கையம்புதல்வன்-ஊமைப்பிள்ளை.

௮. கணநாதனொருவன் உட்புக. அத்தி - கடல். ஆகமமெடுத்து உலவிடு. புத்தி - ஞானம்.

௯. அதியனையன் - வலைச்சாதிக்கு அரசன்; 'அதிபத்தர்' என்பதனாலுமுணர்க; ௧0, ௧௮. இவ்வரசனுடைய ஊரின்பெயர் விக்கிரமமென்று திருவுத்தரகோசமங்கைப் புராணம் தெரிவிக்கின்றது. காவல்நந்தி. செட்டி - முருகக்கடவுள்.

௧௧. பிறிவு - பிரிவு. வலைவாணர் - வலைஞர். பரதன் - வலைஞன்.

௧உ. மாமடி - மாமனார்; விளி; (௬) ௩-ம் செய்யுட்குறிப்பைப் பார்க்க. மறைநூல் முறைதரு கயிறு - வேதமாகிய நூலால் முறைமையுண்டாக்கப்பெற்ற கயிறு; வேதக்கயிறு.

௧௩. வாங்கு கயிறு - குறுக்கேமறித்து வாங்கும் கயிறு. கண்கள் - வலையின் இடைவெளி. மணி - உருண்டைகள். "ஒரு சிறுகுடிப் பரதவனாகிப், பொன்றலைப் புணர்வலை கொடுங்கர மாக்கி, நெடுங்கடல் கலக்குமொருமீன் படுத்த, நிறையரு ளுயகன்" (கல். ௧௧.)

௧௫. மிடித்தனம் - வறுமையுற்றேம்; "இடைமிடித் தார்தமைத்தேடி" (திருவெங்கைக்கோவை, ௩௧.)

௧௬. சிலைத்து - முழங்கி.

௧௭. "அதியனாய மங்கை யமர்ந்தான் றன்னை" (திருநா. தே. திருவதிகை.) என்றதிருவாக்கு, சிவபெருமான் அதியனாயன் திருமகளை விரும்பி மணஞ்செய்தருளிய இவ்வருமைத்திருவிளையாடலைப் புலப்படுத்தி விளங்குதல் காண்க.

௧௯. இறைபணியே - சிவபெருமான் திருவிளையாடலே.

௨௦. ஆதிமுனி, விளி.

௨௨. புரியா - புரிந்து. "எண்ணெனுத்தமப்பத்தர்" என்பர் பின்னும்;

௨௩. மன்றற் பேதை - மங்களேசுவரி. திருவுத்தரகோசமங்கைப் புராணம், அத்தலத்தில் தவஞ்செய்த முனிவர்கள் ஆயிரவரென்றும் அவர்களுக்குக் காட்சிகொடுத்தருளியவருடைய திருநாமம் காட்சிகொடுத்தநாயகரென்றும் கூறுகின்றது; பார்ப்பதிதவம்புரிந்த அத்தியாயம் பார்க்க.

௨௩. பத்தர்தங்கண்-பத்தரிடத்து, உத்தர ஆகமகோசங்கள் - விடையாகிய ஆகமபுத்தகங்கள்.

## ௫௩-ம் திருவிளையாடல்.

௪. சமாதி - சங்கற்பம்.

௫. துப்பு - பவழம்; தூய்மையுமாம்.

௬. கழையதண்டு - மூங்கிற்றண்டு. கலிங்கம் - ஆடை. முடிச்சாத்து - தலைப்பாகை. காதணிகளும் கண்டிகைகளும் தாழ.

௯. வளைத்தனன் - அகப்படுத்திக் கொண்டார்.

௧௦. மாலை - மயக்கத்தை.

௧௪. வளைப்போம் - தடுப்போம்; "வள்ளனீங்கப்பெறாய்வளைத்தேனென" (சீவக. குண. ௩௬.).

௧௫. தனம் - கொங்கை, பொன். "இதழியுந் தும்பையு மதியமுங் கரந்து, வளைவிலை மாக்கள் வடிவெடுத்தருளி, முத்தமிழ் நான்மறை முனைத்தருள் வாக்கால், வீதி கூறி விதித்த முன் வரத்தாற், கருமுகில் விளர்ப்ப வறனீர் குளிப்பக், கண்புதை யாப்புத் திணியிருள் விடிய, வடமொறும் பிணித்த பாவமும் புலரக், கண்டநீள் கதுப்பினர் கைகுவி பிடித்துக், குருகணி செறித்த தனிமுத லுயகன்." (கல். ௪௬.)

௧௬. செட்டியார், விளி.

௧௭. பாலலோசனம்-நெற்றிக்கண்.

௧௮. அளகைக்கோன் - குபேரன்; கோனென்னும்பெயர் வணிகருள்வழங்கும். மழவுற - இளமையுற. மழவுறுதற்குக் குமரியாடவந்தனின்; குமரி, சிலேடை. கிளை - நல்லகுலம், மூங்கில். இச்செய்யுள், "வந்தவர்வென்னை" (சீவக. சுர. ௨௬) என்னும் செய்யுளின் கருத்தைத் தழுவிவந்தது.

௨௦. பரிசனம் - ஸ்பரிசம். தாங்குதல் கொடாது - பொறாமல்.

௨௧. 'அஞ்சி' என்றார், பழியஞ்சியாதலின்.

௨௨. 'உடையவனறிந்திடாத சரக்கில்லை' என்பது ஒருபழமொழி.

௨௪. செச்சைக்கண்ணி - வெட்சிமாலை.

## ௫௪-ம் திருவிளையாடல்.

௧. காடுவெட்டியென்பது, இவ்வரசன்பெயர். தன் இலச்சினை - மீனமுத்திரை.

௨. ஆலயம் - இந்திரவிமானம்; அஃது, அ - யானை, ௬௪ - கணநாதர், ௩௨ - சிங்கங்களால் தாங்கப்பெறுவது; "கரியெட்டுஞ் சினமடங்க ளெட்டு மெட்டெட்டுக் கணமுந் தாங்க." (திருவிளை, இந்திரன். ௮௩.)

௩. 'தென்னனொடு பேராறும் வாரா வாறு நீங்குசெயக் கண்டனை' என்பதை, "வழுதி யன்றியும் வையை யும்பகை யான தென்று வருந்தினன்" (திருவிளை. விடை. ௧௧.) என்பது தழுவிவந்திருத்தல் காண்க.

௪. முரித்து - இடித்து. இயந்திரத்தால் ஏற்றி. எயில் முரிவாய் - மதிலை இடித்த வாயில்.

௫. மேல்விதும்ப - உடல்நடுங்க.

௬. ஆராஅன்பு - தெவிட்டாத அன்பு. தடிநி - ஆறு.

௭. ஏற்று இலச்சினை - இடபமுத்திரை.

௧௦. போத - மிக.

௧௧. வாய்மதில், வினைத்தொகை. சேவுறுகுறி - இடபமுத்திரை.

௧௨. முறைமை வாயில் - இந்த வரலாற்றை யுடையவாயில்.

உ௫-ம் திருவிளையாடல்.

௧. இன்னெறி - இனியநெறி; நல்லநடை.

௪. காவலறை - காக்கப்படுதலையுடையபொன்னறை. யாரையுமறைத்து மைந்தனைக்காத்த அமைச்சர்களென்க; "முடிசூடுவான் மறைத்துக்காத்தவமைச்சர்." (கடம்ப. இலீலா. உ௫.)

௫. சூட்டுவான் - சூட்ட.

௬. உலகம் அதிர்வுறும் - உலகம் நடுங்கும்.

௭. புரை - காசபாதம்.

௯. தப்பி மண்விழுந்தவைகள்.

௧௦. வலனுடைய என்பு வைரம், இறைச்சி பவழம், கருவிழி நீலம், கவம் புருடராகம், இரத்தம் மாணிக்கம், மயிர் வயிடூரியம், நிணம் கோமேதகம், பல் முத்தம், பித்து மரகதமென்க.

௧௧. மாணிக்கம் எழுவகை இலக்கணமுடைத்து; இவற்றை, "மாணிக் கத்தியல் வகுக்குங் காலைச், சமனொளி சூழ்ந்த வொருநான் கிடனும், நால்வகை வருணமு நவின்றவிப் பெயரும், பன்னிரு குணமும் பதினறுகுற்றமு, மிருபத் தெண்வகையிலங்கிய நிறமு, மருவிய விலையும் பத்தி பாய்தலு, மிவையென மொழிப வியல்புணர்ந் தோரே." (சில. ஊர்காண். ௧௮௬-௧௮௭. உரை) என்னுமேற்கோளாலுந்தெளிக.

௧௨. சமனொளி - இலங்கைத்தீவிலுள்ள ஒருமலை; இதனை, "இலங்காதீவத்துச் சமனொளி யென்னுஞ், சிலம்பினை" (மணி. உ௮-ம் காதை, ௧0௭-௧0௮.) என்பதனாலும், அம்மலையை நான்குநதிகள் சூழ்ந்துள்ளனவென்பதை, "குடுமிச் செக்கர்ச் சமனொளிசூழ்ந்த, நிரைநதி நான்கி னிகழ்ந்தனகுறியும்" (கல். ௪௭.) என்பதனாலுமுணர்க.

௧௩. இதிற்கூறிய மாணிக்கத்தின் பன்னிரு குணங்களை, "தேய்க்கினெருப்பிற் சேர்க்கி னங்கையிற், றூக்கிற் றகட்டிற் சுடர்வாய் வெயிலிற், குச்சையின் மத்தகக் குறியினோ ரத்தி, னெய்த்துப் பார்வையி னேர்ந்து சிவந்தாங், கொத்த நற்குண முடைய பன் னிரண்டும்." (கல். ௪௭.) என்பதனாலும்தெளிக.

௧௪. மாணிக்கத்தின்குற்றம் பதினறென்பதை, "கருகிநொய் தாதல் கீற்று வெகுளி, திருகன் முரணே செம்ம ணிறுகன், மத்தகக் குழிவு தராசமிலைச்சுமி, வெச்சம் பொரிவு புகைதல் புடாயஞ், சந்தைநெய்ப் பிலியெனத் தருபதி னறும்" (கல். ௪௭.) என்பதனாலுந்தெரிக.

௧௫. அங்கியும் அகில்விழுதழலும். சாதுரங்கமுதலியவை மாணிக்கத்தின்வகை; இங்கே மாணிக்கத்திற்குப் பொதுவாகக்கூறிய இருபத்தெட்டு நிறங்களை, நால்வகைப்படுத்தி, சாதுரங்கத்திற்குப் பத்துநிறங்களும் குருவிந்தத்திற்கு எட்டும் சௌகந்திக்கு ஆறும் கோவாங்கத்திற்கு நான்குமாகக் கூறுவதுமுண்டு; "தாமரைகழுநீர்" (சில. ௩௪௬-ம் பக்கம்.) என்னும் மேற்கோள் முதலியவற்றையும் "கதிர்நிரைபரப்பும்" (கல். ௪௭.)

என்பதையும், "சாதுரங்கநிறம்" (திருவிளை. மாணிக்கம். ௩௯.) என்னும் செய்யுள் முதலியவற்றையும்பார்க்க. மேற்கூறியவற்றில் ஒத்தும் ஒவ்வாதும் இருப்பனவுள.

௧௬. தேசிடையளவே விலைகோள், ஒளிபரத்தலே பத்திபாய்தல். முத்துக்கள் தலசம் சலசமென இருவகைப்படும்; அது பதின்மூன்றிடத்துப் பிறக்குமென்பர், பரஞ்சோதிமுனிவர்; (திருவிளை. மாணிக்கம். ௫௩ - ௫௪). இங்கே, 'காகவாகனர்திண்டோள்' என்றவிடத்து, அதில், 'ஐவாய்மான்கை' என்பது கூறப்பட்டுள்ளது.

௧௭. "உடுத்திர ளனைய காட்சியுருட்சிமா சின்மை கையா, லெடுத்திடிற் றிண்மை பார்வைக் கின்புறல் படிக மென்ன, வடுத்திடு குணமாறு" (திருவிளை. மாணிக்கம். ௫௮.) என முத்தின்குணம் ஆறென்பர். வயிரம் பிறக்குமிடம் எட்டு.

௧௮. வயிரத்தின் குற்றம், ௧௨; குணம், ௫; "சரைமலங் கீற்றுச் சப்படி பிளத்த, றுளைகரி விந்து காக பாத, மிருத்துக் கோடிக ளிலாதன முரித, ரூரை மழுங்க றன்றே, டீராறும் வயிரத் திழிபென மொழிப", "பலகை யெட்டுங் கோண மாறு, மிலகிய தாரையுஞ் சுத்தியுந் தராசமு, மைந்துங் குணமென் றறைந்தனர் புலவ, ரிந்திர சாபத் திகலொளி பெறினே" (சில. ஊர்காண். ௧௮௦ - ௧௮௩. விசேடவுரை.) என்னுமேற்கோள்களாலுமுணர்க.

௧௯. ஆருலக்கண் - பசுவின்கண். பூவைப்பூ - காயாம்பூ. நீலத்தின் ஒளிவகையை, "கோகுலக் கழுத்துக் குவளை கரும்ப, ராகுலக் கண்களவிரிச் சாறு,..........காயா நெய்தல் கனத்தல் பத்தி, பாய்த லெனக்குணம் பதுஞென் றுமே" (சில. ஊர்காண். ௧௮௦. விசேடவுரை.) என்னுமேற்கோளாலும் உணர்க.

௨௦. வீரை - ஒருவகைமரம். பவழத்தின் குற்றம் இன்னவென்பதை, "கருப்பத் துளையவுங் கல்லிடை முடங்கலும், திருக்கு நீங்கிய செங்கொடி வல்லியும்" (சில. ஊர்காண். ௧௯௭ - ௧௯௮.) என்பதனாலும், பச்சையின் குணங்களை, "நெய்த்தன் மயிற்கழுத் தொத்தல்பைம் பயிரிற், பசுத்தல் பொன்மை தன்னுடன் பசுத்தல், வத்திபாய்தல் பொன்வண் டின்வயி, றொத்துத் தெளிதலொ டெட்டுங் குணமே" (சில. ஊர்காண். ௧௮௪, ௧௮௫. விசேடவுரை) என்பதனாலுமுணர்க.

௨௧. பச்சையின்குற்றம் எட்டும், "கருகுதல் வெள்ளை கன்மணல் கீற்றுப், பொரிவு தராச மிறுகுதன் மாகதத், தெண்ணிய குற்ற மிவையென மொழிப" (சில. ஊர்காண். ௧௮௪, ௧௮௫. விசேடவுரை) என்பதனால் ஆராய்தற்குரியன.

௨௨. தோராவல்லி, தோரமல்லியெனவும் கனகதோராவல்லி, கனகபுஷ்பராகமெனவும் வழங்கும்.

௨௩. நவம் - புதுமை, ஒன்பது. மறைபறை - வேதம் சொல்லுகின்ற.

௨௯ - ம் திருவிளையாடல்.

௧. பவநிசி - பாவமாகிய இருள்.

௨. எண்ணி, நெட்டோலையைக் கட்டி விட்டனன்.

௩. பதிகள் - ஊர்கள். என்று நெட்டோலையைக் கட்டிவிட்டனனென முன்னேகூட்டுக.

௪. எண்கிரி - எட்டுமலை; அவை பலவாறு வழங்கும்; அவற்றின்பெயர்களை, சைனர்களுள் வழங்குவதாகிய, "பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி, யருங்குன்றம் பேராந்தை யானை - யிருங்குன்ற, மென்றெட்டு வெற்பு மெடுத்தியம்ப வல்லார்க்குச், சென்றெட்டு மோபிறவித் தீங்கு" என்னும்பழைய வெண்பாவாலும், "அருகனங் கௌஞ்சங் கோவத் தனந்திரி கூடங் காஞ்சி, முஞ்சர சைய மேமகூடமே விந்த மென்னு, மஞ்சிவர் வரைக ளெட்டும் வைகுறு மமணர்" (திருவிளை. யானை. ௭.) என்பதனாலுமுணர்க; மதுரையைச் சூழ்ந்த எட்டு

மலைகளென்பாருமுளர். வாழ்ந்து - மகிழ்ந்து. சட்டென - விரைவாக.

௯. மன்று - பொதுவான இடம்; அசோகமரம் அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்களென்னுமிவர்கள் தங்கிய ஐந்திடங்கள்கூடியமன்றின்கண் நிற்பதாகச்சொல்லப்படுமாதலின், 'மன்றுநீ டசோகநீழல்' என்றார்; "சந்தி யைந்துந் தம்முடன் கூடி, வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப், பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழல்" (சில. நாடுகாண். ௧௧ - ௨௧.) என்பதனாலுணர்க.

௬. மொஞ்சகம்-மயிலிறகின் தொகுதி; மந்திரித்தற்குச் சைனர் கையிற்கொள்வது; "தழையுலாங்கையர்" (திருவிளை. விருத்த. ௧.).

௮. நீட்டு - தூரம். அதிர்வு - முழக்கம். 'முடிமணியெனக்களித்த' என்றதனால், இவன்காலத்து இரண்டு திருவிளையாடல்கள் நடந்தன வென்பது அறியப்படுகின்றது.

௧௦. அட்டாலை - மதின்மேல்மண்டபம். அது ஞாயிலென்றுங்கூறப்படும். கண்டான் - கேட்டறிந்தான்.

௧௧. முன்னர் உழைமதிதவழ் எயில் - கிழக்குமதில்; ௧௦: "கீழ்பாலிஞ்சி" என்றார்; முன்னர் - முதலிலென்றுமாம்; உழை - மான்.

௧௨. தொப்பாரம் - வீரர்கள் தலையிலணியும் முடிவிசேடம்; இஃது இக்காலத்தில் ஆலயங்களிலே காணப்படும்.

௧௩. எழ - மிக.

௧௪. அருவியோங்கல் - யானை. இலக்கு - லக்ஷ்யம்.

௧௫. திருமாலும் பிரமனும் இந்திரனும் போற்ற. யானை ஆலயம்-யானைகளாற் சுமக்கப்படும் இந்திரவிமானம்.

௧௭. செல் - மேகம். அரி முகமால் வாளி - நரசிங்காத்திரம். குளம்-நெற்றி. இலத்திவாய் - அபானம். உதப்பி - வயிற்றிற்சீரணியாமலிருக்குமுணவு.

௧௮. அத்தி இலத்தி சொரிந்தது - யானையானது இலத்தியைச் சொரிந்தது.

௨௦. மானிடர் அடைய - மனிதர் எல்லாரும்.

௨௨. தலை பறி - தலைமயிரைப் பறித்துக்கொள்கின்ற.

௨௩. கல் - மலை. [ரேசர்.

௨௪. வடிவுடைக்கடவுள் - சுந்த

௨௫. கச்சம் - அளவு.

௨௭. பிறங்க நின்றான்.

௨௯. பருப்பத இபத்தை - மலைபோன்ற யானையை. அவதானம் - தொழில் வரலாறு; திருவிளையாடல். காவலன் இருத்தினான்.

## ௨௭ - ம் திருவிளையாடல்.

௧. சாத்தவர்கள் - சென்றுசென்று வியாபாரஞ்செய்யும் வாணிகர்திரள்; இது, ஸார்த்தமென்னும் வடமொழியடியாகப் பிறந்ததென்பர். புரவிநூல் - அசுவசாஸ்திரம். குதிரையிட்ட - குதிரைகளையளித்த; "இனப்பரியிட்டதன்றி" என்பர் பின்னும்; (௩௦) இப். திருவாதவூரர் புராணத்தில், 'குதிரையிட்ட சருக்கம்' என்னும் பெயரும் இங்கே அறியற்பாலது.

௩. மதூகம் - இருப்பைமரம்; 'நெட்டிலையிருப்பை' என்னும் அகவல், "நெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ, வாடா தாயிற் பீடுடைப் பிடியின், கோடேய்க் கும்மே வாடிலோ பைந்தலைப், பரதர் மனைதொறு முணங்குஞ், செந்தலை யிறவின் சீரேய்க் கும்மே." என்பது. இது தமிழ் நாவலர் சரிதையிற் கண்டது. இருப்பையும் மகிழும் அத்தலத்திற்குரிய விருக்ஷங்களென்று தெரிகின்றன; "கமழ்மதுக மகிழ்வாத புரத்து." (கடம்ப. இலீலா. ௨௭.). அத்தலத்தில் ஸ்ரீமாணிக்கவாசகர்க்குச் சிவபெருமான் திருச்சிலம்பொலியைக் காட்டியருளினர்; "வாத வூரினில் வந்தினி தருளிப், பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்" (திருவா. கீர்த்தி. ௯௨ - ௯௩.) என்பதனாலும், இந்நூல்,

உஅ - ம் திருவிளையாடல், கச - ம் செய்யுளாலுமுணர்க. வேதநாதரென்பது, அத்தலத்துச் சிவபெருமானுடைய திருநாமமாதலின், 'வேதநாயகனார்' என்றார்; "வேதியர்" என்பர்மேலும்; ௬. திருமால்வந்து பூசித்தபொழுது "வேதாகமம்" என்றசுருதி, சிவலிங்கப்பெருமானிடமிருந்து தோன்றினமையின், இத்திருநாமம் அமைந்ததென்று அத்தலத்து வடமொழிப்புராணம் தெரிவிக்கின்றது.

௪. ஆதியாகிய ஆதித்தன். சோமன் - சந்திரன். வாதராசன் - வாயுதேவன்.

ரு. வளை - சங்கு.

௬. மானமங்கலமென்பது, திருவாதவூரருடைய முன்னோரிருந்த ஊரின்பெயரென்று தெரிகின்றது; இந்நூல், உஅ - ம் திருவிளையாடலில் அ - ம் செய்யுளிலுள்ள, "இருநிதி விருநின் மானபுர மென்னுங் கொடுமை பொறுக்ககிலேன்" என்பது ஆராயத்தக்கது. ஒரு கணநாதர், சிவபெருமான்கட்டளைப்படியே வந்து திருவாதவூரராக அவதரித்தன ரென்பதை, "கணநாதர் தமிலொருவன் விடையிற் போந்து கமழ்மதுக மகிழ்வாதபுரத்து வாழந், தணராமாத் தியர்குலத்துட் டோன்றி" (கடம்ப. இலீலா. உஎ.) என்பதனாலுமுணர்க. இந்நூலில், (உஉ) அ: "இத்தகைமையிற்றிகழு மெல்லையினி லுட்புக விலங்குகண நாத னொருவன்" என்றது இங்கே அறியற்பாலது. இச்சரிதவிரிவை, திருவுத்தரகோசமங்கைப்புராணம், பாரப்பதி தவம்புரிந்த அத்தியாயத்தாலுமுணர்க.

எ. முன்னூல் - வேதமுதலியன. [illegible] நன்மை [illegible] தலைமை சேர் நா [illegible] பிரமாணம் [illegible] ; [illegible] ; "[illegible] என்பர், [illegible] ; [illegible] ; [illegible] மாராயனென்பது, பிரமாதிராயனெனவும் சிலாசாதனங்களிற் காணப்படுகின்றது.

அ. ஏற்ற தாழ்வு கேட்டிருத்தல் - புகுந்துள்ள குறைகளை விசாரித்துப் பரிகரித்திருத்தல்.

கூ. செய்தி - நாற்படைச்செய்தி.

கச. கோடகம் - குதிரை.

கரு. துற்ற - நெருங்கின. கொளப்படும் - கொள்ளல்வேண்டும்; தேற்றவினை.

கசு. மறு மண்டலம் - வேற்றரசர் தேயங்கள். பந்தி - குதிரைச்சாலை. கட்டத்தகும், தேற்றவினை.

கஅ. அகம் - பாவம். வீந்தனவென்று பகர்ந்தனர். அறை - பொன்னறை. புரவிநூல் - அசுவசாஸ்திரங்கள்; சூரியனாலும், சாலிகோத்திரராலும் அந்நூல்கள் செய்யப்பட்டுள்ளனவென்பர்.

கக. மாற்றம் நன்று.

உO. புஞ்சம் - தொகுதி. கண்காணியின் - மேற்பார்வையுள்ளோனால்; இப்பெயர், இப்பொருளில் தென்னாட்டில் வழங்குகின்றது.

உக. பரிக்கும் செம்மையோர் - சுமத்தற்குரிய நல்லொழுக்கமுடையோர்; "பொன்பரித்தவரை" என்பர்பின்னும்; சக.

உரு. பெண்ணை அன துதிக்கை பிள்ளை - பனைபோன்ற துதிக்கையையுடைய பிள்ளை; விநாயகக்கடவுள்.

உச. ஆம் குமரன் - பெருமையையுடையவராகிய முருகக்கடவுள். ஓங்கும் அரன். கனி - மாங்கனி.

உசு. என்று ஆர் - சூரியன் பொருந்துகின்ற; சூரியனை ஒத்தவென்பதுமாம். இச்செய்யுளிலுள்ள நயங்கள் மிகப்பாராட்டற்பாலன.

உஎ. யாய்த்த பேரண்டத்தான் - அண்டங்களைப்பெற்றருளியவர்.

ஙO. மற்று மன்னர் - வேறு அரசர்கள். பல்லியம் - பலவாத்தியம்.

ஙக. காலே - சிவபெருமான் திருவடியை. கானை - திருக்கானப்பேர்; காளையார்கோயில். ஐராவதம், தனக்கிருந்த சாபந்தீரும்பொருட்டுச் சிவ

பெருமானை வழிபட்டதென்பது அத்தலபுராணவரலாறு; "மானமா மடப்பிடி வன்கையா லலகிடக், கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்" (திருஞா. தே.) என்பதனாலுமுணர்க. ஐராவதத்தால் உண்டாக்கப்பெற்ற, மிகப்பெரிதான தடாகமொன்று, யானைமடுவென்னும் பெயருடன் இன்றும் அத்தலத்தே உள்ளது.

௩௨. பகல் - சூரியன். அந்தணன் - பிரமன். திருமான்மைந்தன் - மன்மதன். கோடுடைமாமுனி - கலைக்கோட்டுமுனிவர். பூமகள் - பூமிதேவி. பூழியன் - பாண்டியன். காரணவன் - சுந்தரேசுவரர். சோமன் - சோமேசுவரர். காளை - காளையீசர்; அத்தலத்திற் சுந்தரேசுவரர், சோமேசுவரர், காளையீசரென்று மூன்று சிவலிங்கப் பெருமான்களுடைய சந்நிதிகள் உள்ளன. விக்கிரமசோழன்மகள் சுகந்தகேசியை மணம்புரிந்த வரகுணபாண்டியர், அவளுடைய அழகின்மிகுதியைக்கண்டு அத்தலத்திற் சிவபெருமானுக்கு அர்ப்பணஞ்செய்தனரென்பதும் அவளுடைய கூந்தலின் நறுமணம் எங்கும் பரவியதுபற்றி அத்தலம் சுகந்தவனம் அல்லது கந்தவனமென்று பெயர்பெற்றதென்பதும் அத்தலபுராணவரலாறுகள்.

௩௩. 'மொய்யார் பொய்கை' என்பது, திருப்பெருந்துறையிலுள்ள ஒரு தீர்த்தம்; "மொய்யார் தடம்பொய்கை புக்கு" (திருவா. திருவெம். ௧௧.) என்பதனாலுமுணர்க. திருப்பெருந்துறையென்பது, பிருகத்தீர்த்தமென்று வடமொழியில்வழங்கும்; இத்தலம் இக்காரணப்பெயர்பெற்றதை, திருப்பெருந்துறைப்புராணத்துள்ள பெருந்துறைப்படலத்தாலுணர்க.

௩௪. வளை - சங்கு. நாகம் - புன்னை; நாகம் நித்திலம் காட்ட.

௩௫. மூன்றுநூறுமறையவர் - மூந்நூற்றுவர்; இவர்கள் இத்தலத்திற் சிவபெருமானைப் பூசித்தல் முதலிய வழிபாட்டிற் குரியோர்; தில்லைமூவாயிரவரைப்போல. இறையினின் அமரராக்குமென்க.

௩௬. சந்தை - வேதம்; சிவபெருமான் உபாத்தியாயர் வேடம்பூண்டு அத்தலத்தில் ஓரிடத்திற் சிலநாளிருந்து மேற்கூறிய மூந்நூற்றுவர்களுடைய பிள்ளைகளுக்கு வேதத்தை ஓதுவித்தமையின், 'சந்தைபடுந்துறை' என்றார்; "வேதநாயகற்கு" என்பர் பின்னும்; ௩௭. ஓதுவித்த இடம், பள்ளிக்கூடமென்று இன்றும் வழங்குகின்றது. தொந்திகொள் தந்தி - விநாயகர். குருந்தமரம் - இத்தலவிருக்ஷம்.

௩௮. கலைச்சங்கம் - வித்தையின் தொகுதி; அடியின் தொகுதியென்பது மற்றொருபொருள். மறையுருவங்கம் - திருவாதவூரர்.

௩௯. சிலும்ப - சிலிர்ப்ப.

௪௧. பாக்கியம் - புண்ணியம். அறுதியிட்டு - நிச்சயித்து.

௪௨. நீங்கள் போய் உரையும்.

௪௩. ஒப்பார்போல - இராசகாரியங்களை ஒழுங்குபடச்செய்யும் இயல்புடையவரைப்போல; "பெரிய செல்வரொப்பார்போல்", "மனமகிழ்ந்து விரைந்தொப்பார் போலச் சென்று" என்பர் பின்னும்; ௯௪, ௭௧; "ஒவ்வாதார் தாமெனவ ரொப்பார்மற் றெனைவர்" (சீவக. கேம. ௬௩௨.) என்பதையும் அதனுரையையும் பார்க்க.

௪௫. காசு இல் நான்மறை. எட்டால் - அஷ்டாங்கவந்தனத்தால். அஞ்சினால் - ஐந்து அங்கவந்தனத்தால்.

௪௭. நோக்குபதேசம் சக்ஷுர்தீக்ஷை.

௪௮. முதலடியிரண்டும் நிரனிறை.

௪௯. சிவபாக்கியம் - சிவபுண்ணியம்; என - என்றுசொல்ல. பரங்கண்டவர் - திருவாதவூரர்.

௫௧. சபவடம் - ஜபமாலை. மரித்த - நினைத்த; இறந்தவென்றுமாம்; "மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" (தாயு. பரா. ௩௯௧).

௫௨. சாத்தல் - வேதம்; திவ்யப்பிரபந்தமோதுதலைச் சாத்துமுறையென்

னும் வழக்கமும் இதனைவலியுறுத்து கின்றது.

ருச. ஞானப்புதல்வர்கள் - ஞான புத்திரர்கள்; சிஷ்யர்கள்.

ருரு. குருந்தமரத்தின்கீழே சிவ பெருமான், தொளாயிரத்துத்தொண் ணூற்றொன்பது மாணுக்கர்களுடன் ஞானுசாரியராக எழுந்தருளியிருந்த னரென்றுஉணர்க; திருவுத்தரகோ சமங்கைப்புராணத்தில், பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயத்திற் கூறப்பெ ற்றுள்ள, திருவாதவூரருடைய பண் டைவரலாறு இங்கே அறியற்பாலது. புதல்வர் - மாணுக்கர்.

ருஅ. நிகழ்வ-அம்மனைமுதலிய வி ளையாட்டுக்கள். 'மெய்' என்பது, திரு வாசகத்தில், திருச்சதகத்தின்முதற் குறிப்பு.

ருகூ. ஊண் உறக்கமின்றி உடல் வருந்தி. கேட்டன அல்ல.

சுக. தென்னவர் - தென்னுட்டி னர்.

சுஉ. பாசுரம் - ஓலைப்பாசுரம்.

சுரு. மன்னவற்பிழைத்தல்-இரா சத்துரோகம்.

சுரு. தேமால் - தெய்வமாகிய திரு மால். தாமா - தாவுகின்ற குதிரை.

சுசு. வேந்தன் - பாண்டியன். உட லம் வருந்த. இதிலுள்ளவரலாறு, இங் கேகூறப்பட்டவண்ணம் திருப்பெரு ந்துறைப்பழையபுராணத்துள்ளது; இக்கதையிற் சிலபகுதி, திருப்பெருந் துறைப் புதியபுராணம், பெருந்து றைப்படலத்தால் நன்குபுலப்படும்.

சுஎ. உணர்த்தி - துயிலுணர்த்தி.

சுஅ. உளம் அஞ்சேல். வேண்டுப இட்டு - வேண்டுவனவற்றைச் சேர் த்து. பை ஓலை - பசிய ஓலை, வினைக் கண் நில்லார். கட்டு ஓலை - கட்டினை யுடைய ஓலை.

சுகூ. கேளாது உணர்ந்துகொள் வாய். வையாளி - குதிரை நடத்தும் இடம்.

எ0. பாரத்தை ஆலயத்து விடு த்து. மெத்தன - மெல்ல.

எஉ. உயர்பு எவ்வளவுபோதும் உயர்ந்த குதிரைகள் எவ்வளவு வரும். கூசல் - நாணமுறல்.

எச. வகை - குறுந்தெருக்கள்.

எகூ. அணியல் - ஆபரணம். களா சி - காளாஞ்சி.

அக. தவிர்ந்து அமைச்சனுய்.

அஉ. கிளைஞர்க்கு இனி யாருண் டென்றுசொல்ல. ஆர் வெறுப்பு ஆர் உவப்பு - ஆர் பகை ஆர் நட்பு.

அரு. தனிசு - கடன்.

அச. மங்கலமுறைசெய்வோர் நற்குணமுடைய ஏவலாளர்; "நன் னெறிமுறை செய்வோர்" என்பர் மேலும்; அஅ.

அரு. கோடிக்க - அலங்கரிக்க. கலியாணன் - நல்லநடையையுடைய வன்.

## உஅ - ம் திருவிளையாடல்.

உ. வளைத்து - தடுத்து; "வள்ள னீங்கப்பெறுய்வளைத்தேனென." (சீவக. குண. ௯௬.)

அ. இரு, நில், ஏவல். மானபுரம் - மானமங்கலம்; இது, குடிப்பெயரை க்கூறியிகழும் இகழ்ச்சிக்குறிப்பு.

க0. 'குழைத்தாய்' என்றது, கு ழைத்தபத்து. 'சோதியே சுடரே' என்றது அருட்பத்து.

கக. மிழலைநாடென்பது திருப்பெ ருந்துறையின் பக்கத்திலுள்ளது; அ திலுள்ள வேளாளர்களின்பெருமை மிழலைச்சதகத்தால் விளங்கும்.

கஉ. நரியாது - நரித்தன்மையில் லாமல்; "நரிப்பாய் நாயேனிருப்பே னே." (திருவா. கோயின்மூத்த. ௯).

கரு. கோமாயு - நரி. துறை - பெருந்துறை; ஆளுடைநாயகரென் பது - ஸ்வாமிதிருநாமம்; திருவாதவூ ரரை ஆட்கொண்டருளினமை பற்றி இஃது இவருக்குண்டாயிற்று; திருப் பெருந்துறையை ஆளுடையார் கோ யிலென்பதும் இதுபற்றியே.

கச. வாதையம்புரம் - வாதவூர்.

உ0. சூதர் - நின்றேத்துவார்; மா கதர் - இருந்தேத்துவார்.

௨௧. சம்பு மா சமாதியாலே - சிவ பெருமானது பெரிய சங்கற்பத்தாலே. சம்பு மா - நரியாகிய குதிரை.

௨௩. நீக்கு இல் நோக்கு அடியார் - ஒழிவில்லாமல் நோக்குதலையுடைய ஏவலாளர். மாறு - மிலாறு.

௨௪. வார வார - ஒழுக ஒழுக.

௨௫. குரம் - குளம்பு. இருமை - பெருமை; இரண்டுதன்மையுமாம்.

௨௭. இணங்கன் - நண்பன்; (கம்ப. கிட். மரா. ௪௦௦).

௨௮. நாயனார் - மாணிக்கவாசகர்.

௨௯. கறுழ் - கடிவாளம். தார் - கிண்கிணிமாலை. பரிச்சாத்து - குதிரைத்திரள்.

௩௦. நெறுக்கென, ஒலிக்குறிப்பு. ககனம் - ஆகாயம்.

௩௧. நூறு - புழுதி. தண்டுவன - பொருந்துவன.

௩௩. தலைக்கீடு - தலைச்சாத்து. குப்பாயம் - சட்டை.

௩௪. நெறி ஐந்து - கதியைந்து. பரிவத்தனம் - சுற்றுதல்; "இடம்வலம் பரிவத்திப்ப" என்பர் பின்னும்; ௫௫. கரவாளம் - கைக்கத்தி.

௩௫. சாத்தவர்கள் - குதிரைவாணிகர்கள்; "குதிரையைக் கொண்டு குடநாடதன்மிசைச், சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்" (திரு. வா. கீர்த்தி. ௨௭ - ௨௮).

௩௬. குதிரை ஈடு - குதிரைகளைக் கொடுத்தல். சயசயவென்று.

௩௭. சங்கு - வளையல். அறிவும் நாணும், காட்சியாற் சூல்கொள்ளுதலை, "விரும்புசூல் கொள்வார் வீழ்வார்." என்பதனுலுமுணர்க; (௫௪) ௨௫.

௩௮. காண்டற்கு ஒட்டுமோ.

௩௯. அன்பர் - திருவாதவூரர்.

௪௦. தோரை - பீலிவிசிறி.

௪௨. தவ்வும் - தாவும்; "தவ்வு புனல்" என்பர்: (௩௦) ௩௨.

௪௩. தாணு - சிவபெருமான், கட்டை.

௪௨ - ௪௩. இந்த இரண்டு செய்யுட்களின் கருத்தை, "அண்டமெலா மாதார மாகத் தாங்கு மானந்தத் தனிச்சோதி யண்டந் தாங்குஞ், சண்டமறைப் பரிதனக்கா தார மாகித் தரிக்கவொரு காலத்து மசைவி லாத, புண்டரிகத் தாளசையப் பாச நீக்கும் புனைகரத்தாற் பரிபூண்ட பாசம் பற்றிக், கொண்டரச னெதிர்போந்து மன்னு வெங்கள் குதிரையேற் றஞ்சிறிது காண்டியென்றார்" (திருவிளை. நரிபரி. ௭௫.) என்பது, தழுவிவந்திருத்தல் காண்க.

௪௫. வாசி - குதிரை, விசேடம்.

௪௮. மின் - தடாதகைப்பிராட்டியார்.

௪௯. சுபதக்ரமம் - சுபத்தைக்கொடுக்கிறநடை. அனுமனியா - ஒலித்து. மறை அயம் - வேதமாகிய குதிரை.

௫௦. மருத்தை - காற்றை.

௫௧. கஞ்சம் - வெண்கலம்.

௫௨. பரதச்சவுதம் - பரதநூல். பருமம் - குதிரைமுதுகிற்றவிசு.

௫௪. வெய்யோன் படியும் மால்வரை - அத்தமயகிரி.

௫௫. மண்டலம் - வட்டம். வீதி - நேரோடல்.

௫௬. இடபமால் - இடபவடிவங் கொண்ட திருமால். என்று - எக்காலத்து.

௫௭. கடல் திடராயிற்று.

௫௯. பல்கால் தலைவர் யாரென்ன.

௬௧. கொக்கு - குதிரை.

௬௨. குதிரைச்செட்டி கூறுவான். கற்கிகள் - குதிரைகள்.

௬௩. பெருந்துறை - பெரியகடற்றுறை, ஒரு திருப்பதி. உலூகம் - கோட்டான். குதிரை, வேதமுதலிய எழிடத்திற் பிறந்தன என்பதை, "வெடிவாற் பைங்கட் குறுநரி யினத்தினை, யேழிடந் தோன்றி யினனூற் கியைந்து, வீதி போகிய வாலுளைப் புரவி, யாக்கிய விஞ்சைப் பிறைமுடி யந்தணன்" (கல். அ) எனவும், "மிக்க செழு மறைநாவிற் கமல நாதன் விழிப்புனலில் விண்ணோர்க ளெண்மர்

தம்பான், மைக்கடன்மேலைமிர்தத்திலங்கு மீதின் மல்குகருப் பையிலுலுக வண்டந் தன்னிற், றெக்கவெழு பேதமெனு மிவற்றிற் றோன்றுந் தொன்மையவா யீரிரண்டு துணைத்தா ணைற்றி, யொக்கவெளுக் கும்பரிக ளுளவாய் வானி லொண்புனலிற் செல்லு நெறி யுளவுமாகி." (திருவாத. குதிரை. ச0) எனவும் வருவனவற்றாலுணர்க. மொத்தம் - தொகுதி; "பரிக்குமிப் பரிமா மொத்தம்." என்பர் பின்னும்; எஉ.

கூச. வாயதம் - காக்கை. வெருகு- பூனை. ஏனம் - பன்றி. நாய்முதலியவற்றின் இயல்பையுடைய குதிரைகள் பொல்லா; மயூரமுதலியவற்றின் இயல்பையுடைய குதிரைகள் நல்லன. திருவாதவூரர்புராணம், குதிரையிட்டசருக்கம், ஙகூ, ஙஎ - ம் பாடல்களைப்பார்க்க.

கூகூ. ஷை புராணம், ஷை சருக்கம், ஙஎ - ம் பாடலைப்பார்க்க.

கூஎ. வாலதி - வால். மேட்டிரம்- ஆண்குறி. ஷைபுராணம், ஷைசருக்கம், ஙக - ம் பாடலைப்பார்க்க.

கூக. ஷைபுராணம், ஷைசருக்கம், சக - ம் பாடலைப்பார்க்க.

எ0. ஷை புராணம், ஷை சருக்கம், ஙச, ஙரு - ம் பாடல்களைப்பார்க்க.

எக. மற்றும் தீங்கு இலை - வேறும் உள்ளனவாகிய தீங்குகள் இல்லை.

எஉ. கதிவெங்கால - நடையைவிரும்புகின்ற கால்களையுடையன. கந்துகம் - பந்து.

எங. 'சம்புவாணை' என்பது சிலேடை.

எச. இதிற் குதிரைகளின் விலைகள் கூறப் பெற்றுள்ளன.

எரு - எகூ. இவற்றாற் குதிரையின் பெருமைகள் கூறப்பெற்றுள்ளன.

எகூ. ஆடலாலேதான் தாமதமாயிற்று. 'ஓர்பொழுதும் நில்லாது' என்பது, சிலேடை.

அ0. தின்மை - தீமை; ஓதுவனவாகிய நன்மை தின்மை; "அடியவர் நன்மை தின்மை யறிபவன்." என்பர்: (ஙரு) கக; "தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே." (கம்ப. பயன், உ.)

அக. 'சித்திரமா' என்பது சிலேடை.

அங. இராவுத்தராயன் - குதிரைச் சேவகன்; இராவுத்தனென்பது, இராஜபுத்திரனென்னும் வடமொழிச் சிதைவென்பர்; அகூ: "இனிமைகூர்ந்திராவுத்தற்கு."; "கலாபத்தனிமயிலேறுமிராவுத்தனே." என்பது கந்தரலங்காரம், கு0.

அச. நாறு - நாற்று. இச்செய்யுள், "நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும், விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்" (திருநா. தே. திருவாரூர்) என்பதன் கருத்தைத் தழுவி வந்துள்ளது.

அரு. சென்னி - ஓராயுதம்; கொம்பு - அதன் முன்பாகம்.

அஅ. தூங்கலில்லாமல் - தாமதியாமல்.

கூ0. திருமேனிக்கீடு-கவசம். கைவாளம் - கைக்கத்தி; "கரவாளம்" என்றார் முன்னும்; ஙச. அடிவடிம்பு- அடியின்விளிம்பு.

கூக. ஆசையுடையன், சிலேடை.

கூங. உழை - வீடு. செவ்வந்திமாலை, சிலேடை.

### உகூ - ம் திருவிளையாடல்.

க. கட்டுண்டேம். தொத்துவர் தொத்திக்கொள்வார்.

உ. முகமுகம்பார்த்து - ஒன்றன் முகத்தை ஒன்றுபார்த்து; (ஙங)உச. கயிற்றைமென்று. அங்கணம் - சலதாரை. சள்ளிடல் - நரியின் ஒலிக்குறிப்பு.

ங. தொண்டைவிடுவன-கூவுவன. உள்ள - உள்ளன.

ரு. யாணர் மாக்கள் - புதியனவாய்வந்த குதிரைகள்.

சு. மட்டித்து - கலந்து. இதவிய - இனிய. மொக்கணி குதிரைக்கு

கொள்ளுமுதலிய உணவு கட்டும்பை; "மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி, சொக்க தாகக் காட்டிய தொன்மையும்." (திருவா. கீர்த்தி. ௩௩-௩௪.)

எ. மறி - ஆடு. சூகரம் - பன்றி.

அ. 'மின்னுமலிடிக்குமா' என்பது ஒருபழமொழி.

௯. வரர் - சிறந்தவர்; தலைவர். அர - அரனே; இஃது இரக்கப்பொருளிலும்வரும்.

௧௨. 'நல்ல கல்யாணனன்றோ' என்று இகழ்ந்தான், (௨௭) அடி: "என்னையின்றோர் கலியாண னாகக் காண்மின்" என்றதை உட்கொண்டு.

௧௪. கொணர்ந்த மா - குதிரை.

௧௯. சிவை - நரி. மந்துரை - குதிரைச்சாலை. இந்திரஞாலம் - இந்திரசாலம்; "இந்திர ஞாலங் காட்டிய வியல்பும்." (திருவா. கீர்த்தி. ௪௩.)

௧௭. வாசிவாரியப் பெருமான் - குதிரைச் சேவகர்களின் தலைவன்; வாசிவாரியர் - குதிரையைத்தடுத்துச் செலுத்துவோர். திண்ணிமை - வன்மை; தைரியம்.

௧௮. ஆரணமோதிற்று - நீ வேதமோதியது. கோரம் - கொடுமை. சிறையறை - சிறைச்சாலை.

௬௦ - ம் திருவிளையாடல்.

௧. அறையகத்து - அறையில். 'இரும்புதருமனத்தேனை' என்பது திருவாசகத்தில், திருவேசறவின் முதற்குறிப்பு.

௨. 'பொய்யாவையைமாநதி' என்பது, "வையை யென்னும் பொய்யாக் குலக்கொடி" (சில. புறஞ்சேரி. ௧௭௦.) என்பதைத்தழுவியது. முதுமாமங்கை - செம்மனச்செல்வி. முகில் நாயகன் - வருணன்.

௪. கால் கட்ட - வாய்க்கால்களின் தலைப்பிற்படலிட. பயம் - நீர், அச்சம்.

௫. வெள்ளமிருத்தவிடத்துப்பறையறைவித்தல் மரபு. சும்மை - ஒலி. மனம் கன்றி. என்னுகுமோ.

௬. கோல் - அளக்குங்கோல்; அறை - வரையறைசெய்த கோட்டம்; கோலால் அறுதிசெய்த இடமுமாம்; "குரம்புகொண் டடைப்பன் யானே கோலறை முழுது மென்ன" (திருவாத. மண்சுமந்த. ௩௩.)

அ. விதிரா - நடுங்கி

௯. நாதமாகிய பறை; 'நாதப்பறையன்' என்பது, "நாதப்பறையினர்" (திருவா. அன்னை. ௧.) என்பதைத்தழுவியது. இச்செய்யுளிற், சிலசாதிப்பெயர்கள் தொனித்தல்காண்க; நஞ்சுண்டோனென்பது, கள்ளர்வகையில், ஒன்றன்பெயர். பிட்டு உதிர் - உதிர்க்தபிட்டு. கொடுக்கு - தொங்கல்.

௧௧. அம்மே - அம்மையே. கொற்றாள் - மண்வேலைசெய்பவன்; "மண்ணகழ்ந் தெடுத்து வருபுனல் வையையக், கூலஞ் சுமக்கக் கொற்றாளாகி." (கல். ௪௯.); கொற்று - மண்வேலையென்பதை, ௨௩: "கொற்றுள விவரி லீங்கோர் கூடைமண் சுமந்தாரில்லை." என்பதனாலுமுணர்க.

௧௪. அந்தித்திருக்கும்பொருள் - முடித்துவைத்திருக்கும்பொருள். கந்தித்து - மணம்வீசி. உண்டு-உள்ளது.

௧௫. வட்டமுறுபிட்டு - வட்டவடிவமாகக் கிண்ணத்தாற்கொட்டி அமைத்துவைத்திருக்கும் பிட்டு; ௧௮: "கனவிய வட்டப் பிட்டுக் கைக்கொடு பிட்டுப் பிட்டு.". அம்மை, விளி.

௧௯. உழப்பாது சுமந்திடும்.

௧௯. அம்மை, விளி.

௨௦. என்ன - என்றுசொல்ல. உதிரை - பிட்டு. 'வித்துநெற்பிட்டு' என்றபாடத்திற்கு விதைநெல்லரிசியாலாக்கிய பிட்டென்று பொருள்கொள்க.

௨௨. கோலறையை. நல்லாள் - நன்மையையுடைய ஆட்கள். வாங்குதல் - கொள்ளுதல்.

௨௫. குழம்புதல் - கலங்குதல். கொட்டு அணைத்து - மண்வெட்டியைத்தழுவிக்கொண்டு. கிடை - கிடத்தல்; ஒப்புமாம்.

உஎ. வடிவன் நீ - அழகுடையவனாகிய நீ; உஅ: "மெல்லியவடிவனீ". கறுத்த - கோபித்த; தொகுத்தல்.

உஅ. நயந்து அவரோடும்.

உகூ. பந்து-வந்து; திசைச்சொல்; இது, 'வைத்து' என்பதுபோலப்பொருளின்றிப்பயிலுவதொருசொல்.

௩௦. பகுந்து - பங்கிட்டு.

௩க. சதமுறை - பல்முறை. அதர்ப்பட - வழிபட.

௩உ. நீரக்குறை - கங்கையின்குறையை. கவ்வை - துன்பம்; ஒலியுமாம். தவ்வுதல் - தாவுதல்.

௩அ. கங்கைக்கரையுயர்மண் - திருமுடியில் வைத்திருந்தமண்.

௩கூ. திருவருளுக்கு உண்டோ - திருவருளுக்கு எல்லையுண்டோ.

௪க. பிட்டுவாணிச்சி ஏக.

௪உ. புடைப்பு - அடியாலுண்டாகிய வீக்கம்.

௪௪. இவன்முகத்தால் - இவன் வழியால். விடுவித்தற்கு - சிறையினின்றும் நீக்குதற்கு. தன்வழி திரிதற்கு இவனை விடுவிடு.

௪ரு. மதுரைத்தெருவிற் பரியேறும். கொந்தகன் - படைத்தலைவன்.

௪அ. 'நமச்சிவாயவாழ்க' என்பது, திருவாசகத்திற் சிவபுராண அகவலின் முதற்குறிப்பு.

௪கூ. தூயசூத்திரர் - சற்சூத்திரர்.

ரு௦. அன்ன, நெஞ்சறிசுட்டு. மா-அழகு. என்ன-என்று திருவாதவூரர் துதிக்க.

ருக. சித்திரக்கோவை - திருச்சிற்றம்பலக்கோவையார்.

ருஉ. மன்னன்-பாண்டியன்; எழுவாய். அம்மை - செம்மனச்செல்வி.

ரு௩. மேய்ந்து - வேய்ந்து. எறும் ஆனும்.

ரு௪. உயர்துறக்கம் - சிவலோகம்.

ருரு. பறைதல் - சொல்லுதல். இறைவன் - சிவபெருமான்.

ருசு. அவதானங்கள்-திருவிளையாடல்கள்.

## ௬க - ம் திருவிளையாடல்.

க. பெருங்கிராமம் - ஐந்நூறுகுடிகள் நிறைந்தவூர்; (சூடா.இடப்பெயர். ௩௯.).

உ. பாகவதப்பிரமசாரி-வைணவப்பிரமசாரி. புக்கில் - வீடு. உதகம்செய்ய - தாரைவார்க்க.

௩. மனம்குன்ற. கன்னி - எட்டுப்பிராயமுடையவள்; "அகவை யிருநான்குடையாள் கன்னி" மாயூரப்புராணம்.). இடுகுறி-இடப்படும் நெற்றிக்குறி.

௪. வேதசூத்திரம் - வேதசம்பந்தமான சூத்திரங்கள்.

௬. சாறு-கலியாணம். நெறிதப்பாவாறு உதகம் அளித்து; உதகம் - தாரை. இனியபல - ஸ்திரீதனம். பந்தம் - உறவு, முறை.

கூ. தனு - வில், உடம்பு. மரல் அன - மரல்நாரையொத்த.

கக. படை, ஏவல்.

கஉ. அமுதுபடி - அரிசி. மேல் அமுதுசெய்யுமாறு ஓதுமென்ன.

கஎ. பட்டுஅணை-பட்டாலாகிய அணை. நோக்கு - கண்ணில். அன்னையில் புதல்வன் - தாயில்லாதபிள்ளை; பிறப்பில்லாதவர்.

ககூ. திருவினள் - லக்ஷ்மி. வளர்த்திவைத்து தூங்கச்செய்துவைத்து.

## ௬உ - ம் திருவிளையாடல்.

உ. அஃது - பரதநூல்.

௩. மிக்கசீர்த்தி, பாண்டியனுடையது. வளவன்கேட்டு. இகலி - மாறுபட்டு; உ௩: "இகல்விட்டு" என்பதனால், சோழன் இப்பொழுது மாறுபட்டிருந்தமை வலியுறும்.

சு. உளம் பட - மனமெலிய.

எ. விளிவு - அவமானம்.

அ. விருது - எண்ணெண்கலைவல்லானென்பது. புயங்கநட்டம் - ஒருவகைநடனம். வாமத்தாள் - இடத்தாள்.

கூ. சென்னிசெற்றத்தால் - சோழன்மீதுள்ள கோபத்தால்.

கO, நின்றல்-நிற்றல்; மெலித்தல். கெட்டேன், ஐயோ.

கஉ. ஈசானகோணம் - வடகீழ்மூலை. அதிரவீசி ஆடினான் என்க; "அதிர வீசி யாடுவாய்" (திருஞா.தே).

கச. பணை - வாத்தியம்; உடுக்கை. "மாறியாடக்கொடியிட்ட பெருமான்" என்பர்பின்னும்; உரு.

கஎ. பண்டு அருங்கூத்து - முன்பில்லாதகூத்து; பண்தரும் - இசையைத்தருகின்றவென்றுமாம்.

கக. வடிவுறுதிருக்கூத்து - சொக்கத்தாண்டவம்.

உO. முன், "தென்மதுரைமாநகர் சேர்திருச்சிற்றம்பலம்போற்றி" என்றார்; (கட) கச. புரிவலித்து - கயிறு கட்டி.

உக. மாணிக்கத்தாள் - மாணிக்கக் காம்பு.

உஉ. இயற்பெருமான் - சொக்கநாயகர்; இயல் - அழகு.

ருரு - ம் திருவிளையாடல்.

க. ஆதவன், - சூரியன். வடதரு - ஆலமரம்.

உ. எய்து - எய்தலால். தொங்கினான்ற - தொங்கிய; ஒருபொருட்பன்மொழி. பகழி - அம்பு.

ச. பறையும் அது - சொல்லிய அச்சொல். போது - வா.

கூ. உடல்நடுங்கி.

எ. ஏதம் ஒழி-துன்பம் ஒழிவாயாக. இங்கு எய்து-இங்கேவா. தருந்தகனம் - துன்மரணமாக இறந்தவர்க்குச் செய்தற்குத்தக்க தகனம்.

கூ. 'அஞ்சினவீசன்' என்பது, சொக்கநாயகர் பழிக்கு அஞ்சியதைப் புலப்படுத்தியது.

கO. விள்ளான் - சொல்லானாகி.

கக. படர் - யமதூதர். விரை - மலர் சந்தனம் முதலிய நறுமணம்.

கச. வற்றான - வன்மையையுடையதான. ஆர்த்த தும்பு-கட்டியகயிறு.

கடு. அயம்=ஐயம் - ஸந்தேகம்.

கசு. உயர்ந்ததூதன் - இருந்தவனாகிய பெரியதூதன். கூறும்-கூறுவான்.

கஅ. சுத்தை-கிளியை. கோல் அம்பு. எய்ததை, உ - ம் செய்யுளாலும் உணர்க.

கக. பெரியதந்தை, எழுவாய். அசன் - அசமகாராசர்; இரகுமகாராசருடைய புத்திரர்; தசரதருடைய தந்தை. வடிவமங்கை - இந்துமதி.

உO. இந்துமதி-அசமகாராசர் மனைவி; நாரதமுனிவர் வீணையிற்புனைந்திருந்த பூமாலை காற்றால்வீழப்பெற்று இந்துமதி இறந்தனளென்பது, இரகுவம்சம், அ-ம் சருக்கத்திற் கூறப்பெற்றுள்ள கதை. இதனைத் தமிழ் இரகுவங்கிசம், இந்துமதி பிறப்பு நீங்குபடலம், சஉ-ம் செய்யுள் முதலியவற்றாலும், "நன்னூண் மதியக் குடையோன் குலோத்துங்க னாகவெற்பிற், பொன்னூ ளயோத்தியி லுண்டாய பாவம புனத்துமுண்டோ, வந்நாளும் பெண்பழி கொண்டது மாலையென் றுரைஞ்சொல்வா, ரிந்நாளும் பெண்பழி கொள்ளவிம் மாலை யெதிர்ப்பட்டதே" (குலோத்துங்கசோழன்கோவை, கஎடு.) என்னும் செய்யுளாலுமுணர்க. தேனுவால்-பசுவினால்.

உஉ. மருப்பு இல் சே-கொம்பில்லாதபசு.

உரு. முளைத்தளை - முளையிற்கட்டியகட்டு.

உச. நாம் - அச்சம்.

உசு. யாமினியில் - இரவில்.

உஎ. யாவையும் அழித்து ஆக்கவல்லான்-எல்லாப்பொருள்களையும் சங்கரித்துச் சிருட்டித்தருள வல்லமையுடையவர்.

உகூ. சோமசுந்தரக்கடவுள் பழிக்கஞ்சியதை, கூ; "தென்றமிழ்நாடு" என்னும் செய்யுளாலும் உணர்க.

ருசு - ம் திருவிளையாடல்.

க. அவமானவஞ்சம் - அவமானத்தைத்தரும் வஞ்சனைத்தொழில்; "அவமான வஞ்சம் பிறர்க்குரை யார்களல்லோர்' என்பர்பின்னும் (ருடு) சO.

உ. கொட்டு - மண்வெட்டி.

ஒ. புண்ணில் ஈ மொய்ப்பி. ஆரோ வென்னத் திரிந்தான்.

சு. கன்னி - கன்னியாகுமரியென்னும் ஆறு. கம்பிப்பன் - நடுங்குவன்.

எ. புறத்து ஈர்த்து - வெளியே இழுத்து.

க. 'பட்டகுணம் சுட்டாலுந்தீராது' என்பது ஒருபழமொழி.

கO. தானவைபவம் - தலவிசேடம்.

கக. இறையவன், எழுவாய்.

கஉ. பரிவுகூர்ந்து போக்குகின்றேம்.

கங. தானஞ்செய்யென்று சொல்லுதற்கு உன்கையிற் பொருளில்லை. கோவுக்கு - பசுவுக்கு.

கஒ. செறு - அடக்கு. நோக்கு - செய்.

ககூ. அணுக்கட்கு - உயிர்களுக்கு.

நரு - ம் திருவிளையாடல்.

உ. எல் - ஒளி. கூடா - வந்துசேர்ந்து.

ங. ஆங்காரித்து - அகங்காரங்கொண்டு.

ச. அங்கம் - போர். கெருடி - வில்வித்தைமுதலியவை பயிலும் கூடம். மைந்தர் - மாணுக்கர். சிரமம் - யுத்தப்பயிற்சி; "சிலைக்குரு விறற்குரு குலக்குமர ருக்குவரு சிரமநிலை காண்மி னென." (பார. வாரணுவத. ஒச).

ஒ. நாயனீரே - தலைவரே. கெருடிகட்டி, நம்முளோனைசீக்கிச் சாதிப்பிக்கின்றானென இயைக்க.

சு. அடியார்க்குநல்லான் - சோமசுந்தரக் கடவுள். கன்றல் - வாடுதல். பணிக்கு - வில்வித்தை முதலியவற்றைக் கற்பிக்குந்தொழில்.

எ. அவன்றனை - ஆசிரியனை. வளம் - தனதுபெருமை.

அ. அருள் - தொடர்புபற்றாதே யாவரிடத்தும் தோன்றும் இரக்கம். இடம் - சமயம்.

கூ. மிண்டு - இடக்கானமொழிகள்.

கO. முல்லை - கற்பு. சொக்கன் தானே அறிகுவன் - சொக்கநாயகர் இயல்பாகவே அறிந்தருளுவார்; யாம் விண்ணப்பிக்கவேண்டுவதில்லை.

கக. தின்மை - தீயசெயல். பாடை - சபதம்.

கங. மற்று ஓரெதிரிலா.

கஒ. பத்திரம் - ஒருவகைக்கத்தி. ஒட்டி - சபதம்செய்து.

ககூ. நாகமாபுரம் - மதுரை; "அ. தோரகாக்யஸ்ய புரஸ்யாதம்" (ரகுவம்சம், சு-ம் ஸர்க்கம், ஒக) எனவும், "உரகமாநகரான் றென்னனிவன்" (இரகு. மாலை. கOச) எனவும் வருவனவற்றள், 'உரகாக்யஸ்யபுரம்' எனவும், 'உரகமாநகர்' எனவும் மதுரை கூறப்பட்டிருத்தல்காண்க.

கஎ. நெஞ்சுளோர் - தைரியமுடையோர். கஞ்சவாள் - வெண்கலத்தாற் செய்தவாள்.

உஉ. சொட்டை - ஒருவகை ஆயுதம்.

உச. வென்றிகொள் மைந்தர் - ஆசிரியருடைய வெற்றியைத் தமதாகக் கொண்ட மாணுக்கர்கள். சித்தனை வென்றமையின், 'வன்றிறனுதர்' என்றார்.

உகூ. எந்து - என்ன; திசைச்சொல்; "அதெந்துவே யென்றருளாயே" (திருவா. அருட்பத்து, க-கO).

உஅ. பொத்திய - மறைத்த. மெத்திய - நிரம்பிய.

ஙக. 'உண்டென்றேத்தும் வெற்றிகொள் பணிக்கன்' என்றது, ஆஸ்திகனென்றபடி.

நகூ - ம் திருவிளையாடல்.

உ. கறுவி - கோபித்து.

ங. இந்நாகம் திட்டிவிடமென்பார், 'நஞ்சங் கண்பட விழித்து' என்றார்.

ஒ. பாவகப்பகுவாய் - நெருப்பைக் கக்குகின்ற பிளந்தவாய். உரத்துச் சேர்ந்தது - மார்பால் நகர்ந்து வந்தது; உரம் - வலியுமாம்.

எ. 'பெரியபாம் பணியுஞ் சொக்கப் பிஞ்ஞகா' என்றது, கருத்துடையடையணி.

அ. அதனைக்கடிப்ப - அப்பாணத்தைக்கடிப்ப.

க. அழல் - விடம்.

கக. ஆரா அமுதே - தெவிட்டாத அமுதமே.

க0-கக. விடத்துன்பத்தைப் போக்கவேண்டுமென்பதற்குக் கூறிய அடைகளும், 'கருணாகரனே' 'அருளாகரனே' என்றுகூறி யிருத்தலும் ஆராய்தற்பாலன.

கஉ. புழகு - மலையெருக்கம்பூ. வன்பர்க்கு அரியாய்.

கங. தடினி - ஆறு. கோள் - விடம்.

கச. அமுத இந்து விந்துவை - அமிர்தமயமாகிய சந்திரனிடத்துள்ள துளியை.

கஎ. இங்கே சமணரை, 'நாணமிலாதோர்' என்றதுபோல் "மானமில் சமணர்" என்பர் பின்னும்; உகூ காண - காணும்படி. கழறி - சபதங்கூறி.

கஅ. என்ன - ஒப்ப; உவமவுருபு. தேனு - பசு.

கக. விட்டல் - விடல்; விரித்தல் விகாரம். காலமேகம் - ஊழிக்காலத்துமேகம்.

உ0. 'கொல்லொணாப் படையெவர்க்கும் வெல்லொணாது' என்பது ஒரு பழமொழி. எல்லாம் வல்ல நாயகன் - சோமசுந்தரக்கடவுள்; "சிவமெனும் பொருளு மாதி சத்தியொடு சேரினெத்தொழிலும் வல்லதாம்" (ஆனந்தலகரி, க.) என்பர்.

உஉ. மூசி - மூச்சுவிட்டுமோந்து.

உச. தார் - கிண்கிணிமாலை, தாடி - அலைதாடி. பிறங்கல் - மலை.

உகூ. சந்தம் - இயல்பு.

உசு. காற்சிறைகொண்டு - காலிடங்கொண்டு. உப்பால் - முதுகு; "ஊழையுமுப்பக்கங்காண்பர்" (திருக்குறள், கூஉ0.)

உஎ. தண்டலைமலை - சோலைமலை; அழகர்மலை.

உஅ. நீங்கரும்விடை - ஸந்நிதியிலெழுந்தருளிய இடபமூர்த்தி.

## ௩எ - ம் திருவிளையாடல்.

க. ஞானமுற்றியவெற்றிகொள்நற்றவர் - திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். வெப்பும் - சுரம்.

உ. பன்னிரண்டுபெயர்களாவன: பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, சீகாழி, கொச்சைவயம், கழுமலமென்பன; காழியெனவும், கொச்சையெனவும் வழங்கும்.

ங. ஓதாமலுணர்ந்துயர்ந்த: இஎ. வரிசைகள் - பொற்றாளம், முத்துச்சிவிகை, முத்துப்பந்தர்முதலியன.

ச. கச.

கூ. 'சாதிமுறை யறியாத சமணர்' என்றது, கூட்டத்தினரென்பதைப் புலப்படுத்தியபடி; "குழுவுடைய மண்" என்பர் பின்னும்; கக. உணருங்கால் - ஆராயுமிடத்து; உணர்தல் - ஆராய்தல். (ஙஅ) ங: "நத்தநடு வெழுந்துணர்வார்."

எ. மானி - மங்கையர்க்கரசியார். பறிதலையர் - சமணர். பழுதாமென்று ஓலைவிடுத்தாரென முன்னேகூட்டுக.

அ. சென்ற - வந்த.

க. நாள் - நக்ஷத்திரம்; திதியினும் நாறுமடங்குவலியுடைத்தாதல்பற்றி, நாள் முற்கூறப்பட்டது.

கஉ. மானமில்சமணர்: (ஙசு) உகூ.

கங. கொடுங்குன்றம் - உக்கிரகிரி; பிரான்மலை. 'வானிற் பொலி' என்பது அப்பதிகத்தின் முதற்குறிப்பு.

கசு. நகரத்து எய்.

கஎ. பண்திகழ் கூகை, இகழ்ச்சி. பாழி - குகை.

கஅ. என்னும் - யாதாமோ. திருமுகம் - ஓலை.

கக. வைதிக யானை - திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

உங. கட்டியும் நீறும்.

உக - உ௩ : "சதுரானனனுஞ் சக்ராயுதனுஞ் சந்த்ரா தபரும் மிந்த்ராதிபரும், மதுரா புரிவா ழிவா மெனமேல் வரவந், தனன்வை திகவாரணமே" (தக்க. க௮உ.)

உ௫. (திருநகர.) ௪.

உ௭. ஒழிவிலா - ஒழிவில்லாமல்.

உ௮. காதும் - துன்புறுத்தும்.

௩உ. அவதரிப்ப - தங்க. அறிவான் - அறியும்பொருட்டு. முட்டு - கேட்டுமுட்டு.

௩௩. கட்டி - கல்லைக் கட்டிக்கொண்டு. ஞான்றனர் - தொங்கினர்.

௩௪. அதிர்வு - நடுக்கம். 'இறந்தது' என்றார், துணிவுபற்றி.

௩௯. கைவிதிர்க்கொண்டு-கையை உதறிக்கொண்டு. உணர்த்த-எழுப்ப.

௪உ. பாயுடை-பாயாகியவுடை; "பாயுடையார் விடுத்ததூல" (திருவிளை. திருவால. க)

௪௭. அறமலி-தருமமலிந்த; அற-மிகவுமென்றுமாம்.

௫௦. காம் - கருமை.

௫உ. கழுமலம் - சீகாழி. 'பிரமனூர்' என்றது, திருச்சக்கரமாற்றென்னும் பதிகத்தின் முதற்குறிப்பு.

௫௩. வெங்குரு - சீகாழி.

௫௭. நீறுக்கோயில் - விபூதிப்பை.

௫௮. நின்வழுக்களைக் கொணடே மாற்று.

௬௦. 'பொருந்திடுனே' என்பதை, எமக்கும் பொருந்துமேனோமெனப் பின்னுங்கூட்டுக. ஆம், அசைநிலை.

௬உ. கையர் - வஞ்சகர். பையுள் - துன்பம்.

௬௩. பிண்டி - அசோகமரம். தண்டு - பிரம்பு; "தண்டாலே பாணடியன் றன்னைப் பணிகொண்ட, புண்பாடல்பாடி" (திருவா. திருப்பூவலலி. க௯). இச்செய்யுளும், "ஆலி வெந்து மாதிரம் வெந்து யந்திரம் வெந்த மைந்தகைப், பீலி வெந்து பாயும் வெந்து பிண் டி யேற மண்டவே (தக்க.௭௫) என்பதும் ஒத்திருத்தல்காண்க.

௬௪. கொச்சை - சீகாழி

௭௦. வென் - முதுகு.

௭௪. பாழி - குகை. கதுப்பு - கன்னம். குரத்தியர் - தவமுதுமகளிர்.

௭௫. வாசி - திருவாசிகை. கற்பகதரு - வாகனவிசேடம்.

## ௬௮ - ம் திருவிளையாடல்.

க. மாறனுறுகாசினி-பாண்டிநாடு. கொச்சைமுனி - திருஞானசம் பந்தமூர்த்திநாயனார்.

உ. குன்றி - குன்ற. நாமென்னு முன்னிலையுளப்பாட்டுத்தன்மை உயர்வுதோன்ற முன்னிலைக்கண்வந்தது; "நாமமையாமத்தென் னேவந்து" (திருச்சிற். ௪௯௪); "நெருநனடந்தவோ நாமென்ன" (கம்ப. [illegible] ௧௯). தென்னனேனின் மன்னனென ஒருமைசொல வருவிக்க.

௩. இறை உண்டு - சிவபெருமானுளர். அஞ்சல - அஞ்சற்க; வியங்கோளெதிர்மறை.

௪. 'வேதவேள்வி' என்பது அத்திருப்பதிகத்தின் முதற்குறிப்பு; இது காலடிமேலவைப்பு. 'தும்' என்பது உடன்பாட்டை யுணர்த்தும் வடசொல்; "ஒன்றுங் கதிர்முடியாற் கோமென் றனாதரருளி" (பாரதம். கிருட்டி. ௪௦).

௫ வினைக்கணில்லவர் - வினைகளிடத்து இல்லாதவர்.

௭. ஐயம் இல-சந்தேகமில்லை.

௮. கன்னி - கன்னிநாடு, கன்னியாகுமரி, அநியாமை.

௯. செற்றம - பிறரைவருத்துதல். எற்றி - அறைந்து.

௧௧. வாரடா - வாடா; "வாரடா வுனக் கியாதுசானர்தம் மகளடுக்குமோ" (பாரதம், வேத்திர. ௧உ).

௧உ. காக்கையேறப் பனம்பழம்வீழ்ந்ததென்பது ஒருபழமொழி; இது காகதாலீயமென்னு நியாயம்.

௧௫. எஞ்சு அழல் - குறையச்செய்கின்ற நெருப்பை.

௧௯. தம்மைமதித்து ஞானமிலாதோர் அடைந்த.

௧அ. என்னும் - யாதாகுமோ. எற்றரு - பிறரால் வெல்லுதற்கரிய.

௧௯. ஒழுங்கி-ஒழுங்குபடுத்தி. வகுந்த - வகிர்ந்த. 'போகமார்த்தபூண்முலை' என்பது, திருநள்ளாற்றுத்திருப்பதிகத்தின் முதற்குறிப்பு.

௨௦. 'தளிரிளவளர்' என்பது, திருநள்ளாற்றுக்குரிய வேறொருதிருப்பதிகத்தின் முதற்குறிப்பு' 'ஆதிமெய்' என்றது, தேவாரத்தை; வேதம்.

௨௧. வற்றற் கரும்பிலை - காய்ந்த கரும்பந்தோகை.

௨௨. அதிசயித்துச் செழுமலர்மாரிபெய்தார்.

௨௩. நீர் தெளித்து. அங்கித்தம்பனை - அக்கினித்தம்பனவித்தை. வாது மும்முறை உண்டு.

௨௪. 'விரைவிளேடும் பெரும்புனல்வையை' என்பது, வேகவதியென்னும் பெயர்ப்பொருளைப்புலப்படுத்தியது; ௫௪: "தாங்கருந்திறலோடும் வரும்வெம்மை" என்பர் பின்னும். பத்திரம் - ஏடு.

௨௫. பறைதல் - சொல்லுதல். பாடை=பாஷை - சபதம்.

௨௬. கடிமை இல் - விளக்கத்தன்மை இல்லாத. முடிய-முற்ற. 'ஆசை' என்றது, அவரை அஞ்சுவித்தற்பொருட்டு; இவர்கருத்து இன்னதென்பதை, ௭௩-ம் செய்யுளாலுணர்க.

௨௭. உயிர்க்கழு - ஒருவகைக்கழு. களம் - கழுதது. செத்தி - சீவி.

௨௯. காத்திரம் - உடம்பு. உருத்திரசாதனம் - உருத்திராக்கம்.

௩௦. தெவ்வு - பகை.

௩௨. கண்டி - உருத்திராக்கமாலை.

௩௩. கழுவேறுவோர் அதனைவாங்கித் தோளில்வைத்துச்செல்லுதல்மரபு.

௩௪. தூது - பஞ்சபாண்டவர்க்குச் சென்றதூது; உம்மை - அசைநிலை. இறைஞ்சுகழல். மேற்கொண்டு ஞான்று ஊதுங்கள்; ஊதுதல் - உடம்பு புடைத்தல். காளம் - ஒருவகைவாத்தியம், கழு.

௩௫. மிகை - அளவுகடந்தசெய்கை. கை - செயல். துய்யவை - கூர்மையையுடையவை.

௩௬. எட்டில் தீட்டி.

௩௭. "வாழ்கவந்தணர்" என்பது திருப்பாசுரத்தின் முதற்குறிப்பு.

௩௯. எதிர்த்து எறியது.

௪௦. பதஞ் - இன்பம்.

௪௩. இருந்தீராயினீர்.

௪௫. சுறவிய - கோபித்த.

௪௬. எதிர்புகல்வதேது. முட்டுடைப்பட்டினிவயிறு- கண்டுமுட்டு, கேட்டுமுட்டுக்களால் பட்டினியிருக்கும் வயிறு; முகம் - கழுவின்முகம்.

௪௭. பாறு - பருந்து. சிவை - நரி. கவடி - பலகறை.

௪அ. சாணகம் - சாணம். கன்று - பசுக்கன்று. விலாவொடி - விலாப்பக்கம் ஒடியும்படி சிரிக்கும்சிரிப்பு; "விலாவிற நக்கு" (மணி. ௩௪ - ம் காதை, ௩௬).

௪௯. தளம்புநெஞ்சு - துளும்புகின்றமனம்.

௫௦. சமணர்களுக்குச் சாக்கியரென்றும் ஒருபெயருண்டு.

௫௧. சாமரம் - சாமரை, கழுமரம். இக்கவி, வஞ்சப்பழிப்பணி.

௫௨. ஆசையாய்த் துதிப்ப.

௫௩. "வாரிதி யுருவா யாற்றின் வரும்பெருஞ் சலிலமுற்றும்" என்றூர் முன்னும்; (எ.) அ. ஓசனை - யோசனை.

௫௪. தடினி - ஆறு.

௫௬. "தேனுற வன்னி" என்பது திருவேடகப்பதிகத்தின் முதற்குறிப்பு. காப்பு - திருநீறு. சேடனூர் - திருவேடகம்; ஆதிசேடன்பூசித்ததலமாதலின், இஃது இப்பெயர்பெற்றது; ௬௬ - ம் பாடலைப்பார்க்க.

௫௭. புக்கு - புகுந்து. நல்க - கொடுத்தற்கு. [நான்லால்.

௫௯. பனுவல் முறுவல் தருவதல்

௬௦. மெய் - உண்மைவழி.

௬௨. தனியானை - திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர்; எழுவாய்.

௬௪. பரிசனம் - ஸ்பரிசம்.
௬௫. இகலா - (சைனரோடு) மாறு கொண்டு.
௬௬. சாத்தன் - ஐயனார்.
௬௭. பாடித்த - பேசிய.
௬௯. மண்டலமும், உம்மை - சோழமண்டலத்தையன்றியென இறந்தது தழுவியது; (௩௭) ௪ - ம் பாடல் பார்க்க.

௩௯ - ம் திருவிளையாடல்.

௧. கொந்தக்குலம் - கக்குலம்; இக்குலத்திற்பிறந்தோர் சேனைபதிகளாதற்குரியவர்.
௨. சேதிபர்கோன் - பெயர்; [௩ - ம் செய்யுள்பார்க்க]. கிராதர் - வேடர். கவுரியன் - பாண்டியன்.
௩. படை ஆள்வேம் - சேனைகளை வருவித்துப் பாதுகாப்பேம்.
௪. மாண்டதில்லை - மாட்சிமையுற்றதில்லை. சரக்கறை-பொன்னறை. படைஆள் - சேனைகளை ஆள்வாய். திருக்கைச்சிறப்பு - ஏனாதிமோதிரம். விரைவுகண்டு - (சௌந்தரசாமந்தன்) விரைந்துசெல்லுதலைக்கண்டு.
௫. விதிர் விதிர்த்தான் - விரைந்தான்; "மெய்தா னரும்பி விதிர்விதிர்த்து" (திருவா. திருச்சதகம், ௧).
௭. உம்பர்தம்பதி - இந்திரன். தம்பம் - ஆதாரம். கம்பம் - நடுக்கம்.
௮. அடியவர்தங்கண்-அடியவரிடத்து.
௯. பரிகரம் - சேனை.
௧௦. வந்தனை அடியேன் - பணிதலையுடைய அடியேனது.
௧௨. நியதி - நியமம்.
௧௩. தண்டம் - தண்டனை. ஆரோ ஆற்றுவார் - ஆர் பொறுப்பார்.
௧௪. சாதலலாது நெறியிலை; பின், ௩௦. "இன்றுயிரளித்தகோவே" என்பது இதனைவலியுறுத்தும். அசைவு- மெலிவு. நமக்குச் சன்மானமாகச் சேலையையும் அரசன்தருவன்.
௧௫. அச்சத்தைத் தள்ளியவள் மனைவி.
௧௬. வீரன் நாம் அற்ற.
௧௮. தியாளம் - ஒருவகைப்பறை.
௧௯. பாராவனை - வனைதடி.
௨௦. பூங்கொடி - அழகிய துவசம். தோரைகள் - மயிலிறகாற்செய்தவிசிறிகள். மட்பாம்பு - ஆதிசேடன். படைச்சாத்து - சேனைத்திரள்.
௨௧. சூழ்ந்த - ஆராய்ந்த.
௩௧. உடம்பில் தழும்புடையவீரர்கள் சிறந்தவர்களாதலின், இங்ஙனம் கூறினார்.
௩௨. கம்பித்து - நடுங்கி.
௩௫. தாரை - கதி.
௩௮. தந்திரம் - சேனை. தாழாது - தாமதியாமல்.
௩௯. சிலைத்து - முழங்கி.

௪௦ - ம் திருவிளையாடல்.

௧. எளிய - அடியார்க்கெளிய. முச்சந்தி - காலை, உச்சி, மாலை.
௨. பரிவு - அன்பு. நல்குரவினால் வேள்விகளும் ஒழுக்கமும் ஒழிந்து.
௪. மா தனம் - மிக்கபொருள். கோதனம் - பசு. ஆராமம் - சோலை.
௫. உலகு ஏதம் - உலகத்தின் துன்பம்.
௧௦. நெஞ்சம்வாழுமேல் - மனம் மகிழுமாயின்.
௧௩. நீக்கவற்று-நீக்கவல்லதாகிய. கிழி - முடிப்பு.
௧௪. "கோடிபொன்னெடுப்பினுங் குறைவிலாததோ, ராடக நீவி" என் பர்பின்னும்; ௨௦. புக்கில் - வீடு.
௧௫. நீவி - கிழி.
௧௭. தணிவதில்லை - குறையாது.
௧௮. செல்லல் - துன்பம்.
௨௦. ஆடகநீவி - பொன்முடி.

௪௧ - ம் திருவிளையாடல்.

௨. வண்மை முன்திகழ் - கொடைமு... யவைகள் விளங்கப் பெற்ற. நந்த - பெருக.
௪. இறந்தானென்று இளந்து.
௫. துவர்ப்பிடித்து - செம்மைநிறமுள்ள ஆடையைப்பிடித்து; [௧௦ - ம் பாடல்பார்க்க.]
௭. போகட்டு - இடத்தி. அத்தம்- கை.

அ. மிகை - வரம்புகடந்தசெய்கை
௯. படிற்றுரை - பொய்யுரை.
௧0. தருமமன்று - நியாயசபை.
௧௩. தருமவாசனம் - நியாயசபை.
௧௪. அறுவை - ஆடை. முடிச்சாத்து - தலைப்பாகை. கைவீசல், வருந்தாக்குறிப்பு. சிறுக்கன் - சிறுவன்.
௧௭. பஞ்சவன் - பாண்டியன்.
௧அ - ௧௧. ஆங்குவந்துள்ள வணிகர்களைநோக்கிச் சிவபெருமான்வினவல்: 'வணிகசூரியர்' என்பது முதலியன, வணிகர்களுடைய பெயர்விசேடங்கள். பயன் என் போதும் - இலாபம் யாது வரும். பணையம் - ஈடு. 'என்' என்றது, தம்முடைய பழைய ஞாபகத்தைப்புலப்படுத்தியபடி.
௨0. அவதாரம் - சமயம்.
௨௧. காணி - உரியநிலம். கஞ்சம் - வெண்கலம்.
௨௨. மகவிலாமற் கொடுத்தனன்.
௨௩. அஞ்சி ஒளித்தனர்.
௨௪. ஏற்று அலைசெய்தோர்தம்மை - எதிர்த்து வருத்தியவர்களை.
௨௫. தருமமோவென - இவர்கள் செயல் தருமமாவென்று சொல்ல. உளங்கடோறும் விளங்கினை. வகை - இடங்கள்.
௨௬. கன்றினர் - பகைவர்.
௨அ. கணக்கு - வழக்கு. மாட்டாக்கைந்தலை - வன்மையில்லாதவிதவை. சான்றோர் - நியாயசபைத்தலைவர்.

சஉ - ம் திருவிளையாடல்.

௨. இன்பால் - இனியபாலை. இயக்கமாதர் - யக்ஷமகளிர்.
௩. உரையொடு-பொருளொடு; ௪. ௫. மெய், சிலேடை. மேல்-இனி. ஒப்பு - பொருத்தம்.
௬. கோடியோசனைபோந்து - கொம்புகள் யோசனையளவுநீண்டு.
௭. தூங்கலில் - ஓய்வில்லாமல்; "தூங்கலில்லாமல் வானிற்சுழன்று" என்பர்பின்னும்; ௧௧. தாங்குதலற தடையற, விழும், எவல்.
௧௬. பகுதி - பகுப்பு; இயல்பு. இயற்போதம் - இயற்கையறிவு.

௧0. இறை, எழுவாய். சாபானுக்கிரகத்தால், முறையே இளைப்பும் இனிமையும் பெற்றனர்.
௧௨. வடிவும் அறிவும்.
௧௩. ஒப்பு - மனப்பொருத்தம்.
௧௪. சொல்லொடும்பொருளொடும்விரித்து.
௧௬. உருவொடும் உலாவினர்.

சரு - ம் திருவிளையாடல்.

௪. வினை - போர்.
௫. பரிவேத்தா-தமையனுக்குவிவாகமாகாமலிருக்கும்பொழுது விவாகம் செய்துகொண்டவன். வஞ்சி - பகைமேற்செல்வோர் அணியுமாலை.
௬. தும்பி - யானை.
௭. ஓசனை - யோசனை. அணி - சேனையைவகுப்பாயாக; எவல்.
அ. நொச்சித்தொடை - நொச்சிமாலை; இது, தன்மதிலைக் காத்தற்குரிய வீரன் அணிந்துகொள்ளுவது. காஞ்சி - காஞ்சிப்பூமாலை; இது, பகைவர்க்கு எதிருன்றுநிற்போர்க்குரியது.
௧0. ஞாட்பு - போர். தும்பைமிலைந்து.
௧௨. ஆளும்ஆளும் - வீரர்களும்வீரர்களும்.
௧௩. இனன் - சூரியன்.
௧௪. ஆவி - குளம், உயிர். மாட்டாதாகி - வலியில்லாததாகி.
௧௬. உசீரம் - விலாமிச்சவேர்.
௧௭. உயிர்மருந்து - உயிரைக்கொடுக்குமருந்து; மிருதசஞ்சீவினி; "செல்வுமுயிரன்றே நீருமுயிரன்றே" (புறநா. ௧அ௬). விளிந்து - கெட்டு. முன்னின் - முன்பொருததுபோல.
௧அ. வையம் - தேர்.
௨0. கவந்தம் - தலையில்லாத உடம்பு. போனர்போனர் - தப்பிப்போனவர்கள் பிழைத்தார்கள். முளிந்து - உலர்ந்து.
௨௧. முகமுகம் பார்த்து - ஒருவர் முகத்தை ஒருவர்பார்த்து; (௨௧) க: "இனப்புரவி முகமுகம்பார்த்து".
௨௨. மனிதவுருவங்கொண்டதற்கேற்ப நடித்தருளினரென்பார், 'அரு

ந்திரு மேனிவேர்ப்ப வோடிமீண்டு' என்றார்.

௨௩. வெற்றிமாமுரசம் - ஜயபேரி.

௨௪. 'வள்ளல்' என்றான், உயிரையும் அரசுரிமையையும் கொடுத்தது பற்றி.

௨௮. தரம் - தகுதி.

௨௯. நான் நான் என்று - நான் போர்செய்வேன் நான் போர்செய்வேனென்று. மாலை-தும்பைமாலை. தண்டி - அலைத்து.

௩௦. கூபம் - கிணறு.

சச - ம் திருவிளையாடல்.

௧. வெறுப்பு - பகைமை; ௩௨: "பிறிவிலா வெறுப்பிவர்க்கிங் கிப்படிப் பிறங்கிற் றென்ன" என்பர்; (௨௭) அ௨: "ஆர்வெறுப்பாருவப்பே". கண்ணுற - கருத.

௨. மறைப்பொருள் - இரகசியச் செய்தி; ௩௨: "மறையுரைபகர்ந் தாய்" என்பர்.

௩. ஒளி - தெய்வத்தன்மை.

௪. அற்றம் உற்று - சோர்வுற்று.

௫. பொறையன் - சேரன். கிள்ளி-சோழன். நிம்பம் மாறன் - வேப்பமாலையையுடைய பாண்டியன். துதிசெயாது - (இந்திரனைத்)துதியாமல். உடன் - இந்திரன்கூட.

௭. அது - அம்மகிழ்ச்சியை.

௧௦. "மானிமாறன்", "மானம் வலிசேர்ந்தவாள் வழுதி" என்பர்பின்னும்; ௩௨, ௫௨.

௧௧. அதுகண்டு - குறையிரவாமையைக்கண்டு. தலமெலாமதிப்ப - உலகத்தாரெல்லாரும் நன்குமதிக்க, உலகமெல்லாம் இதற்கு விலையாகுமென்றுமதிக்க.

௧௨. வற்றாய் - வல்லதாய்.

௧௩. ஆயிரமுகத்தையுடைய பேராரம் - ஆதிசேடனாகிய ஆரம்.

௧௪. கீழ்த்திசை - பாதாளம்.

௧௫. நேர்கண்டு - பிரத்தியக்ஷமாகக்கண்டு.

௧௯. மாசறு-இரத்தற் குற்றமற்ற. உற்ற - துன்பமுற்ற.

௨௨. விது என்று - சந்திரனும் சூரியனும்.

௨௩. பாரம் - கரை. அரசு - அரசமரம். பன்னம் - இலை. அப்பு உறின் - நீரிற் பொருந்தினால்.

௨௫. முழைஞ்சு - குகை.

௨௬. தண்டமிழ்முருகன் - செந்தமிழ்ப்பரமாசாரியராகிய முருகர். நம்பேர் முருகனென்பது.

௨௭. தமிழ்த்தண்டலம் - தமிழ்நாடு. 'கிழவனென்றனை' என்பதை திருமுருகாற்றுப்படையின் இறுதியில், "பழமுதிர்சோலைமலை கிழவோனே" என்பதனாலுணர்க.

௨௮. 'குன்றமெறிந்தாய்' என்னுங் கவி வருமாறு: வெண்பா-"குன்றமெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய், புன்றலைய பூதப் பொருபடையாய் - என்றும், இளையா யழகியா யேறூர்ந் தா னேறே, உளையாயென் னுள்ளத் துறை".

௨௯. பரமென - அடியேனைக்காத் தருளுவது உம்முடைய பாரமென்று கூறி.

௩௦. சீதமண்டலக்குலம் - சந்திரகுலம். கோதைமண்டலம்-சேரனாடு. சென்னிமண்டலம் - சோழனாடு.

௩௧. முண்டம்வெம்ப-தலையெரிய. பகர்ந்திலனாகி இருந்தனன்.

௩௨. இவர்க்கு - இந்திரனுக்கும் பாண்டியனுக்கும்; 'வெறுப்பு' என்றது,முதற்செய்யுளிற் கூறியதை. மானிமாறன்-மானியாகிய பாண்டியன்.

௩௩. வரை - பக்கமலை.

௩௪. கயங்கள் - யானைகள். கான்மேதி - காட்டெருமை.

௩௫. சத்தி - வேல். முகத்திடைமலைந்தான்.

௩௬. தாள்வரை - மலையடி; பாதசைலமென்பர் வடநூலார்.

௩௭. பரிவால் - அன்போடு. செல் உயர் அரசர் - மேகங்களின் உயர்ந்த அரசர். அவரை - மேகவேந்தரை.

௩௮. சடக்கென - விரைவாக. துடிப்புற - அசைவற.

௪௦. வானரசர்தம்மை - மேக அரசர்களை.
௪௨. வீரமாறன் - வீரத்தையுடையபாண்டியன்.
௪௩. தனுமணி - வில்லிற்கட்டிய மணி. (கம்ப. மூலபல. ௨௨௮)
௪௪. நல்லை, இகழ்ச்சிக்குறிப்பு. 'புரந்தரன்' என்பதற்குப் பகைவருடைய ஊரினை அழிப்பவனென்பதுபொருள்.
௪௫. வாசி - விசேடம்.
௪௬. 'உனக்காயிரங்கண்' என்றது இகழ்ச்சிக்குறிப்பு.
௪௭. வளை - ஒருவகை ஆயுதம்.
௪௮. கொன் - அச்சம். கோடக அமர் - குதிரைமேலேறிச்செய்யும் சண்டை. உருத்து - கோபித்து.
௪௯. பரிந்திருக்கும் - அன்புவைத்திருக்கப்பெற்ற; "அந்தத் தென்னவற் கன்பு பூண்ட, பொன்முடிச்சொக்க நாதன்" என்பர் பின்னும்; ௫௬. தனித்துவென்றதை, ௪௬: "இருவரும் பொருவோம்", ௪௮: "சிங்கமிரண்டுபோர் மூண்ட வென்ன" என்பவை வலியுறுத்துகின்றன.
௫௦. மற்றவர் - மேன்மையில்லாதவர்.
௫௧. சாபம் - துருவாசமுனிவரிட்டசாபம்.
௫௨. இரவாமையால் மானத்தையும், வென்றமையால் வலியையுமுடையாயென்பான், 'மானம்வலிசேர்ந்த வாள்வழுதி' என்றான்.
௫௩. புணை - ஈடு.
௫௪. ஒருவன் நாமுன்னென்றே திப் புணைநின்றானென்க. 'வரும்பெயர்' என்றது, துவளாநாட்டாரை.
௫௫. 'கருணைவான்' என்பது மரபாதலின், 'அருண்மழை' என்றார்.
௫௮. பூண்டு புடைத்து விலங்கிடவென்க.

சரு - ம் திருவிளையாடல்.

௧. பதியிலார் - உருத்திரகணிகைமார்; "உருத்திர கணிகை மாராம், பதியிலார்". (பெரிய. தடுத்தாட். ௧௩௧) இறைவன் - திருப்பூவணமுடையார்

௨. பருமனுக்கு - சிவபெருமான் திருவுருவமைத்தற்கு. நாளும் புத்தி அழுங்குற.
௩. துனி-பொன்னனையாளுடைய துன்பம். ௧௦.
௪. துய்த்து - உண்டு.
௬. நாசிகாபரணம் - மூக்கணி. குன்றி - குன்றுமணி. இமைப்பு - இமைமூடல். இயள்மூக்கணியாகியமுத்து, கண்ணொளியால் மேற்பாற்கருமையையும் வாயொளியாற் கீழ்ப்பாற்செம்மையையும்பெற்றுத் தோன்றினமையின், 'குன்றி' என்றும், வாயைப் புதைத்துக் கண்ணைமூடிக்கொண்டு இவள் அஞ்சலித்தபொழுது அது முத்தென்றும் நினைக்கப்பெற்றது; "இவண்மூக் கணிமுத் திதழொளியாற் பெற்ற, துவண்பதும ராகத் தொளி".
௭. காமனைக்கண்ணிலானென்பது உண்மையென்க; காமனுக்குக்கண்ணில்லையென்பது ஒருபழமொழி. எண்ணிலா என்னை-அழகுடையவர்கள் வரிசையிற்சேராத என்னை. நீரும் எண்ணற்கென்க; சித்தர் தன்னைவிரும்பியதாகக் கருதி இதுகூறினாள்.
௮. கொல் தரும் இருப்பு முட்டு - கொல்லர்களால் செய்து தரப்பெற்ற இரும்பாலாகிய பொருள்கள்.
௯. ஆசு-கவசம். சீரா - தலைச்சீரா. மருந்து - பச்சிலை.
௧௦. நாயனை-சோமாஸ்கந்தனை; "நாயகர்" என்பர்பின்னும்; ௧௪.
௧௧. நாயனீரோ - தலைவரே.
௧௩. தபதியார் - ஸ்தபதியார்.
௧௫. கபோலம் - கன்னம்.
௧௬. அங்குலிச்சுவடு-விரற்றழும்பு.
௧௭. வடிவமழகியதென ஒருசொல் வருவிக்க; ௧௫-ம் செய்யுளைப்பார்க்க. அழகியபெருமானென்பது திருப்பூவணமுடைய நாயகரது திருநாமம்.
௧௮. பிரமாணம் - ஆஸ்திகபுத்தி.

சசு - ம் திருவிளையாடல்.

௧. மிஞ்சி - மிகுத்து. ஆயிரம்பரிக்கு - ஆயிரம் குதிரைவீரர்க்கு. பரி

யாள் - குதிரைவீரன். சந்தம் - சந்தஸ்.

௨. திசைவிசயம் - திக்குவிசயம். மூத்திசை - தெற்கல்லாதன. இயல் - இலக்கணம்.

௪. உற்றகாலத்து - ஆபத்துவந்த காலத்தில்.

௫. அமையும் - போதும்.

௬. பூ - பூமி. உயர்ந்த - மிக்க.

௭. அறை - பொன்னறை. நின்ற பொன் - எஞ்சியபொன். இரங்கல் - இரங்கற்க; வியங்கோள்.

௯. சென்னி-சோழன். சங்கரன்- சுகத்தைச்செய்பவர்.

௧௧. புரவியாள் அவன் - புரவிவீரன் அச்சோழன். அடிமை - அடியேன். செம்பியன் - சோழன்.

௧௨. ஐய - சிறிய. புறம்புடைத்திரளுகி - வெளியே தைரியமுடையவனுகப் புலப்படுத்தி.

௧௪. ஆலித்து - முழங்கி. உழையைச் சேலைத்தலைமிசைமுடிந்துகொண்டு - அகாயவாணியை அடையின் தலைப்பில் முடிந்துகொண்டு; இங்ஙனம்செய்தல் மரபு.

௧௬. நீறிடா - திருநீறிட்டு. அணிந்தனன் - சேனையைவகுத்தனன். களம் - போர்க்களம். அப்பெரும்படை - சோழன்படை.

௧௭. வினை - போர்.

௧௮. மூலபலம் - மூலப்படை. கிள்ளி - சோழன். 'எதிர்ந்தேன், என்னை ஆளுடையாய்' என்றது, பாண்டியன்வார்த்தை.

௧௯. பீலிமுடி - பீலித்தொகுதி. களம் - கழுத்து. கவடித்தாமம் - பலகறைமாலை. இருமருப்புத்தோடு - யானைக்கொம்பாற்செய்ததோடு. மயிற்கழுத்து - மயிற்கழுத்தாலாகியகோவை. வேங்கைவரித்தண்டை உத்தரீயம் - வேங்கைத்தோலாகிய, கோடுகளையும் வாலையுமுடைய மேற்போர்வை; தண்டை - வால். தந்தமணித்தொடை - யானைத்தந்தத்தாலாகிய மணிகளையுடைய மாலை. மார்பிற்பிறங்கவென்க; "மார்பிற் சிறுதந்த மணித்திரண்மாலை தாழ" (பெரிய. கண்ணப்ப. ௬௦). வாங்கி - கைக்கொண்டு.

௨௦. வேட்டுவப்பரியாள் - வேடராகிய குதிரைச்சேவகர். அபயா - சோழா.

௨௧. இடும்பையன்றனைமறைத்து- துன்பத்தையுடைய பாண்டியனைப் புறத்தே தோன்றுமற்செய்து. செழியன்யான் என்ன - யானேபாண்டியனென்று. கால் - காற்று. கோரம் - சோழன்குதிரை.

௨௨. ஆசை - விருப்பம், திக்கு. வாசி - குதிரை.

௨௩. மேல்விட - மேலே குதிரையைச் செலுத்த.

௨௪. தாதகித் தெரியல்மார்பன் - ஆத்திமாலையையணிந்தமார்பையுடையசோழன். சிங்கநாதம் - சிங்கமுழக்கம்போன்றமுழக்கம்.

௨௫. இதழி - கொன்றை. சனவட்டம்-பாண்டியன்குதிரை. ஒளிவுற- அவமானம் அதிகரிக்க. மேல்பால் - மேற்றிசையில். நாகம் - நாகருலகம்.

௨௬. வருத்தமின்றித் தீரத்தேறினன்; தீரம்-கரை. குசை-கடிவாளம்.

௨௮. குதிரை இராவுத்தன் - குதிரைத்தலைவன்.

௨௯. விளித்து - அழைத்து. ஆலயத்து எய்தி, 'உயிரளித்தநாத' என்று விளித்துக்காட்டினனென இயைக்க.

௩௦. பூடணம் - ஆபரணம்.

௩௧. பிரமாணத்தோர் - ஆஸ்திகர். இச்செய்யுள், பாண்டியனதுவெற்றிக்கும், சோழனுடையகேட்டிற்கும் காரணங்கூறியது.

## ௬௭ - ம் திருவிளையாடல்.

௨. சமாதி - சங்கற்பம்.

௩. படிமம் - ஒப்புவடிவம்.

௪. சுரர்பரன் - தேவர்கள்தலைவர்; மகாதேவர்.

௬. குறியறிவு - குறித்தலையுடைய அறிவு.

௭. படைவீடு - அரசிருக்கை.

௮. நாகம் - பாம்பு.

௯. 'நேர்குன்றாத' என்பது, சிவபெருமானுக்கு அடை.
௧௦. தன்னுடைச்செலவு - தெளிந்துசெல்லுதல்.
௧௧. வாலம் - வால்.
௧௨. ஆராமம் - சோலை. கெருடி - ஆயுதப்பயிற்சிசெய்யும்சாலை.
௧௪. மதிற்றிருக்கால் - மதிலின்முடக்கத்தால்.

௪௮ - ம் திருவிளையாடல்.

௨. உழை - மான்; வீமமாம்.
௬. முறைசெய்வோர்கள் - வேலையாளர்.
௭. விம்மிமுறையிட்டார்.
௮. தீர்வை - பிராயச்சித்தம்.
௯. திலம் - எள்.
௧௦. அகமருடணங்களாகிய மந்திரங்கள் - ஒருவகைவேதமந்திரங்கள். தண்ணினீர்வைத்து - தண்ணீர்ப்பந்தர்வைத்து. விதித்ததற்கு எழுவாய் அந்தணர், அமைச்சர், புரோகிதர்; அ - ம் பாட்டிற்காண்க.
௧௧. பிரமசாயை - பிரமஹத்தி.
௧௨. குஞ்சி - தலைமயிர்.
௧௩. இப்பால் - மேலே.
௧௪. தூங்கிடாது - தாமதியாமல். ஏகாத்தீங்கு-நீங்காதபிரமஹத்தியை.
௧௫. ஞாயிறு - சூரியன். சந்து - சந்தனமரம். தெவ் - பகை. வலம் - வெற்றி. 'அந்தமெய்' என்றது, சிவபெருமானுடைய திருவாக்கை.
௧௭. பொன்னி - காவிரி. திருவிடைமருது - திருவிடைமருதூர்.
௧௮. 'ஸ்ரீஜோதிர்மயமஹாலிங்கமூர்த்தி' என்பது அத்தலத்தில் ஸ்வாமி திருநாமமாதலின், 'சோதி' என்றார்.
௧௯. நொய்ய - கனமற்ற.
௨௧. பரிவு - அன்பு.
௨௨. மேற்றோர்வாயில் - மேற்குவாயில்; அது பாண்டியன்கோபுரமென்று இன்றும் வழங்கும். விமானப்புரிசை - கொடுமுடிமதில். அகரம் - அக்கிரகாரம்.
௨௩. பதக்கிணம் - பிரதக்ஷிணம். நாய்க்கட்டம்-நாய்மலம். அவனிபாதிகொடுப்பலென்று நெஞ்சினால் நினைந்தனன். பகுதி - பகுப்பு.
௨௫. வரும்பிறவியின்கண் அடிமையாக.
௨௬. தலையோடு - மண்டையோடு. கிடக்க, வியங்கோள். ஈலைந்தனன் - அத்தலையோட்டைச் சூடிக்கொண்டான்.
௨௭. விடுட்விடும், முன்னிலைப்பன்மை. வெள்ளளை - திருநீற்றால் வெண்ணிறமுடையானை. பணிந்தான் - அக்கள்ளனைப்பணிந்தான்.
௨௮. படாம் - ஆடை.
௨௯. ஆவி - தடாகம்.
௩௨. சிவலோகம் உலகுக்கெல்லாம் உயர்ந்துளதென்பதை, ௩௭ - ம் பாடலாலுமுணர்க.
௩௪. நின்றமர் - நின்னடியார். நினைவு - கவலை.
௩௫. கோடிஞாயிறு - கோடிசூரியர்கள்.
௩௭. கண்ணுறில் - நினைத்தால்.
௩௮. மகிழ்ச்சியடைந்தோர் மங்கலப்பொருள்களாகிய பூவும்பொரியும் சிந்துதல் மரபு.
௩௯. உளம்கண்நிறைந்தன - உள்ளமும் கண்களும் நிறைந்தன.
௪௦. இராவில்வந்து. உதவியமறையோன்றன்னை - இனைற்றினின்றும் எடுத்தமறையோனை. 'மறையோன்' என்றது, கணவனை.
௪௧. பிரமஹத்தியாலே ஊண்முதலியவற்றை இழந்ததை, ௧௨-ம் செய்யுளாலுமுணர்க.

௪௯ - ம் திருவிளையாடல்.

௨. பேசி - போர்செய்யவருதலை முன்னேதெரிவித்து; சூளுரைத்தென்றுமாம். கருநாடர் - கருநாடதேசத்தலீரர். வினை - போர்.
௩. ஆன்நிரை - பசுக்கூட்டங்கள். அதர்மறித்தும் - வழிமறித்தும்.
௪. அத்திஅன்றுஎய்தசேவகன் - அட்டாலைச்சேவகர்.
௭. "அற்றவர்க் குற்ற சிவனுறைகின்ற வாலவா யாவது மிதுவே" என்

பது தேவாரம். நீயலாற் புகலுண் டோவென ஒருசொல் வருவிக்க.
௯. பூதி - விபூதி.
௧௦. சேரியன் - சோழன்.
௧௨. தந்தையன் - தந்தை.
௧௩. விடைதரப்பெற்றோம், சிலேடை.
௧௪. சேனைத்தலைவர் மீட்டிட.
௧௫. கிள்ளி - சோழன். விளிய - அவமானமுற.
௧௬. வாளி - அம்பு.
௧௭. துரகம் - குதிரை. இபம் - யானை.
௧௮. நோக்குவித்தை உடையோர் தம்வித்தைகாட்டுகையில் நெற்றியிலே கம்பொன்றை நிறுத்திக்காட்டுதல் இயல்பு. ஒத்து - ஒருவகைவாத்தியம்.
௧௯. பூதசாலம் - பூதக்கூட்டம்.
௨௦. வாங்கி - பின்வாங்கி.
௨௧. வில்லி - அட்டாலைச்சேவகர்.
௨௩. என்று வந்தித்தான் - எந்நாள் வந்தித்தானோ.

௫௦ - ம் திருவிளையாடல்.

௧. தூய்தகு-தூய்மைபொருந்திய. ஒருமனமுடையாளென்பார், 'காதல்கூர் நினைவின் மேவுங் காதலி' என்றார்; "காத லிருவர் கருத்தொருமித் தாதரவு, பட்டதே யின்பம்" என்றார் ஔவையாரும்.
௨. பூதிசாதனம் - விபூதியும் உருத்திராக்கமும். கோதை - மாலை.
௩. உணவு: உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என நான்கு வகைப்படும்.
௫. செய்தி - செய்கை.
௬. வருபோகத்து - பின்உண்டாகும் வினையில்.
௭. வீறு - வேறொன்றற்கில்லாஅழகு. பேறு - இலாபம்.
௮. களக்கம்=களங்கம் - குற்றம்; கலக்கமுமாம். ஓங்கல் - மேருமலை.
௯. வாதை - துன்பம்.
௧௦. இறுத்தற்கு - கொடுத்தற்கு. இன்றுநாட்டிடு.
௧௧. இடும்பை - துன்பம். உயர்ந்த வாக்கு - அசரீரி.
௧௨. சூளாமணி - முடிமணி; 'ருத்திரர்தலைவன்' என்பர் பின்னும், ௧௭; 'ருத்திர சூளாமணி' என்பதைப் பெயராகவேகொண்டனர், பயகரமாலையுரையாசிரியர். வற்றாய் - வல்லமையுடையதாய். கந்தம் - மணம்.
௧௩. உலவாக்கோட்டை - எடுக்க எடுக்கக் குறையாத அரிசிக்கோட்டை. தண்டுலம் - அரிசி. விற்றுப் பொருளையுண்டாக்கி. வேதஞ்சொல்யாண்டும் - நூறுவருடமும்; "வேதநூற்பிராயம்நூறு" (திருமாலை, ௩.) என்பதனாலுமுணர்க.
௧௪. மெய்விதிர்ப்பு - உடம்புநடுக்கம். செங்கைநவ்வியன் - செவ்விய திருக்கரத்தில் மானையணிந்தவர்.
௧௫. புகா - புகுந்து. உள்அரங்கில் - அரங்குள்ளில்; என்றது, அறையின் உள்ளேயுள்ள மற்றோர் அறையை; "எழினி வாங்கிய வீரறைப் பள்ளி". (முல்லைப்பாட்டு, ௬௪)
௧௭. மனைவியோடும் சிவலோகத்தில் எறினனென்க.

௫௧ - ம் திருவிளையாடல்.

௨. கருநாடமன்னன்-கருநாடதேசத்தரசன்; "வடுகக்கரு நாடர் காவன், மானப்படை மன்னன்." என்பது மூர்த்திநாயனார், புராணம், ௧௧. கையர் - கீழ்மக்கள்.
௪. மிறை - நடுக்கம்; "அந்தமிலவா மிறைசெய்யவும்" என்பது ஷை புராணம், ௧௫. பறிதலை - உரோமங்களைப் பறித்துக்கொள்ளும் தலை. ஷை புராணம், ௧௮ - ம் திருவிருத்தத்தைப்பார்க்க.
௫. "நட்டம் புரிவா ரணிநற்றிரு மெய்ப்பூச் சின்று, முட்டும் பரிசாயினுந்தேய்க் குங்கை முட்டாது" என்பது ஷை புராணம், ௨௦.
௬. வட்டப்பாறை - சந்தனக்கல்; "வட்டந் திகழ்பா றையின்வைத்து முழங்கை தேய்த்தார்" என்பது ஷை புராணம், ௨௧.

எ. சலம் - துன்பம். என்றுகொண்டு கிளர்ந்ததென முன்னேகூட்டுக. ஷை புராணம், ௨௨ - ம் திருவிருத்தத்தைப்பார்க்க.

௯. ஓடைக்குன்று - யானை. வில் - ஒளி.

௧0. குணப்பெருங்குன்றை - மூர்த்திநாயனாரை.

௧௧. இழிச்சி - இறங்கி யருளச்செய்து; "வெங்கட்களிற்றின் மிசைநின்று மிழிச்சி" என்பது ஷை புராணம், ௩எ.

௧௨. தந்திரவிதியின் - நூல்விதியால். முடி சடைமுடி-கிரீடம் சடைமுடியாக; ஷை புராணம், ௪௧ - ம் திருவிருத்தத்தைப்பார்க்க.

௧௩. யாவருமியைந்து. மூன்று - சடைமுடி, உருத்திராக்கம், திருநீறு.

௧௪. "மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்" என்பது, திருத்தொண்டத்தொகை, ௩.

## ௫௨ - ம் திருவிளையாடல்.

௨. காலி - பசுக்கள்.

௩. களங்கனிக்கொத்து - களாப்பழக்கொத்து. வெண்பாசி - ஒருவகை மணி. பூதி - விபூதி. யாவும்-எல்லாம்; 'ஆவும்' எனப் பிரிப்பினும்பொருந்தும்; ஆ - பசு. வரைநெடுங்குழல் - வேய்ங்குழல்; வரை - மூங்கில். தெற்றி - பின்னி.

௫. மன்றுமிடி என்பது சிலேடை; சபையில் ஆடுபவனென்றும் எருமன்றத்தில்ஆடுபவனென்றும் பொருள்படும்; பசுமந்தையை எருமன்றமென்றல் மரபு. அதர் சொல் - வழியைச் சொல். நாவளைத்து - சீழ்க்கை ஒலியைச்செய்து; நின்றவன் ஆவளைத்தெனப் பிரிப்பினும் பொருந்தும்.

௬. வன்புலவர் - சங்கப்புலவர். மதியாது நாணாது உரைத்திரே.

எ. கொச்சையலன் - இழிந்தவனல்லன்; "அறக்கிழவன் மனிதன்விரகில்லாக் கொச்சை" என்பது ஆனந்தலகரி, ௧௩. விடமன் - விஷமன்.

௮. ஒன்றையும் மீட்டுளாயார்.

௧0. இல் - இல்லை.

௧௧. ஊர் பொதுவன் - ஊர்ப்பொதுவில்உள்ளவன்; [பொது - சபை] இடையன். அண்டன் - தேவன், இடையன். சிற்றிடைச்சி - சிறிய இடையையுடைய உமாதேவியார், சிறிய இடைச்சாதிப்பெண். பசு - உயிர்கள், பசுக்கள். முட்டாமல் - குறையாமல், முட்டுதல் செய்யாமல். பாசம் - ஆணவமுதலிய மலங்கள், கயிறு. மன்றுமிடி-சபையில் ஆடுபவன், எருமன்றத்தில் ஆடுபவன். கால்மாறி-கால் மாறி ஆடுபவர், கால் மாறி நிற்கும் இடையன். இச்செய்யுளும், "பாச நீக்கிமூவகைப்ப சுக்களை, யாசின் முத்தியாம் வனத்தின் மேய்த்துடு, மீசன் மின்னைநே ரிடைச்சி காதல, ஞசில் பால்வணத் தண்டர் நாதனே" (திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி, எ௧) என்பதும, ஒருவாறு ஒத்திருத்தல்காண்க.

௧௨. கோன் - அரசன், இடையன். பருந்து - பங்கிட்டு.

௧௩. இயற் சிவன் - சுந்தரேசர், இலக்கணத்தையுடையசிவன்; இயல் - அழகு, இலக்கணம்.

## ௫௩ - ம் திருவிளையாடல்.

௧. புல்வாய் - ஒருவகைமான். ஓர் நிலை - ஓரிடத்தில். பயந்த - பெற்ற. புனிற்றிளமறியை - ஈன்றஅணிமையையுடைய கன்றை.

௨. புல் தீர்ந்த - புற்கள் கரிந்த. ஒளிநிற்பான் - ஒளித்துநிற்பவன். பட - இறக்க.

௩. பிரியாத-பகைமையினின்றும் நீங்காத.

௪. விதிமாற்றல் - புலி மான்கன்றுக்குப்பாலளிக்கச்செய்தல். சிவபெருமானுடைய ஆச்சரிய சக்தியைப் பிரமதேவர் வியந்ததாக இங்கே கூறியிருத்தல்போல, (௬0) ௪௯ - ம் செய்யுளிலும், (௬௨) ௧எ - ம் செய்யுளிலும் கூறியிருத்தல்காண்க. சிலைமலை வில்லான் - மலையின்ற வில்லாக மேருவையுடையவன்; சிலை-மலை. சசிபதி - இந்திரன்.

௬. சிறந்துநீடிய. பொருள்களைப் பின்னுந்தேட.

௭. பச்சிமதிசை - மேற்றிசை. எல்லும் அல்லும் - பகலும் இரவும்.

௯. படிமம் - திருவுருவம். தலத்தையும் படிமத்தையும் கண்டனன்.

௧௦. மணற்புரம் - மணலூர். அரசன் - பாண்டியன்.

௧௧. சித்திரைச் சித்திரைக்கு - சித்திரை மாதத்துள்ள சித்திரை நக்ஷத்திரத்தில்; (திருவிளை. இந்திரன். ௬௪).

௧௪. மயன்நூல் - சிற்பநூல்களுள் ஒன்று. எல்லை அடைவாகநடந்தான்.

௧௫. கழகம்-கல்விச்சாலை. நயப்ப - விரும்ப.

௧௬. கன்னி மால் காளி ஈசன்கா க்குமா நகரி - மதுரை: (திருநகர. ௧௨-௧௫; பயன்முதலியன, ௫.) எத்த வாழ்த்திட இருந்தென்க.

௫௪ - ம் திருவிளையாடல்.

௧. நிம்பமாலை - வேப்பமாலை.

௪. மலயாநிலம் - தென்றல்.

௫. நாளும் வரவேணும் - தினந்தோறும் வரவேண்டும்; "வேணுமாகில்வேணும்" (பார. சூதுபோர். ௧௬௫). விடுத்தற்கு - தங்குதற்கு.

௬. பீடு ஒன்று இயவன் - பெருமைபொருந்திய வாத்தியத்தையுடையவன்; எழுவாய்.

௭. பதறு - பதறி. பெருமாள் - பெருமையையுடையவன்.

௮. விளரி - ஒருபண்.

௯. பூசை - பூனை. சிச்சிலி - மீன் குத்திக்குருவி. பறவை-குயில், வண்டு முதலியவை. உச்சிமலைநீர் விழுக்காடு-அருவியின் வீழ்ச்சி. இச்செய்யுளின் பொருளை, "சிச்சிலி பூனை குடமுழக் கஞ் செம்மைத்தா, மூச்சிமலை நீர்வி ழுக்கா டோண்பருந்து - பச்சைநிற, வேயினிலை வீழ்ச்சியுடன் வெங்கா னிழற்பறவை, யேயுங்கா லோசை யியல்பு." (இசைமரபு.) என்பதனாலும் விளங்கவுணர்க; "வண்டின் முரியுங் கஞ்ச நாதமுஞ், சிரல்வா னிலையுங் கழையிலை வீழ்வதூ, மருவி யோசையு முழவின் முழக்கமும், வலம்புரிச் சத்தமும் வெருகின் புணர்ச்சியு, மின்னுமென் றிசைப்பப் பன்னிய விதியொடு" என்பது கல்லாடம், ௨௫.

௧௦. கீதநாதன் - பாணபத்திரர்; "கானநாதா" என்பர்பின்னும்; ௧௨. எட்டை - இளைப்பு. உண்டோ - யாரேனும் உளரோ.

௧௧. பணி - ஆபரணம்.

௧௨. காயகன்-இசையில்வல்லவன்.

௧௩. சுத்த சாளர சங்கீதம் - சுத்தமும் சாளரமுமாகிய ஸங்கீதம்; சுத்தம் - இயல்பானநடையுள்ள இசை; சாளரம்-வேறோரிராகத்தின் நடையைத்தழுவி இனிமையையுண்டாக்கும் இசை; இது சாலகமெனவும் சாயாலகமெனவும் வழங்கும்; ௪௦: "சுத்தசா ளரசங் கீதம் பாடுதற்கு".

௧௪. முடிச்சுற்று-தலைச்சாத்து. குப்பாயம் - சட்டை. வீணையையும் தண்டையுடையயாழையும்; வீணைவேறு, யாழ்வேறு; "குழலும் வீணையும் யாழுமென் றினையன குழைய." (கம்ப. சுந்தர. ஊர்தேடு. ௬). தந்திரி - நரம்பு.

௧௫. நமக்கு குன்று உற்றது - நமக்கு ஓரிடையூறு மலையாக வந்துவிட்டது. வல்லேம் அல்லேம் - வல்லமையுடையேமல்லேம்.

௧௭. இப்பகையினைக் கழித்தல்வேண்டும். இது பூண்டு. மாண்தக - மாட்சிமைபொருந்த.

௧௮. திருவுளத்தடைத்து - திருவுளங்கொண்டு.

௧௯. செடி - நாற்றம். துணி-துண்டம். சீரை - கந்தை.

௨௦. குறிஞ்சிலி-ஒருவகைமரம். விடத்தரங்காய் - விடத்தேரைமரத்தின் காய்.

௨௨. விலாவொடிப்ப - சிரித்தலால் விலாவை ஒடிக்க; (௩௮) ௪௮: "கையர் விலாவொடி யாக்கி னூரால்". கறை - அழுக்கு. கொடுக்கு - ஆடைத்தொங்கல்; "பேதித் தறுதற் கச்சை புனைந் ததிலே விட்டான் பெருங்கொடுக்கு" என்றார் முன்னும் (௩௦) ௬.

௨௩. துறை - இசைத்துறை. கை யாண்டி - ஒருவகை இசைப்பாட்டு.

௨௪. உரன் - வைரம்; "உரவிது"; ௨௯. ஊன்றுகட்டு-ஒருவகைக்கட்டு.

௨௫. மொய்ம்பு - வலி.

௨௬. மாலையங்குழல் - பூமாலையணிந்தகூந்தல். பாணர்மாலையர் - விறலியர்; விறலியரை மாலையரென்றுவழங்கல் மரபு; (௫௭) ௩௫. மாலை எய்தி-மயக்கமுற்று. காட்சியாற் சூல்கொள்ளுதலை, "சொக்கனைக் கண்ட வீதி மங்கையர்.........,பொங்கிய பெருஞ் சூல் கொள்வார்" என்பதனாலுமுணர்க; (௨௮) ௩௭.

௨௭. கூறி - விலைகூறி. சந்தைகள்-வேதங்கள்.

௨௮. இடை இடையும்படி இருதனம் கொடுவந்தனர்; இடைதல்-மெலிதல்.

௨௯. உரவிது - வன்மையையுடையது. எரி விழும் - தணல்விழும்.

௩௧. தெற்றி - திண்ணை. மாறு - மலாறு ; ஒப்புமாம்.

௩௨. சாதாரி- ஒருவகைப்பண் : இது, வடமொழியில் தேவகாந்தாரி யென்று கூறப்படும்.

௩௩. இதிற்கூறிய இசைத்தொழில் பத்தினையும், "உள்ளாளம் விந்துவுடனாத மொலியுருட்டுத், தள்ளாத தூக்கெடுத்த றன்படுத்தல் - மெள்ளக், கருதி நலிதல்கம் பித்தல் குடிலமொருபதிற் றொன்றென் றுரை." என்னும் இசை மரபுவெண்பாவாலும் உணர்க.

௩௪. மஞ்சம் - கட்டில்.

௩௫. கொத்து இசை - தொகுதியாகிய இசைகளில். பண்ணறை அடிமை - இசை அற்றவனுகிய அடிமை.

௩௬. இறை - விடை, தலைவன். நாயன் - தலைவன்.

௩௭. பரிபவப்படுமுன் - அவமானப்படுமுன். புத்திரர் - மாணக்கர்கள்.

௩௮. மடிதருசவிகை - மடக்கிய குடை. மிக்க அச்சமுண்டானபொழுது நெஞ்சம் துடிக்குமாதலால், அதனைப் பறையறைதலென்றுகூறுதல் மரபு; "தீத்தரு மூளம்பறை யறைய" என்பர் பின்னும்; (௫௭) ௨௫; "இருவர்மா மனமும் பறையறைந் தயர்வுட னடுங்க" (பார. இராச. ௨௪).

௩௯. முட்டு - வாத்தியங்கள்; ௪௩. விட்ட - தங்கிய.

௪௬. நீடு தும்பி எருத்தத்து - நீண்ட யானையின் பிடரியில்.

௪௮. பல்கால் அதிசயித்து. சென்னி - பாணபத்திரன்.

௪௯. கனத்திறை - விறகின்சுமையையுடைய சிவபெருமான். சொல்லதாம் பாணர்க்காகச் சென்றுவந்ததைச்சொல்லியருள. பனிப்புஅற - நடுக்கம்நீங்க. வாங்கி-விறகுகட்டை வாங்கிக்கொண்டு; வாங்கி என்றவெனை இயைக்க.

## ௫௫ - ம் திருவிளையாடல்.

௧. தான் அரசாய் இருப்பவும். அந்தரத்தில்.

௨. ஞானமுதல்வன் - சிவபெருமான். தீனம் - வறுமை. அருட்சிந்தனைசெய்வன்-திருவருளைச் சிந்திப்பன்.

௩. ஈவான் - புலவர்களுக்கு ஈதற்கு ; ௨௬, ௩௩.

௪. பண்டாரம் - பொன்னறை.

௫. முரிவாய் - கன்னவாயில்.

௬. வழக்கு - நீதி.

௭. எல்லாவுயிர்களும் சொல்லுகின்றசொற்களை அறிந்துகொள்பவராதலால், அவருக்குக் கழறிற்றறிவாரென்பது திருநாமமாயிற்று.

௮. "மதிமலிபுரிசை" என்னும் திருமுகப்பாசுரவகவல் வருமாறு:—"மதிமலி புரிசை மாடக் கூடற், பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை, யன்னம் பயில்பொழி லால வாயின், மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம், பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க், குரிமையி னுரிமையி னுதவியொளிதிகழ், குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச், செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க, பண்பால் யா

ழ்வல பாண பத்திரன், றனிபோ லெ ன்பா, லன்பன் றன்பாற், காண்பது கருதிப் போந்தனன், மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே."

கக. வில்லவன் - சேரன். செல் - மேகம்.

கஉ. பசியும் வறுமையுமுடைமை யை, "பரிவினல் குரவு லைப்பப் பசி யொரு புறத்த லைப்ப" கஅ. என்பதனு லுமுணர்க. 'இசையுருவம்' என்றது, அவருக்குள்ள ஸங்கீதப்பயிற்சியின் மிகுதி கூறியவாறு.

கரு. நிறைவு - மகிழ்ச்சி.

கச. அந்த உழை இடை - தண்ணீர்ப்பந்தரிடத்தே.

கரு. அரசன் உம்மைக்காண்பா ஞைசையாயிருந்தான். உளா - புகழ்.

கசு. விரைந்துவந்தமையால், மணி கள் சிந்தின. சேரர்நடந்துசென்ற மை, ௩௦ - ம் பாடலாலுமவலியுறுகி ன்றது. சொன்ன எல்லை - தண்ணீர்ப்பந்தர்; கஉ.

கக. பத்திரம் - திருமுகம். உன்ற னக்கென்று தந்த திருமுகமென்க; உ ன்றனைக்கு என்றும் நல்லசொக்கனெ ன்பதுமாம்.

உ௦. இருமை - பெருமை. ஈடுகொ ண்டு - மனம்கனிந்து. சூடினன் - தலை மேல்வைத்துக்கொண்டான்.

உக. திருமுகப்பாசுரத்தில், "தன் போ லென்பா லன்பன்" என்றத ஞல், தன்வயின்வைத்துள்ள பரிவு கா ணப்பட்டது.

உஉ. ஓடை - யானையின் நெற்றிப் பட்டம்.

உ௩. மெய்முழுதும் எண்ணெய் பெய்து. மாலைசூட்டித் தூசுசாத்தி.

உச. பெரும்பொருளறை - பெரிய பொன்னறை.

உரு. கோதை - சேரர். ஆணை - கட்டளை.

உசு. அதுகண்டு - திருவாணைகூறி யதைத் தெரிந்து. முன்வாடி. பின் தெளிந்து. விதரணம் - கொடை.

உஎ. என்னை - என்னைநோக்கி.

உஅ. பொறையீர்கோமான் - மலை நாட்டார் அரசர். நான்முகனுதியாக எறும்பு ஈறதாகவென்க; "அயன்முத லாகத் துன்னித், தப்பறவெறும்பீ ருகத் தனுத்தொறு நிற்பேம் யாமே" என்பர்பின்னும்; (ருகூ) ச. 'பிரஹ் மாதி பிபீலிகாபரியந்தம்' என்பது வடமொழிவழக்கு.

உகூ. இது - இழிகுலப்பாணன் எ ன்பது. சொல்வது என்னை - சொல் வதுயாது. எம்பெருமக்கள் - எமது பெரியோராகிய தேவரீர். அருந்தவன் ஆணையாலே - சோமசுந்தரக்கடவுள் 'வரவிடுப்பதுவே' என்றருளிச்செய்த கட்டளையால். நல்லாட்கூட்டி - நல்ல வீரர்களைச் சேர்த்து; "ஆட்கொலாஞ் செப்பினன்"; (சீவக. கனக. உஎ௦).

௩௦. வஞ்சிக்கொற்றவன் - சேரர். கோதைதன்பரிசனத்தால் - சேரரு டைய ஸ்பரிசத்தால். பரிசித்ததை, உக-ம் செய்யுளாலுணர்க. பரிசனங்க ளோடும் - பரிவாரங்களோடும்.

௩க. வரிசை - சன்மானம். தென் னன்கண்டு அதிசயிப்ப. தோலா பீலியாற்செய்த விசிறி.

௩உ. தாமதிக்காது அன்றைத்தின மே அளித்த விரைவுதோன்ற, 'கானு முன்' என்றார்.

௩௩. வறுமையோர் - தரித்திரர். என் றும் பொழிந்து நாளும் வாழ்ந்து பாடி யாருந்துதிப்ப இருந்தனன்.

ருகூ - ம் திருவிளையாடல்.

உ. ஊடி - வெறுத்து.

௩. பொய்ம்மை - மனம்வேறு வா க்குவேறு. முச்சந்தி - காலை, உச்சி, மாலை.

ச. யாமினி - இரவு. துப்பு - தூய் மை; நெஞ்சன் - பாணர்.

ரு. நாற்கால்விலங்கு. இல் - இடம். ஞான்றதுவென்ன - தொங்கினவென்ன.

சு. யான் இன்று அழியினும்விரதம் ஒழியேன். வல்லான்செயல் - சிவன் செயல்.

எ. புங்கவம் - இடபம். தென் - அ ழகு. மருத்து - காற்று. மழை கண்ட

ழையாதலின், மலையருவி அதற்கு உவமையாயிற்று.

அ. அம்பு - நீர். சிக்கனவு - உறுதி.

௯. அருக்கன் - சூரியன்; அரக்கனென்றபாடத்திற்கு இராவணனென்றுகொள்க. கயம் - யானை. சயந்தரும் புகழ் - பிரதாபம். இச்செய்யுள், "அயன்றலை கொண்டுசெண் டாடல்பாடி யருக்க னெயிறுப றித்தல் பாடிக்,கயந்தனைக் கொன்றுரி போர்த்தல் பாடிக் காலனைக் காலா லுதைத்தல் பாடி, யியைந்தன முப்புர மெய்தல் பாடி யேழை யடியேமை யாண்டு கொண்ட, நயந்தனைப் பாடிநின் றாடி யாடி நாதற்குச் சுண்ண மிடித்து நாமே" (திருவாசகம், திருப்பொற்சுண்ணம், ௧அ) என்பதைத் தழுவியது.

௧௦. இயற்பலகை - சங்கப்பலகை. பாவலர்-சங்கப்புலவர். முன்வரக்கொடுத்தான், இப்பொழுது சென்றுஇட்டான்.

௧௭. வெய்யபாணர் - அழுக்காறுற்றபாணர்; எழுவாய்.

## ௫௭ - ம் திருவிளையாடல்.

௩. அருவமாகிய இசையானது உருக்கொண்டு உலாவுவதென. விறலியர்கள் அரசனிடம்சென்று பாடிவர வேண்டியது மரபாதலின், 'சாதித் தருமநீதியினால்' என்றார்.

௪. கைகுறைத்தகதையை, சிலப். பக்கம் ௨௨, ௧௫ - ம் வரி முதலியவற்றாலுமுணர்க.

௫. வலிசெயாது - பலாத்காரம்செய்யாமல். கறுத்து-கோபித்து. விளிய-அவமானப்பட.

௬. அகற்றியோர் - வேலைக்காரர்.

௭ முல்லைசேர்மாலை - முல்லைப்பூமாலையையணிந்த; இம்மாலை கற்பிற்கு உரியது. இங்கிதம் - குறிப்பு.

அ. தரம் - தகுதி. புகலின் நம்தோல்வியாய் இருக்கும்.

௯. அதா - அக்கற்பு.

௧௦. எய்திய மாலை - வந்தவிறலி.

௧௧. முல்லைத்தெரிவை - பத்திரா மலேவி. பேசி - சபதம்செய்து; முன்பு எசிவந்துசென்றுமாம். கருகிட - கோபிக்கும்படி. கற்பினளைவது.

௧௩. துப்பிலாமாது - வந்தவிறலி; 'துப்பின்மாது' என்பர்பின்னும்;௧௪.

௧௪. காகசுரம் - காகம்கத்தினாற்போலப்பாடுவது; அது இசைத்தொழிற்குற்றம் எட்டினுள் ஒன்று;இதனை, "பெருக்குரல் கட்டை நழுவல் விலங்க, லொருக்கி யொதுக்கம் புரைத்தல் - விருப்பிலாக், காகுளி காக சுர மென்று மிவ்வெட்டு, மாகா வெனச்சொன்னா ராய்ந்து" என்னும் இசை மரபு வெண்பாவால் உணர்க. 'மாறன்' என்பதற்கு மாறுதலையுடையவனென்னும் பொருள்புலப்படக் கூறியிருத்தல் ஆராய்தற்பாலது.

௧௫. வாரம் - பக்ஷபாதம்; "ஓரங் கூர்ந்து' என்பர்பின்னும்; "வாரம் பட்டுழித் தீயவு நல்லவாந், தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவா, மோரும் வையத் தியற்கையன் றோவெனா, வீர வேனெடுங் கண்ணி விளம்பினாள்." (சீவக. குணமா. ௩அ) என்னும் செய்யுளாலுண்டு உணரற்பாலது. இராசா அனுமதிதருமம்-இராசாவுடைய அனுமதியே தருமம். மாதுரமாக - இனிமையாக.

௧௬. சொல் - புகழ். எல் - ஒளி.

௧௭. ஏறும், முன்னிலைப்பன்மை.

௧அ. எங்களென்றது கணவனையு முளப்படுத்தி.

௨௦. ஓரம்கூர்ந்து - பக்ஷபாதம்மிகுந்து.

௨௧. கைதவம் - வஞ்சனை.

௨௨. என - என்று தன்னுட்கருதி. தமிழ்வாணர் - தமிழ்ப்புலவர்கள்.

௨௩. முகமுகம்பார்த்தனர் - ஒருவர்முகத்தை ஒருவர்பார்த்தனர்;"கண்மல்கு நீரார் முகமுகங்க ணோக்கினரே"; (சீவக. கனக. ௨௫௨).

௨௪. பரந்தவன் - சிவபெருமான். போதமில்மாது - வந்தவிறலி.

௨௫. உளம்பறைஅறைய - நெஞ்சு நடுங்க.

௨௬. பெருக்குரல்-வெடித்தகுரலாகியவெள்ளோசை, கட்டைதல்-ஓர்ஓசை

யான தன்மைநீங்கிப் பலவோசையாய் வருதல். புரைத்தல் - ஒருதானத்தே பிட ஒருதானத்தே நழுவுதல். மேலொருக்கல் - ஓதுக்கிப்பாடுதல். காகவோசை - காகங்கத்தினுற்போற்பாடுதல். காகுளி - பேய்கத்தினுற்போற் பாடுவது. விலங்கல் - ஒருபண்ணைப் பாட வேறொருபண்ணிலே விலகிநின்று இரட்டல். கட்டை - நிறமும் தானமும் குறையும் கீழிசை. இவற்றை, "பெருக்குரல் கட்டை ............... சொன்னு ராய்ந்து." என்னும் இசைமரபு வெண்பாவாலும், "நாசி காகுளி வெடிகுரல் வெள்ளை, பேசாக் கீழிசை யொருபுற மொட்ட, னெட்டுயிர்ப் பெறித லெறிந்துநின் றிரட்ட, லோசையிழைத்தல் கழிபோக் கென்னப், பேசுறு குற்ற மசைவொடு மாற்றி". (உ௫) என்னும் கல்லாடச்செய்யுளாலும் விளங்க உணர்க.

௨௭. இறை - சிவபெருமான். மடப்பம் - கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை.

௨௮. அரிமுரற்சி - வண்டின்நாதம். ஏழிசை - ஏழுவகைஓசை; "துய்ய மொழி மென்குயிலுஞ் சோலைவரி வண்டினமும், வைய முழங்கும் வலம்புரியும் - கையைவைத்துத், தும்புருவு நாரதரும் பாடியஏழ் வோசையென, நம்புநீர் நால்வேதத் துள்." என்பது இசைமரபு.

௨௯. தானங்கள் எட்டு - இடங்கள் எட்டு. இச்செய்யுட்பொருளை, "மாத்திரைக ளொன்பானு மன்றன மோரெட்டு, மேத்துங் கிரியையென் றீரைந்தும் - கோத்துப், பதின்மூன் றெழுத்தாற் றொழிலைந்தும் பண்ணின், மதியோர்க ளைந்துநிற மாம்." என்னும் இசைமரபு வெண்பாவால் ஆராய்க.

௩௦. சரம் - ஸ்வரம்; அம்பென்பது மற்றொரு பொருள்; இதனை, ௩௧ - ம் செய்யுளாலுணர்க.

௩௧. பகைத்தவனெஞ்சம் பரிந்தது புதுமையேயோ. 'எங்கும் நிரம்பியோன் முன்னின்றால் எந்நெஞ்சகமுருகாது' என்பது, "யார்க்கு, முன்னவனே முன்னின்றான் முடியாத பொருளுளதோ." (பெரிய. திருவாரூர்ச்சிறப்பு, ௬௭) என்பதைத்தழுவியது. சரம் - ஸ்வரம், அம்பு. சலம்-தணியாக்கோபம்; சலனம்; லகரத்திற்கு ரகரம் இங்கே போலியாகவந்தது.

௩௨. மெய்த்தவன் - சிவபெருமான்.

௩௩. மாலையை - விறலியை; பூமாலையை யென்பது மற்றொருபொருள்; "வாடிய மாலை வாடா மாலைதாள் வீழக் கண்டே" என்பர் பின்னும்; ௩௫.

௩௫. சேடு - பெருமை.

௩௬. பண்டுறல் - பழையசெய்தி. இச்செய்யுளின் கருத்தை, ௨௭, ௨௪ - ம் செய்யுட்களாலுணர்க.

௩௭. நற்றமிழிறைவன் - சிவபெருமான்.

௩௮. அளவில்காலம் வீற்றிருந்து.

## ௫௮ - ம் திருவிளையாடல்.

௧. முரண் அடு - பகைமையைவெல்லுகின்ற. இன்னெறி - இனியநெறி; இல்லறநெறியுமாம். வன்னியர் - ஒருவகைச்சாதியார். காட்டு நாடு - பாண்டியநாட்டின் கண்ணதாகிய சிறிய தொருநாடு. அது, 'களவேள்வி நாடென்றும் பெயர்பெறும்; "முன்னோர் பாண்டியன் சோழற் காய்ந்து; பெருங்கள வேள்வி செய்த பீடுடைக் காட்டு நாட்டுள்." என்பதனுலுமுணர்க. (௪௪.) ௫௪.

௨. அன்று, ஏ, அசை நிலைகள்.

௩. உறைழ் - வீடு.

௪. துரப்ப - ஓட்ட. மேனிவருந்த. நாஞ்சில் - கலப்பை. புன்பயிர் - நெற்பயிரல்லாதவைகள்.

௫. ஞாளி - நாய்.

௬. தூறு - புதர்கள். தப்பு - ஒருவகைப்பறை.

௭. உழுந்தொழில் உமக்கே பரிவுடைத்து. குழுவைகளாகி - கூட்டிகளாகி. முன்பிழை - தப்பெனக் கையைக்கொட்டிப்பாடியது.

அ. சொக்கன் இன்னருளால் - சொக்கநாயகரது இனிய அருளினால். மறுபெருஞ்சாபம் - சாபவிமோசனம்.

௯. வன்னியர் - மேற்கூறிய பன்னிருமைந்தர்கள்; எழுவாய்.

௧௦. யாய் - தாய்ப்பன்றி. போதகங்கள் - பன்றிக்குட்டிகள். அழுங்கல் - வருந்துதலை. உறையாவும் உணர்வான் - சொக்கநாயகர்.

௧௧. வட்டமுறி மதியம் - வட்டம் முறிந்த சந்திரன்; என்றது பிறைமதியத்தை. துண்டம் - மூக்கு. இருபாலும் உண்ண - இரண்டுபக்கத்தும் உண்ணும்படி.

௧௨. படியிடந்த கோலம் - ஆதிவராகம். கோலம் - வடிவு, பன்றி.

௧௩. அன்றே - அந்நாளே. அவல் - பள்ளம்.

௧௪. இச்செய்யுள், அகத்தியமுனிவரைநோக்கி முனிவர்கள் வினாவியது.

௫௯ - ம் திருவிளையாடல்.

௨. நலந்து - விரும்பி.

௪. இந்த அங்கம் - பன்றிவடிவம். காரணத்தை அருளிச்செய்யும். துப்பு - பவழம். தனுத்தொறும் - உடம்புகள்தோறும். இச்செய்யுளில், பின்னிரண்டடியின்கருத்து, (௫௫) ௨அ - ம் செய்யுளிலும் வந்துள்ளது.

௫. யாம் எவ்வுயிரையும் வளர்ப்பேம்.

௬. இதன் அளவில் - இப்பன்றிக்குட்டிகளிடத்தில்; இது, சாதியொருமை.

௭. நம்மாணையால், இவைதாம் சேனைநாயகர்களாகும்.

௯. அளித்தல், கடம்பவனத்திற்கு அடை.

௧௧. பிறைக்கோட்டுமாக்கள் - பன்றிக்குட்டிகள். மாக்கள் சார்ந்த.

௧௪. தந்திரம் - சேனை. போற்ற - பாதுகாக்க. பட்டம் - சேனாபதிப்பட்டம். சேனைத்தலைவர், மந்திரிகளாக இருத்தலும் உள்ளதாதலின், 'மந்திரித்தலைவராக வைத்தனன்' என்றார்; இதனை, வருஞ்செய்யுட்களாலுமுணர்க. போலும் உம்மை, அசைநிலை.

௧௫. மந்திரிகளும் சேனைத்தலைவர்களும் அரசனுடைய அரண்மனை வாயிலிலிருந்து தத்தம்தொழில்களையியற்றுதலியல்பு; (௬௧) ௧௦ - ம் செய்யுளைப் பார்க்க. சாமந்தர் - சேனைத்தலைவர்.

௧௭. வன்னியத்தலைவராகி-சேனாபதிகளுக்குத் தலைவராகி; இந்நூற்பதிகம், ௯-ம் செய்யுட்குறிப்பைப் பார்க்க.

௧அ. முன்பு, ௧௪: "சுந்தரன் குமாரர் போலுமிருந்தனர்" என ஐயுற்றவன், இப்பொழுது தெளிந்தானென்றுணர்க.

௧௯. அவை - அப்பன்றிக்குட்டிகள்.

௬௦ - ம் திருவிளையாடல்.

௧. பதங்கம் - விட்டில்.

௨. உணர்ந்தபடி யாவது.

௩. வென்றிப்புரம் - முன்புவெற்றியையுடைய புரங்கள்; "வென்றிக் களிற்றை விரிதாரவன் வென்றவாறும்" (சீவக. பதி. ௯). சிவபெருமானுடைய செயற்கருஞ் செய்கைகளுள், பெரும்பகைகளை வென்றமை, பகையை வெல்லக் கருதிய கரிக்குருவியாற்கருதப்பட்டது.

௪. சேண் நிமிரும்.

௫. இரணியத் தண்டாமரை - பொற்றாமரைத் தீர்த்தம்.

௭. முகுத்தம் - முகூர்த்தம். பிரமமா முகூர்த்தமென்பது, இரவில், ௨௫ - நாழிகைக்குப் பிற்பட்டகாலம். இம்மந்திரத்தை ஓது. உவணராசன் கருடன்.

அ. சடகம் - கரிக்குருவி. இளம் பார்ப்பு - இளையகுஞ்சு. போதி - உபதேசம்செய். பரிந்தவையாவும் - துன்புற்றவைகளெல்லாம். பரிந்து - நீ அன்புற்றென்றுமாம். திரிவதற்குப் போதி.

௧௧. நிகரிலாமந்திரம் - பகையில்லாமைக்குக்காரணமாகிய மந்திரம்; "நிகரடுவிலையே" (சிலப். பக்கம், ௨௬௭).

௧௩. கோக்கயம் - தலைமையாகிய கரிக்குருவிகள். நோக்கை நீக்கி -கண்

ஞேட்டத்தை ஒழிதது. மேக்குறீஇ- மேலேசென்று.

௧௭. பாரீர் பாரீர் - பூமியிலுள்ள வர்களே பாருங்கள்; அடுக்குமாம். இறைஞ்சின பின்னரேவண்மையுண்டாயிற்றென்று வருவிக்க.

௧௫. (௫௩) ௫.

௧௬. இத்தலத்தில், சோமசுந்தரக் கடவுள் உபதேசித்தருளியபின்பு, ஒவ்வொரு தினத்திலும் விடியற் காலத்தில், கரிக்குருவிகள் மிருத்தியுஞ்சய மந்திரத்தை ஜபித்துக்கொண்டு வருகின்றன வென்பது ஐதிஹ்யம்; **காஞ்சிப்புராணம்**, பன்னிருநாமப்படலம், ௪௦௭: "ஆற்றல்வேண் டுநரெலா மரனை யன்பிளுற், போற்றியிம் மனுப்புகல் கென்னல் போன்றமுன், சாற்றிய மந்திரந் தன்னைக் கார்க்குரீஇ, வீற்று வீற் றுவிருந் துரைத்தன் மேயின." (**விடியல்வருணனை**) என்னும் செய்யுளாலுணர்க.

**௬௧ - ம் திருவிளையாடல்.**

௧. ஆள் - காலாட்கள். உக்கிரகுலத்துத்தோன்றியென ஒருசொல் வருவிக்க.

௨. சடங்கு என்றது யாகமல்லாத கர்மங்களை.

௩. அரசருக்குரிய ஆறங்கங்களுட் சிறந்தமையின், படையும் குடியுங்கூறப்பட்டன; ௬: "பெருகிய படையுமுன் றன்பீடுடைக்குடியும்"

௫. காலத்துப்பெய்யும்.

௬. நமக்கே: ஏகாரம், பிரிநிலை.

௭. தறித்து - வெட்டி. உனதுறு குறியென்றது மீனமுத்திரையை. போதி - வா. பகடு - யானை. நன்று - மிகுதியாக.

௮. இச்செய்யுளின் கருத்தை, ௧௧-ம் செய்யுளும் வலியுறுத்தும்.

௯. நந்தம் புரமதாம் - நம்முடைய வடிவமாகிய. இகழ்தலால் மறுத்த.

௧௦ கனவை ஒருவருக்கும் உரையாளுகி அணைய.

௧௧. மடங்கல் - சிங்கம். யாளிகள் - யானையாளிகள். காஞ்சனம் - பொன்.

௧௨. செண்டு - ஒருவகை ஆயுதம்; "செண்டுகொண்டு கரிகாலனொருகாலிலிமயச் சிமயமால்வரைதிரித்தருளி மீள"; கலிங்க. இராசபா.)

௧௩. சங்கமவுருவம் தாபரவுருவமென எனக்கு இரண்டுவடிவங்களுள்ளன.

௧௪. 'யான்' என்றது, தன்னுருவத்தை. இது - இம்மலை.

௧௫. சிகரி - மலை. கயற்குறி - மீனமுத்திரை.

௧௭. பெரியவன் - மகாதேவர்.

௧௮. நாவற்செம்பொன் - சாம்பூநதமென்னும் தங்கம்.

௧௯. மச்சம் - வெட்டியெடுத்துக் கொண்டு வைத்திருக்கும் மிச்சப்பொன். ஈழம் - பொன்; மேருவைமீளுகச்செய்து அதிலுள்ளபொன்னையெல்லாங் கொண்டென்பது மற்றொருபொருள்.

௨௦. முன்னர்வழங்குவ - திருமஞ்சனக் கலசமுதலியவை. சந்திரமா பொன்னுக.

௨௨. ஆண்டு - அப்பொழுது.

**௬௨ - ம் திருவிளையாடல்.**

௧. பட்டினத்து - காவிரிப்பூம்பட்டினத்தில்; "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்"; (**பட்டினப்பாலை**, ௨௧௮).

௨. அறுதியிட்டு - நிச்சயித்து. மரித்தபின்னர் - இறந்தபின்னர். கடம் - அபரக்கிரியை. ஓலையிலெழுதி அதனைக்கட்டிவிட்டார்.

௩. கைக்கொளென்று ஓலையெழுதிக்கட்டிவிட்டாரென முன்னதனேடுகூட்டுக.

௪. மைத்துனி - அம்மான்மகள்; ௭: "மைத்துனிநடக்க மாட்டேனினைத்தனனென்ன".

௫. தனக்கட்டு - பணப்பொதி.

௬. இந்திரை - திருமகள்.

௭. மெத்தென - மெல்ல. மூத்தெயில் - முதியமதில்.

௮. அடியார் - அடிமைவேலைசெய்பவர்; ௫: "அடிமைமூன்று". ௯:௪

ளையும் காதமும். திருப்புறம்பயம் - சோழநாட்டுத்திருப்பதிகளுள் ஒன்று; பிரளயகாலத்தில் ஊழிவெள்ளம் சிவாஞ்ஞையால் இதன்புறத்தே சூழ்ந்திருந்ததுபற்றி, இஃது இப்பெயர்பெற்றதென்பர்; 'பாஹ்யாம்புபுரம்' என்பது இத்தலத்தின் வடமொழிப்பெயர்.

கூ. மரபு - முறைமை.

கo. கறுவி - கோபித்து. நிசிக்கட் கடித்தலும்.

கக. மின் - மின்னல். அசனி - இடி; மின்னுதலையுடைய இடியுமாம். கேழல் - பன்றி. மயூரம் - மயில். நகுலம் - கீரி. எண்கு - கரடி. இச்செய்யுளில், பாம்பிற்குப் பகையாயுள்ளவைகள் கூறப்பட்டிருத்தல்காண்க.

கங. காளம் - கருமை. ஆளரி - ஆண்சிங்கம்; என்றது வணிகனை. இச்செய்யுளில் விடத்தின் கொடுமையையும் கணவனையிழந்த மகளிர் துன்பத்தையும் எளிதில் மாற்றியருளும் ஆற்றலையுடையவரென்பது புலப்படச்சிவபெருமானைத் துதித்திருக்குமழகு மிகப் பாராட்டற்பாலது.

கச. நின்றவர், விளி.

கரு. மன்றல் - கலியாணம்.

கசு. எந்தை - தேவரீர். அங்கம் - ான்பு.

கஎ. வென்றிகொள் - மற்றத்தேவர்களை வென்ற. அஞ்ச எழுப்பினுர்.

கஅ. இது - இவ்வரியசெயல். ஞானசம்பந்தர்தம்மை ஏத்தினர்கள்.

உo. சிவன் வன்னி கூவம் - சிவலிங்கப் பெருமானும் வன்னிமரமும் கிணறும். நடுவாகவரும்.

உஉ. வைதிக வாரணம் - திருஞானசம்பந்தர்.

உச. பொற்ற - பொலிவுபெற்ற.

உசு. பாஞ்சாலிகம் - மரப்பாவை விளையாட்டு.

உஅ. செறுப்பாய் - கோபிப்பாய். எழ எழ - மிக மிக. பரிபவம் - துன்பம்; அவமானமுமாம்.

உகூ. சான்று - ஸாக்ஷி.

௩o. சீற்பார்ந்த மெல்லியலாக ஆவாய். அல்லவேல் - அவைகள் சொல்லாவாயின்.

௩௩. 'பத்தினிமாது' என்பது கற்புடையவளென்னும் பொருளில்வந்தது; "பத்தினி மாதினோடும்" என்பர் பின்னும்; ௩எ. சண்பை - சீகாழி.

௩எ. பரிவு - அன்பு.

௩அ. முல்லை - கற்பு.

௩கூ. மருத்து அயில் - காற்றை உண்ணுகின்ற. சடையெனும் யாப்பு - "சடையாயெனுமால்" என்னுமுதற்குறிப்பையுடைய தேவாரம். திருமருகல் - ஒரு திருப்பதி; அதில் விடந்தீர்த்ததை, திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் புராணத்துள்ள சஅக - ம் திருவிருத்த முதலியவற்றாலுணர்க.

## ௬௩ - ம் திருவிளையாடல்.

௩. சலசரங்கள் - நீர்வாழ்வன.

சு. சூழ்ந்துகொண்டவைகள், மீன்கள்.

எ. உறை - நீர்த்துளி.

அ. சூழ்ந்து - சுற்றிக்கொண்டு, ஆராய்ந்து. வினைதருபசி. வரத்தை - விசேடத்தை.

கo. நம்பு - விரும்புகின்ற. மாசு அறல் - குற்றம் நீங்குதலை.

கங. கனகப்போதார் ஓடையில் - பொற்றாமரையில்.

கச. அன்புதன்னைப்பார்.

கரு. உளுவை, ஆரல், பணையென்பன மீன்விசேடங்கள்.

கசு. வாசனை - பழக்கம். அலகு - மூக்கு.

கஅ. வல்லவன் - சிவபெருமான். ஒன்றோ - ஒருவகையான நலந்தானு.

## ௬௪ - ம் திருவிளையாடல்.

க. காலம், எழுவாய்.

௩. வேள்வி, ஐந்தாவன: பிரமயாகம், தேவயாகம், மானிடயாகம், பிதிர்யாகம், பூதயாகமென்பன. ஆறங்கங்களாவன: நிருக்தம், வியாகரணம், கற்பம், கணிதம், பிரமம், சந்தமென்பன.

எ. சந்தை - வேதம்.

௧௧. எட்டை - இளைப்பு.
௧௨. கலவலின் - கலத்தலினால்.

நற்றுவெண்பா.

பல்லக்குமேல் - சிவிகையின்மேல். பல் அக்கு மேல் இட்டோம் - அநேக மாகிய உருத்திராக்கங்களை உடம்பின் மேல் அணிந்தோம். பல் அக்கு அணி - பலவாகிய எலும்புகளை அணிந்த. பல் அக்கும் மன்னுகுறையுண்டு - பலருடைய கண்களும் சேரப்பெற்ற குறையுண்டு; மேற்கூறிய காரணங்களால் எமக்கு என்னகுறையுண்டு என்றபடி.

நூற்சிறப்புப்பாயிரம்.

௧. பதுமத்தார் - தாமரைப்பூமாலை; அந்தணர்களுக்குரியமாலை தாமரைப்பூமாலையென்பது நூல்வழக்கு. சல்லி ஆண்டான் - சல்லியூரையுடையான்; இவ்வூர் பரசுராமசதுர்வேதிமங்கலமென்றும் வழங்கப்பெறும். கவுணியர்கோன் - கௌண்டின்னிய கோத்திரத்தார்களுள்ளே தலைமைவாய்ந்தவர். பெரும்பற்றப்புலியூர்நம்பி, என்பது நூலாசிரியரது இயற்பெயர்; அது தில்லைநம்பி யென்றும் வழங்கும்.

௨. கார்வளங்கொள் மண்டலமென்பது மதுரையம் பதிக்குக்கிழக்கேயுள்ளதான, 'மழைக்குப் புணைகொடுத்த மங்கலநாடென்னும்' இடமென்றும், கப்பிஞ்சிநாடென்பது, மேற்கூறியநாட்டினுள்ளே யடங்கியதோர் சிறியநாடென்றும், சிலர் கூறுகின்றனர். உரைத்தோன் - உரைத்தான்; வினைமுற்று; ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாயிற்று. சொல் - புகழ் தில்லைநம்பி - பெரும்பற்றப்புலியூர்நம்பி. ஆர்புனைவான் - ஆத்திப்பூமாலையையணிந்தருளுகின்ற சோமசுந்தரக்கடவுளுடைய. விளையாடல் - திருவிளையாடல். தில்லைநம்பி, விளையாடல் அறுபத்துநான்கையும் கப்பிஞ்சி நாட்டில் உரைத்தானென்க.



## திருவிளையாடற்புராணச்
# செய்யுளகராதி.



### அ.


MARAIMALAI ADIGAL
MADRAS-1

# சூசிபத்திரம்.